கற்றவன், வறியவன், வேலமரம்.
† அகதிகன்-ஆதரவற்றவன், உதவியற்றவன்.
† அகதிதம்-சொல்லப்படாதது.
† அகதீதம்-ஊடுசெல்லற்கரியது.
அகதேசி-உள்ளூர்யாசகி, அரதேசியென மருவியது.
அகதேசு-பிணியில்லான்.
அகத்தடியாள்-மனையாள்.
† அகத்தன் - இடத்தினன், கர்த்தாவல்லாதவன்.
அகத்தார்-உள்ளோர், குடும்பசினேகரு முறவினரும்.
அகத்தி-ஒருமரம்; இதுசாழையகத்தி சிற்றகத்தி செவ்வகத்தி என மூவகை, உள்ளிருப்பவள்.
† அகத்திடல்-உள்ளிடல்.
அகத்திணை-உள்ளொழுக்கம்.
அகத்திணைப்புறம் - கைக்கிளையும் பெருந்திணையும்.
† அகத்திணையியல் - இன்பமாகியவொழுக்கத்தினதிலக்கணம்.
அகத்தியம்-அகத்தியராற்செய்யப்பட்ட விலக்கண நூல், அவசரம், தேவை.
அகத்தியர்குழம்பு-ஓர்மருந்து.
† அகத்தியவாசம்-பொதிகைமலை.
அகத்தியன்-ஓர் இருடி, குறுமுனி; இவர் மட்கலயத்திற்பிறந்து முருகக்கடவுளிடத்தில் தமிழ்ப்பாஷை யுபதேசம்பெற்று லோகோபகாரமாய் ஸ்காந்தம், ஜோதிடம், வியாகரணம், வைத்தியமுதலான புத்தகங்கள் செய்ததாகவும், தேவர்களைக் காக்கும்பொருட்டுச் சமுத்திரங்களைப் பானம்பண்ணிவிட்டதாகவும், சிவபெருமானுமாதேவியைத்திருமணஞ்செய்தகாலத்து வடதிசைதாழ்ந்து தென்றிசை யுயர்ந்தமைகண்டு அங்ஙனமாகாது பொதியமலையிற்சென்றிருந்துசமனுறச்செய்தவ ரென்றும், திருக்குற்றாலத்தில் விஷ்ணுமூர்த்தியைச்சிவலிங்கவடிவாக்கினவரென்றும், அங்குட்டப் பிரமாண முள்ளவரென்றும் தெரிகிறது.
அகத்தியா - ஆழம், எட்டாமை, கடல்.
† அகத்தியாச்சிரமம்-அகத்தியான்பள்ளி.
† அகத்தியான்-அகத்தியமுனிவன்.
† அகத்தியான்பள்ளி - வேதாரணியத்துக்குச் சமீபமாயுள்ள வொருதலம்.
† அகத்திருசியாநுவித்தம் - ஆறுசமாதிகளிலொன்று; அதுமனத்தின்கண் ணுள்ள இராகத்துவேஷாதி விடயங்களுக்குத் தானே சாட்சியென்று சிந்திப்பது.
† அகத்தினள்-மனைவி.
அகத்தீசராறுகு - அகஸ்தியேசாறுகு; இது சிற்றறுகம்புல், பேராறுகம்புல் என இருவகை.
அகத்தீடு - கைக்குள்விட்டணைத்தல்.
அகத்துறுப்பு - உள்ளவயவம், உள்ளியல்.
† அகத்தை-தாய்.
† அகநகர்-நகருள்.
† அகநகை-இகழ்ச்சிநகை.
† அகநகைத்தல்-இகழ்ச்சிநகைசெய்தல்.
† அகநம்-பாரமின்மை, பெருமையின்மை.
† அகநாடகம்-அகக்கூத்து.
† அகநாடகவுரு - அகக்கூத்தின்வண்ணம்; அவை கந்தமூதல் பிரபந்தமீறாக விருபத்தெட்டாகும்.
அகநாடு-உண்ணாடு.
† அகநிட்டம்-இணையதல்லாதது, மூத்தது.
† அகநிட்டலோகம் - பிரமலோகமிருபதினுள்ளே பதினாறாமுலோகம்.
† அகநிட்டன் - கனிட்டனல்லாதவன், கௌதமபுத்தன்.
† அகநிருணயம் - ஆசௌசவிதிகளைக் கூறுமோர் சமஸ்கிருதநூல்.
† அகநிருவிகற்பசமாதி- ஆறுசமாதிகளுளொன்று; அது திருசியாநுவேதம், சத்தாநுவேதமென்னுமிரண்டு நீங்கிமனங்கரைந்து நிச்சலமாய் நிற்றல்.
அகநிலை-உள்நிலை, † ஊர், கடவுள்.
† அகநிலைக்குறிஞ்சி-ஓர்பண்.
† அகநிலைச்செயப்படுபொருள் - வினைச்சொல் லினகத்தே செயப்படுவதாகநிற்குஞ்சொல்.
† அகநிலைச்செவ்வழி-ஓர்பண்.
† அகநிலைப்பசாசக்கை-மூவகைப்பசாசக்கைகளிலொன்று; அது சுட்டுவிரனுனியிற்பெருவிரலகப்பட வளைப்பது.
† அகநிலைப்பாலை-ஓர்பண்.
† அகநிலைமருதம்-ஓர்பண்; அது உழைகுரலாயகோடிப்பாலை.
அகந்தை-ஆங்காரம், செருக்கு.
அகப்பகை-உட்பகை.
அகப்பக்கம்-உட்பக்கம்.
அகப்படுதல் - உட்படுதல், கிடைத்தல், கிட்டுதல், சிக்குதல், வசப்படுதல்.
† அகப்பட்டி-சுருங்கியபட்டி.

† அகப்பட்டியாவார் - அகமாகியமனம் பட்டி போன்று வேண்டியபடி நடப்பவர்.
† அகப்பணி-உட்டொழில், வீட்டுவேலை.
அகப்பத்தியம்-மனோவிரதம்.
அகப்பரம்-வேதிகை.
அகப்பற்று-மனவிருப்பு.
அகப்பா - அகழி, மதிலுள்மேடை, மதில்.
அகப்பாடு - அகப்படுதல், உண்ணிகழ்ச்சியானது.
† அகப்பாட்டு-அகநானூறென்னுநூல், அகப்பொருள் பற்றிவரும்பாட்டு.
அகப்பாட்டுவண்ணம் - முடியாதுபோன்று முடிவது.
அகப்பாட்டுறுப்பு - அகத்திணையின் பன்னிரண்டுறுப்புக்கள்; அவை இயல்பகத்திணை, வகையகத்திணை, பொதுவகத்திணை, சிறப்பகத்திணை, உவமவகத்திணை, புறநிலையகத்திணை, எதிர்நிலையகத்திணை, காரணம்அல்லதுகருவியகத்திணை, காரியவகத்திணை, காரகவகத்திணை, முன்னவையகத்திணை, பின்னவையகத்திணை.
அகப்பு-ஆழம், தாழ்வு.
அகப்புறக்கைக்கிளை - காமஞ்சாலாவிளமைத் தன்மையுடையதலைமகள்பக்கத்துத் தலைமகன்குறிப்பினையறியா தவளோடு மென்மேலுங்கூறுவது.
† அகப்புறச்சமயம் - சைவசமயத்துக்குள்ளாகிய வேதசிவாகமங்களைப் பிரமாணமாகக் கொண்டுமவற்றுக்கு விலக்கான கொள்கையைச் சாதிக்குஞ் சமயம்.
அகப்புறத்திணை - கைக்கிளையும் பெருந்திணையும்.
அகப்புறப்பாட்டு - மடலேறுதன் முதலாகத்த புதாரநிலையீறாகச் சொல்லப்பட்டவியற்பெயர்க்கோடாமையாம்.
அகப்புறப்பெருந்திணை- அகன்றுழிக்கலங்கன் முதலாகத்தலைவியுந் தானும் வனமடைந்து நோற்றலீறாகச்சொல்லப்பட்டனவும் பிறவுங்கூறுதலாம்.
அகப்புறப்பொருள் - கைக்கிளையும் பெருந்திணையும்.
† அகப்புறமுழவு - எழுவகைமுழவுகளுளொன்று; அது தண்ணுமை, தக்கை, குணிச்சமுதலாகப் பலவகைப்படும்.
அகப்புறம் - கைக்கிளையும் பெருந்திணையும்; அவை அகாந்தீன், வள்ளி, சுரநடை, முதுபாலை, தாபதம், தபுதாரம், குற்றிசை, குறுங்கலி, இல்லாண்முல்லை, பாசறைமுல்லை யென்னும்பத்தநுபவங்கள்.
† அகப்பூ-இதயகமலம்.
அகப்பேய்ச்சித்தன்-ஓர்கவி.
அகப்பை-சட்டுவம்; இது தட்டகப்பை, சாந்தகப்பை, சிற்றகப்பை யெனமூன்றுவிதம்.
† அகப்பொருட்கைக்கிளை - காமம்நுகர்தற்கமைந்த விளமையையுடைய தலைமகளிடத்துண்டாகிய குறிப்பினைத்தானறியுமளவுந் தலைமகனவளைச்சாராது நின்று நெஞ்சொடு சொல்லுதல்.
அகப்பொருட்கோவை-ஓர்பிரபந்தம்.
† அகப்பொருட்டுறை - அகப்பாட்டுறுப்புக்கள் பன்னிரண்டனு ளொன்று; அது உரைப்போருங் கேட்போருமின்றிக் கவிக்கூற்றாகச் சொல்லப்படுவது.
† அகப்பொருட்பெருந்திணை - அகத்தின்கண்ணுள்ள வின்பத்தைச் சிலநாளுகர்ந்ததலைவனுந்தலைவியும் பின்னிடைக்காலத்து நுகராமைக்கான விடையூற்றுக் கூற்றுக்களைக் கூறுவது.
அகப்பொருள் - ஓரிலக்கணம்; அஃது உண்ணிகழ்ச்சியான சிற்றின்பத்திற்குரிய வொழுதிணையைக்கூறும், † வீட்டிலுள்ளபொருள்.
அகமகிழ்ச்சி-ஆனந்தம், மனமகிழ்ச்சி.
† அகமநம்-அடையாமை, நடவாமை, புணராமை, போகாமை.
† அகமமரம் - வெள்வேலமரம்.
அகமம்-மரப்பொது, மலை.
† அகமருடணதீர்த்தம் - அகமருடணஸ்நானத்துக்காகிய நீர்.
† அகமருடணநாநம் - அகமருடணத்தோடு கூடிய ஸ்நாநம்.
அகமருஷணம் } நீர்க்குணின்றுசெய்
அகமருடணம் } யுமோர்செபம்.
† அகமருடம்-மேற்படி செபம் சொல்லிச்செய்யும் ஸ்நானம்.
அகமலர்ச்சி-அகமகிழ்ச்சி.
† அகமாட்சி-மனையறத்திற்குரிய நற்குணநற்செய்கைகள்.
† அகமார்க்கநடம் - மெய்த்தொழிலாற் செய்யுங்கூத்து.
அகமார்க்கம்-அருமையிற்பாடல்.
† அகமான்மா-நானேயான்மாவென்று பிரமத்தின் வேறாகத்தன்னைக் காண்போன்.
† அகமிதம்-நானிது வென்பது.

† அகமுகம்-அந்தர்முகம்.
† அகமுடையாள்-வீட்டுக்காரி.
அகமுடையான்-வீட்டுக்காரன்.
† அகமுழவு - எழுவகைமுழவுகளுளொன்று; அது உத்தமகருவியான இடக்கை, கரடிகை, குடமுழா, சல்லிகை, படகம், பேரிகை, மத்தளமெனப்பலவகைப்படும்.
அகம் - ஆகாயம், ஆழம், ஆன்மா, இடம், உபத்திரவம், உள், உள்ளிடம், எழனுருபு, ஓர்மரம், குணுகுணம், சூரியன், தானியம், துக்கம், பள்ளம், பாம்பு, பாவம், பூமி, மரப்பொது, மலை, மனம், வீடு.
† அகம்படித்தொண்டு - உள்ளாகநின்று செய்யுந்தொண்டு.
† அகம்படிமை-அகம்படித்தொண்டு.
அகம்படியார்-உள்வேலைக்காரர், ஓர்சாதியார்.
† அகம்பதவாச்சியம்- அகமென்னும்பதத்தாற்சொல்லப்பட்ட பொருளாகிய வான்மா.
† அகம்பன்-அசைக்கப்படாதவன்.
† அகம்பாவம்-செருக்கு, நானென்னு மெண்ணம்.
† அகம்பிரதமர் - என்னைமுதலாகவுடையவர்.
† அகம்பிரதமிகா-பெருமைபாராட்டுகை, முந்திக்கொள்ளவேண்டு மென்றேடுகை.
† அகம்பிரமமெனல்-சிவோகம்பாவனை செய்தல்.
அகம்பிரமம் - ஆங்காரம், நானேபிரமமெனல்.
† அகம்பிரமவாதி-நானேபிரமமென்று வாதிக்கிறவன்.
† அகம்பிரமாஸ்மி - நான்பிரமமா யிருக்கிறேனெனப்பொருள்படுமோர் யசுர்வேதமகாவாக்கியம்.
அகம்மதி-அறியாமை, தற்பிரியம்.
அகம்மியம் - ஓரெண், கோடிகோடா கோடி, பத்திலட்சங்கோடி.
† அகம்மியா-அகம்மியை.
† அகம்மியாகமனம் - அகம்மியையோடு புணர்தல்.
அகம்மியை - பொதுமகள்.
அகரம் - இரதம், எழுத்தின்சாரியை, ஓரெழுத்து, பார்ப்பனச்சேரி, மருதநிலத்தூர், வீடு.
அகராதி - அகரமுத லெழுத்துக்களாற்றொடங்குஞ்சொற்கோவை.
அகரிஷணம், † அகரிடணம், † அகரிடம் } துக்கம், வெறுப்பு.

அகரு - அகில்.
அகருதம் - வீற்றிருத்தல்.
† அகருமகம்-செயப்படுபொருளில்லாதவினை.
† அகர்-பகல்.
† அகர்ணம்-செவிடு.
அகர்த்தத்துவம் - அழிக்குந்தத்துவம்.
† அகர்த்தவ்வியம்-செய்யக்கூடாதது, செய்யத்தகாதது, செயற்பாலதல்லாதது.
அகர்த்தனன்-குள்ளன்.
† அகர்த்தன் - கர்த்தனல்லாதவன், செய்கையில்லாதவன்.
அகர்த்தா - செய்கையற்றவன், பஞ்சகோசங்கடகன்னியன்.
அகர்த்தியம் - இருத்துவம்.
† அகர்த்திருத்துவம் - கடவுளுடைய பிரபுத்துவச்சாமர்த்திய குணங்கள் மூன்றனுளொன்று; அதுகர்த்திருத்துவம் நீங்கிநிற்றல்.
† அகர்த்திருவாதம் - சிருட்டிகர்த்தாவில்லையென்று வாதித்தல்.
† அகர்நாதன், அகர்ப்பதி } சூரியன்.



அகர்மகர்த்தரிப்பிரயோகம், அகர்மகர்த்துருப்பிரயோகம் } செயப்படுபொருள்குன்றிய வினை.
† அகர்மணி-சூரியன்.
† அகர்மம்-செயலில்லாமை, தகாதசெயல்.
† அகர்மி-கருமமில்லாதவன்.
அகர்முகம், அகர்ம்மணி, அகர்ம்முகம் } உதையகாலம், வைகறை.
அகலக்கட்டை - அகலமற்றது.
† அகலக்கவி - வித்தாரகவி; அதுதொடர்நிலைச்செய்யுளாலுமடிபலவாய்நடக்கு முத்தகச்செய்யுளாலும் பாடப்படுவது, வித்தாரகவிபாடும் புலவன்.
† அகலப்பா-அகலக்கவி.
அகலம் - தரவை, மார்பு, விசாலம், விரிவு.
அகலர் - † கீழ்நீங்கினவர், சண்டாளர்.
அகலல் - நீங்கல், விரிதல், விருத்தித்தல்.
அகலவுரை - விரித்துரை; அஃது இலக்கணமும் இலக்கியமு மெடுத்துக்காட்டிப் பொருள் விரித்துரைக்கும் விரித்துரை.
அகலறை - பாசறை, மலைப்பக்கம்.
† அகலன்-ஏழை, கடவுள், கொடியவன், பெருத்தவன், பெருமையுடையவன்.
† அகலி-அகலியை.

அகலிகை - கௌதமர்பத்தினி, பஞ்சகன்னிகைகளிலொருத்தி; இவளைத்தேவேந்திரன் மோகித்துக் கௌதமரை வஞ்சகமாய்ஸ்நானத்துக்குப்போக்கிப்புணரக் கௌதமரறிந்து கல்லாய்ச்சபிக்கவிராமர் விஸ்வாமித்திரரோடு மிதிலைக்குப் போம்போதவர் காற்றூசுபடச் சாப விமோசன மானாள்.

அகலிடம் - பூமி.

† அகலிது-அகலமுடையது.

† அகலியமாமிசம் - தன்னாலல்லது தன்னிமித்தமாகக் கொல்லப்பட்டபிராணியின்மாமிசம்.



அகலியம் - ஓர்மரம், மரப்பொது.

† அகலியாசாரன்-இந்திரன்.

† அகலியாநந்தனன்-சதாநந்தன்.

† அகலியை - கௌதமமுனிவருடையமனைவி.

† அகலுகை-அகலுதல்.

† அகலுடிதம்-கலங்காதது.

அகலுதல் - அகன்றுபோதல், நீங்குதல், விரிதல்.

அகலுள்-அகலம், ஊர், நாடு, † பூமி, பெருமை.

அகல் - அல்குல், சட்டி, தகழி, நீங்கல், நீங்கென்னேவல், பிரிதல், பெருமரம், விசாலித்தல், வெள்வேலமரம்.

† அகல்கதை }
† அகல்கத்துவம் } வைரமின்மை.

அகல்கை - அகலல்.

அகல்வு - அகலம், அகலல்.

அகல்வோர் - ஈனர்.

அகவ - ஒலியாநிற்க.

† அகவடி-உள்ளங்கால்.

அகவர் - அழைத்துப்புகழ்வோர், சூதர்.

† அகவலிசை-அகவலோசை.

அகவலுரிச்சீர் - ஈரசைச்சீர்.

அகவலோசை-ஆசிரியப்பாவிற்குரியவோசை.

அகவல்-அழைத்தல், ஆசிரியப்பா, ஆடல், ஒரு சந்தம், மயிற்குரல்.

† அகவல்விருத்தம்-ஆசிரியவிருத்தம்.

அகவற்சீர் - அகவலுரிச்சீர்.

அகவற்சுரிதகம் - ஆசிரியச்சுரிதகம்.

அகவற்பா - ஐந்துபாவினொன்று; அது நாற்சீரான்வருமளவடியாயும் இயற்சீர்பயின்றுமயற்சீர்விரவியுந் தன்றளைதழுவியும் பிறதளைமயங்கியுங் கருவிளங்கனி கூவிளங்கனியென்னுமிருசீர்கலவாது மூன்றுமுதலியபலவடிகொண்டு முடிவது.

† அகவற்றாழிசை - ஆசிரியப்பாவினத்துளொன்று; அது எவ்வகைச்சீரானுந் தளையானுமொத்த மூவடியாகத் தனித்தாவது ஒருபொருண்மேன்மூன்றடுக்கியாவதுவருவது.

அகவற்றுள்ளல் - வெண்டளையுங் கலித்தளையும் விரவிவருவது.

† அகவற்றுறை - ஆசிரியப்பாவினத்துளொன்று; அது நான்கடிபெற்றீற்றயலடிகுறைந்தும் நான்கடிபெற்றீற்றயலடி குறைந்திடைமடக்காயும் நான்கடிபெற்றிடையிடைகுறைந்தும் நான்கடிபெற்றிடை யிடைகுறைந் திடைமடக்காயும் வருவது.

அகவற்றூங்கல் - ஒன்றாத வஞ்சித்தளையான் வருவது.

அகவாட்டி - மனையாள்.

† அகவாயுக்கள்-அகத்திலுள்ள அந்தக்கரணங்களைச் சிவனோடுகூடி நின்றசைப்பிக்கின்றனவாகச்சொல்லப்படும் அந்தரியாமி, பிரபஞ்சனன், மகாப்பிராணன், முக்கியன், வைரம்பனென்னுமைந்து வாயுக்கள்.

† அகவாளன் - மனையான்.

† அகவிகடன் - அகப்பொருளுக்குரிய சட்டகமுதலாகிய விருபத்தேழுரைகளுளொன்றாகியவிடத்தின்வகையிரண்டனுளொன்று; அது ஒரு செய்யுள் மனையும்வளாகமும் பற்றிவருவது.



அகவிதழ் - உள்ளிதழ்.

அகவிலை - தானியவிலை.

அகவு - அழுக்குரா.

அகவுதல் - அழைத்தல், ஆடல்.

† அகவேற்றம்-தானியவிலையேற்றம்.

அகவை - உட்பொருள், வயது.

† அகழல்-அகழுதல்.

அகழானெடுத்தல் - தோண்டுதல், எலிகளைப்போல வளையுண்டாக்கி மணலைப் புறம்பேதள்ளுகிறது.

அகழான்-ஓரெலி, வயலெலி.

அகழி - அகழ், மதில்சூழ்கிடங்கு.

† அகழுதல்-அகழல்.

அகழெலி - அகழான்.

அகழ் - அகழி, தோண்டென்னேவல்.

அகழ்தல் - உழுதல், தோண்டல்.

அகளங்கமூர்த்தி - கடவுள், புத்தன்.

அகளங்கம் - சீதாங்கபாஷாணம், சுத்தம்.

அகளங்கன் - ஓர்சீமான், கடவுள், புத்தன், மாசிலான்.

அகளம் - தாழி, நீர்ச்சால், மிடா.
† அகளர்-நிட்களர்.
அகளி-தாழி, மிடா.
அகறல் - அகலல், அகலுதல், கடத்தல்.
† அகற்சி-அகலம், நீங்குதல், பிரிவு.
† அகற்பசெபம்-விதியின்றிச்செய்யுஞ்செபம்.
† அகற்பம் - ஒருபிராணாயாமயோகம்; அது வாக்கினாலே மந்திரஞ்செபியாமலு மனத்தினாலே கடவுளைத்தியானியாமலுஞ் செய்யப்படுவது.
† அகற்பனை - கற்பனையில்லாதது, மனநினைவிற்கமையாதது.
† அகற்பிதமரணம்-விதியின்றி நிகழுமரணம்.
† அகற்பியமாமிசம்-அகலியமாமிசம்.
அகற்றுதல் - அகலப்பண்ணுதல், துரத்துதல், விரித்தல்.
அகனம்-கனமில்லாதது, பெருமையின்மை.
† அகன் - அகன்றவென்னும் பெயரெச்சம், அகாசுரன், உள், வினைமுதற் பொருளில் வருமோர்விகுதி (உ-ம்) நாயகன்.
† அகன்பணை-அகன்றமருதநிலம்.
† அகன்மகதாது - செயப்படுபொருளில்லாத வினைப்பகுதி (உ-ம்) நட.
† அகன்மகம் - செயப்படுபொருள் குன்றிய வினை.
அகன்மகர்த்தரிப்பிரயோகம்- செயப்படுபொருளில்லாவினை (உ-ம்) நடந்தான்.
அகன்மணி - தெய்வமணி.
† அகன்றவறிவு - சர்வஞ்ஞத்துவமாகிய பேரறிவு.
அகன்றில் - ஆணன்றில்.
அகன்னம் - செவிடு.



† அகஸ்மாத்து - காணப்பட்டகாரணமில்லாமை.
† அகாகம்-ஆசௌசதினம்.
அகாசரம் - அறியாமை.
அகாடி - புரவி முன்னங்காற் கயிறு, முன்.
† அகாண்டசாதம்-அகாலத்திற்பிறந்தது.
அகாண்டபாதசாதம் - சாதமரணம்.
† அகாண்டபாதம்-அகாலசம்பவம்.
† அகாண்டம்-அகாலம், காத்திராப்பிரகாரம்.
அகாதத்துவம் - ஆழம்.
அகாதப்படுஞ்சமயம் - பிரமாதமாகுஞ்சமயம்.
அகாதம் - ஆழம், தொளை, நீந்துபுனல், நீர், பள்ளம், முந்து, வஞ்சகம்.
அகாதன் - வஞ்சகன்
அகாதிதம்-பட்சித்தல்.
அகாத்தியம்-பொல்லாங்கு, வஞ்சனை.
† அகாத்திரம்-அவசியம், கவனமின்மை.
அகாத்துமசை-பார்வதி.
† அகாமம்-அகாமவினை, இச்சையின்மை.
† அகாமவினை - அபுத்தி பூர்வமாகச்செய்யும் வினை; அது தெய்விகத்தாலு மோகத்தாலும் வியாதியாலுஞ் சோரபயமுதலியவற்றாலு மறிவழிந்துசெய்யுஞ்செயல்.
† அகாயம் - இராகு, சரீரமில்லாதது, பரப்பிரமம்.
† அகாயு-கத்தி, காகம், பாம்பு, பாவி.
அகாரணம்-காரணமின்மை, தற்செயல்.
அகாரணன்-ஏதுவில்லான், கடவுள்.
அகாரத்திரயவித்தை - பஞ்சாக்கரவித்தைகளி லொன்று.



அகாரம்-ஓரெழுத்து, வீடு.
அகாரி-இடி, இந்திரன், கடவுள்.
அகாரியம்-காரியமற்றது, துற்செய்கை.
† அகாருண்ணியம்-கருணையின்மை.
† அகாலமரணம் - நியமமல்லாதகாலத்திற்சம்பவிக்குமரணம்.
அகாலமிருத்து-அநியாயமரணம்.
அகாலம் - அவகாலம், நியமமல்லாதகாலம், பஞ்சகாலம்.
அகி-இராகு, இரும்பு, ஈயம், ஓர்வகைமரம், ஓர்வான்மீன், சூரியன், பகைவன், பாம்பு, பிரயாணி, வச்சிராயுதம், விருத்திராசுரன்.
அகிகாந்தம்-காற்று.
அகிகை-இலவு, பட்டுப்பருத்தி.
அகிஞன்-தரித்திரன்.
† அகிஞ்சகன் - பிராணிகளுக்குப்பீடைசெய்யாதவன்.
† அகிஞ்சத்யாயதனலோகம்- பிரமலோகமிருபதினுள்ளேபத்தொன்பதாமுலோகம்.
அகிஞ்சனன்-தரித்திரன், பரமலோபி.
† அகிஞ்சன்-மிகவறியவன்.
† அகிஞ்சை-கொல்லாமை, தீங்குசெய்யாமை, பீடைசெய்யாமை, வருத்தாமை.
† அகிதமிட்டிரன்-ஓரரக்கன்.
அகிதம் - இதமின்மை, உரிமையின்மை, இயானம், தீமை, பகை, போசனம்.
அகிதர்-பகைவர்.
† அகிதலம்-பாதாளம்.
† அகிதன்-பகைவன்.
† அகிதுண்டிகன் - பாம்பாட்டி, பாம்புபிடிப்போன்.

அகிபதி-ஆதிசேடன், சேடன்.
† அகிபுக்கு-கருடன், கீரி, மயில்.
அகிபுஜம்-கலுழன், மயில்.
அகிபேனம்-அவின், பாம்பினஞ்சு.
† அகிப்பிரத்தினதேவதை - உத்திரட்டாதியின் அதிதெய்வம்.
† அகிப்பிரத்தினம் - இரவில்நிகழு மூன்று முகூர்த்தமாகிய உத்திரட்டாதி, உத்திரட்டாதி நட்சத்திரம்.
† அகிப்பிரத்தினன்-ஒருருத்திரன், சிவன்.
அகிமரால்-வெள்வேல்.
† அகிம்சை-கொல்லாமை, மனோவாக்குக்காயங்களாற் றீங்குசெய்யாமை.
† அகிரச்சசாமியம் - பாம்புக்குங் கயிற்றுக்குமுள்ள ஒப்புமை.
அகிரன்-சூரியன், தீ.
† அகிரிபு-இந்திரன், கருடன், கிருட்டினன், கீரி, மயில்.
† அகிருத- இருநூற்றிருபத்துநான்குபுவனங்களிலொன்று.
† அகிருதகம்-செய்யப்படாதது.
† அகிருதஞ்ஞதை-நன்றிமறத்தல்.
† அகிருதஞ்ஞன்-நன்றிமறந்தோன்.
அகிருதம்-முற்றுவேலை.
† அகிருதர்-கிரியைசெய்யாதவர்.
அகிருதித்துவம்-அந்தக்கேடு.
அகிருத்தியம்-அக்கிரமம், தப்பானசெய்கை.
அகிர்-அசர், தலைச்சுண்டு.
† அகிர்த்துருமவிஷம் - பாம்புமுதலிய சரப்பொருள்களிலு மரமுதலிய வசரப்பொருள்களிலுமுள்ள விஷம்.
† அகிர்ப்பிரத்தினன்-அகிப்பிரத்தினன்.
† அகிர்ப்புத்தினி-இரவில்நிகழு மூன்று முகூர்த்தமாகிய உத்திரட்டாதி, உத்திரட்டாதிக்கதிபர்.
† அகிலகாரணன்-சிவன்.
† அகிலகாரணி-உமாதேவி.
† அகிலநாயகன்-கடவுள்.
† அகிலபோகம்-சகலவனுபவம், உலகவாழ்வு.
அகிலம்-எல்லாம், பூமி.
அகிலரூபன்-எல்லாமானோன், கடவுள்.
† அகிலலோகம்-சகலலோகம்.
† அகிலாங்கம்-சதுரவடிவம்.
அகிலாண்டகோடி-கணக்கற்றலோகம்.
அகிலாண்டம்-சர்வாண்டம், பூவண்டம்.
அகிலாண்டவல்லி-பார்வதி.
† அகிலேசர்-விசுவேசர்.
அகில்-அகரு, ஒர்மரம், பஞ்சவிலாயிலொன்று.
அகிலைவாரி-கருடன், மயில்.
† அகிற்குடம்-அகிற்பாமக்கும்பம்.
அகிற்குறடு-அகிற்கட்டை.
அகிற்கூட்டு-ஏலம், கருப்பூரம், காசுக்கட்டி, சந்தனம், தேன் சேர்த்தகூட்டு.
† அகிற்புகை - அகிலைக்கட்டையிலிருந்துண்டானபுகை.
அகீசன்-அகிபதி
அகீர்த்தி-அபகீர்த்தி.
† அகீனரு - சூரியவமிசத்தில் ஸ்ரீராமனுக்குப் பின்னிருந்த வோரரசன்.
† அகீனம்-குறைவின்மை, பலநாளைச்செய்யப்படுமோர்யாகம்.
† அகீனன்-பெரியோன்.
† அகுசலம்-அதிட்டவீனம், துக்கம், சாமர்த்தியமின்மை.
† அகுசலவேதனை-துக்கவுணர்வு; இதாபஞ்சகந்தங்களுளொன்றாகிய வேதனையின் பகுதி மூன்றனுளொன்று.
அகுடம்-கடுகுரோகிணி.
அகுட்டம்-மிளகு.
† அகுணதை-குணமின்மை.
† அகுணத்துவம்-அகுணதை.
அகுணம்-இலட்சணமின்மை, குணமின்மை, குறைவு, துற்குணம்.
† அகுணன்-குணமில்லாதவன்.
† அகுறைத்துமா-அவ்வியத்தம்.
அகுணி-குணமில்லாதவன், மூடவன்.
† அகுதம்-அழைக்கப்படாமை, ஐவகையாகத்துளொன்றாகிய தியானம்; அது பலைமானது சதாசிவாதி விக்கிரகங்களிலொன்றை யன்பினுளிவைத்தியானத்திலே யிடைவிடாது கலந்திருத்தல், யாகஞ்செய்யப்படாமை, வேதமோதல்.
அகுதி-அகதி.
அகுப்பியம்-பொன், வெள்ளி.
அகும்பை-கவிழ்தும்பை.
† அகுரு-அகிலமரம், இலகுவானது, கனமில்லாதது, குருவில்லாதவன்.
† அகுருத்துவம்-கனமின்மை.
அகுலி-சுறவிலி.
அகுலீனம்-குலகீனம்.
† அகுலீனன்-உயர்குலத்தோனல்லாதவன்.
† அகுவைக்கட்டு-அரையாப்புக்கட்டி.

† அகுளிதநாதர் - கிஷேதகருமசாத்திரங்கள் செய்த நவநாதசித்தர்களிலொருவர்.
அகுளுதி-வேம்பு.
அகூடகந்தம்-பெருங்காயம்.
† அகூபாரம்-ஆதிகூர்மம், ஆமை, கடல், கன்மலை.
அகூபாரன்-ஆதிகூர்மம், சூரியன்.



அகேசன்-மொட்டையன்.
அகேது-மூகாந்தரமின்மை.
† அகை - அகையென்னேவல், எரிதல், கூறுபாடு.
† அகைதல்-எரிதல், ஒடிதல், தளிர்த்தல், முறிதல், வருந்தல்.
அகைத்தல் - அடித்தல் அறுத்தல், உயர்த்தல், எழுச்சி, ஒடித்தல், செலுத்தல், முறித்தல், வருத்துதல்.
அகைப்பு-அடி, அறுத்தல், எழுச்சி.
அலைகப்புவண்ணம் - அறுத்தறுத்தொழுகும் வண்ணம்.
அகைமம்-புல்லுருவி.



† அகையகாதுரம்-ச்ருதசேகரம்.
† அகையம்-விராமம், அனுத்ருதம்
அகோ-அதிசயச்சொல்.
அகோசரம்-அறியொணுமை, காணப்படாமை.
அகோடம்-கமுகு.
அகோதாரை-மிகப்பொழிதல்.
அகோத்திரம்-குலமின்மை, கோத்திரமின்மை.
அகோபிலம் - கடப்பைஜில்லாவில் விஷ்ணுவாலயங்களிற் பேர்போன ஓர்ஸ்தலம்.
† அகோரகலை - சிவபூசைசெய்யும்போது சிவலிங்கத்தைச் சதாசிவனெனப் பாவித்தவரைத் தொழுமுகத்திலு கிற்பனவாகக் கொள்ளப்படுங் கலைகளுள் அகோரமுகத்தில் கிற்குங் கலைகள்; அவை தமம், மோகம், காமை, கிட்டை, மிருத்து, மாயை, உருத்திரபயம், சுவரமெனவெட்டாமென்றும், அவற்றுக்குத்தானங்கள் இருதயம், கண்டம், வலத்தோள், இடத்தோள், நாபி, வயிறு, முதுகு, மார்பெனவெட்டாமென்றுஞ் சொல்வர்.
† அகோரகைவல்லியப்பிரதம்-தணிகைமலை.
† அகோரதந்திரம்-உபாகமங்களிலொன்று.
† அகோரப்பிரமம் -அகங்காரம், சட்சபாதம், ரூபம், அக்கினியென்பவற்றிற் கதிட்டானதேவதையாகிய வுருத்திரர்.
† அகோரமுகம்-சதாசிவனுடைய ஐந்துமுகங்களிலொன்று; இது கர்த்திரு சாதாக்கியமென்னுந் தத்துவமும் ஈசுரனென்னு மூர்த்தியும் பொருந்தியுள்ளது.
அகோரம்-உக்கிரகம், உட்டணம், கொடுமை, சிவனைம்முகத்தொன்று, நரி.
† அகோரலிங்கம்-பஞ்சலிங்கங்களிலொன்று.
† அகோரவுரை-அகோரமந்திரம்.
† அகோரன்-பரமசிவன்.
அகோராத்திரம்-பகலிரா, பகலுமிரவும்.
அகோரை-உட்டணநாள்.
அக்ககனனம்-அட்சகிரைகை.
அக்கசாலை-அணிகலன்செய்யுமிடம், கம்பட்டசாலை, கம்மாலை.
அக்கசாலையர்-கம்மாளர், தட்டார்.
அக்கட-அவ்விடம்.
அக்கடி-அலைவு, இடைஞ்சல், வருத்தம்.
அக்கணம்-அந்தட்சணம், பொரிகாரம், வெண்காயம்.
அக்கணு-தான்றிமரம்.
அக்கண்டே-அக்காளே.
அக்கதம்-அட்சதை, பங்கப்படாதது, பழுதின்மை.
அக்கதயோனி-கன்னி.
† அக்கதாரி-சிவன், சிவனடியான்.
அக்கதூர்த்தன்-அத்தநாசஞ்செய்வோன்.
அக்கதேவி-சோலைப்புல்லு.
அக்கதை-அட்சதை.
அக்கந்தம்-தான்றிமரம்.
அக்கந்து - நெற்குவைப்புறத்துவிலக்கியபதர், புறக்கந்து.
† அக்கபாடகன்-நியாயாதிபதி.
அக்கபாடம்-மற்களரி.
† அக்கபாதன்-நியாயசூத்திரஞ்செய்த கௌதமமுனிவன், நையாயிகன்.
அக்கப்பாடு-நிலையழிவு, மரக்கலச்சேதம், மோசம்.
அக்கப்பிரம்-மாமரம்.
அக்கமணி-உருத்திராட்சம்.
அக்கமம்-பொறுமை.
† அக்கமாலிகாபரணன்-சிவன்.
அக்கமாலை-உருத்திராட்சமாலை.
அக்கமூன்றி-கண்.
† அக்கமை-இயலாமை, சாமர்த்தியமின்மை, பொறுமையின்மை, பொறுமை.
அக்கம்-அருகு, ஆன்மா, உப்பு, உருத்திராட்சம், ஓர்நிறை, கண், கயிறு, சில்லு, சொக்கட்டான்காய், ஞானம், தானியம், தானிய

விலை, தான்றி, ²துரிசு, தேருறுப்பு, தேர்பக்கம், பாம்பு, பூகோளாட்சம், பொன், வழக்கு.



† அக்கயத்துவம்
† அக்கயம் } அழிவின்மை

அக்கரச்சுதகம்-ஓர்மிறைக்கவி.

அக்கரத்தான் - தான்றி.

† அக்கரப்பிரஞ்சம்-எழுத்துமாருட்டம்.

அக்கரம்-ஆகாயம், எழுத்து, ஓர்நோய், பிறவியறுத்தல், மா, வெள்ளெருக்கு.

அக்கரம்மா-வெள்ளெருக்கு.

† அக்கரவர்த்தனம் - இருபதுவகைச்சித்திரக்கவிகளிலொன்று; அஃது ஓரெழுத்தாலொருமொழியாய்ப் பொருட்பயந்து பின்னோரெழுத்தேற்றப் பிறிதொரு மொழியாய்ப் பொருட்பயந்தவ்வாறு முறையானே யேற்றவேற்ற வேறுவேறு மொழியாய்ப் பொருட்பயந்து வரப்பாடுவது.

அக்கரவிலக்கணம் - எழுத்தியல்பு, கலைஞானமறுபத்துநான்கினொன்று.

அக்கரன்-சிவன், திருமால். பிரமம்.

† அக்கரா-அழியாதது, விகாரமடையாதது.

அக்கராகாரம்-ஓர்பூண்டு.

அக்கராந்தம்-எழுத்தொலி.

அக்கராரம்பம்-எழுத்துப் பயிலவைத்தல்.

அக்கரை-அவசியம், காரியம், குற்றம்.

† அக்கர் - உருத்திராக்கமணியை யுடையவர், கண்ணுடையவர்.

† அக்கவடம்-உருத்திராட்சமாலை.

அக்கவாடம்-மற்களரி.

அக்களித்தல்-மனமகிழ்தல்.

அக்களிப்பு-மனமகிழ்ச்சி.

† அக்கறை-கவனம், காரியம், தொடர்பு.

அக்கன்-கருடன், குருடன், நாய்.

அக்கா-தாய், மூன்பிறந்தாள்.

அக்காக்கிரம்-பண்டியச்சு, பண்டியின்முற்பக்கம்.

அக்காதேவி-மூதேவி.

அக்காத்தான்-தான்றி.

† அக்காரக்கனிநச்சுமனார் - கடைச்சங்கப் புலவர் நாற்பத் தொன்பதின்மரு ளொருவர்.

† அக்காரடலை - சர்க்கரை சேர்த்தடப்பட்ட சோறு.

அக்காரம்-கருப்புக்கட்டி, கரும்பு, சருக்கரை, சீலை, மாமரம்.

அக்காளன்-வனப்புல்.

அக்காள்-தமக்கை.

அக்கி - அக்கினிகரப்பான், அக்கிபுறப்பட்டவன், உட்டணம், ஓர்நோய், ஓர்பூச்சி, கண்

அக்கிக்கல்-ஓரிரத்தினம்.

† அக்கிகுலி-கந்தசாமி.

அக்கிதாரை-கண்மணி.

† அக்கிநாய் - அக்கினிதேவன்மனைவியாகிய சுவாக்கா, திரேதாயுகம்.

அக்கிபடலம்-கண்ணோயுளொன்று.

† அக்கியம் - பகலிற்பதினைன்காவதாக நிகழு முத்தர மென்னுமுகூர்த்தம்.

அக்கியாதம்-மறைவு.

அக்கியாதவாசம்-மறைந்திருத்தல்.

அக்கியாதி-துர்க்கீர்த்தி, நுனிக்கை.

அக்கியானம்-அறிவின்மை, ஞானமின்மை.

அக்கியானி-அறிவீனன், ஞானமில்லாதவன்.

† அக்கிரகண்ணியன் - முதல்வனாக மதிக்கப்படத்தக்கவன்.

† அக்கிரகத்தம்-கைந்நுதி, யானைக்கைந்நுதி, வலக்கை.

† அக்கிரகம்-முன்னாற்போதல்.

அக்கிரகரம்-நுனிக்கை, வலக்கை.

† அக்கிரகன் - சிரேட்டமானவன், முதன்மையையுடையவன், முன்னுக்குப்போகிறவன்

அக்கிரகாரம் - தலைச்சேரி, பிராமணவீதி.

அக்கிரசங்கை - முன்கொடை; அதாவது ஒரு கூட்டத்தாரில் தலைவனுக்குச் செய்யும் மரியாதை.

அக்கிரசந்தானி-நமன்கணக்கு.

அக்கிரசம்பாவனை-முதன்மரியாதை.

† அக்கிரசாரை
† அக்கிரசரம் } முன்போதல்.

அக்கிரசர்மம்-நுனித்தோல்.

அக்கிரசன் - தமையன், பிராமணன், மூத்தோன்.

அக்கிரசன்மன் - அண்ணன், பிரமன், பிராமணன்.



அக்கிரசாதகன்
அக்கிரசாதி } பார்ப்பான்.

அக்கிரசை-தமக்கை, மூத்தாள்.

† அக்கிரச்சா
† அக்கிரச்சியை } கிரகங்கிழக்குமேற்கு வீதியகறலில் வருஞ்சா.

† அக்கிரணி-தலைவன்.

அக்கிரதாம்பூலம்-முதற்றாம்பூலம்.

அக்கிரநிரூபணம்-முன்னிரூபித்தது.

அக்கிரபாகம்-நுனி, முதற்பங்கு, முன்பக்கம்.

அக்கிரபாணி-கைந்நுனி, வலக்கை.
அக்கிரபூசனை - பிரயோசன காலத்திற்கடவுளுக்குச்செய்யும்பூசை.
அக்கிரபூசை - முதன்மைப்பூசை, முதன்மையுபசாரம்.
† அக்கிரபூமி-இலக்குக்குறிக்கப்பட்டதானம், பெறநோக்கியபொருள்.
அக்கிரமம்-அநீதம், ஒழுங்கின்மை, கொடுமை.
அக்கிரமாமிசம்-இரத்தாசயம்.
அக்கிரமி-கொடியவன்.
அக்கிரம்-அதிகம், இலாபம், எதிர், சமீபம், நட்சத்திர சாஸ்திரத்தில்கிரகங்கீழ் மேல் வீதி யகறல், நுனி.
அக்கிரவருணம்-உயர்ந்தசாதி.
அக்கிரன்-தமையன்.
அக்கிராகரம் } அக்கிராகாரம் } தோஷஹரத்திரவியம்; இது வட ஆபிரிக்காதேசத்திலுற்பத்தியாம்.
† அக்கிராகியம் - எடுக்கத்தகாதது, ஏற்றுக்கொள்ளப்படத் தகாதது, கிரகிக்கப்படாதது, சம்மதி பெறுதது.
அக்கிராதம்-கோபமின்மை.
அக்கிராத்தம்-கைந்நுனி, வலக்கை.
அக்கிராந்தம்-சேம்பு.
அக்கிராரம்-அக்கிரகாரம், விளைநிலம்.
† அக்கிரியம்-முதலிலுண்டானது, சிறந்தது.
அக்கிரியன்-தமையன்.
அக்கிரு-விரல்.
† அக்கிருதன்-யோகாட்டகரிலொருவன்.
அக்கிரேவணம்-காட்டோரம்.
† அக்கிலீபதை-ஆண்டன்மை.
அக்கிலு-நெருஞ்சில்.
அக்கிள்-கைக்குழி.
அக்கினி-கொடுவேலி, செங்கொடுவேலி, நவச்சாரம், நெருப்பு, பித்தன், பொன், மூத்திரம், மூலாக்கினி, வெடியுப்பு.
அக்கினிகணம் - தீப்பொறி, கிரைநேர்கிரைக்கணம்.
† அக்கினிகண்டம் - நாற்பத்து மூக்கோணச்சக்கரத்திலெண்கோணமு மிரண்டு பத்துக்கோணமுமாகிய கண்டம், மூலம், சுவாதிட்டான மென்னு மிரண்டாதாரங்களி னிடமாகிய கண்டம்.
அக்கினிகயம்-கடனுரை.
அக்கினிகருப்பம் - கடனுரை, சூரியகாந்தம், பொறி.

அக்கினிகருப்பன்-குமரன்.
† அக்கினிகர்ப்பம் - அக்கினியைத்தன்னுட்கொண்டவஸ்து,சூரியகாந்தக்கல்,தீக்கடைகோல்.
† அக்கினிகர்ப்பை-சாமைப்பயிர், பூமி.
அக்கினிகலை- சுவாசம்.
† அக்கினிகாதலன் - திட்டத்துய்மனென்னுமோரிராஜகுமாரன்.
† அக்கினிகாரியம் - ஓமாக்கினிவளர்த்தல், ஓமாக்கினி வளர்த்துச் செய்யப்படுங்கிரியை.
† அக்கினிகிரியை-தகிக்கப்படும் பிரேதத்திற் செய்யப்படுங்கிரியை, நெருப்பினாற்சுடுதல்.
† அக்கினிகீடம்-கீடவகையுளொன்று; அஃதிருபத்து நான்கு பேதபடும்.
† அக்கினிகுமாரன்-கந்தசுவாமி.
† அக்கினிகுமாரி-துரோபதியென்னும்பெண்.
† அக்கினிகேது-புகை.
அக்கினிகோணம்-தென்கீழ்.
அக்கினிகோத்திரம் - தீ, நெய், யாகமிருபத்தொன்றினொன்று.
† அக்கினிகோத்திரி - நித்திய வோமாக்கினி வளர்ப்போன், யாகாக்கினி வளர்த்திருப்போன்.
† அக்கினிகோத்திரிவிபூதி-யாகச்சாம்பல்.
அக்கினிக்கட்டு-அக்கினித்தம்பனம்.
† அக்கினிக்கண்ணன் - அக்கினிக்கண்ணையுடையவன், சிவன், பயங்கரரூபன்.
அக்கினிக்கபம்-கடனுரை.
அக்கினிக்கர்ப்பம்-அக்கினிக்கருப்பம்.
அக்கினிக்குமரம்-குளிர்மை, மந்தமுதலாகிய நோய்கட்குக் கொடுக்கப்படுமருந்து.
அக்கினிக்குமரன்-ஓர்வகைமாத்திரை, சுப்பிரமணியன்.



அக்கினிசகன்-காற்று.
† அக்கினிசகாயன்-வாயு.
† அக்கினிசயனம்-ஓமாக்கினி வளர்த்தல்.
† அக்கினிசன் } அக்கினிசன்மன் } குமரன்.
அக்கினிசாந்தி-ஓமம்.
அக்கினிசாலம்-ஓர்பூடு, நெருப்புச்சாலம்.
† அக்கினிசாவர்ணி - பதினான்கு மனுக்களிலொருவன்.
அக்கினிசிகம்-அம்பு, வானம், விளக்கு.
† அக்கினிசிலேட்டுமரோகம்-சிலேட்டுமரோகத்திலொருவகை; அது சர்வாங்கத்திலுமா

வது காசங்களைகள் மூக்கென்னு முறுப்புக்க
ளிடமை தெரிச்சல், இருமல், சோழை, தா
கம், கைகால்களிற் சீதளம், அதிகதீபன
மாகிய குணங்களைச்செய்வது.
அக்கினிசேகரம்-மஞ்சள்.
அக்கினிச்சிலம்-கார்த்திகைக்கிழங்கு.
அக்கினிச்சிவம்-குப்பைமேனி.
† அக்கினிச்சுவத்தர் } பிதுர்தேவதைகளி
† அக்கினிச்சுவாத்தர் } லொருவகுப்பார்,
தேவப்பிதிரர்.
அக்கினிச்சுவாலை-தீக்கொழுந்து.
அக்கினிச்சேர்வை-புண்ணுக்கும் பிளாஸ்திரி.
† அக்கினிட்டுது - ஒருநாளில் முடிக்கப்படு
மோர்யாகம்.
அக்கினிட்டோமம் } சோமயாகம்.
அக்கினிஷ்டோமம் }
† அக்கினிதம் - அக்கினியூட்டல், சீரணிக்கச்
செய்யுமொருமருந்து, வீடெரித்தல்.
† அக்கினிதன் - தீயிட்டவன், வீடெரிக்குந்
துரோகி.
† அக்கினிதாரணம்-ஓமாக்கினிவளர்த்தல்.
† அக்கினிதிவ்வியம்-அக்கினிப்பரீட்சை; அஃது
தொன்பதுவகைத் திவ்வியங்களிலொன்று.
† அக்கினிதேவன் - அக்கினிதேவதை, தீயை
வணங்குவோன்.
அக்கினித்தம்பம் } ஓர்வித்தை, கலை ஞா
அக்கினிஸ்தம்பம் } னமறுபத்துநான்கினொ
ன்று, நெருப்புத்தூண்.
அக்கினித்தம்பனம் } நெருப்புச் சுடாமற்
† அக்கினித்தம்பனை } செய்யும்வித்தை.
அக்கினித்தம்பன்-சிவன்.
† அக்கினித்திரயம் - மூவகையக்கினி; அவை
காருகபத்தியம், தக்கிணம், ஆகவனீயமெ
ன்பன.
அக்கினித்திராவகம்-ஓர்திராவகநீர்.
அக்கினித்திரேதை-திரியாக்கினி.
அக்கினித்தூள்-தீப்பிழம்பு.
அக்கினிநட்சத்திரம்-கொடியநட்சத்திரம்.
அக்கினிநாள்-கொடியநாள்.
அக்கினிபஞ்சகம்-அக்கினியபாயம்.
† அக்கினிபதச்சிலந்தி - சிலந்திவகையுளொ
ன்று; அதன் கால்கடோறும் விஷமுண்டெ
ன்றும், கால்பட்டவிடங் கொப்பளிக்கு மெ
ன்றுங் கூறுவர்.
† அக்கினிபம்-பொன்.
அக்கினிபரிச்சதம்-ஓமோபகரணம். (தை.
அக்கினிபரீட்சை - மழுவேந்தன் முதலியவித்

அக்கினிபீசம்-பொன்.



† அக்கினிபு-கந்தன்.
† அக்கினிபுக்கு-ஓர்முனிவன்.
† அக்கினிபுராணம் - பதினெண்புராணங்களு
ளொன்று; அது பிரமகைவர்த்தம், இப்பு
ராணத்தில் விட்டுணுவுடைய அவதாரம்,
சிருட்டிக்கிரமம், விட்டுணுபூசை முதலியன
சொல்லப்படும், அஃதெண்ணாயிரங் கிரந்த
முடையது.
அக்கினிபூ-அக்கினிசன்மன், நீர்.
† அக்கினிபூதவாதிமமதம் - அக்கினிதானே
மும்மூர்த்திவடிவமாய் நின்று முத்தொழிலு
ஞ்செய்புமென்று கொள்ளுமொருவனுடை
யமதம்.
அக்கினிபோஷணம்-வைசுவதேவபூசை.
அக்கினிப்பிரத்தரம்-தீக்கல்.
† அக்கினிப்பிரவேசம் } தீயிற்குதித்தல்.
† அக்கினிப்பிரவேசனம் }
அக்கினிப்பிழம்பு-நெருப்புச்சுவாலை.
அக்கினிப்பிளப்பு-எரிமலை.
அக்கினிமணி-சூரியகாந்தம்.
அக்கினிமண்டலம் - மும்மண்டலத்தொன்று;
அதுமூலாதாரமுதலுபிக்கமலமளவும், அடி
வயிறு.
† அக்கினிமந்தசுரம் -சுரநோய்வகைகளுளொ
ன்று.
† அக்கினிமந்தம்-கோங்கமரம், சமியாமை.
† அக்கினிமந்தனம்- தேய்த்தலாற் கோல்களி
னின் றக்கினியைப்பிறப்பித்தல்.
அக்கினிமாந்தம்-ஓர்நோய்.
அக்கினிமாந்தியம்-அசீரணம், செரியாமை.
அக்கினிமாருதி-அகத்தியன்.
† அக்கினிமுகச்சிலந்தி - ஓர்வகைச்சிலந்திப்
பூச்சி; அது அதிகநோவையும் நெருப்பாற்
சுட்டகொப்பளம் போன்ற கொப்பளத்தை
யுமுண்டாக்கும் விஷமுடையது.
அக்கினிமுகம்-சேங்கொட்டை.
அக்கினிமுகன்-பிராமணன், தீ, தேவன்.
அக்கினிமூலை-தென்கிழக்குமூலை.
† அக்கினியத்திரம் - அக்கினிமயமான அம்பு.
அக்கினியாகாரம்-ஓமசாலை.
அக்கினியாதானம்-ஓமாக்கினிவளர்த்தல்.
அக்கினியாதேயம் - நித்தியதீவளர்த்தல், யாக
மிருபத்தொன்றினொன்று.
அக்கினியாலயம்-அக்கினியாகாரம்.
அக்கினியின்குணம் - ஆலசியம், தாகம், நித்

திரை, பசி, மைதுனம்.
அக்கினியின்கோபம்-பித்தம்.
அக்கினியுற்பாதம்-விண்வீழ்கொள்ளி.
† அக்கினியெழுநா - அக்கினிதேவனுக்குள்ள ஏழுநாக்குகள்; அவை கராளி, காளி, சுதூம்பரவருணை, சுலோகிதை, புலிங்கினி, மனோசவை, விசுவரூபியென்பன.
† அக்கினியெழுநாவண்ணம் - அக்கினிதேவனுக்குள்ள ஏழுநாக்குகளினிறம்; அவை அதியிரத்தம், அருணம், இரத்தம், காகம், கிருஷ்ணம், சுப்பிரம், வெகுவருணமென்பன.
அக்கினியோகம்-அக்கினிக்குரியயோகம், தக்கயோகம்.
† அக்கினிரசம் - அக்கினியின்வீரம், இந்திரகோபம், பொன்.
† அக்கினிரோகணிரோகம் - ஒருவகையுரோகம்; அது சுரத்தினுன் மெலிந்தவருக்குப் பித்தம் பிரதானமான வாத சிலேட்டுமங்களினுலக்குளுக்குள் மாமிச கண்டத்தைப் போலக் கட்டிகளை யுண்டாக்கு மென்றும், அக்கட்டிகள் கட்டையினெருப்பைப் போலிருந் துபத்திரவத்தைச் செய் தைந்தேழு பதினைந்தென்னு நாட்களில் மரணங் கொடுக்குமென்று மந்நாள்விலகினுற் சாத்தியமாகுமென்றுஞ்சொல்வர்.
அக்கினிலிங்கம்-புகை.
அக்கினிவகை - கமாலாக்கினி, காடாக்கினி, தீபாக்கினி, சாடராக்கினி, சடராக்கினி. தாபாக்கினி, உஷ்ணம், காங்கை.
அக்கினிவமிசச்சத்திரியர்-வன்னியர்.
† அக்கினிவருணன்-சூரியகுலத்திலிராமனுக்குப்பின்னிருந்த வோரரசன்.
† அக்கினிவருத்தகம்-உதராக்கினியை வளர்க்குமோர் மருந்து.
அக்கினிவருத்தனம்-தீவளர்த்தல்.
அக்கினிவல்லபம்-கில்.
அக்கினிவாகம் } புகை.
அக்கினிவாகு }
அக்கினிவிசர்ப்பம்-விரணக்கொதி.
† அக்கினிவிடபாகரோகம்-எண்வகைவிஷபாகரோகத்துளொன்று; அது வாதபித்தாதிக்கம், தேகமிளைத்தல், வீக்கம், கிடைபொருந்தாமை, புரளல், கோழை, இருமல், சத்தி, மூர்ச்சை, வாய்நீரூறல், வயிறளைதல், மலசலச் சிக்கல், பக்கநோவென்னு மிக்குணங்களை யுண்டாக்கும்.

அக்கினிவீசம் } பொன்.
அக்கினிவீரியம் }
† அக்கினிவேசன் - இக்குவாகுவுக்குத் தம்பியாகிய அரிஷியனுடைய வமிசத்தில் வந்த தேவதத்தன் மகன் சாதகர்ண மகாவிருடி.
† அக்கினிவேசியாயனம் - அக்கினிவேசன் வமிசப்பிராமணகுலம்.
† அக்கினீத்திரன்-சாவலந்தீவை யரசுசெய்த பிரிய விரதனுடையவொருமகன்.
அக்கு - அகில், † உருத்திராக்கம், உகாக்காய், எட்டி, எருத்துத்திமில், எலும்பு, † ஒருசாரியை, கண் சங்கு, சங்குமணி, பலகறை.
அக்குத்து-சந்தேகம், பொருத்தம், மையம்.
† அக்குமணி-சங்குமணி.
† அக்குமாலை-உருத்திராக்கத்தினுற் கோக்கப்பட்டமாலை.
அக்குரன்-இடையெழுவள்ளலி லொருவன்.
† அக்குரு-விரல்.
அக்குருக்கி-சயரோகம்.
அக்குரூரன்-கஞ்சன் முதன்மந்திரி.
† அக்குரோணி - இருபத்தோராயிரத்தெண்ணூற்றெழுபது யானையும், ஐம்பத்தாறுயிரத்தறுநூற்றுப்பத்துக் குதிரையும், இருப்த்தோராயிரத் தெண்ணூற்றெழுபதுதேரும், இலக்கத்தொன்பதினுயிரத்து முந்நூற்றைம்பது காலாட்களுங் கொண்ட வோர் சேனைத் தொகை.
† அக்குரோதம்-குரோதமின்மை.
அக்குல்லி-உக்காரி, சிற்றுண்டி, பிட்டு.
† அக்குளுத்து-அக்குளுக்காட்டுதல்.
அக்குள்-கக்கம்
அக்கை-அன்னை, முன்பிறந்தாள்.
அக்கோ-அதிசயச்சொல், இரக்கச்சொல்.
† அக்கோகிணி-அக்குரோணி.
அக்கோடகம் } கடுக்காய்.
அக்கோடம் }
அக்கோணி - பத்துநூறுயிரத் தொன்பதினுயிரத்துமுந்நூற்றைம்பது காலாளும், அறுபத்தையாயிரத் தறுநூற்றறுபது குதிரையும், இருபத்தையாயிரத் தெண்ணூற்றெழுபதி ரதமும், இருபத்தோராயிரத் தெண்ணூற்றெழுப தியானையுங்கொண்டது.
அக்கோபம் - உறுதி, யானைகட்டுந்தூண்.
அக்கோலம்-தேற்றுங்கொட்டை, தேற்றுமரம்.
அக்கௌகிணி-அக்கோணி.
† அக்ரபூசனை-முதற்பூசை, முதன்மரியாதை.
அங்ககம்-அங்கம்

அங்ககாரம்-அங்கசேட்டை, அபிநயம்.

† அங்கமந்திரம் - இருதயமுதலியவங்கங்களைக்குறித்துச் சொல்லுமந்திரம்.

† அங்ககீனம்-உறுப்புக்குறைவு.

† அங்ககீனன்-உறுப்புக்குறைந்தவன்.

† அங்கக்கிரகம் - ஒருவகைச்சரீரவலி, கெண்டைவாதம்.

† அங்கக்கிரியை - சரீரத்தினதுறுப்பினாற்செய்யுஞ் செயல், சரீரத்தினுடனூர்த்தமாகச்செய்யுஞ்செயல்; அச்செயல் சரிகை, புரிகை, சமகவி, திரிகை, ஊர்த்துவகலிகை, பிருட்டகம், அர்த்தபிருட்டகம், சுபத்திகம், உல்லோலம், குர்த்தனம், வேட்டனம், உபவேட்டனம், தானபதப்பிராயவிருத்தம், உட்சேபணம், அவட்சேபணம், சிகுஞ்சனமெனப்பதினறுவகைப்படும்.

அங்கசங்கம்-புணர்ச்சி.

அங்கசம்-உதிரம், உரோமம், காமம், நோய்.

† அங்கசவனவாதரோகம்-ஒருவகைவாதரோகம்; அது வாதத்தைப்பிறப்பிக்கின்ற வஸ்துவையும் வாதகோப வஸ்துவையுமிகவும் புசித்தலினுற்சர்வாங்கத்திலும் பிறந்துவாதநரம்புத்துவாரங்களிலும் வியாபித்து உடம்பெங்கும் பரவிவேதனைசெய்யும். அப்போது ஊர்த்துவாங்கத்திலாவது அதோங்கத்திலாவது ஈசேக்கமுண்டாகும்.

† அங்கசவேள்-மன்மதன்.

அங்கசன்-மகன், மன்மதன்.

† அங்கசா - சோதிடவுறுப்புக்களிலொன்று.

அங்கசாதனம்-ஓர்குறி.

அங்கசாரி-சிவன்.

அங்கசாலைக்காரன்-கிராமப்பணிசெய்வோன்.

† அங்கசிவயோகம்-அட்டாங்கசிவயோகம்.

† அங்கசுபாதி - சிறுபுள்ளடி யென்னு மோர்பூண்டு.

† அங்கசேட்டை - உடம்பினதுசலனம், கைமெய்க்காட்டு.

† அங்கசை-மகள்.

† அங்கச்சனி - ஒருவன் பிறக்கும்போதவனுடைய தேகவுறுப்பினிற்பதாகக் கணிக்கப்படுஞ்சனி.

† அங்கச்செவ்வாய் - ஒருவன் பிறக்கும்போதவனுடைய தேகவுறுப்பினிற்பதாகக்கணிக்கப்படுஞ்செவ்வாய்.

† அங்கச்சோமன் - ஒருவன்பிறக்கும்போதவனுடைய தேகவுறுப்பினிற்பதாகக்கணிக்கப்படுஞ் சந்திரன்.

அங்கணம்-இரண்டுதூண்களுக்கு நடுவிலுள்ளவிடம், † உள்ளறை, கடுமரம், சலதாரை, சேறு, பத்து முழத்தளவு, † பரப்பு, பொரிகாரம், முற்றம், வெண்காரம்.

† அங்கணர்-சிவன்.

அங்கணன்-அருகன், சிவன், மிருதபாஷாணம், விட்டுணு.



† அங்கணுளர்-சிவன்.

அங்கணி-கற்றாழை காளி, பார்ப்பதி.

அங்கண்-அவ்விடம்.

† அங்கதச்செய்யுள் } வசைக்கவி.
† அங்கதப்பாட்டு }

அங்கதம் - தோளணி, பழிச்சொல், பாம்பு, பொய், மார்பு, யானையுணவு.

† அங்கதர்-வசைச்செய்யுள் சொல்வோர்.

அங்கதன்-பரதன்மகன், வாலிமகன்.

† அங்கதாரி-சிவன், சீவன், தேகம், அங்கதாளம், பரதசாத்திரத்திற் சொல்லப்பட்ட தாளப்பிரமாணங்கள் பத்தினுளொன்று; அது அனுதுரிதம், துரிதம், இலகு, குரு, புலுதம், காகபதமென ஆறுவகைப்படும்.

அங்கதி - கொடை, தீ, நோய், பார்ப்பான், பிரமா, வாயு, விட்டுணு.

அங்கதை - தென்றிசை யானைக்குப் பெண்யானை.

அங்கத்தி-பண்டாரங்களைமரியாதையாகக்கூப்பிடுந் தாங்களென்னுமர்த்தத்தை யுடையவோர்சொல்.

† அங்கத்தீ - உதராக்கினி; அது சமாக்கினி, விஷமாக்கினி, தீட்சணுக்கினி, மந்தாக்கினியென நான்குவகைப்படும்.

† அங்கத்தை-அவ்விடத்திருக்கும் பெரியவர்.

† அங்கநட்சத்திரம் - ஒருவன் பிறக்கும்போதவனுடைய தேகவுறுப்பினிற்பதாகக் காணப்படும் நட்சத்திரம்.

† அங்கநம் - அசைதல், அரசர்மனையின் முற்றம், போதல், முற்றம்.

† அங்கநாகனம்-மாதர்கூட்டம்.

அங்கநியாசம்-அநுட்டான முறையிலொன்று; அது உடம்பினெவ்வொரு பாகத்தையுந் தொட்டு மந்திரம் சொல்லுதல்.

† அங்கநூல்-வேதாங்கநூல்.

† அங்கபங்கம்-உடம்பினுறுப்புக்களின் சோர்வு, சரீரவுறுப்பின் சேதம், சோர்வாதம்.

அங்கபடி-அங்கவடி, கவணை, குதிரையங்கபடி.

அங்கபாலி
அங்கபாலிகை } கட்டித்தழுவுதல்.

† அங்கபுதன் - ஒருவன் பிறக்கும்போதவனுடைய தேகவுறுப்பி னிற்பதாகக் கணிக்கப்படும் புதனென்னுங்கிரகம்.

† அங்கப்பூ-மகன்.

அங்கப்பிரதக்கணம்
அங்கப்பிரதட்சணம் } சரீரத்தாலுருண்டுவலம்வருகை.

† அங்கப்பிரத்தியங்கம்-அங்கமும் பிரத்தியங்கமுமான வுறுப்புக்கள்; சிரமும் முகமும் இருதயமு மங்கமெனப்படும், மார்பு, கழுத்து, தனம், தோள், கொப்பூழ், வயிறு, குய்யம், கண், மூக்கு, காது, நெற்றி, கால், விரல், தொடை, முழங்கால், கணைக்காலாகியவிவைகள் பிரத்தியங்கமென்னப்படும்.

† அங்கப்பிராயச்சித்தம் -தேகவியோகத்தைக் குறித்தபுலம்பற்காலத்தில் வரலாய ஆசௌசாவிவர்த்தியாதற் பொருட்டுத் தேகசுத்தி பண்ணிச்செய்யும் பிராயச்சித்தம்.

† அங்கமந்திரம்-இருதயமுதலிய வங்கங்களைத்தொட்டுச் செபிக்கப்படுமந்திரம்.

அங்கமாலை - ஓர்பிரபந்தம்; இது ஸ்த்ரீகளின் மூகம், கண், ஸ்தனமுதலியவற்றையும் புருஷரின் தோள், மார்புமுதலிய வற்றையும் வர்ணிக்கும் நூல்.

† அங்கமைந்து-வாரம் திதி, நட்சத்திரம், யோகம், கரணமாகிய பஞ்சாங்கபத்திரம்.

† அங்கம் - அடையாளம், அபராதம், அரையின்மேலுள்ள வுடம்பின்பாகம், அலங்காரம், அவயவம், உடம்பு, உபகரணம், உபாயம், எலும்பு, எலும்புக்கோவை, ஒருதேயம்; அதற்கிப்போது பாகல் பூரென்றும் பேர், ஒருபாடை, ஓர்நடன விளையாட்டு, கட்டில், களங்கம், கொன்றை, கோளகபாஷாணம், சமீபம், சற்குருசேவைநான்கனுளொன்று; அதுகுருவுக்குக்குற்றேவல்செய்தல், சாயல், சைனத்துள்ளவாகம மூன்றனுளொன்று, தங்குமிடம், தாளப்பிரமாணம்பத்தினொன்று, நூலினுறுப்பு, மூன்றுமங்கம், பத்தெனுமெண், பரதவுறுப்புக்களினொன்று, பாருபாடு, பிரதானம், மனம், வரி, வேதாங்கம், வைத்தியசாத்திரம்.

† அங்கம்பயந்தோன்-அருகக்கடவுள்.

அங்கயற்கணம்மை
† அங்கயற்கண்ணி } மதுரையிற்கோயில்கொண்ட மீனாட்சியம்மை.

† அங்கயாகம்-யாகத்திலோரப்பிரதானமான கிரியை.

அங்கயோகம்-யோகமெட்டிலொன்று.

அங்கரக்கா-மெய்ச்சட்டை.

அங்கரங்கம்-உலகவின்பம்.

† அங்கரட்சகர்-மெய்காப்பாளர்.

அங்கரட்சணி-யுத்தகவசம்.

அங்கரட்சா-அங்கரக்கா.

அங்கரமாதி-கௌரிபாஷாணம்.

அங்கரவல்லி-குறிஞ்சா.

அங்கராகம்-பூசும்பரிமளம்.

† அங்கராசன்
† அங்கராயன் } அங்கதேசத்தரசன், குந்தியின்மூத்தமகனாகிய கன்னன்.

அங்கருகம்-உரோமம்.

அங்கர்-அங்கதேசத்தார்.

அங்கர்கோமான்
† அங்கர்பிரான் } அங்கத்தேசத் தரசன், கன்னன்.

† அங்கலக்கணம் - சரீரவழகு, சாமுத்திரிகாலக்கணம்.

† அங்கலாய்த்தல்-இச்சித்தல், துக்கித்தல்.

அங்கலாய்ப்பு-துக்கம், பேராசை.

அங்கவடி-அங்கபடி.

அங்கவம்-பழவற்றல்.

அங்கவன்-மிருதபாஷாணம்.

அங்கவிட்சேபம்-அபிநயம்.

அங்கவித்தியை-கணிதம்.

அங்கவியல்-இராசரிகமுறைமை.

† அங்கவியாழன் - ஒருவன்பிறக்கும்போதவனுடைய தேகவுறுப்பி னிற்பதாகக்கணிக்கப்படும் வியாழனென்னுங்கிரகம்.

அங்கவீனன்-குரூபி.

† அங்கவெள்ளி-ஒருவன்பிறக்கும்போதவனுடைய தேகவுறுப்பி னிற்பதாகக்கணிக்கப்படும் வெள்ளி யென்னுங்கிரகம்.

அங்களி-கற்றாழை.

அங்கனம்-கடுக்காய்மரம்.

அங்கனகணம்-மாதர்கூட்டம்.

அங்கனை-ஓரிராசி, பெண், வடதிசையானைக்குப் பெண்யானை.

† அங்கனையர்-அழகுள்ள பெண்கள்.

† அங்கன் - சுவாயம்பு மனுவின் சந்ததியிற்றோன்றிய வுருவென்பவனுடைய பத்துப்புத்திரருளொருவன், யயாதியினது நான்காம் புத்திரனாகிய அனுவமிசத்துப்பலிபுத்திரன்.

அங்கா-வாய்திறத்தல்.

† அங்காகமம் - ஆருகதவாகமங்கண் மூன்றனுளொன்று, உபாகமத்துளொன்று.

† அங்காங்கம் - உபாங்கம்.

† அங்காங்கிபாவசங்கராலங்காரம்- உறுப்புறுப்பிக்கலவையணி.

† அங்காங்கிபாவம் - அவயவ வயவிகளது சம்பந்தம்; உபகாரியவுபகாரக சம்பந்தம், சேனைப்பொருளுக்கு முக்கிய பொருளுக் குமுண்டான சம்பந்தம், தேகமுந்தேகியும் போலப்பிரிவின்றி நிற்குந்தன்மை.

† அங்காங்கிலக்கணை - இலக்கணைவகைகளு ளொன்று; அது அங்கத்தின்பெயரங்கியை யுணர்த்தி நிற்பது.

அங்காடி-கடைவீதி.

† அங்காடிக்கூடை-அங்காடியிற் பண்டங்கள் வைக்கப்பட்டிருக்குங்கூடை.

† அங்காதித்தன் - ஒருவன்பிறக்கும்போதவ னுடைய தேகவுறுப்பி னிற்பதாகக்கணிக் கப்படுமாதித்தன்.

அங்காதிபன்-கன்னன்.

அங்காதிபாதம் - ஓர்வைத்தியநூல், முழுவுடம்பு.

அங்காத்தல் - கொட்டாவிவிடல், வாய்திறத்தல்.

அங்காப்பு-அண்ணாத்தல், வாய்திறத்தல்.

அங்காமி-அநித்தியம், மிச்சம்.

† அங்காரகமணி-பவளரத்தினம்.

அங்காரகம்-அங்காரம்.

அங்காரகன் - செவ்வாய், நெருப்பு.

† அங்காரகை }
அங்காரதாரை } ஓராக்கி.

அங்காரதானிகை-குட்டடுப்பு, தீச்சட்டி.

அங்காரபரிபாசிதம்-பொரிக்கறி.

அங்காரம்-கரி, தீ.

அங்காரவல்லி-குறிஞ்சா, சிறுதேக்கு.

அங்காரன்-அங்காரகன்.

அங்காரி-வெங்காரம்.

அங்காரிகை-கரும்பு; நன்னாரி.

அங்காவணம்-பஞ்சதருவின்பந்தர்.

அங்காளி-அங்காளம்மை.

அங்கி-அக்கினிதேவன், அங்கத்தையுடையது. அத்தநாள், கார்த்திகைநட்சத்திரம், சடராக்கினி, சட்டை, தீ.

அங்கிகரித்தல்-ஏற்றுக்கொள்ளுதல், தழுவிக் கொள்ளுதல்.

அங்கிகரு-சாதிலிங்கம்.

அங்கிகாரம்-அங்கிகரித்தல்.

அங்கிகை-இரவிக்கை, கஞ்சுகம்.

† அங்கிசகன்-சுற்றத்தவன்.

அங்கிசம்-உபமிடத முப்பத்திரண்டிலொன்று, கூறு, பங்கு, வமிசம்.

அங்கிஷபாதி - சிறுபுள்ளடி.

அங்கிஷம்-வமிசம், வாழை.

† அங்கிசயன் - பதினொன்யாகங்களு ளொன்று.

† அங்கிசன்-அதிதிபின்ளைகளிலொருவன்.

† அங்கிசிவயோகம் - அட்டாங்கமுடைய சிவ யோகம்.

† அங்கிசு-அணு, அலங்காரம், கிரணம், சூரிய கிரணம், சூரியன், அம்பு, வேகம்.

அங்கிசை-அம்சை.

† அங்கிஞானம்-அவயவியறிவு.

அங்கிடுதத்தி - நாடோடி, நிலைகெட்டவன்.

அங்கிடுதுடுப்பன்-நாடோடி.

அங்கிட்டோமம்-கோமேதகம்.

அங்கிதம்-உடற்றழும்பு, பாட்டிடைத்தலைவன்.

† அங்கிதாரணை-அக்கினிதாரணம்.

† அங்கிதீரன்-அக்கினித்தீரன்.

அங்கிநாள் - அத்தநாள், கார்த்திகைநாள்.

† அங்கிமெதிர்க்கொடைப்பொருள் - விவாகசமயத்தி லக்கினி முன்னிலையிற் பெண்பொருட்டுத்தந்தை முதலானவராற் கொடுக்கப்படும் பூமிமுதலானபொருள்.

அங்கிரகம் - சரீரோம.

† அங்கிரசு-அக்கினி, பிரமாவிடம்பிறந்த வேமு முனிவரு ளொருவர்.

அங்கிரன் - ஆங்கிரசன், சப்தரிஷிகளிலொருவன்.

அங்கிரா-சப்தரிஷிகளிலொருவன்.

அங்கிரி-கால், மரமூலம், மூன்றுகாலிருடி.

அங்கிரிநாமகம்-மரமூலம்.

† அங்கிரிபம்-மரம்.

† அங்கிவேசன்-ஓர்முனிவன்.



† அங்கிளி-கற்றாழை.

அங்கினி-ஓர்விதக்கற்றாழை.

அங்கீகரணம் }
அங்கீகரித்தல் } சம்மதித்தல்.

அங்கீகாரம்-சம்மதி, வாக்குத்தத்தம்.

† அங்கீகாரியம்-அங்கீகரிக்கத்தக்கது.

† அங்கீகிருதம்-அங்கீகரிக்கப்பட்டது.

† அங்கியம்-அங்கத்திற்குரியது.

அங்கு-அவ்விடம், ஓரசைநிலை.

அங்குசக்கிரகன்-யானைப்பாகன்.

அங்குசதாரி - தாளகம், யானைப்பாகன், விநாயகன்.

† அங்குசபாசகன்
அங்குசபாசதரன்
அங்குசபாசமேந்தி } விநாயகன்.



அங்குசபாணி - காளி, விநாயகன், வீரபத்திரன்.
அங்குசபாதி-சிறுபுள்ளடி.
அங்குசபிசாரி-கொள்ளு.
அங்குசம்-தோட்டி, யானைத்தோட்டி, வாழை.
அங்குசரோசனம்-கூகைநீறு.
அங்குசவி-கொள்.
அங்குசன்-காந்தம், காகாண்டபாஷாணம்.
அங்குசோலி-அறுகு.
அங்குடம்-துறப்பு.
† அங்குட்டமாத்திரம்-பெருவிரலளவு.
† அங்குட்டமாத்திரன் - வித்தியாதத்துவத்திலிருக்குமோ ருருத்திரன்.
அங்குஷ்டம் - அங்குட்டம், பாண்டுவியாதி.
அங்குட்டம்-குறளுரு, பெருவிரல்.
† அங்குட்டருத்திரம்-மாயாதத்துவத்தி லிருக்குமெட்டுப்புவனங்களுளொன்று.
† அங்குட்டரூபி - பெருவிரலளவுவடிவமுடையோர்.

அங்குஷ்டான்
அங்குட்டான் } விரலுறை.



† அங்குணம்-வெங்காரம்.
அங்குஸ்தான்-பெருந்தாரா.
அங்குரகம்-கூடு.
அங்குரம்-உரோமம், குப்பைமேனி, தளிர், நங்கூரம், நீர்ப்பூண்டின் முளை, முளை.
அங்குரார்ப்பணம்-முளையிடுதல்.
அங்குரி-விரல்.
† அங்குரிதம்-தளிர்த்தது, முளைத்தது.
அங்குரித்தல்-முளைத்தல்.

† அங்குரீயகம்
அங்குரீயம் } மோதிரம்.

அங்குலம் - பெருவிரல், விரல், விரற்கடை.
அங்குலி - ஐவிரலிச்செடி, துதிக்கை நுனி, யானைக்குக் கட்டுமணி, விரல்.
அங்குலிகம்-அங்குலியம்.
அங்குலிசந்தேசம்-விரனெடித்தல்.
அங்குலிதோரணம்-திரிபுண்டரம்.

அங்குலித்திரம்
அங்குலித்திராணம் } விரற்புட்டில்.

அங்குலிபஞ்சகம்-ஐந்துவிரல்.
அங்குலிமுகம்-விரனுனி.

† அங்குலிமுத்திரிகை
அங்குலிமுத்திரை } முத்திரைமோதிரம்.

அங்குலிமோடனம் - விரலாற்றெறித்தல், விரனெடித்தல்.
அங்குலியம்-மோதிரம்.
அங்குலீ-அங்குலி, யானைக்கைநுனி.
அங்குலீகம்-மோதிரம்.
† அங்குலீபஞ்சகம்-விரல்களைந்தின் கூட்டம்.

அங்குலீயகம்
† அங்குலீயம் } மோதிரம்.



அங்கூசம்-அங்குசம்.
அங்கூடம்-அம்பு, கிரி.
அங்கூரம்-தளிர், முளை.
அங்கை-உள்ளங்கை.

† அங்கோடம்
அங்கோலம்
அங்கோலவைரவன் } அழிஞ்சின்மரம்.

† அங்கோலை-அழிஞ்சிற்பட்டை.

அங்ஙனம்
அங்ஙன் } அவ்விடம், அவ்விதம்.

† அச - நிவிர்த்திகலையிலிருக்கு முருத்திரபுவனங்களூற்றெட்டினுளொன்று; அது அண்டகடாகத்திற்குப் புறம்பே கிழக்குத்திக்கிலிருப்பதென்பர்.
† அசகசாந்தரநியாயம் - மீமாஞ்சையிற்கூறப்பட்டநியாயங்களுளொன்று; அது ஆட்டுக்கும் யானைக்கு முள்ளபேதம் போலும் நியாயம்.
அசகசாந்தரம்-ஆட்டுக்கு மானைக்குமுள்ளபேதம்.



அசகண்டா-வேளை, தைவேளை.
† அசகத்து-விடாதது.
† அசகந்தை-தைவேளைப்பூண்டு
அசகம்-வரையாடு.
அசகரம்-பெரும்பாம்பு.
† அசகரோகம்-எண்வகைமசூரிகை ரோகங்களு ளொன்று; அது பருத்துந்தடித்து மிரணத்தைத் தருவதாயநேக கொப்பளங்களெழும்புவதுங் கீல்களிலு முகத்திலும் வீக்கமுந் தாகமும் பிசுபிசுப்பானசலக்கசிவுமுண்டாவது மாயிருக்கும்.
† அசகலக்கணை - விடாதலக்கணை; அது தன்பொருளை விடாததனோடு சம்பந்த முள்ள வேறுபொருளைத்தருவது.
அசகவம்-சிவன்வில் அஃது; இருதலை திருமாலுநப்பிரமனுமாயிருப்பது.
† அசகளன் - சைனசமயத்திற் சொல்லப்பட்ட விருபத்து நான்கு தீர்த்தகரரு ளொருவன்.

† அசகனிகாரோகம் - ஒருவகைச்சுத்திரவிரணரோகம்; அது சிலேட்டுமவாதங்களினுற் பயற்றினைக் கயிற்றிற்கோத்ததுபோல நீளமாக மினுமினுப்புடன் நோவில்லாதகொப்பளங்களை யுண்டாக்குவது.
† அசகாயசூரன்-வேறொருவரதுசகாயமில்லாமற்பகைவரைவெல்லும் பலமுள்ளவன்.
† அசகாயம்-சகாயமின்மை.
† அசகி-பகைவன்.
அசகியம்-அருவருப்பு.
† அசகோத்திரம்-வேற்றுக்கோத்திரம்.
† அசகோத்திரன் -வேற்றுக்கோத்திரத்தான்.
அசக்கல்-கட்டல்.
அசக்கியம்-இயலாமை, துத்தநாகமணல்,நாகமணல்.
அசக்கியன்-தகுதியற்றவன்.
† அசக்கிரம்-ஆட்டுப்பால்.
அசங்கச்சித்தன்-அஞ்ஞானமனத்தன்.
அசங்கதம்-ஒழுங்கின்மை, பொய், வெறுப்பு.
அசங்கதி - இணக்கமின்மை, ஒவ்வாமை.
† அசங்கதியலங்காரம்-தொடர்பின்மையணி.
அசங்கமம் - அசட்டை, இகழ்ச்சி, பவித்திரமின்மை, புலவி.
அசங்கம் - தனிமை, நிச்சயம், பயமின்மை, விரோதம்.
† அசங்கற்பமாசம் - சங்கிரமத்தினுதிமாதங்களிலே யமாவாசைவராநிகழுமாதம்.
அசங்கற்பம் - உண்மை, முன்னிதானிப்பின்மை.
அசங்கன்-அஞ்ஞானன், ஒட்டாதவன்.
† அசங்கிதம் - அச்சமில்லாதது, சந்தேகமில்லாதது.
அசங்கியம்-அசங்கமம், அருவருப்பு.
† அசங்கியா-எண்ணிறந்தது.
† அசங்கியேயம்-எண்ணக்கூடாதது.
† அசங்கியை-அசங்கியா
† அசங்கிரகம்-இரவாமை,பின்னுக்குவேண்டும்பொருளைத் தேடிவைத்துக்கொள்ளாமை.
† அசங்கிலபதம்-கொடுத்தவிடத்துண்ணுதல்.
அசங்குதல்-அசைதல்.
அசங்கை-சங்கையீனம், மதிப்பின்மை.
† அசங்கையன்-சந்தேகமில்லாதவன்
அசங்கோசம்-அடக்கமின்மை.
† அசசாரணம் - பூரட்டாதிநட்சத்திரத்துக்கதிதெய்வம்.
அசசிவிகன் -ஆட்டுக்காரன்.



அசசுரம்-நெருஞ்சில், முருங்கைமரம்.
† அசசுவிதி-நாடிகள்பதினன்கினுளொன்று.
† அசச்சனன்-துர்ச்சனன்.
† அசஞ்சத்தம்-பற்றில்லாதது.
† அசஞ்சத்தி-சங்கற்பமறல்.
† அசஞ்சயம்-ஐயமின்மை.
அசஞ்சலம்-ஐயம், திடாரிக்கம்.
† அசஞ்சலர்-அசைவற்றவர்.
அசஞ்சிதன்-முத்தன்.
† அசடம்-உடலமில்லாதவஸ்து.
† அசடரூபம்-சைதன்யரூபம்.
அசடர்-கீழ்மக்கள்.
† அசடன்-களங்கமுள்ளவன், கீழ்மகன், சடமில்லாதவன்.
† அசடி-குற்றமுள்ளவள்.
அசடு - இசடு, இரும்புமுதலியவற்றிற்பெயருமசடு, கீழ்மை, குற்றம்.
† அசட்சுதரிசனம் - நீக்குணமாகிய தரிசனுவருணீயத்திஞெருவகை.
† அசட்டர்-களங்கமுடையவர்.
அசட்டி-அசமதாகம்.
அசட்டை-பராமுகம், மதியாமை.
† அசண்டை-சாதுவானதன்மை.
† அசதாகமம்-நாஸ்திகமுதலியசாஸ்திரம்.
அசதாசாரம்-துன்னடை.
அசதி - அயர்ச்சி, ஔவையார் கோவைபாடப்பெற்றவன், சடுதி, சிரித்துப்பேசல், மறதி, வசவி.
அசதிக்கோவை - ஔவையார் அசதியென்னுமிடையன்பேரிற் பாடின நானூறு பாட்டுள்ள பிரபந்தம்.



அசதிசன்னி-ஓர்நோய்.
அசதிசுதன்-சோரபுத்திரன்.
அசதியாடல்-நகல்.
† அசதியாட்டல்-நகையாடச்செய்தல்.
† அசதீசுதன்-சோரபுத்திரன்.
அசத்தம்-சத்தமின்மை.
† அசத்தர் - அஞ்ஞானிகள், வலிமையில்லாதவர்.
† அசத்தல்-மறந்துபோதல்.
† அசத்தன் - உலகப்பற்றற்றவன், முருகக்கடவுள், வலியில்லாதவன்.
அசத்தி-பலவீனம்.
அசத்தியம்-பொய்.
† அசத்தியோநிருவாணம்-நிருவாண தீட்சைவகை யிரண்டனுளொன்று; அது தேகாந்

தத்தின் முத்தியைப்பயப்பதும் வாலீசர் முதலிய மந்தபக்குவர்களுக்குச் செய்யப்படுவதுமாம்.
அசத்திலட்சணம்-அசம்பவம்.
அசத்து-உண்மையல்லாதது, தீமை.
† அசத்துக்கள்-கீழோர், சிறியோர்.
அசத்துரு-சந்திரன், மித்துரு.
அசத்துவம்-வலியின்மை.
† அசத்துவாபாதகம் - வஸ்துவில்லையென்று தோன்றும்படிசெய்யுஞ்சத்தி.
அசத்தை-சூனியம், பிரபஞ்சம், பொய்.
† அசநபன்னி - சிற்றகத்திப்பூண்டு, சோறு, போசனம், வெள்ளுள்ளி, வேங்கைமரம்.
† அசநவம்-பிருதுமன்னனுடையவில்.
† அசநவேதி-சீரகம்.
† அசநாமிர்ததயிலம்-ஓர்வகைத்தயிலம்; இது வேங்கைப்பட்டை சீந்தில் முதலியவற்றி லிருந்து வடிப்பது.
† அசனோற்பவவிக்கல் - ஐவகைவிக்கல்களி லொன்று; அது காரவஸ்து, மிருதிட்சண வஸ்து, சீரணமாகாதவஸ்து, கடினவஸ்து முதலியவைகளாற் பிறந்து நோவில்லாமற் கண்டத்தினிற்பதொனி, அற்பவிருமலென் னுங் குணங்களை யுண்டாக்குவது.
† அசந்ததி-மக்களில்லாமை.
அசந்தம் - உயிரெழுத்தில் முடியுஞ்சொல், சந்தமின்மை.
† அசந்தற்பணம்-திருப்திகொடாமை, விருப் பங்கொள்ளாமை.
அசந்தற்பம் - சமயமின்மை, சரிப்படாமை.
அசந்தானம் - சந்தானமின்மை, பிரிவினை.
அசந்தி-சந்தியின்மை.
† அசந்தித்தம்-ஐயப்படாதது.
† அசந்துட்டம்-விருப்பமின்மை.
† அசந்துட்டன்-மகிழ்ச்சியற்றவன்.
† அசந்துட்டி } சந்தோஷமின்மை, திருத்தி
அசந்துஷ்டி } யின்மை, மகிழ்ச்சியற்றவள்.
அசந்தோஷம் } வெறுப்பு.
அசந்தோடம் }
† அசந்நத்தன் - இறுமாப்புடையவன், யுத்தத் திற்காயத்தமில்லாதவன்.
† அசந்நிகருடம் - சேய்மை, பிரத்தியட்சப் படாமை.
† அசந்நிகிதம்-தூரமுள்ளது.
† அசந்நிகிருட்டம் - சமீபமாகாமை, பிரத்தி யட்சப்படாமை.
† அசந்நிதி-சமீபமாகாமை.

† அசந்நியம்-துர்க்குறியானதோற்றம், பிரப் பற்றது.
அசபம்-அசனை.
அசபன்--இடையன், பிரதிவாதி.
† அசபா-ஒருமந்திரம்; அது அவன்நானெனப்படுஞ் சோகம்.
† அசபாகாயத்திரி - ஆத்துமப் பிரசாதமந் திரம்.
† அசபாஸ்வரம்-காதுகட்குக்கேளாது மந்திரித்தல்.
† அசபாநலம்-அசபையாகியவக்கினி.
† அசபாவித்தை-அசபாமந்திரம்.
† அசபிண்டன்-சபிண்டனல்லாதவன்.
† அசபிண்டா - சபிண்ட சம்பந்தமில்லாத கன்னி.
† அசபிண்டி-சபிண்டியல்லாதவள்.
† அசபுத்தன் - சதருத்திருளிந்திரதிக்கிலிருக்குந் தசருத்திரருளொருவன்.
† அசபேசத்திசிவாத்மகம்-அசபாமந்திரத்திற் சத்திவடிவான சகரமுஞ் சிவ வடிவான அகரமும்.
அசபை-அசபம்.
அசப்பியம் - அதப்பியம், சபைக்கடாதசொல்.
அசமஞ்சசம்-வித்தியாசம்.
† அசமஞ்சசன் - சகரவரசனது மூத்த புத்திரன்.
அசமதாகம்-ஓமம்.
அசமந்தம்--மந்தகுணம்,மலையத்தி,மலையாமை.
அசமந்தன்-சோம்பேறி.
† அசமபாணன்-மன்மதன்.
அசமபாதை-சேனைநடக்கும்வழி.
† அசமம்-ஒற்றையிரட்டையல்லாதது.
அசமயம்-ஒவ்வாச்சமயம்.
அசமருதம்-அத்தி.
† அசமர்த்தம்-சாமர்த்தியமற்றது.
† அசமர்த்தவிசேடணாசித்தம்- சொரூபாசித்த வேதுப்போலி வகையுளொன்று; அது சாத்தியத்தைச்சிறிதுஞ் சாதிக்கவலியில்லாத விசேடணத்தையுடையது.
† அசமர்த்தவிசேடியாசித்தம் - சொரூபாசித்த வேதுப்போலிவகையுளொன்று; அது சாத்தியத்தைச்சிறிதுஞ் சாதிக்கவலியில்லாத விசேடியத்தையுடையது.
† அசமவாயி - அசமவாயிகாரணம், சமவாய மல்லாது.
† அசமவாயிகாரணம் - சமவாயிகாரண மல் லாதது; அது சமவாயிகாரணத்துணுகியிருப்

படுத்தனித்த காரணத்தன்மை யுடையது மாயிருப்பது.

அசமன்-சமனின்மை.

அசமானம்-உவமையின்மை.

† அசமுகன்-அசமுகாசுரன், ஆட்டுமுகத்தை யுடையவன், தக்கன்.

† அசமுகி-ஆட்டுமுகமுள்ளவள், சூரனுக்குத் தங்கையாகியவோரசுரப்பெண்.

அசமுசாரி-சந்தைதன்னியன், பிரமசாரி.

அசயோதகம் } ஓமம்.
அசயோதம் }



அசம்-ஆடு, ஆட்டுக்கடா, ஆன்மா, ஈருள்ளி, உள்ளி, சந்தனம், நெல்; மூவருடநெல்.

† அசம்பந்தாதிசயோத்தியலங்காரம்-தொடர்பிறுயர்வுநவிற்சியணி.

அசம்பவம்-அதிசயம், சூனியம், மாறுகொளக் கூறல்; அது நூற்குற்றம்பத்தினுளொன்று.

† அசம்பவாலங்காரம்-கூடாமையணி.

† அசம்பாஷிதர் - சம்பாஷணைசெய்தற்குத்தகுதியில்லாதவர்.

† அசம்பாதை - அடைக்கப்படாமல்வெளியாயிருப்பது, ஒடுக்கமில்லாதது, விசாலமுள்ளது.

† அசம்பாவனு-கிரகித்தற்கருமை, கிரகித்தற்கேலாமை.

† அசம்பாவனுவத்து-தியானித்தறியப்படாத பொருள்.

அசம்பாவனை-அறியக்கூடாமை.

அசம்பாவிதம்-சம்பவிக்கக்கூடாதது.

அசம்பி-தோட்பை.

† அசம்பிரக்ஞாசமாதி - நிராலம்பசிவயோக சமாதி.

அசம்பிரேட்சிதகாரித்துவம் - ஆராயாதுசெய்தல்; அது பஞ்சதந்திரத்தொன்று.

அசம்பிரேட்சிதம்-ஆராய்வின்மை.

அசம்பை-அசம்பி.

அசம்போகம்-அநுபவமின்மை.

அசம்மதம்-சம்மதமின்மை.

† அசம்மதி-உடன்பாடின்மை.

அசம்மானம்-அசங்கை.

† அசம்வேதனம்-உணர்வின்மை.

† அசரசிவன்-தானுமியங்குந்தன்மையில்லாத வுயிர்ப்பொருள்.

அசரம் - அசைவில்லாதது, இருவகைத்தோற்றத்தினுளொன்று; அது நடையில்லது.

அசராது-கொன்றை.

அசரியம்-அழிவின்மை, சிநேகம்.

† அசரீரத்துவம்-சரீரத்தன்மையின்மை.

† அசரீரமுத்தி-விதேகமுத்தி.

† அசரீரம்-சரீரமின்மை.

அசரீரன்-காமன்.

அசரீரி-அரூபி, ஆகாயவாணி, சரீரமற்றது.

† அசரு-அகிர், புண்ணினசடு, பொடுகு.

அசருதல்-அயருதல்.

அசரை-ஓர்சிறியமீன்



அசர் - அகிர், தலைச்சுண்டு, பொடுகு.

† அசர்வகர்த்திருத்துவம் - சர்வகர்த்திருத்துவமின்மை.

† அசர்வஞ்ஞதை } சர்வஞ்ஞத்துவமில்லாமை.
† அசர்வஞ்ஞத்துவம் }

† அசலகன்னிகை-உமாதேவி.

அசலக்கால்-தென்றல்.

† அசலசலம்-நால்வகைச்சிவலிங்கங்களுளொன்று; அது அசலசலலிங்கம்.

† அசலசலலிங்கம் - நால்வகைச்சிவலிங்களிலொன்று; அது தீட்சைக்குச் சொல்லியபடி வேதிகையிலிட்டுப் பூசித்தற்கும் இட்டலிங்கமாக நாடோறுமிட்டுப் பூசித்தற்கு முபயோகமான மண்டலலிங்கம்.



† அசலபதி-இமயமலை.

† அசலமூர்த்தி-அசைவின்றி நிலையாயிருக்கு மூர்த்தி; அது சிவலிங்கம்.

அசலம் - அசையாநிலை, அம்பு, இரும்பு, கற்பாஷாணம், படைக்கலம், பூமி, மலை.

† அசலர்-அயலார்.

† அசலலிங்கம்- இடப்பெயர்ச்சியின்றித்தாபிக்கப்பட்டவிடத்திலே யிருக்குமிலிங்கம்.

அசலனம்-அசைவின்மை.

அசலன்-அசைவற்றிருப்பவன், கடவுள்.

அசலாதிபன்-பூவரசன், மலையரசன்.

† அசலாவதி - அசைவில்லாத வெல்லைப்பொருள் பற்றிவினைகொண்டு முடிவது.

† அசலேசன்-கிரீசன்.

அசலை-பூமி, மலை.

† அசலைமூர்த்தி- ஞானக்கிரியாசிற்சத்தி மூர்த்தி; அது தனது சங்கற்பத்தாற்றுனசைவின்றி யசைவினூற் சடகாரியநிகழப் பண்ணும்.

அசல்-அருகாமை, உயர்ந்தது, கொசுகு, சீலை, பூமி, முதற்பிரதி.



அசல்பேரீஜ்-ஆதிவரி.
அசவல்-அசறு,கொசுகு,சேறு.
அசவாகனம்-அன்னப்பறவை.
அசவாகனன், அக்கினி, பிரமன், முருகன்.
அசவை-ஓர்மந்திரம், பெருவிரலடி.
அசறு - சிறுபூச்சி, சேறு, சொறி, தலைச்சுண்டு, புண்ணிலசடு, புழு.
அசறுக்கம்-கருமைகலந்தசிவப்புவருணம்.
அசறை-அசரை.
† அசற்காரியம்-உள்ளதல்லாதகாரியம்.
† அசற்காரியவாதம் - உள்ளதல்லாதகாரியந்தோன்றுமென்று வாதித்தல்.
† அசற்கியாதி-அசத்தான வொன்றையுள்ளதாக விளங்குதல்.
† அசற்குரு-சற்குருவல்லாதவன்.
† அசற்சீடன்-சற்சீடனல்லாதவன்.
† அசற்சூத்திரன் - ஒழுக்கமுந்தீக்கையு மில்லாத சூத்திரன்.
அசற்பதம்-ஆகாதவழி, துன்னடை.
† அசற்பாத்திரம்-சற்பாத்திரமல்லாதது.
† அசற்பாவம் - இல்லாதது, கெட்டகருத்து, தீயகுணம்.
அசற்பிரதி-சுத்தமானபிரதி.
† அசற்பிரதிபக்கம் - அன்னுவயவியதிரேகியேதுவின் பஞ்சரூபங்களிலொன்று; அது சாத்தியத்திற்கு விபரீதசாதகமாயிருக்கிற வேறோரேதுவில்லாதிருக்கை.
† அசற்புத்திரன்-சற்புத்திரனல்லாதவன்,புத்திர னில்லாதவன்.
அசனபன்னி-சிற்றகத்தி.
அசனம் - சோறு, போசனம், வெள்ளுள்ளி, வேங்கைமரம்.
அசனுத்து-அதிகாரப்பத்திரிகை, ஆதாரம், உத்தரவு.
அசனி - அனிச்சமரம், இடி, உயிர்வேதனையி ஞென்று, வச்சிராயுதம்.
அசன்-சிவன், தசரதன்றந்தை, பிரமன், பிறப்பில்லாதவன், மன்மதன், விட்டுணு.
அசன்மானம்-அசங்கை.
அசன்றிகா-வேலை, தைவேலை.
அசன்னிதி-தூரம், நம்பிக்கை.
அசன்னியம்-அபசகுணம்.
அசா-தளர்ச்சி.
அசாகசம்-அமைதி, பொய்.
அசாகை-களி, சாகையின்மை, புற்கை.
அசாக்கிரதை-சோம்பல்,மறவி,விழிப்பின்மை
அசாசருமம்-ஆட்டுத்தோல்.
அசாசனம் - அரசாட்சியின்மை, ஆளுகையின்மை.
† அசாசி-கருஞ்சீரகம்.
அசாசீவி-ஆட்டுவாணிகன்.
† அசாட்சியம்-சாட்சியமல்லாதது.
அசாணிமூலி - உத்தமதாளி, வேலிப்பருத்தி.
† அசாதகன் - இல்லறஞ்செய்வோரிருதிறத்தரு ளொருவன்.
† அசாதசத்துரு - தருமபுத்திரன், தனக்குச்சத்துருவில்லாதவன், தான் பிறர்க்குச் சத்துருவாகாதவன்.
† அசாதம்-பிறவாதது.
† அசாதவியவகாரன்-பிராயமற்றவன்.
† அசாதவேதநீயம்- வேதநீயந்துவிதபேதத்தொன்று.
அசாதனம்-நிலைநிறுத்தாமை.
† அசாதாரணகுணம்-விசேடகுணம்.
† அசாதாரணசவ்வியபிசாரம் - ஏதுப்போலிக ளைவகையிஞென்ருகியசவ்வியபிசாரத்திஞெருவகை. அது, சிறப்பனைகாந்திகம், ஏது சபக்க விபக்கங்களிலில்லாதது.
† அசாதாரணதருமம்-சிறப்பிலக்கணம்; அதாவது அவ்வியாத்தி, அதிவியாத்தி, அசம்பவ மென்னு மூன்று தோஷங்களுநீங்கிய தருமம்.
† அசாதாரணபூதம் - சாதாரண பூதமல்லாதது.
அசாதாரணம்-பொதுவின்மை.
† அசாதாரணலக்கணம்-சிறப்பிலக்கணம்.
†அசாதி-உயிரெழுத்தினைமுதலாகவுடையது, செவ்வா யென்னுங்கிரகம்.
† அசாது-கற்புநீங்கியமனைவி, தீயவன்.
அசாதுரியம்-சொற்றிறமின்மை.
† அசாத்தியசாதகம்-செய்து முடிக்கக்கூடாததைச் செய்து முடிப்பது.
அசாத்தியம் - சந்தேகம், பெருவழக்கற்றது, முடிக்கக்கூடாதது.
† அசாத்திரப்பிரபஞ்சம்-சாத்திரநெறிதவறிச் சிற்றின்பத்தைத் தழுவுதலாகிய மாயை; அது தீவிரம், மந்தமெனவிருவகைப்படும்.
† அசாத்திரம்-சாத்திரத்துக்கிசையாதது,சாத்திரமல்லாதது.
† அசாத்திரீயம்-சாத்திரத்திற் சொல்லப்படாதது.

† அசார்த்தர்-சார்த்தமில்லாதவர்.
† அசாபலம்-அசைவின்மை.
அசாபல்லியம்-உறுதி, திடம்.
அசாபாலகன்-ஆட்டுவாணிகன்.
† அசாமர்த்தியம்-சாமர்த்தியமின்மை.
† அசாரதை-சாரமில்லாமை.
அசாரம்-ஆமணக்கு, பிரயோசனமின்மை.
† அசாவதானம்-அவதானமின்மை.
அசாவாமை-தளராமை.
† அசாவிடல்-இளைப்பாறுதல்.
அசாவேரி-ஓர்ராகம்.
† அசானதேவதைகள் - சிருட்டியாரம்பத்தில் தேவபாவ மடைந்து தேவலோகத்தி லிந்திரனோடு கூடியோலக்கத்திலிருக்குந் தேவதைகள்.
† அசானித்தியம் - அண்மையின்மை, சந்திப்படாமை.
அசி-அவமதிச்சிரிப்பு, ஆயுதப்பொது, யுத்தம், வாள்.
† அசிகுவன் - அசத்தியவார்த்தையு மதிகவார்த்தையுமில்லாதவன், நாக்கில்லாதவன்.
அசிக்கல்-அரும்பொருள், சிக்கலின்மை.
† அசிக்கினி - அந்தப்புரத்தி லேவல்செய்யு மிளம் பெண், தக்கன்மனைவி, பஞ்சாப்புத் தேசத்திலுள்ளவோர்நதி.
† அசிட்டர்-சிட்டரல்லாதவர்.
அசிதம்-அமரபக்கம், அறிவின்மை, கருமை, சனி, சிவாகமமிருபத்தெட்டினொன்று.
† அசிதம்சம்-அசிதத்தின்கூறு.
அசிதன்-சிவன், திருமால், புத்தன்.
† அசிதாங்கவயிரவன்- வயிரவரெண்மருளொருவன்.
† அசிதாசமம் - இந்திரநீலமணி, மரகதமணி.
அசிதாம்புருகம் } நீலோற்பலம்.
அசிதாம்புரூகம் }
† அசிதாரு-அசிபத்திரவனம்.
† அசிதாலவனம் - நூற்றுநாற்பது நரகங்களுளொன்று; அது வாள்போலிருக்குமட்டைகளை யுடையபனங்காடு.
† அசிதேது-கத்தி, வாள்.
அசிதை-அவுரி.
† அசிதோதம் - மேருமலையின் சாரலிலுள்ள வோருவாவி.
† அசிதோபலம்-இந்திரநீலமணி.
அசிதோற்பலம்-நீலோற்பலம்.
† அசித்தசாத்தியம்-முடியாதசாத்தியம்.

† அசித்தம் - ஓரேதுப்போலி; அது பட்சத்திலிருக்கை யில்லாதவேதுவையுடையதாய்ப் பட்சாசித்தம், சொரூபாசித்தம், வியாப்பியாத்துவாசித்தமென மூன்றுவகைப்படும், முடிக்கப்படாதது.
அசித்தல்-அழித்தல், நகைத்தல்.
† அசித்தன் - அழிக்கப்படாதவன், கண்டிக்கப்படாதவன்.
அசித்தி - அத்தாட்சியற்றது, சித்தியின்மை, தவறு.
† அசித்திரம்-சித்திரமின்மை.
அசித்திரன்-கள்வன்.
அசித்து-சடம்.
† அசித்துத்தத்துவம் - சடவடிவமாகிய விருபத்து நான்குதத்துவங்கள்; அது ஞானேந்திரியமைந்து, கன்மேந்திரியமைந்து, பிராணாதியைந்து, சத்தாதியைந்து, அந்தக்கரணநான்கென்பன.
† அசித்துப்பொருள்-சடப்பொருள்.
அசிந்தம்-கோடாகோடி, பத்துலட்சங்கோடி, மரணம்.
† அசிந்தன்-சிந்திக்கப்படாதவன்.
† அசிந்திதன் - அவமதிக்கப்பட்டவன், கடவுள், நினைக்கப்படாதவன்.
அசிந்தியம்-ஒரெண், சிந்தைக்கெட்டாமை.
அசிந்தை-நிர்ச்சிந்தை, புலனின்மை.
† அசிபதசொரூபம் - கூடஸ்தனே பிரமம் பிரமமே கூடஸ்தனென வைக்கியார்த்தமாயறிவது.
† அசிபதம் - தத்துவமசியென்னுமகாவாக்கியத்தின்மூன்றாம்பதம்; அது சிவசீவர்களுடைய வைக்கியத்தைக்குறிப்பது.
அசிபத்திரகம்-கரும்பு.
அசிபத்திரம்-கரும்பு, படையுறை, வாளலகு.
அசிபத்திரவனம்-ஓர்நரகம்.
† அசியவாமீயசூக்கம்-பொன்னைத்திருடியபாதகந்தீர்க்குமாறு செபிக்கப் படுமோரிருக்குவேதவாக்கியமந்திரம்.
† அசிரநானம்-கண்டஸ்நானம்.
அசிரப்பிரபை-மின்னல்.
அசிரம் - உடல், காற்று, தவளை, முன்றில், விடயம், வெள்ளை, வெட்டிவேர்.
அசிரவணம்-செவிடு.
அசிரன்-சூரியன், தீ.
அசிராபை-மின்னல்.
அசிருபாதம்-உதிரப்பெருக்கு.
† அசிர்க்கு-இரத்தம்.



† அசிவம்-அதிட்டவீனம், தீங்கு.
† அசிவயோகி-சிவயோகியல்லாதவன்.
† அசிற்பிரபஞ்சம் - அசித்துப் பொருளாகிய பிரபஞ்சம்.
† அசினபத்திரி
அசினபத்திரிகை } வௌவால்.
† அசினபத்திரை
அசினம்-தோலாசனம், தோல்.
அசினயோனி-மான்.
அசீதகரன்-சூரியன்.
† அசீதம்-எண்பதாவது, உட்டணம்.
அசீதளம்-கருப்பூரம்.
† அசீதி-எண்பது, சடசீதிமுகம்; அது ஆனி புரட்டாதி, மார்கழி, பங்குனிமாதங்களின் பிறப்பு.
† அசீதிகம்-எண்பதென்னுமளவுடையது.
† அசீதிகன்-எண்பதுவயதுடையவன்.
அசீரணபேதி-ஓர்பேதி.
அசீரணம் - செரியாமை, பசியின்மை, யௌவனம்.
† அசீரணரோகம் - சமியாமையாலுண்டாகு மோர்நோய்.
அசீரணவாயு-ஓர்வாயு.
† அசீரியம்-அழியாதது.
அசீர்-ஆயத்தம், தளபாடம்.
† அசீர்ணம்-சமியாமை, யௌவனம்.
† அசீர்த்தி-அசீரணம்.
† அசீலன்-நல்லொழுக்கமில்லாதவன்.
அசீவம்-சூனியம், மரணம்.
அசீவனி-சூனியம்.
† அசீவன்-சீவனில்லாப்பொருள்.
அசு-பிராணவாயு.
அசுகம்-காற்று, துக்கம்.
† அசுகிருத்து-பகைவன்.
அசுகுசுப்பு-அருவருப்பு, சந்தேகம்.
அசுகுணி-ஓர்பூச்சி, ஓர்வகைக்கரப்பன், காதிற் படருமோர்நோய்.
அசுகை-எழில், ஐயம்.
அசுசமன்-அன்பன், கணவன்.
அசுசி-அபகீர்த்தி, அருவருப்பு, சுசியின்மை.
† அசுசித்தல்-அருவருத்தல்.
† அசுசிப்படல்-அழுக்கடைதல்.
† அசுசிப்படுத்தல்-அழுக்காக்குதல்.
† அசுட்கம்-உலராதது, பச்சையானது.
அசுணமா
அசுணம் } கேகயப்புள்.

அசுணன்-வெள்வெங்காயம்.
† அசுண்டவாயு - பூமிக்குமேலேம்பது யோசனைக் கப்பாலிருக்கு மொருவாயு; இது சமஸ்த சீவன்களுக்குஞ் சீவனம் பிறப்பித் திராட்சதர்கவனத்துக்கும் பட்சிகள்கவனத்துக்குமாதாரமாயிருப்பது.
அசுதந்தரம்-சுதந்தரமில்லாமை.
அசுதாரணன்-சிவன்.
அசுதை-விடம்.
† அசுத்ததத்துவங்கடொகுமுதல் - அசுத்தமாயை.
† அசுத்ததத்துவம்-ஆன்மதத்துவம்.
† அசுத்தப்படல்-அழுக்காதல்.
† அசுத்தப்படுத்தல்-அழுக்காக்குதல்.
† அசுத்தமாயாக்கோபகர்-அனந்தேசுவரர்.
† அசுத்தமாயாதத்துவம் - அசுத்தமாயையிலனந்ததேவராற் கலக்குண்டபாகம்; அது தத்துவங்களினிடைவைத்தெண்ணப்படும்.
† அசுத்தமாயை - நித்தியமாயேகமாயெங்கும் வியாபகமாயருவமாய்ச் சடமாய்ப் பிரளய காலத்திலான்மாக்களுடைய கன்மங்களுக் குறைவிடமாய்ச் சுத்தாசுத்தமுமசுத்தமுமாகிய தனுகரணபுவனபோகங்கள்தோன்றுதற்குமுதற்காரணமாய்த் தன்காரியமுகத் தான் ஞானக்கிரியைகளை விளக்குமாயினு மயக்கஞ்செய்வதாயுள்ளவொருபதார்த்தம்.
அசுத்தம்-சுத்தமின்மை, வேசிமார்க்கம்.
† அசுத்தன்-சுத்தமில்லாதவன்.
† அசுத்தாத்துவா - பிரகிருதிமுதற் பிரகிருதி வரையுள்ளவிருபத்தைந்துதத்துவங்களின் சமூகம்.



அசுத்தாவி - சுத்தமில்லா வரூபி, பசாசு.
† அசுத்தி - அழுக்கு, ஆணவமலம், சுத்தமின்மை, வழுக்களையப்படாமை.
† அசுத்தை-குற்றமுடையவள்.
அசுந்தரம்-அடாமை, அவலட்சணம்.
† அசுபகாரி-தீங்கிழைப்பவன்.
† அசுபக்கிரகம்-தீயகிரகங்கள்; அவை ஆதித்தன், செவ்வாய், சனி, அபரபக்கசந்திரன், இராகு, கேது, ஆதித்தனுடன் கூடுகின்ற புதன் என்பன.
† அசுபக்கிரியை-அமங்கலக்கிரியை.
அசுபதம்பவாதம்-ஓர்நோய்.
அசுபதி-ஓர்நாள்.

† அசுபபாவனை-பாவனையைந்தனுளொன்று; அது உடம்பினையனித்தியந்துக்கமநான்மாவசுசியென்றுபாவித்தல்.
அசுபம்-அமங்கலம், அழுக்குரா, பாவம்.
† அசுபயோகம் - சுபமல்லாதயோகம்; அது சாதகனுக் கிலக்கினத்திற்குப் பனிரண்டாமிடத்திற் சந்திர சூரியரல்லாத மற்றகிரகங்கள் கூடிநிற்குநிலை.
† அசுபராசி-குருராசி.
† அசுபவாதனை-தீயவிடயவாதனை.
அசுப்பு-சடுதி.
† அசுமருட்டன்-வானப்பிரத்தருளொருவன்.
† அசுமந்தகம்-நாணற்பூண்டு.
† அசுமந்தம் - அடுப்பு, அதிட்டவீனமானது.
† அசுமம் - இடியேறு, கல், தீத்தட்டிக்கல், மேகம்.
† அசுமலோட்டிரநியாயம் - மீமாஞ்சையிற்கூறப்பட்ட நியாயங்களுளொன்று.
† அசுமாந்தகம் }
† அசுமாந்தம் } நாணற்பூண்டு.
அசுமாத்ரம் - அசுகை, ஐயம், சயிக்கினை, சிலமன்.
அசுமானகிரி-மேற்கட்டி.
† அசுமேதம்-அசுவமேதயாகம்.
† அசும்பல்-இடையறுதொழுகல்.
அசும்பு - கிணறு, பொல்லாநிலம், வழுக்குநிலம்.
† அசும்புசெய்தல்-வழுக்குதல்.
† அசும்புதல்-அசும்பல்.
† அசுரகன்-அக்கினி, இந்திரன்.
அசுரகுரு-சுக்கிரன்.
அசுரசந்தி-இரணியவேளை.
அசுரநாள்-மூலநாள்.
† அசுரபி-துர்க்கந்தம்.
அசுரமணம்-எண்வகை மணத்தொன்று; அது பெண்ணுக்குப் பொன்பூட்டிப் பெண்ணின் சுற்றத்திற்குப்பொன்வேண்டுவன கொடுத்துக்கொள்வது.
அசுரமந்திரி-சுக்கிரன்.
† அசுரம்-அசுரமணம்.
அசுரரிபு-விட்டுணு.
அசுரர்-அவுணர்.
† அசுரன்-அவுணன், இராகு, கேது.
† அசுராதிபன்-மாவலியென்னுமசுரன்.
† அசுரேசன்-அசுரர்களுக்குத்தலைவன்.
† அசுரேந்திரன் - தாரகாசுரனுடையமகன்.
அசுரை-இராசி, இருள், வேசி.
† அசுலபம்-அடைதற்கருமை.
அசுவகந்தி }
† அசுவகந்திகா } அமுக்குரா.
† அசுவகந்திச்சூரணம்-அமுக்குராக்கிழங்காற் செய்யப்பட்ட சூரணம்.
† அசுவகந்திபலாலாட்சாதைலம்-ஒருவகைத் தயிலம்.
† அசுவகந்தை-அமுக்குராப்பூண்டு.
† அசுவகிராந்தம்-ஓர்பறவை.
அசுவகினி-அச்சுவினி.
அசுவகெந்தி-அமுக்குரவு.
† அசுவகோட்டம்-குதிரைச்சாலை.
அசுவசட்டிரம்-நெருஞ்சில்.
அசுவசாத்திரம்-அசுவபரீட்சைநூல்.
அசுவசாந்தி-ஓரியாகம்.
அசுவசாரத்தியம்-குதிரைச்சாரதித்துவம்.
அசுவசாலை-குதிரைப்பந்தி.
அசுவசாவம்-குதிரைக்குட்டி.



† அசுவசிகிச்சை - குதிரைவைத்தியம்.
† அசுவதந்திரபாவம்-பரதந்திரத்தன்மை.
† அசுவதந்திரம்-சுவதந்திரமின்மை.
† அசுவதரம்-ஆண்கோவேறுகழுதை.
† அசுவதரன்-ஓர்நாகசிரேட்டன்.
† அசுவதரி-பெண்கோவேறுகழுதை.
அசுவதாட்டி-குதிரையின்வேகம்.
† அசுவதாமன்-அச்சுவத்தாமன்.
அசுவதி-அச்சுவினி, முதனாள்.
அசுவத்தம்-அத்திமரம், அரசமரம்.
அசுவத்தாமன் - சிரஞ்சீவியரெழுவரிலொருவன்; அவன் துரோணன்மகன்.
† அசுவநாயகன்-குதிரைகாப்போன்.
அசுவந்தம்-அடுப்பு, மரணம், முடிவு, வயல்.
அசுவபரி-அலரி.
அசுவபரிட்சை }
அசுவபரீட்சை } கலைஞானமறுபத்துநான்கி னொன்று; அது குதிரையைப்பற்றியது.
† அசுவபாலன்-குதிரைப்பாகன்.
† அசுவப்பிரதானம்-சுபப்பிரதானமல்லாதது.
அசுவமியம்-குதிரைப்பாதுகாணம்.
† அசுவமுகன்-குதிரைமுகமுள்ளகின்னரன்.
அசுவமேதபருவம்-பாகவதத்திலோர்பிரிவு.
அசுவமேதம்-ஓர்யாகம்.
அசுவமேதிகம் }
அசுவமேதியம் } அசுவமேத யாகத்திற்குப் பக்குவமானகுதிரை.

அசுவம் - அமுக்குராக்கிழங்கு, குதிரை, குதிரைப்பாஷாணம்.
† அசுவரம்-கீழ்க்குரல், மெய்யெழுத்து.
† அசுவலக்கணம்-குதிரையின் குணங்களையுங் குற்றங்களையுமாராய்தற்குள்ளகுறி.
† அசுவவாகன்-குதிரைப்பாகன்.
† அசுவவாதரோகம்-ஓர்வகைவாதரோகம்.
† அசுவவாதியர்-குதிரைபயிற்றுவோர்.
† அசுவவித்து-அசுவசாத்திரமறிந்தவன்.
† அசுவவைத்தியம்-குதிரைவைத்தியம்.
அசுவாபரி-அலரி.
அசுவாமணக்கு-சிறுபூளை.
† அசுவாமி-உடையவனல்லாதவன்.



† அசுவாமிவிக்கிரயம்-உடையவனல்லாதவன்விற்றல்.
† அசுவாரி-எருமை.
† அசுவாரூடமூர்த்தி - மாணிக்கவாசகசுவாமிகள் பொருட்டு நரிகளைக் குதிரையாக்கியரிமர்த்தன பாண்டியனுக்குக் கொண்டுவந்த சிவன்.
அசுவினி-அச்சுவினிநாள்.
† அசுவினிதேவர்-அச்சுவினிதேவர்.
† அசுவீகாரம்-அங்கீகரியாமை.
† அசுவீயம் - குதிரைக்கூட்டம், குதிரைச்சம்பந்தமுடையது.
அசுவை-அச்சுவினிநாள், அத்தாட்சியற்றது.
அசுழம்-நாய்.
அசூசம் }
அசூசி } ஆசூசம், சூதகம்.
அசூதி-பிறப்பின்மை, மலடி.
அசூயனம் }
அசூயை } அவதூறு, பொறாமை.
அசூரி-பாமரன், வீரமில்லாதவன், வைசூரி.
அசூர்-சமுகம், ஜில்லாவுத்தியோகஸ்தர்.
அசூர்க்கச்சேரி-கலெக்டர்கச்சேரி.
† அசேசரி-புவர்லோகத்திலிருக்குமோர்வாயு.
† அசேசன் - சுத்தவித்தியா தத்துவத்திலிருக்கின்றவைம்பத்தோருருத்திரருளொருவன்.
அசேஷம்-முழுதும்.
† அசேடம்-சேடமின்மை.
† அசேட்டை-சேட்டையின்மை.
அசேதனம்-அறிவின்மை.
அசேவனம்-அசட்டைபண்ணல், கீழ்ப்படியாமை, விலகுதல்.
அசேவை-அசங்கை, விலகல்.

† அசேனன் - சூரியசமுகத்தாறிருதுக்களினு நின்று பாட்டயர்வோரிலொருவன்.
அசை-அசைநிலை, அசையென்னேவல், அலகொன்றேனுமிரண்டேனுங்கொண்டு சீர்க்குறுப்பாய் வருவது, ஆட்டுமறி, இசைப்பிரிவு, இரைமீட்பு, சீரகம், செய்யுளுறுப்பிலொன்று, சொல்லுருபு, பிரகிருதி, பெண்ணுடு, மாயை.
அசைஇ - இருந்து, இளைத்து, இளைப்பாறி, வருந்தி.
அசைஇய-ஓய்ந்த.
அசைஇயது-கிடந்தது.
† அசைகபாதம் - இரவினிகழுமிரண்டாமுகூர்த்தமாகியபூரட்டாதி.
அசைகபாதன் - பதினொருருத்திரரிலொருவன்.
அசைகை-அசைவு, ஐயம்.
அசைச்சீர்-தளைகொளற்கிடனுகியோரசையே சீராயுநிற்பது.
அசைச்சொல் - அசை நிறைக்குஞ்சொல்.
அசைதல்-ஆடுதல், இருத்தல், உலாவல், கலங்குதல், சோம்பல், தங்கல், துவளல், பயப்படுதல்.
அசைதன்னியம் - அறியாமை, சடத்துவம், ஞானக்குருடு.
† அசைதன்னியரூபம்-சடரூபம்.
அசைத்த-கட்டிய.
அசைத்தல்-ஆட்டல், ஓசையெடுத்தல், கட்டல்.
† அசைத்தொழில்-தாக்கியெழுதல்.
அசைநிலை-அசைச்சொல்.
† அசைநிலையளபெடை - அசைகோடற்பொருட்டுக்கொண்டவளபெடை.
அசைநிலையோகாரம் - ஈற்றசை யோகாரம். (உ-ம்) கேண்மினோ.
அசைபோடல்-இரைமீட்டல்.
அசைப்பருங்கல்-மலை.
அசைப்பு - அசைதல், இறுமாப்பு, சொல், சொல்லுதல்.
† அசைமீட்டல் - மிருகங்கள்தாமுண்டவுணவை மீட்டு மென்றிரைப்பையினுட் செலுத்தல்.
அசையடி-அம்போதரங்கம்.
அசையந்தாதி - அடியீற்றசைவருமடி முதலசையாகத் தொடுத்திருப்பது.
† அசையாநிலை-அசையாதுநிற்குநிலைமை.
அசையாமணி-ஆராய்ச்சிமணி.
† அசையாமை-சலனமின்மை.

அசைபிடல்-அசைபோடல்.
அசைபு-அமுக்குரா.
அசைவாடுதல்-அசைதல், உலாவுதல்.
† அசைவின்மை-முயற்சி.
அசைவு-ஆட்டம், ஓர்வகைத்தூக்கு, சலனம், சோர்வு, பெயர்ச்சி.
† அசைவுதீர்தல்-இளைப்பாறுதல்.
அசைவெட்டுதல்-இரைமீட்டல்.
அசோகத்தளிர்மணி - சௌந்திகப் பதுமராகமணி.
அசோகம் - ஒருமரம், சோகமின்மை, மன்மதன்கணை, மருது, வரிலோத்திரம், வாழை.
† அசோகரோகிணி-ஓர்மருந்துப்பூண்டு.
அசோகவனம்-வாழைவனம்.
† அசோகவனிகாநியாயம்- இராவணன்சீதையைவைத்தற்கு மற்றையிடங்களைவிட்டுப்பிரதானகாரணமொன்றுமின்றியசோகமரச்சோலையைத் தெரிந்துகொண்டது போலவொருகாரியத்தைச்செய்தற்குப் பலவழியிருக்கவும்பிரதானகாரணமின்றி யொருவழியைத்தெரிந்துகொள்ளுதல்.
† அசோகவனிகை-அசோகமரச்சோலை.
அசோகன் - அருகன், சோகமற்றவன், மன்மதன்.
† அசோகாரி-கடம்பமரம்.
அசோகு - அசோகமரம், மருது, வரிலோத்திரம், வாழை.
† அசோகை-சவரிப்பூண்டு.
அசோசம்-கவலையின்மை.
அசோணம் } குறட்டை, சவரி, சவரிலோத்திரம்.
அசோண்டி }
† அசோதனம்-அசுத்தம், திருத்தமின்மை.
† அசோதிதம்-சுத்திபண்ணப்படாதது, திருத்தப்படாமை.
† அசோதை-நந்தகோபன்மனைவி.
† அசோவதி - மேருவின் வடகிழக்கிலுள்ளவொருநகரம்.
அசௌசம்-ஆசூசம், சுத்தமின்மை, சூதகம்.
† அசௌந்தரியம்-அவலக்ஷணம்.
அசௌரியம்-வீரமின்மை.
அச்சகம்-நீர்முள்ளி.
அச்சகாரம்-முன்பணம்.
அச்சக்குறிப்பு-பயப்பாட்டுக்குறி.
† அச்சச்சுவை - சுவையலங்காரவகைகளுளொன்று; அது அச்சமென்னுமெய்ப்பாட்டானெஞ்சினிகழுந் தன்மை புறத்துப்புலனுப் விளங்கநடப்பது.
† அச்சஞ்செய்தல்-பயமுறுத்தல்.

அச்சடியன்-ஓர்வகைச்சாயப்புடைவை.
அச்சடை-கீழ்காய்நெல்லி.
அச்சணம்-அக்கணம்.
அச்சத்தி-கத்தரி.
† அச்சந்தசு-சந்தம்பெறுதது, வேதாத்தியயனஞ்செய்தற்குரியனல்லாதவன், வேதாத்தியயனம்பண்ணுதவன்.
அச்சபரம்-நாணற்புல்.
அச்சபல்லம்-கரடி.
† அச்சப்படுத்தல்-பயங்கரமுறச்செய்தல்.
அச்சமம்-அளத்துப்புல், முசுறுப்புல்.
அச்சமுள்ளோன்-பயமுடையோன்.
அச்சம்-அகத்தி, இலேசு, ஈசுரப்புல், ஓரலங்காரம், கடைப்படி தானமேழினென்று; அஃது அச்சத்தானீதல், கரடி, காய்ச்சற்பாஷாணம், கோரைப்புல், சரியொப்பு, தகடு, பயம், பளிங்கு, மகவேக்ஷணம் நான்கினென்று, முன்புறம்.
அச்சயன்-கடவுள்.
† அச்சரசு-அப்சரஸ்திரீ.
அச்சரம்-உதட்டிலுண்டாகு மோர்நோய்.
அச்சல்-ஆச்சல், தரம்.
† அச்சவபிநயம்-அச்சச்சுவையபிநயம்.
அச்சவாரம்-உறுதிப்பணம்.
† அச்சவுபதை-உபதைநான்கனுளொன்று.
அச்சறுக்கை-எச்சரிக்கை, பத்திரம்.
† அச்சனர்-கடவுள்.
அச்சன்-தந்தை.
அச்சாணி-அச்சுருவாணி.



அச்சாணிமூலி-வேலிப்பருத்தி.
அச்சாரம்-அச்சவாரம், ஆயத்தப்பணம்.
† அச்சானம்-அஞ்ஞானம்.
அச்சி-ஓர்தேயம், தாசி.
அச்சித்தினை-ஓர்புல், தினை.
அச்சிநறுவிலி-நறுவிலிமரம்; இம்மரத்துப்பட்டையிலிருந்துரித்த நாரால் மைசூர் தேசத்தில் கயிறுதிரிக்கப்படுகிறது.
† அச்சிரக்காலை-முன்பனிக்காலம்.
† அச்சிரநாள்-கூதிருமுன்பனியும்.
† அச்சிரவக்காலம்-முன்பனிக்காலம்.
அச்சு - அடையாளம், உடல், உயிரெழுத்து, எழுத்து, கட்டளைக்கருவி, தேகம், நெய்வோர்கருவியினென்று, பண்டியச்சு, யுகம்.
அச்சுக்கட்டு - நெற்பயிரிடும்படியானநிலம்.
அச்சுக்கம்பி } துப்பாக்கியில் மருந்து கெட்டிக்குங் கோல்.
அச்சுக்கம்பு }

அச்சுதம்-அறுகும் வெள்ளரிசியுங்கூட்டியஅணி வது, கெடுதலின்மை.
அச்சுதன் - அழியாமையுள்ளோன், கடவுள், மூத்தோன், விட்டுணு.
அச்சுதன்முன்வந்தோன்-பலபத்திரன்.
† அச்சுதை-அழிவில்லாதவள், உமாதேவி.
அச்சுப்பலகை-நெய்வோர்கருவியிலொன்று.
† அச்சுமாருதவாதி - அந்தந்தச்சீவனினச்சு வேறொரு சீவனினச்சாகாமலந்தந்த வச்சாகப்பிறந்திறக்குமென்னு மதஸ்தன்.
அச்சுரம்-நெருஞ்சில், முருங்கை.
அச்சுருவாணி-தேரகத்திற்செறிகதிர்.
அச்சுலக்கை-துலாவினடுவைக்குமரம்.
† அச்சுவசாத்திரம்-அசுவசாஸ்திரம்.
† அச்சுவசேனன் - தக்ககனென்னும் பாம்பின்மகனாகியவொருவன்.
† அச்சுவதி-அச்சுவினிநாள்.
அச்சுவத்தம்-அரசமரம்.
† அச்சுவத்தன்-எட்டாமனுவின் காலத்திலுள்ள ஏழுமுனிவரிலொருவன்.
† அச்சுவத்தாமன்-அசுவத்தாமா.
† அச்சுவத்தாமா-ஓரியானை, ஓர்யுத்தவீரன்.
அச்சுவமுகாதனம்-கால்மடித்து இரண்டுமுழந்தாளினும் முழங்கைகளை யூன்றி இரண்டுள்ளங்கைகளையுங் கன்னத்திலே வைத்திருப்பது.
† அச்சுவமேதம்-அசுவமேதயாகம்.
அச்சுவம்-குதிரை.
† அச்சுவரதன் - சூரியன் தேர்பரிக்குநாகருளொருவன்.
† அச்சுவன்-குதிரைச்சாரியாடவன்.
அச்சுவினி-அசுபதி.
† அச்சுவினிகள்
† அச்சுவினிகுமாரர்
† அச்சுவினிதேவதைகள்
† அச்சுவினிதேவர்
} தேவமருத்துவர்.
அச்சுவினிநாள்-அசுபதி.
† அச்சுவினிபுத்திரர்-தேவமருத்துவர்.
அச்சுறல்-பயப்படுதல்.
† அச்சுறவு-அச்சமடைதல்.
† அச்சுறுகொழுந்தொடர் - மரங்களிலிரும்பைத்தைத்து விசையாதபடி கழுத்தில்மாலைபோலிடுவதொன்று.
அச்சுறுத்தல்-பயமுறுத்தல்.
அச்சுறை-உடம்பு.
† அச்சென-விரைவாக.
† அச்சை-பீதிரோகம், பைத்தியம்,
† அச்சொடுபுரிதல்- சரியொப்பாகச்செய்தல், மூலரூபமாகச் செய்தல்.
அச்சோ-அதிசயச்சொல், இரக்கச்சொல்.
அஸ்தமனம்-அத்தமனம்.
அஸ்தாந்தரம்-பொக்கிஷம்.
அஸ்திசாரபேதி-அதிசாரபேதி.
அஸ்திசுரம்-எலும்புருக்கிச்சுரம்.
அஸ்திபாரம்-அத்திவாரம்.
அஸ்திரி-உள்வஸ்திரம்.
† அஞராட்டி-நோயுள்ளவள்.
அஞர்-அறிவிலர், துன்பம், வருத்தம்.
அஞலம்
அஞல்
} கொசுகு.
அஞ்சணங்கம்-பஞ்சவிலக்கணம்.
அஞ்சணங்கியம்-பஞ்சவிலக்கியம்.
அஞ்சதி-காற்று.
† அஞ்சத்தான்-பிரமா.
அஞ்சபாதம்-ஓர்புள்ளடி.
† அஞ்சப்படுதல்-மதிக்கப்படுதல்.
அஞ்சம்-அன்னப்புள்.
† அஞ்சரதன்-பிரமன்.
அஞ்சலம்-சீலைத்தொங்கல், வாளுறை.
† அஞ்சலர்-பகைவர்.
† அஞ்சலளித்தல்-அபயங்கொடுத்தல்.
அஞ்சலி - ஆடுதின்னாப்பாளை, கும்பிடல், சங்கங்குப்பி, நான்குபலம், பேதை, மாவிலிங்கை, வண்டுகொல்லி, வந்தனை, வறட்சுண்டி, வெளவால்.
அஞ்சலிகாரிகை-ஓர்பூடு, சித்திரப்பாவை.
அஞ்சலிகை-வெளவால்.
† அஞ்சலிக்கை-கைமுகிழ்த்தல்.
† அஞ்சலித்தல்-அஞ்சலிசெய்தல்.
அஞ்சலிவந்தனம்-கும்பிட்டு வணங்கல்.
† அஞ்சலினவர்-பாஞ்சராத்திரமதத்தோர்.
† அஞ்சலோமசம்-அன்னபேதி.
அஞ்சல்-தாங்கல், தரிப்பினெல்லை, தோல்வி, பயப்படுதல், வியங்கோண்முற்று.
† அஞ்சவத்தை - ஐந்துநிலை; அவை ஆன்மாவுக்குரிய சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதமென்பன.
† அஞ்சவாச்சிரமம்-நால்வகைச்சன்னியாசங்களுளொன்று.
† அஞ்சறைப்பெட்டி - ஐந்தறையுள்ளதாகச் செய்யப்பட்ட பெட்டி.
† அஞ்சற்காரன்-தபாற்காரன்.
அஞ்சற்குளச்சி-குங்குமபாஷாணம்.

அஞ்சனகிரி-சேடமலை.
† அஞ்சனக்கலிக்கம்-அஞ்சனம்பார்க்கக்கண்ணுக்கிடுமோர் மருந்து.
அஞ்சனக்கல்-கருநிமிளை.
அஞ்சனக்காரன்-மந்திரக்காரன்.
† அஞ்சனக்கிரி-நீலமலை.
அஞ்சனக்கோல்-அஞ்சனந்தீட்டுங்கோல்.
† அஞ்சனசலாகை-மைதீட்டுங்கோல்.
† அஞ்சனசேவோத்தேசனம் - அஞ்சனப்பிரயோகத்தினால் விளங்குதல்.
அஞ்சனத்திரயம் - மூவிதாஞ்சனம்; அவை சோராஞ்சனம், பாதாளாஞ்சனம், பூதாஞ்சனம்.
அஞ்சனபாஷாணம் - கல்லீயம், விளைவுப்பாஷாண முப்பத்திரண்டினொன்று.
அஞ்சனம்-இருள், கறுப்பு, மேற்றிசையானை, மை.



அஞ்சனவண்ணம்-கருநிறம்.
அஞ்சனவண்ணன் - திருமால், கருநிறத்தையுடையவன்.
† அஞ்சனவித்தை-அறுபத்துநான்குகலைஞானங்களிலொன்று; அது மறைந்தபொருளைக்காண்பிப்பது.
அஞ்சனன்-இந்திரன், சனி, விட்டுணு.
† அஞ்சனாட்சியம்மை-திருநற்குடியிற் கோயில்கொண்டிருக்குந்தேவியார்.
அஞ்சனாதேவி-அனுமன்றாய்.
அஞ்சனலா - கருங்காக்கணம், நீலோற்பலம்.
அஞ்சனாவதி - வடகீழ்த்திசை யானைக்குப் பெண்யானை, வாயுதேவன் மனைவி.
அஞ்சனி-காயா, நாணற்புல்.
† அஞ்சனேயன்-அனுமான்
அஞ்சனை - அனுமன்றாய், வடதிசையானைக்குப் பெண்யானை.
† அஞ்சனைநாமிகாவர்த்தமரோகம்- இமையைப்பற்றியரோகபேதங்களுளொன்று.
† அஞ்சாச்சிறப்பு-வாகைத்திணைவிகற்பங்களிலொன்று; அது பகைவர்கண்ணுந் தன்பாலார்கண்ணு மொப்புமையாகப் பாசறையுள்ளாச்சால்புடைமைகூறல்.
அஞ்சாணிமூலி-அச்சாணிமூலி.
அஞ்சாப்பட்டயம்-இரட்சண்ணியபத்திரிகை.
அஞ்சாப்பெட்டி-அஞ்சறைப்பெட்டி.
† அஞ்சாமை-திண்மை.
அஞ்சாரவிடையர் - ஓர்வகையிடையர், இவர்கள் ஸ்திரீகள்கலியாணத்தில் ஐந்தாலியென்னும் கழுத்தணியணிவது வழக்கம்.
அஞ்சாலியிடையர்-அஞ்சாரவிடையர்.
அஞ்சாவிரா-பெருங்குமிழ். [ம்.
அஞ்சானனம்-சிங்கம், சிங்கவிராசி, ஐந்துமுகம்.
அஞ்சானனன்-சிவன், ஐந்துமுகமுள்ளவன்.
அஞ்சி-எசமானன்.
அஞ்சிகம்-கண்.
அஞ்சிக்கை-அச்சம்.
அஞ்சிட்டன்-சூரியன்.
அஞ்சிதமுகம்-வருத்தமாற்றுதிருதோண்மேற்றலைசாய்த்தல்.
அஞ்சிதம் - உண்டாதல், தலையசைத்தல், நல்லறிவு, பூசித்தல், பொருந்தல், வணக்கம்.
அஞ்சிதவணி-தற்குறிப்பலங்காரம்.
† அஞ்சித்தல்-பூசித்தல்.
அஞ்சீரம்-அத்தி, அத்திப்பழம்.
அஞ்சு-ஐந்து.
அஞ்சுகம்-கிளி.
அஞ்சுதல்-பயப்படுதல்.
† அஞ்சுபயம் - குடிகெடுக்கநேரிடு மைந்துவகைப்பட்டபயங்கள்; அவை அரசனாலும் பரிசனராலும் பகைவராலும் கள்வராலும் விலங்குமுதலியவுயிர்களாலும் வருவன.
† அஞ்சுமாலி-சூரியன்.
அஞ்சுமான்-சிவாகமமிருபத்தெட்டினொன்று, துவாதசாதித்தரிலொருவன்.
அஞ்சுருவாணி-அச்சுருவாணி.
† அஞ்சுவரத்தகுன-அஞ்சத்தகுவன.
அஞ்சுவர்ணத்தோன்-துத்தநாகம், நெய்த்துக்காரன்.
அஞ்சுவனத்தார்-நெய்வாரினோர்பேதம்.
† அஞ்சுவனம்-பஞ்சாட்சரம்.
† அஞ்சுறல்-பயப்படுதல்.
அஞ்செவி-வறட்சுண்டி.
† அஞ்செழுத்து-பஞ்சாக்கரம்.
† அஞ்ஞதை-அறியாமை.
அஞ்ஞத்துவம்-அஞ்ஞானம்.
† அஞ்ஞர்-அறிவில்லார்.
அஞ்ஞன்-அறிவிலான்.
அஞ்ஞாதம்-அக்கியாதம்.
அஞ்ஞாதவாசம்-அக்கியாதவாசம், கரந்துறைதல்.
† அஞ்ஞாதவாசி - பிறராலறியப்படாத வாசமுடையவன்.
† அஞ்ஞானபூமி - பொல்லாதவாசனையாகிய வேழுபூமி; அவை விந்துசாக்கிரம், மேற்

சாக்கிரம், மகாசாக்கிரம், சாக்கிரசொப்பனம், சொப்பனம், சொப்பனசாக்கிரம், சுழுத்தி யென்பன.
† அஞ்ஞானப்பாறை-கருங்கற்பாறை.
அஞ்ஞானம்-ஞானமின்மை, தெய்வ வறிவின்மை.
† அஞ்ஞானவிருத்தி-அஞ்ஞானச்செயல்கள்; அவை தமம், மோகம், மகாமோகம், தாமிச்சிரம், அந்ததாமிச்சிரமென வைந்துவகைப்படும்.
† அஞ்ஞான்று-அப்போது.
அஞ்ஞை - அறிவிலான், இலாடத்தானம், தாய்.
† அடகாம்பரி-பதினெட்டாவதுமேளகர்த்தா.
அடகு-இலைக்கறி, கடன்கோடற்கீடுவைத்தல்.
அடக்கம் - அடங்கியகாரியம், அடங்கிய பொருள், உயிரொடுங்கியிருத்தல், ஒடுக்கம், ஒருவகைத்தேள், கருத்து, கருவி, மனவமைதி.
அடக்கம்பண்ணுதல்-சேமஞ்செய்தல், பிரேதமுதலியவற்றைப் புதைத்தல்.
அடக்கல்-ஒடுக்கல், கீழ்ப்படியப்பண்ணல்.
அடங்கம்-கடுகுரோகிணி.
அடங்கலர்-பகைவர்.
† அடங்கலன்-பகைவன்.
† அடங்கலார்-பகைவர்.
† அடங்கலும்-அனைவரும், எல்லாம்.
அடங்கல்-அடக்கம், அமைதல், எல்லாம், குத்தகை, சுருங்கல், சுற்றுவட்டம், வியங்கோண்முற்று.
† அடங்கவும்-முழுவதும்.
அடங்கன்முறை -கோவிற்பதிகம்; அதாவது சைவசமயாசாரியர் மூவருந் திருவாய்மலர்ந்தருளிய தேவாரப்பதிகங்களடங்கிய திருமுறை.
† அடங்காதோர்-பகைவர்.
† அடங்காப்பற்று - அரசனாணையைமீறுவோரிருக்குமூர்.
† அடங்காமாரி-ஒருவருக்குங் கீழ்ப்படியாதுமூரணிநடப்பவள், விடாமழை.
† அடங்காமை - கீழ்ப்படியாமை, மனோவாக்குக்காயங்களடங்காது தீநெறிக்கட் செல்லுதல்.
† அடங்கார்-பகைவர்.
அடங்காவாரிதி - ஒலிமாறாச்சமுத்திரம், கடலுப்பு, மூத்திரம்.
† அடங்கிடம்-அழிந்தொடுங்குமிடம்.
† அடங்கு-அடங்குதல்.
† அடங்குதல்-அடங்கல், வெளிப்படாதுமனத்தினுள்ளே யடங்குதல்.
அடசல்
† அடசுதல் } அடையப்பண்ணுதல்.
† அடஞ்சாதித்தல்-எதிரிடைபண்ணுதல்.
† அடடா - ஓரதிசயக்குறிப்பு, தனக்குக்கீழ்ப்பட்டவொருவனைவிளிக்குமொருசொல்.
அடதாளம்-சத்ததாளத்தொன்று.
அடத்தி-வாசி.
† அடநம்-அலைந்துதிரிதல், போதல்.
அடநி-வின்னுனி.
† அடந்தாளம்-அடதாளம்.
அடந்தை-ஓர்தாளம்.
† அடப்பங்கொடி-அடம்பங்கொடி.
அடப்பம்-சாமான்பை.
அடப்பனார்-நெய்தற்றலைவனது பட்டப்பெயர்.
அடப்பன்-அடப்பனார், கடப்பமரம்.
† அடப்பிரதீபிகை- அடயோகத்தைவிவரிக்குமொருவடநூல்.
அடம்-ஈனம், சஞ்சாரம், பிடிவாதம், பொல்லாங்கு, போகுதல்.
† அடம்பங்கொடி-ஓர்பூக்கொடி.
† அடம்பண்ணல்-தீங்குசெய்தல்.
அடம்பாரம் - இடம்பம், பரப்பம், பிரபல்லியம், முழுதும்.
அடம்பு-அடம்பங்கொடி, அடம்பம்பூ, ஆட்டுக்காலடம்பு, மான்குளம்படம்பு.
† அடயோகம் - நால்வகையோகங்களிலொன்று; அது ஒற்றைக்காலினிற்றல், தலைகீழாகத் தூங்கிப்புகைசுவாசித்தல், கையுயர்த்தி நிற்றல் முதலியபிரயாசைச் செயல்களோடு செய்யப்படுவது.
அடரடிபடரடி-முற்றுமழிக்கை.
அடரார்-பகைவர்.
† அடரொலி-அதட்டல்.
அடர்-அடரென்னேவல், செறிவு, தகடு, நெருக்குகை.
அடர்ச்சி-நெருக்கம்.
அடர்தல்-நெருங்கல், பொருதல்.
அடர்த்தல்-நெருக்கல், பொருதல்.
அடர்த்தி-நெருக்கம்.
அடர்ந்தேற்றம்-கொடுமை, நெருக்கிடை.
அடர்ந்தேற்றி-இட்டேற்றம், நெருக்கம்.
அடர்பு-செறிவு, நெருக்கம், வினையெச்சம்.
அடர்ப்பம்-நெருக்கம்.

அடர்ப்பு-நெருக்கம், போர்.
அடர்வு-அடர்ப்பு.
அடலம்-மாறுமை.
அடலார்-பகைவர், போர்வீரர்.
அடலி-வெள்ளாட்டி.
அடலை-சாம்பல், போர்க்களம், மாறுமை.
அடலைமுடலை-வீண்வார்த்தை.
அடல்-கொல்லுதல், சமைத்தல், பொருதல், வலி, வியங்கோண்முற்று, வெற்றி.
அடவாதி-பிடிவாதக்காரன்.
அடவி-காடு, கூட்டம், சோலை.
அடவிகன்-வனவாசி.
† அடவிக்கச்சோலம்-ஓர்சரக்கு.
† அடவிசரர்-வேடர்.
அடவிச்சொல்-கோரோசனை.
† அடவியீ-ஓர்வகைக்கீடம்.
அடனம்-அலைந்துதிரிதல், போகுதல்.
அடா-ஓரதிசயக்கிளவி, கீழ்மகனை விளிக்குஞ் சொல்.
அடாசனி-ஆரை, புளியாரை.
அடாசு-மட்கிச்செத்தது.
அடாசுதல்-திணித்தல், விலகுதல்.
அடாணு-ஓரிராகம்.
அடாதது-தகாதது.
அடாத்தியம்-அடாதது.
அடாத்து-தகாதது, பொருந்தாதது, முறை கேடானது.
† அடார் - புலிமுதலியவைகளையகப்படுத்தும் பொறியாகிய கல்லடார்.
அடாவந்தி - அநியாயம், இட்டேற்றம், துன்பம்.
அடி-அடியென்னேவல், அடியோர், ஆதி, ஓரளவு, கடவுள், கால், காற்சுவடு, கீழ், கீழ்மகளை விளிக்குஞ்சொல், செய்யுளுறுப்பினொன்று, தாது,முன், மூலம், வமிசமூலம்.
† அடிகண்மார் - சமணருளாசிரியராய் நின்றவர்களைக்குறிக்குமொரு சிறப்புப்பெயர்.
அடிகள் - கடவுள், குரு, தலைவன், தலைவி, முனிவர், மூத்தோன்.
† அடிகாற்று-பெருங்காற்று.
அடிகொள்ளல்-தொடங்கல்.
அடிகோலல்-அஸ்திவாரம்போடல், முயலல்.
† அடிக்கடி-அடிபெயர்க்குந்தோறும்.
† அடிக்கணை-கணைக்கால்.
அடிக்கீழ்ப்படுத்தல்-அடக்கி நடத்தல், ஆண்டு கொள்ளல்.

† அடிக்குடி-அடிச்சேரி.
† அடிக்குடில்-வீடு, † வைகுந்தம்.
அடிக்குள்-உடனே.
அடிக்கொள்ளுதல்-தொடக்கம் பண்ணு
அடிக்கோலுதல்-இடம்பிடித்தல்.
அடிசில்-சோறு.
† அடிச்சால்-உழவின்முதற்சால்.
† அடிச்சி-அடியாள்.
† அடிச்சியர்-குற்றேவல்செய்யும்பெண்
அடிச்சுவடு-காற்சுவடு.
† அடிச்சூடு-காலடியிற்சுடுதல்.
அடிச்சேரி-அடிக்குடில், கிராமம்.
† அடிஞானம்-சிவஞானம்.
அடிதலை-அடிமுடி, ஆதியந்தம், வாலா
† அடிதலைதடுமாற்றம் - ஆதியந்தந்தெரி தடுமாறுதல்.
அடிதல்-அடிபடுதல்.
அடித்தலம்-அத்திவாரம், கால்.
அடித்தல்-அறுக்கல், அறைதல்.
அடித்தழும்பு-காற்சுவடு.
அடித்தளம்-அத்திவாரம், வீட்டினிற்பாட
அடித்திகம்-அமுக்குரா, அக்கிரு.
அடிநா-நாவினடி.
† அடிநிலம்-அடிப்பக்கம், அடியிடம்.
† அடிபடல் } அடிக்கப்படுதல்.
† அடிபடுதல் }
அடிபணிதல்-நமஸ்காரஞ்செய்தல்.
அடிபார்த்தல்-எதுபார்த்தல்.
† அடிபிடி-சண்டை.
அடிபிடித்தல் - எதுப்பிடித்தல், கறிமுத சுண்டல், முதற்பிடித்தல்.
அடிபெயர்தல்-விலகுதல்.
† அடிப்படல்-கீழ்ப்படிதல், கீழ்ப்படையில த்தல், பாதத்தின்கீழ்ப்படுதல்.
அடிப்படுதல்-அமைதல்.
அடிப்படுத்தல்-கீழ்ப்படுத்தல்.
† அடிப்படுத்துதல்-கீழமைத்தல்.
† அடிப்படை - ஆதாரமாகவடியிற்கிடப்ப பிரதானசேனை.
அடிப்பட்டகாந்தி-திமுறுகற்பாஷாணம்.
† அடிப்பட்டசாந்தி-மகாசாந்தம்.
† அடிப்பட்டசான்றோர் - பரம்பரைப் பெ யோர்.
† அடிப்பட்டவன்-பழகினவன்.
அடிப்பதறல்-கானடுங்கல்.
அடிப்பந்தி-முதற்பந்தி.

அடிப்பலம்-முதற்பலன், மூலபலம்.

† அடிப்பற்றல்-அடிப்பற்றுதல்.

அடிப்பற்று-சோறுமுதலிய பாண்டத்திற்பற்றுகை, பறையப்பு.

அடிப்பற்றுதல்-கறிமுதலிய சுண்டுதல்.

அடிப்பாடு-பழக்கம், வழி.

அடிப்பாய்தல்-ஓர்விளையாட்டு, தாண்டுதல்.

அடிப்பார்த்தல் - நிழலளந்து பொழுதுகுறித்தல், யோசித்தல்.

† அடிப்பிடித்தல்-அடிப்பற்றுதல்.

அடிப்பிணை-வாங்கமணல், வங்கம்.

† அடிப்போடல் } இடம் பண்ணுதல், தொ
அடிப்போடுதல் } டங்குதல்.

அடிமடக்கு - சித்திரக்கவியி லொன்று, பாத மடக்கு.

அடிமடி-உள்மடி.

அடிமடை-உள்மடை.

அடிமயக்கு-பாதமயக்கு.

† அடிமறி - எண்வகைப்பொருள் கோளிலொன்றாகிய வடிமறிமாற்று.

† அடிமறிமண்டிலம் - அகவற்பாக்களுளொன்று.

அடிமறிமண்டிலவாசிரியப்பா - அகவற்பாவினுளொன்று; அஃது எல்லாவடியுமளவொத்து எவ்வடியை முதனடு விறுதியாகக் கொள்ளினு மோசையும் பொருளும் வழுவாது நிற்பது, ஓர்வகையாசிரியப்பா.

† அடிமறிமண்டிலவாசிரியம்-அடிமறிமண்டிலமென்னும் வகைப்பட்டவாசிரியப்பா.

† அடிமறிமாற்று - பொருள்கோளெட்டினுளொன்று.

அடிமறிமாற்றுப்பொருள்கோள்-பொருள்கோளெட்டி னொன்று; அது யாதானு மோரடியை யிறுதி நடு முதல்களில் வேண்டிய விடத்துக் கூட்டிப் பொருளிசைமாட்சி மாறாதுபொருள்கொள்வது (உ-ம்) "அலைப்பான் பிறிதுயிரை யாக்கலுங்குற்றம், விலைப்பாலிற்கொண்டூன் மிசைதலுங்குற்றஞ், சொலற்பாலவல்லாத சொல்லலுங் குற்றங், கொலற்பாலுங் குற்றமேயாம்" இதனைமாறிக்காண்க.

அடிமறிமொழிமாற்றுப்பொருள்கோள் - பொருள்கோளெட்டினொன்று; அஃதுஅடிகளையேற்புழிக் கூட்டிப்பொருள் கொள்வது (உ-ம்) "நடுவின்மைநாணுபவர்" என்பதனுள் நடுவன்மை நாணுபவர்படுபயன் வெஃகிப்பழிபடுவ செய்யார் எனக்கூட்டிக்காண்க. "படுபயன்வெஃகிப் பழிபடுவசெய்யார், நடுவன்மைநாணுபவர்" என்பதனுள் நடுவன்மை நாணுபவர்படுபயன் வெஃகிப்பழிபடுவ செய்யார் எனக்கூட்டிக்காண்க.

அடிமுகனை-துவக்கம்.

அடிமுடி - ஆதியந்தம், காலுந்தலையும், கீழ்மேல், வரலாறு.

† அடிமுதன்மடக்கு-ஆதிமடக்கென்னுஞ்சொல்லலங்காரம்.

அடிமுரண்டொடை - அடிதோறு முதற்கட்சொல்லேனும்பொருளேனுமறுதலைப்பட்டு வருவது (உ-ம்) இருள்பரந்தன்னமா நீர் மருங்கினிலவுக்குவித்தன்ன.

அடிமை-சிறை, தொண்டானவன், தொண்டு.

† அடிமைகொள்ளல்-அடிமையாக்கல்.

† அடிமைபூணல்-அடிமையாதல்.

† அடிமைப்படல்-தொண்டுபூணுதல்.

† அடிமைப்படுத்தல்-அடிமையாக்குதல்.

† அடிமைப்பத்திரம்-தொண்டுச்சீட்டு.

† அடிமையோலை-அடிமைப்பத்திரம்.

அடிமோனைத்தொடை - அடிகடோறுமுதலெழுத்தொன்றிவருவது.

அடிம்பு-சிவதை.

அடியடியாக-தலைமுறை தலைமுறையாக.

† அடியநாதி-தொன்றுதொட்டுள்ள காலம்.

அடியந்தாதி-நின்றபாட்டினீற்றடி வரும்பாட்டின்முதலடியாகப்பாடல்.

† அடியர்-தொண்டுசெய்வோர்.

அடியல்-சொரிதல் (உ-ம்) கதிரடித்தது, தொண்டர்.

† அடியவர்-தொண்டர்.

† அடியவன்-அடிமையானவன்.

அடியளபெடைத்தொடை- அடிதோறுமுதன் மொழிக்கண் அளபெடுத்துவருவது.

அடியறுக்கி-மட்கலமறுக்குங்கருவி.

அடியனாதி-தொன்றுதொட்டுள்ளது.

அடியார்-அடிமைகள், தொண்டர்.

† அடியாள்-அடிமைபூண்டவள்.

அடியாறு-தொன்றுதொட்ட வரலாறு.

† அடியான்-ஏவலாளன்.

அடியிடுதல்-தொடங்குதல்.

அடியியைபுத்தொடை - அடியினிறுதிதோறு நின்றவெழுத்தேனுஞ் சொல்லேனுமொன்றிவருவது.

அடியீடு-ஆரம்பம்.

அடியீரல்-மண்ணீரல்.

அடியுண்ணல்-அடிபடுதல், திரிதல்.

அடியுரம்-அடிப்பலம், அத்திபாரம்.

† அடியுறை-பாதகாணிக்கை.

அடியெதுகைத்தொடை - அடிதோறு மிரண்டாமெழுத்தொன்றிவருவது.

அடியான்-தொண்டனுகியான்.
அடியாணி-நிலத்தினட்டுவைக்கப்படுகிற [illegible] ஊசி.
அடியார்பட்டு-பத்தகருவியி லொன்று.
அடியார்-பிறர்க்குக்குற்றேவல்செய்வோர்.
அடிவல்லாகம்-ஓர்செடி.
அடிவயிறு-கீழ்வயிறு.
அடிவரலாறு - காரணம், தொடக்கம், வமிச வரலாறு.
அடிவருடல்-கால்பிடித்தல்.
அடிவாரணை-அடியாறு.
அடிவாரம்-சாரல்.
அடிவாறு-அடியாறு.
அடிவானம்-திகாந்தம்.
அடிவிடுதல்-பாண்டங்களி னடிப்பொருத்து விடுதல்.
அடிவிடுதல் } அளவிடுதல்.
அடிவிள்ளல் }
† அடிவீழ்ச்சி-வணக்குதல்.
† அடிவீழ்தல்-வணக்கம்.
அடிவெண்குருந்து-முருந்து.
அடிவைத்தல்-ஆரம்பித்தல், தலையிடல், நடக்கத்தொடங்கல்.
† அடுகலம்-பாகஞ்செய்யும் பாத்திரம்.
அடுகளம்-போர்க்களம்.
† அடுகனலவன் - சங்காரத்தொழிற்செய்யுங் காலாக்கினியுருத்திரன்.
அடுக்கிடை-[illegible]பாதகிடை, பிரியாதடுத்துக் கொள்ளுதல்.
† அடுதல்-கொல்லுதல்.
† அடுகை-கொல்லுதல், பாகஞ்செய்தல்.
† அடுகைமனை-மடைப்பள்ளி.
அடுக்கணி - ஓரலங்காரம்; அது சொல்லும் பொருளு மடுக்கிவருவது.
அடுக்கம்-பக்கமலை, மலைப்பக்கம்.
அடுக்கலிடல்-செல்லையிரண்டாமுறைகுற்றல்
அடுக்கல் - ஒன்றன்மே லொன்றுவைத்தல், குவித்தல், தொடுத்தல், மலை, வியங்கோண்முற்று.
அடுக்களை-மடைப்பள்ளி.
அடுக்காலாத்தி-அடுக்குத்தீபம்.
அடுக்கானகன்னி-சரியானவள், பவளப்புற்றுப்பாஷாணம்.
† அடுக்கியல்-வண்ணகவொத்தாழிசைக்கலிப் பாவினுறுப்புக்களிலொன்றாகிய வராகம்.
அடுக்கு-அடுக்கப்பட்டது, அணியம், ஒழுங்கு, சிரேணி, சேர்மானம், பத்தி, பலவின் கூட்டம்.
† அடுக்குகை-அடுக்குதல்.
† அடுக்குச்செவ்வரத்தை-அடுக்காகமலருள்ள செவ்வரத்தை.
அடுக்குதல்-ஒன்றன்மேலொன்றுவைத்தல்.
அடுக்குத்தீபம்-அடுக்குவிளக்கு.
அடுக்குத்தொடர் - ஒருமொழியே பலமுறை யடுக்கிவருவது; அஃது அசைநிலையினும் பொருணிலையினு மிசைநிறையினு மிரண்டு முதனான்களவு மடுக்கிவரும் (உ-ம்) அன்றேயன்றே அசைநிலை, தீதீதீ பொருணிலை, வருகவருகவருகவருக இசைநிறை.
† அடுக்குப்பண்ணல்-ஆயத்தஞ்செய்தல்.
அடுக்குப்பார்த்தல்-ஒத்திக்கை பார்த்தல்.
அடுக்குமல்லிகை-ஓர்மல்லிகை.
அடுக்குமுள்ளி-ஓர்பூண்டு, முள்ளி.
அடுக்குமத்தை-ஓர் ஊமத்தை.
† அடுங்குன்றம்-யானை.
அடுசிலைக்காரம்-செந்நாயுருவி.
அடுதல்-உண்டுபண்ணுதல், கொல்லல், சமைத்தல், மேற்கொள்ளல்.
அடுத்த-சரியான, நெருங்கின.
அடுத்தல் - கிட்டல், சம்பவித்தல், சார்தல், சேர்தல்.
அடுத்தார்-சேர்ந்தார்.
அடுத்தி-வட்டி, வாசி.
† அடுத்து-மென்மேல்.
† அடுத்துவரல் - அடிக்கடிவருதல், நெருங்கி வருதல்.
† அடுநை-கொல்வாயென்னுமுன்னிலைவினை.
† அடுப்பங்கரை-அடுப்பின்பக்கம்.
அடுப்பு-அச்சம், சேர்க்கை, தீவாய்த்தானம், பரணிநாள்.
† அடும்பு-அடப்பங்கொடி.
அடுவல்-வரகு நெல்லுங் கலப்பு.
அடை - அடுத்தல், அடைகஷாயம், அடை கிடத்தல், அடையென்னேவல், அப்பவருக்கம், இலை, உவமை, கனம், கொதுவை, சேறென் னேவல், தோசை, நிலவிறை, முளை, வினைமுற்று.
அடைகட்டி-அடைமண்.
அடைகலம்-சேமக்கலம்.
அடைகல் - கம்மப்பட்டடை, மதகடைக்குங்கல்.
அடைகாத்தல்-அடைகிடத்தல்.
அடைகாய்-ஊறுகாய், வெற்றிலைபாக்கு.
அடைகிடத்தல்-குஞ்சுபிறப்பிக்க முட்டையைக்காத்தல், நீங்காதிருத்தல்.

அடைகுதல்-அடைதல்.
டைகுளம்-வாய்க்காலில்லாக்குளம்.
டைகுறடு-பட்டடை.
டைகை-நெருங்குகை, பெறுகை.
அடைகொடுத்தல் - நிலவிளைவி லொருபங்
கை யரசனுக்குக்கொடுத்தல்.
அடைகொளி-அடைமொழியைக் கொள்ளு
தலுடையது, விசேடியம்.
டைகோட்டை-வெளிபோகப்பெறாததடை
டைகோழி-அவயக்கோழி.
டைக்கத்து - அடைகிடக்குங்கோழி யிடுஞ்
சத்தம்.
டைக்கலக்குருவி-ஊர்க்குருவி.
அடைக்கலங்காத்தல் - அடைக்கலப்பொரு
ளைக்காத்தல், அடைக்கலம் புகுந்தவனைக்
காத்தல்.
அடைக்கலங்குருவி-ஊர்க்குருவி.
அடைக்கலப்பொருள் -அடைக்கலமாவைக்
கப்பட்டபொருள்.
டைக்கலம்-அடைக்கலப்பொருள், அபயம்,
சரண்புகல், புகலிடம்.
அடைக்கலம்புகுதல்-சரண்புகுதல்.
டைக்கலாங்குருவி-ஊர்க்குருவி.
டைக்காய்-தாம்பூலம், பாக்கு.
டைசல்-அடைசுதல், நெருக்கம்.
டைசீலை-காரச்சீலை, பாழ்ச்சீலை.
டைசுதல்-ஒதுக்குதல், கருப்புக்குள் வைத்
துக்கொள்ளுதல், செருகுதல், நெருக்கு
தல், நெருங்குதல்.
டைசுபலகை-செருகி வெளியடைக்கும்பல
டைசுவலை-ஓர்விதவலை. [கை.
டைசொல்-அடைமொழி,விசேடணமொழி.
அடைச்சல்-பொத்துதல்.
டைச்சி-உடுத்து.
டைச்சீட்டு-கிஸ்திரசீது.
டைச்சுதல்-மலர்சூட்டல்.
டைதல்-அடங்குதல், ஒதுங்குதல், கூடுதல்,
சேருதல், பெறுதல்.
அடைதுணை-கடைதறி.
அடைத்தது-இட்டகட்டளை.
டைத்தல்-காப்புச்செய்தல், சேர்த்தல், தடு
த்தல், பூட்டல், மழைவிடாது பெய்தல்,
றியற்படுத்தல், வெளியைமறைத்தல், வே
லியடைத்தல்.
டைந்தார் - அடைக்கலம் புகுந்தோர், மித்
திரர்.

அடைந்தோர்-உறவோர்.
அடைப்பம் - அம்பட்டனாயுதவுறை, சாமான்
பை, வெற்றிலைப்பை.
அடைப்பன்-ஓர்வியாதி, மாடுகளுக்குத் தொ
ண்டையிலுண்டாவது.
அடைப்பு - அடைக்கப்பட்டது, அடைத்தற
ன்மை, அடைத்தற்றொழில், கதவு, சாளரி
முதலியவற்றி னடைப்பு, வேலி.
அடைப்பை-வெற்றிலைப்பை.
அடைப்பைக்காரன் - பிளவுசுருளெடுத்துக்
கொடுப்போன்.
அடைமண்-கலப்பையிலடைந்தமண்.
அடைமழை-விடாமழை.
அடைமாங்காய்-மாங்காயூறுகாய்.
அடைமானம்-உவமை, ஈடு, பிரதி,
வழிவகை.
அடைமொழி-விசேடணமொழி.
அடைய-எல்லாம்.
† அடியடிமை-தனம்வாங்குதன்முதலியவர்க்கு
லடையப்பட்டவடிமை.
அடையடுத்தவாகுபெயர் - ஒருபொருளதன்
புறத்துப் பண்பாய்நின்ற வடையோடுகூடி
யாகுபெயராய் வழங்குவது (உ-ம்) புகை
யிலைநட்டான்.
அடையலர்
† அடையலவர் } பகைவர்.
அடையலார்
அடையல் - அடைகுதல், அடைந்துவருவது,
எல்லாம், வியங்கோண்முற்று.
† அடையாதவர்
† அடையாதார் } பகைவர்.
† அடையார்
அடையாளம்-அறிகுறி, குறிப்பு, சின்னம், மா
அடைவிகச்சோலம்-கஸ்தூரிமஞ்சள். [திரி.
அடைவு-ஈடு, உபமானம், எல்லாம், முறை,
விதம்.
அட்சகன்னம்-நேர்முக்கோணத்தினெடுவரி.
அட்சகூலை-ஓர்வியாதி.
அட்சதை-மங்கலவரிசி, பொரியரிசி.
அட்சபாகை-நேர் முக்கோணத்தினளவு.
அட்சபாடனம்-திரைப்படல்.
அட்சபாதன் - கௌதமரிஷி, நியாயவழி
யோன்.
அட்சமணி-அக்கமணி, உருத்திராட்சம்.
† அட்சமாலாதரன்-அட்சமாலைதரித்தவன்.
† அட்சமாலிகை-இருக்குவேதவுபநிடதங்களு
ளொன்று, உருத்திராட்சமாலை.



அட்சமாலை-அக்கமாலை.

அட்சம் - அக்கம், உருத்திராட்சம் கண், தான்றிக்காய், வெங்காயம்

அட்சய-ஓர்வருடம்.

† அட்சயதிருதீயா-வைகாசிமாதத்துச் சுக்கில. பக்கத்தில்வரு மூன்றாந்திதி.

அட்சயதூணி-அருச்சுன னம்புக்கூடு.

அட்சயபாத்திரம் - பாண்டவர்க்குச்சூரியன் கொடுத்த பாத்திரம், வைணவர்களைய மேற்கும் பாத்திரம்.

அட்சயம்-கேடின்மை.

† அட்சயா-சாந்திரமாதத்தில் ஞாயிற்றுக்கிழமையல்லது திங்கட்கிழமையில்வரு மேழா நாள்.

† அட்சரகணிதம்-பீசகணிதம்.

அட்சரசஞ்சன்
அட்சரசணன் } எழுத்துக்காரன்.

அட்சரசனனி-இலேகனி.

† அட்சரசனன்
அட்சரசீவகன்
† அட்சரசீவி } எழுத்துக்காரன்.

அட்சரசுதகம்-அக்கரசுதகம்.

அட்சரசுத்தி-உச்சரிப்புத் திருத்தம், எழுத்துத் திருத்தம்.

† அட்சரச்சுதகம்-அக்கரச்சுதகம்.

† அட்சரதாபனம்- மந்திரவெழுத்துக்களையந் திரத்திலடைத்தல்.

அட்சரதூலிகை-இலேகனி.

† அச்சரபாவனை-மகேச்சுரியபாவனை.

அட்சரப்புல்-பீனசப்புல்.

அட்சரமுகன்-மாணாக்கன்.

அட்சரம்-எழுத்து, ஓர்நோய், தர்மம், தவம், பிரகிருதி, பிரணவம், முத்தி, வேதப் பொருள்.

அட்சரலட்சணம்-அக்கரவிலக்கணம்.

அட்சரவினியாசம்-எழுத்து, வேதம்.

† அட்சரன்-அக்கரன். [லி.

† அட்சராத்துமகசத்தம்-எழுத்தாலாகியவொ

அட்சராரம்பம்-அக்கராரம்பம்.

† அட்சன்-அக்கன்.



அட்சி-கண், சேரென்னுமளவை.

† அட்சியம்-யசுர்வேதவுபநிடதங்களுளொன்று.

அட்சீபம்-ஓர்வகைமாமரம்,முருங்கைமரம்.

அட்சௌகினி - அக்குரோணி.

அட்டகசம்-† அட்டகுலயானை, ஆடாதொடை.

அட்டகணம் - செய்யுட்குரிய வெண்கணம்; அவை ஆகாயம், இயமானன், சூரியன், தீ, நிலம், நீர், மதி, வாயு, இவற்றுள் முன்னைய நான்கு நீக்கி மற்றயநன்று.

அட்டகணிதம் - எண்கணிதம்; அவை கனமூலம், கனம், குணனம், சங்கலிதம், பாகாரம், வருக்கமூலம், வருக்கம், வியகலிதம்.

† அட்டகந்தம்-எண்வகைவாசனைப்பொருள்; அவை சந்தனம், அகரு, கஸ்தூரி, கருப்பூரம், பச்சிலை, குங்குமம், இலாமிச்சை, கோட்டமென்பன.

அட்டகம்-அயமலாதியெட்டின் கூட்டம், வசம்பு, வடமொழியிலோர்பிரபந்தம்.

அட்டகருமம்-ஆகருடணம், உச்சாடனம், தம்பனம், பேதனம், மாரணம், மோகனம், வசியம், வித்துவேடணமாகிய எண்வித்தை.

† அட்டகர்ணன்-பிரமா.

† அட்டகவர்க்கம்-அட்டவருக்கம்.

† அட்டகவுடலம்-புரியட்டகம்.

அட்டகாசம்-பெருநகை.

† அட்டகாசன் - இருபத்தெண்கலியுகத்தொன்றின்மறைவிரிப்போன்.

† அட்டகாசி - சிவன், பெருநகைசெய்வோன்.

அட்டகிரி - அட்டகுலமலை; அவை இமயம், ஏமகூடம், கந்தமாதனம், கைலை, நிடதம், நீலகிரி, மந்தரம், விந்தமென்பன.

† அட்டகீடம் - எட்டுவகைக்கீடமாகிய பிராணிகள்; அவை ஓணான், தவளை, அடவியீ, வீட்டுப்பல்லி, காட்டுமசகம், மக்ஷிகா, மலைப்பீலிகை, சிலந்தியென்பன.

† அட்டகுட்டம்- எண்வகைக்குட்டநோய்கள்; அவை கருங்குட்டம், இரணகுட்டம், வெண்குட்டம், செங்குட்டம், கிருமிக்குட்டம், நீர்க்குட்டம், விரல்குறைகுட்டம், சொறிகுட்டமென்பன.

† அட்டகுணச்செல்வம் - அணிமாதிகுணங்களையுடைய வட்டவைசுவரியங்கள்.

† அட்டகுணபூதன்-அருகன்

அட்டகுணம் - கடவுட்குரியவெண்குணம்; அவை இயல்பாகவே பாசங்களினீங்குதல், இயற்கையுணர்வினனாதல், தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, முற்றுமுணர்தல், வரம்பிலின்பமுடைமை.

† அட்டகுரவர்-எட்டுவகையாசிரியர்கள்; அவர்கள் போதககுரு, வேதககுரு, நிசிதகுரு, காமியகுரு, சூசககுரு, வாசககுரு, காமககுரு, விகிதகுரு வென்பவர்கள், இவர்களுள் போதககுருசாத்திரார்த்தம் போதிப்பவன், வேதககுருதத்துவதரிசிகன், நிகிதகுரு வசியாகருஷணாதிகளா லிகலோகத்திற்சுகமும் பரலோகத்திற் றுக்கமுங் கொடுப்பவன், காமியகுரு சுகர்மோபதேசத்தாலிகபரங்களிற் சுகமெய்தப் பண்ணுபவன், சூசககுரு விவேகமுகத்தாற் சமாதிசட்குணங்களையு மொருங்கேவரப் பண்ணுபவன், வாசககுரு விஷயங்கள் பொய்யெனவெறுத்தான்மவிருப்ப முண்டாகச் செய்பவன். காரககுரு சிவசீவரைக்கியஞானத்தை வரச்செய்பவன், விகிதகுரு சந்தேகம் நீங்கி மோட்சமடையச் செய்பவன்.

அட்டகுலபருவதம்-அட்டகிரி.

அட்டகுலயானை-அட்டதிக்கயம்.

† அட்டகுலவெற்பு-அட்டகிரி.

அட்டகுற்றம் - மலசகிதர்க்குரிய குணமெட்டு; அவை அந்தராயம், ஆயு, கோத்திரம், ஞானவரணீயம், தரிசினவரணீயம், நாமம், மோகநீயம், வேதநீயம்.

அட்டகுன்மம் - எண்வகைக் குன்மநோய்; அவை எரி, சத்தி, சன்னி சிலேத்துமம், சூலை, பித்தம், வலி, வாதம்.

அட்டகை-அட்டமி, பிதிர்வணக்கம், யாகமிருபத்தொன்றிறென்று.

† அட்டகைச்சிரார்த்தம் - பிதுரர்களையுபாசித்தற்குரியனவாய் மார்கழி, தை, மாசியென்னுமாதங்களினபர பக்கங்களில் வருஞ்சத்தமி அஷ்டமி நவமி யென்னுமூன்று திதிகளிற் செய்யப்படும் சிரார்த்தம்.

அட்டகோணம்-அட்டதிக்கு.

† அட்டங்கால்-அட்டணைக்கால்.

† அட்டசத்திகள்-ஆரணி ஜனனி உரோதபாத்திரியென்னு மூன்று பரிக்கிரகசத்திகளும் ஈசுனம் தற்புருடம் வாமம் அகோரம் சத்தியோசாதனமென்னும் பஞ்ச சத்திகளுமாகியவட்டசத்திகள், சயை விசயை சயந்தி அபராசிதை சித்தை இரத்தை அலம்புசை உற்பலையென்னு மெட்டுச் சத்திகள், சிவனுடையகிரியாசத்தியின துள்ளுருவும் பிறவுருவுமாகிய உருவுகளெட்டு; அவை ஈசானி பூரணி ஆர்த்திவாமை மூர்த்தி ஆரணி உரோதபாத்திரி ஜனனியென்னு மெட்டுச் சத்திகள், வாமை சேட்டை இரௌத்திரி காளி கலவிகரணி கிபலவிகரணி பெலப்பிரமதமனி சர்வபூததமனி யென்னுமெட்டுச் சத்திகள்.

அட்டசித்தி -யோகசித்தர்க்குரியவெண்சித்தி; அவை அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராத்தி; பிராகாமியம், ஈசத்துவம், வசித்துவம்.



† அட்டசிரவணன்-பிரமா.

அட்டசுபம்-எண்வகைமங்கலம்; அவை இணைக்கயல், கண்ணுடி, சாமரம், கொடி, தோட்டி, நிறைகுடம், முரசு, விளக்கு.

அட்டணை-குறுக்கே.

அட்டணைக்கால்-மடித்தகால்.

† அட்டதந்திரவாதம்-வாயுவினுல் வருமொருவகைரோகம்.

அட்டதயாவிருத்தி - பிற ரையந் தீர்த்தல், தீமைக்கஞ்சல், பிறர்துயர்க்கிரங்கல், நன்மை கடைப்பிடித்தல், பிறர் கருமத்திற்குடன்படல், பிறர் கருமமுடிக்கவிரைதல், பிறர்க்குப் பொருள்வரவையுவத்தல், பிறர் செல்வம் பொறுத்தல்.

† அட்டதருமம் - எண்வகைத்தருமம்; அவை யாகம் வேதமோதுதல் தானம் தபம் சத்தியம் திடம் பொறுமை லோபமின்மை யென்பன.

† அட்டதளசக்கரம் - எண்வகை யிதழுடையசக்கரம்; அவை சோத்திரத்துவாரமிரண்டு, நேத்திரத்துவார மிரண்டு; ஆக்கிராணத்துவாரமிரண்டு, துவக்குத் துவாரமொன்று, சிங்குவைத்துவாரமொன்று.

† அட்டதளம்-எட்டிதழ்த்தாமரை.

அட்டதனம் - எட்டுப் பிரயோசனம்; அவை குணம், சம்பத்து, தனம், நல்லகுலம், ரூபம், வித்தை, விவேகம், வயது, இவையோக்கியர்க்குரிய பேறெட்டு.

† அட்டதா-எட்டுப்பிரிவு, எண்மடங்கு.

அட்டதாது - எண்வகைலோகம்; அவைபொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வெண்கலம், தரா, வங்கம், துத்தநாகம்.

அட்டதானபரீட்சை-வைத்தியராறிகுறியெட்டு; அவை நாடி, முகம், மலம், அமுரி, கண், நா, சரீரம், தொனி.

அட்டதிக்கயம்-அட்டகுலயானை; அவை ஐரா

க்காதிமுறையே ஐராவதம், †புண்டரீகம், †வாமனம், †குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம்.

† அட்டதிக்கரிணி-அட்டதிக்கயங்களின்பிடிகள்; அவை அப்பிரமைகபிலைபிங்கலை அநுபமை தாமிரகரிணி சுப்பிரதந்தி அங்கனை அஞ்சனாவதி யென்பன, இவை ஐராவதமுதலியவற்றிற்கு முறையே பெண்களாம்.

† அட்டதிக்காளர்-எண்டிசைகாப்பாளர்.

அட்டதிக்கு - எட்டுத்திசை; அவை கிழக்கு, தென்கீழ், தெற்கு, தென்மேல், மேற்கு, வடமேல், வடக்கு, வடகீழ்.

அட்டதிக்குப்பாலகர் - திக்குக்காவலர்; அவர் கிழக்காதிமுறையே இந்திரன், அக்கினி, இயமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன்.

அட்டதிசம்-எருக்கு.

அட்டதிசையானை-அட்டதிக்கயம்.

† அட்டதேறல்-காய்ச்சியமது, சாராயம்.

† அட்டநாகபந்தம்-சித்திரகவி வகைகளுளொன்று; அது நான்காமெழுத்து நாற்பத்தோராமெழுத்தாகவும் ஆறுமெழுத்து நாற்பத்தைந்தாமெழுத்தாகவும் எட்டாமெழுத்திருபதாமெழுத்தாகவும் பனிரண்டா மெழுத்துப் பதினெட்டாமெழுத்தாகவும் இருபத்திரண்டாமெழுத்து நாற்பத்தேழா மெழுத்தாகவும் இருபத்துநான்கா மெழுத்து முப்பத்தொன்பதா மெழுத்தாகவும் முப்பத்துமூன்று மெழுத்தைம்பத்தோரா மெழுத்தாகவும் முப்பத்தேழாமெழுத்து நாற்பத்தொன்பதா மெழுத்தாகவும் வர ஒருசெய்யுட்செய்து கிரமப்படி எட்டுப் பாம்புவரைந்து அதன்கண்ணடைத்துக் கொள்ளப்படுவது.

அட்டநாகம் - எண்வகைநாகம்; அவை அனந்தன், கார்க்கோடகன், குளிகன், சங்கபாலன், தக்கன், பதுமன், மகாபதுமன், வாசுகி.

† அட்டநிக்கிரகங்கள் - தர்க்கநூலிற் கூறிய வெட்டுத். தோல்வித்தானங்கள்; அவை நியூனம் அதிகம் அவசித்தாந்தம் அசித்தம் விருத்தம் அனைகாந்திகம் பிரகரணசமம் காலாத்தியாபதிட்ட மென்பன.

அட்டபந்தனம்-திக்குக்கட்டு, கருங்குங்கிலியம், வெள்ளைக்குங்கிலியம், சுக்காங்கல், தேன்மெழுகு, செம்பஞ்சு, மைசாட்சி, கொம்பரக்கு, காவிக்கல், வெண்ணெய், இவ்வெட்டையு மிடைப்படி சேர்த்து முறைப்படி யரைத்துச்செய்வது.

அட்டபரிசம் - எண்வகையூறு; அவை ஊன்றல், கட்டல், குத்தல், தடவல், தட்டல், தீண்டல், பற்றல், வெட்டல்.

† அட்டபாதம் - எண்காற்புள் சிலந்திப்பூச்சி.



அட்டபாலகர்-அட்டதிக்குப்பாலகர்.

அட்டபாலகர்குறி-திக்குப்பாலகரடையாளம்; அவை இந்திராதிமுறையே இடி, புகை, சீயம், ஞாளி, இடபம், கழுதை, யானை, காகம்.

† அட்டபுட்பம் - எட்டுவகைப்பூக்கள்; அவை புன்னை வெள்ளெருக்கு சண்பகம் நந்தியாவர்த்தம் பாதிரி நீலோற்பலம் அலரிசெந்தாமரை யென்பன, பூப்போலவிரும்பத்தக்க வெட்டுக்குணங்கள்; அவை கொல்லாமை ஐம்பொறியடக்கல் பொறை அருள் அறிவு வாய்மை தவம் அன்பென்பன.

† அட்டபுயம்-காஞ்சிபுரத்திலுள்ள விட்டுணுவாலயங்களெட்டனு ளொன்று; அது விட்டுணு வெட்டுப் புயங்களோ டிருந்திலக்குமியை விவாகஞ் செய்தகோலத்தைக் காட்டுவது.

† அட்டபைரவர்-அட்டவயிரவர்.

அட்டபோகம்-எண்போகம்; அவை அணிகலன், ஆடை, தாம்பூலம், பரிமளம், சங்கீதம், பூவமளி, பெண், போசனம்.

† அட்டப்பிரகரணம் - எட்டுப்பிரகரணங்கள்; அவை தத்துவப்பிரகாசிகை தத்துவசங்கிரகம் தத்துவத்திரய நிருணயம் போககாரிகை மோக்ஷகாரிகை நாதகாரிகை பரமோக்ஷநிராசகாரிகை இரத்தினத்திரயம்.

† அட்டப்பிரணவம்-எட்டுப்பிரணவம்.

அட்டப்பிரமாணம் - அளவையெட்டு; அவை அநுமானம், அபாவம், அருத்தாபத்தி, ஆகமம், உவமானம், ஐதிகம், சம்பவம், பிரத்தியட்சம்.

† அட்டமக-எட்டாவது.

† அட்டமகாலீகன் - வானப்பிரஸ்தருளொருவன்; இவன் மூன்றுநாளுணவின்றியிருந்து நான்காநாட்பிற்பகலி லுண்போன்.

அட்டமங்கலம்-அட்டசுபம், ஓர்பிரபந்தம்.

† அட்டமச்சனி-உதயலக்கினத்திற் கெட்டாமிடத்தில் நிற்குஞ்சனி.

அட்டமணம்-எண்வகைமணம்; அவை ஆசுரம், ஆரிடம், இராக்கதம், காந்தருவம், தெய்வம், பிரசாபத்தியம், பிரமம், பைசாசம்.

† அட்டமதம்-குலம்ரூபம்யௌவனம் வித்தை தனம் பிரபுத்துவம் சகாயம் சகசமென்னு மெட்டினலு முண்டாகுஞ்செருக்கு.

† அட்டமம்-எட்டாவது.

அட்டமாசித்தி-அட்டசித்தி.

அட்டமாநாகம்-அட்டநாகம்.

அட்டமாந்தம்-கணமாந்தம், சுழிமாந்தம், செரியாமாந்தம், பெருமாந்தம், போர்மாந்தம், மலடிமாந்தம், வலிமாந்தம், வாதமாந்தமென மாந்தநோயெட்டு.

அட்டமி-எட்டாந்திதி.

† அட்டமிகை-அரைப்பலம்.

அட்டமூர்த்தம்-ஈசுரன் வடிவமெட்டு; அவை இயமானன், கால், சந்திரன், சூரியன், தீ, நிலம், நீர், வெளி.

அட்டமூர்த்தி-சிவன்.

† அட்டமூர்த்திகள் - எட்டுமூர்த்திகள்; அவர்கள் பவன் சருவன் ஈசானன் பசுபதி வீமன் உக்கிரன் மாதேவன் உருத்திரனென்பவர்கள்.

† அட்டமூர்த்திதரன்-சிவன்

அட்டமூலம்- அரத்தை, கண்டோரங்கி, காஞ்சொறிவேர், கோரைக் கிழங்கு, சித்திரமூலம், சுக்கு, செவ்வியம், நன்னாரிவேர்.

† அட்டமெய்ப்பரிசம்-அட்டபரிசம்.

அட்டம் } அண்ணம், அருகிடம், எட்டு, சாதி
அஷ்டம் } க்காய், மேல்வீடு, வினைமுற்று.

அட்டம்பாரித்தல்-பக்கலில் விசாலித்தல்.

அட்டயோகம்-அட்டாங்கயோகம்.

அட்டயோசம்-அரப்பொடி.

† அட்டரக்கு-உருக்கியவரக்கு.

† அட்டலக்குமி-அட்டலட்சுமி.

அட்டலட்சணம்-அட்டகுணம்.

அட்டலட்சுமி - எண்வகை இலக்குமி; அவர் இராச்சியலட்சுமி, கீர்த்திலட்சுமி, சௌரியலட்சுமி, தனலட்சுமி, தானியலட்சுமி, தைரியலட்சுமி, விசயலட்சுமி, வித்தியலட்சுமி.

† அட்டலோகபற்பம்-பொன் வெள்ளி செம்பு இரும்பு வெண்கலம் தராவங்கம் துத்தநாகமென்னு மெட்டுலோகங்களாலுஞ் செய்யப்பட்ட வோர்மருந்து.

அட்டலோகம்-அட்டதாது.

† அட்டல்-அழித்தல், அள்ளுதல், கொல்லல், நெருப்பிற் காய்ச்சுதல்.

அட்டவசுக்கள் - எண்வகைவசுக்கள்; அவர் அனலன், அனிலன், ஆபச்சைவன், சோமன், தரன், துருவன், பிரத்தியூசன், பிரபாசன்.

அட்டவணிககுணம் - வணிகர் குணமெட்டு; அவை இடனறிந்தொழுகல், இறுவஞ்சாமை, ஈட்டல், உறுவதுதெரிதல், தனிமையாற்றல், பகுத்தல், பொழுதொடுபுணர்தல், முனிவிலனுதல்.

அட்டவணை-சேர்க்கப்பட்டது, சொல்லப்பட்ட காரியத்தி னெழுங்கு, வரிசைக்குறிப்பு.

அட்டவருக்கம் } இந்துப்பு, ஓமம், கருஞ்சீர
† அட்டவர்க்கம் } கம், சீரகம், சுக்கு, திப்பிலி, பெருங்காயம், மிளகு கூடியவெட்டுமருந்துச் சரக்குகள்.

† அட்டவர்க்கு-அட்டவருக்கம்.

† அட்டவன்-அழித்தவன்.

† அட்டவாதம் - எட்டுவகைவாதங்கள்; அவை சிவசமவாதம் ஐக்கியவாதம் சங்கராந்தவாதம் பிரவாகேஸ்வரவாதம் காபாலிகவாதம் அதிகாரவாதம் பேதாபேதவாதம் அநேகேச்சுரவாதமென்பன.

அட்டவிகாரம் - மனிதர்க்குரியவெட்டுவிகாரம்; அவை காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், †ஆருயை, †இடும்பை.

† அட்டவிஞ்சதி-இருபத்தெட்டு.

† அட்டவிஞ்சதியோகாச்சாரியர்-அவர் சுவேதர் சதாசிவர் தமனர் சகோத்திரர் கங்கர் லோகாட்சர் ஜனிஷர்ததித்தியவந்தர் விஷயர் உக்கிரர் அத்திரி சுபாலகர் கௌதமர் வேதசிரர் கோகர்ணர் குகாவாசர் சிகண்டி சடமாலி அட்டகாசர் தாருகர் லாங்குலி சயிஷ்ணு சோமசர்மர் இலகுழீசுவரரென்னுமுனீசுவரர்.

† அட்டவிததாடனம் - எட்டுவகைத்தாடனம்; அவை சங்கோசம் பக்கத்தம் பிரசுரிதம் முட்டி கீலம் கர்த்தரிகை சந்தங்கிசம் வித்தையென்பன.

† அட்டவித்தியேசுரர் - எட்டுவகை வித்தியேசுரராகிய விஞ்ஞானகலர்; அவர் அனந்தர்சூக்குமர் சிவோத்தமர் ஏகநேத்திரர் ஏகருத்திரர் திரிமூர்த்தர் ஸ்திரீகஸ்டர் சிகண்டியென்பவர்.

அட்டவூறு-எண்வகையூறு; அவை சருச்சரை, சீர்மை, தண்மை, திண்மை, நொய்மை, மென்மை, வண்மை, வெம்மை,

அட்டவெற்றி-எண்வகைவெற்றி; அவை பகைவரைக்கவர்தல், பகைவர்கவர்நிரைமீட்டல்,

பகைமேற்செல்லல், பகைமுன்னெதிருன் றல், தன்னரண்காத்தல், பகைவரரண்வளை த்தல், பொருதல், போர்வெல்லல், இவற்றி ந்தமுறையேமாலை வெட்சி, கரந்தை, வஞ் சி, காஞ்சி, நொச்சி, உழிஞை, தும்பை, வாகை.

அட்டைவசுரியம் - எண்வகைச் செல்வம்; அவை அடிமை, இராசாங்கம், சுற்றம், செல், பொன், மக்கள், மணி, வாகனம்.

† அட்டவைரவர் - எட்டுவைரவர்கள்; அவர் மகாவைரவர் உக்கிரவைரவர் சண்டாள வைரவர் குரோதவைரவர் உன்மத்தவைர வர் காபாலவைரவர் பீஷணவைரவர் சாகர வைரவர், இவர் சிவலோகத்திற் சோதிமய மானகோட்டையினெட்டு வாசல்களிலுங் காவல் செய்துகொண்டிருப்பவர்.

அட்டனம்-சக்கராயுதம்.

† அட்டாங்கசீலம்-பௌத்தமதத்தி னல்லொ ழுக்க மாகிய சீலத்தி னெட்டுறுப்புக்கள்; அவைகொல்லாமை, திருடாமை, வியபிசரி யாமை, பொய்கூறாமை, கள்ளுண்ணாமை யென்னும் பஞ்சசீலத்துட னில்லறத்தார் களினிட்டாபரர் யுபயோகியாமை திரை யிற்பசத்தல், பாய்மேற்படுத்தலென்பன.

அட்டாங்கநமஸ்காரம்-எட்டுறுப்பு நிலந்தோய வணங்கல்.

† அட்டாங்கமார்க்கம் - பழுதிலா வாழ்க்கை யெனப்படு மெட்டங்கங்களையுடைய துக்க நிவாரணமார்க்கம்; அவைநற்காட்சி, நல்லூ ற்றம், நல்வாய்மை, நற்செய்கை, நல்வாழ் க்கை, நன்முயற்சி, நற்கடைப்பிடி, நல்லு ளத்தோர் தலைப்பாடென்பன.

† அட்டாங்கம்-எட்டுறுப்புக்கள்; அவை தலை யொன்று, கையிரண்டு, செவியிரண்டு, மோ யொன்று, தோளிரண்டென்பன.

அட்டாங்கயோகம் - யோகமுறை யெட்டு; அவை ஆதனம், இயமம், சமாதி, தாரணை, தியானம், நியமம், பிரத்தியாகாரம், பிரா ணாயாமம்.

அட்டாங்கவந்தனம் - எண்வகையுறுப்புநிலந் தோய வணங்கல்; அஃது இருகால், இரு கை, இருதோள், நெற்றி, மார்பு.

† அட்டாங்குலசிகாச்சேதம் - குடுமியை யெட் டங்குலம்விட்டறுத்தல்.

† அட்டாட்சரம்-ஒருவிட்டுணு மந்திரம்; அது நாராயணாய: என்பது.

† அட்டாட்சரி-அட்டாட்சரம்.

† அட்டாதசகணம்-பதினெண்கணங்கள்; அக் கணங்களாவார் தேவர், சித்தர், அசுரர், தைத்தியர், கருடர், கின்னரர், நிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்சை யர், பூதர், பைசாசர், அந்தரர், முனிவர், உரகர், ஆகாயவாசியர், போகபூமியரென் பவர்.

அட்டாதசகுணம்-யாக்கைக் குறுபதினெண் குற்றம்; அவை அதிசயம், இன்பம், உவகை, உறக்கம், கேதம், கையறவு, நரை, நினைப்பு, நீர்வேட்டல், நோய், பசி, பயம், பிறப்பு, மதம், மரணம், வியர்த்தல், வெகுளி, வேண்டல்.

அட்டாதசதருமசாத்திரம் - தருமநூல்பதினெ ட்டு; (சதுரகராதியிற்பத்தொன்பது சொல் லப்பட்டிருக்கிறது) அவை மனு, அத்திரி, ஔரிதம், விட்டுணு, யாஞ்ஞவற்கியம், உச னம், ஆங்கீரசம், இயமம், ஆபஸ்தம்பம், சம்வர்த்தம், காத்தியாயனம், பிரகஸ்பதி, பராசரம், வியாசம், சங்கலிதம், தர்க்கம், கௌதமம், சாதான்மம், வசிட்டம், இவற் றுள் மனுகிரேதாயுகத்திலும், கௌதமம் திரேதாயுகத்திலும், சங்கலிதம் துவாபரயு கத்திலும், பராசரம், கலியுகத்திலும், சிற ந்தன.

அட்டாதசபாடை - பதினெட்டுப் பாஷை; அ வை அங்கம், அருணம், கலிங்கம், கௌசி கம், காம்போசம், கொங்கணம், கோசலம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம், சோனக ம், திராவிடம், துளுவம், பப்பரம், மகதம், மராடம், வங்கம்.

அட்டாதசபுராணம் - பதினெட்டுப் புராணம்; அவை ஆக்கினேயம், இலிங்கம், காந்தம், காருடம், கூர்மம், சைவம், நாரதீயம், பது மம், பவிஷியம் (பௌடிகம்), பாகவதம், பிரமகைவர்த்தம், பிரமம், பிரமாண்டம், மச் சியம், மார்க்கண்டேயம், வராகம், வாமன ம், வைணவம்.

அட்டாதசமூலம் - எருக்கு, கண்டங்கத்திரி, கரந்தை, கறிமுள்ளி, குமிழ், கொடிவேலி, சங்கங்குப்பி, சிற்றாமல்லி, தழுதாழை, தூ தூளை, நன்னாரி, நொச்சி, பாதிரி, பேராம ல்லி, மாவிலிங்கம், முருங்கை, வில்வம், வேர்க்கொம்பு.

† அட்டாதசம்-பதினெட்டு.

† அட்டாதசவித்தை - பதினெண்வித்தைகள்; அவை ஆறுவேதாங்கங்கள், நான்குவேதங்கள், மீமாஞ்சை, நியாயம், ஸ்மிருதி, புராணமென்னும் பதினான்கும் ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தருவவேதம், அர்த்தவேதமென்பனவும்.

† அட்டாதசவியவகாரபதம்- வழக்குக்குரியபதினெண்விடயங்கள்; அவை கடன்கோடல், உபநிதி, கூடிமேம்படல், நல்கியதை நல்காமை, ஒப்பிப் பணிசெய்யாமை, கூலி கொடாமை, உடையானல்லான் விற்றல், விற்றுக்கொடாமை,கொண்டுள்ளமொப்பாமை, கட்டுப்பாடுகெடத்தல், நிலவழக்கு, மாதவராடவர்தருமம், தாயபாகம், வன்செய்கை, சொற்கொடுமை, தண்டக்கொடுமை, சூதென்பனவுமொழிந்த பலவும்.

† அட்டாதசவிவாதபதம்-அட்டாதசவியவகாரபதம்.

அட்டாதசோபப்புராணம்-பதினெட்டு உபபுராணம்; அவை ஆங்கிரம், உசனம், கபிலம், காளி, சனற்குமாரம், சாம்பவம், சிவதன்மம், சௌரம், தூருவாசம், நந்தி, நாரசிங்கம், நாரதீயம், பராசரம், பார்க்கவம், மாரீசம், மானவம், வாசிட்டலைங்கம், வாருணம்.

அட்டாதுட்டம் } அடார்ந்தேற்றம், தாறுமாறு.
அட்டாதுட்டி }

அட்டாபதபத்திரம்-பொற்றகடு.

அட்டாபதம் - எண்காற்புள், கதவின்குள், பொன், வன்னப்புடவை.

அட்டாபந்தனம்-திக்குப்பந்தனம்.

† அட்டாலகம்-கோபுரம், மேல்வீடு.



அட்டாலம்-அட்டாலை, மேன்மாடம்.

அட்டாலிகாகாரன் - சுதைசிற்பன், சிற்பி.

† அட்டாலிகை- அரசன்மனை, மேல்வீடு.

அட்டாலை-அட்டாளை.

† அட்டாலைமண்டபம்-மேல்வீடாகக் கட்டப்பட்டமண்டபம்.

அட்டாலைமரம்-ஓர்மரம்.

அட்டாவதானம்-ஒரேசமயத்தில் எட்டுக்காரியத்தைச் சிந்தித்தல்.

அட்டாளகம் } மேல்வீடு.
அட்டாளம் }

அட்டாளிகை-மேன்மாடம்.

அட்டாளை-ஓர்மரம், சிறும்பி.

அட்டி-அதிமதுரம், இட்டு, இருப்பை, எட்டி, செஞ்சந்தனம, தடை, பருப்பு, மிகவிட்டு.

அட்டிகம்-சாதிக்காய்.

அட்டிகை-உட்கட்டு, ஓராபரணம், ஓர்வகைக் கழுத்தணி.

அட்டிமதுரம்-அதிமதுரம்.

அட்டிமை-ஓமம், சீரகம்.

அட்டியல்-அட்டிகை.

அட்டில்-அடுக்களை.

அட்டினம்-சீரகம்.

அட்டு-அணை, சமைக்கப்பட்டது, செய்தது, பஞட்டு,மதிப்பு, வியங்கோள்விகுதி, வினையெச்சம்.

அட்டுதல்-வார்த்தல்.

அட்டுப்பு-காய்ச்சியவுப்பு.

அட்டை-செருப்பினடி, நீரில்வாழுமோர்செந்து, செவ்வட்டை, நீரட்டை, மரவட்டையெனமூன்றுவிதம், வினைமுற்று.

அட்டோலகம்-ஆடம்பரம், ஒட்டோலகம்.

அட்டோலிங்கம்-ஆடம்பரம், ஆரவாரம், மகிழ்ச்சி.

† அணகதாரம்-சுத்தசங்கீதம்.

அணங்கம்-இலட்சணம்.

† அணங்குயர்தல்-விழாக்கொண்டாடுதல்.

† அணங்கல்-அணங்குதல்.

† அணங்காடல் } வெறியாடுதல்.
† அணங்காடுதல் }

அணங்காட்டு-சன்னதம், வெறியாட்டு.

† அணங்கார்-பெண்கள்.

அணங்கிய-பின்னிவளர்ந்த.

† அணங்கினர்-தேவப்பெண்கள்.

அணங்கு-அச்சம், அணங்கென்னேவல், அழகு, ஆசை, கொலை, தெய்வப்பெண், தெய்வம், தேவர்க்காடுங் கூத்து, நோய், பெண்மகள், பேய்மகள், ரோகம், வருத்தம், வருத்துந்தெய்வம்.

† அணங்குசார்ந்தாள்-படிமத்தாள்.

அணங்குதல் - அஞ்சல், கொல்லுதல், வருந்துதல், விரும்புதல்.

† அணங்குதாக்கு - காமநெறியானுயிர்கொள்ளுந்தெய்வமகள்தீண்டல்.

அணத்தல்-தலையெடுத்தல்.

அணந்த-மேனோக்கிநின்று வருந்தின.

அணம் } கீழ்வாய்ப்புறம், மேல்வாய்.
அணரி }

† அணர்ச்செவி-எடுத்தசெவி.

அணல்-கீழ்வாய், மிடறு, கழுத்து, தாடி.
அணவல்-கிட்டல், பொருந்தல்.
† அணவன்-பொருந்தினவன்.
அணவு-அணவென்னேவல், நடு.
அணவுதல்-கிட்டல், புணர்ச்சி.
† அணுப்பல்-அணுப்புதல்.
† அணுப்பி-எய்ப்பவன்.
† அணுப்பித்து-எய்த்து.
† அணுப்பு- எய்க்கை.
அணுப்புதல்-எய்த்தல்.
† அணுர்-கழுத்து.
† அணுவல் } அணவுதல்.
† அணுவுதல் }
அணி-அடுக்கு, அணியென்னேவல், அலங்காரம், அழகு, ஆபரணம், எல்லை, ஏர்ச்சீர், ஒழுக்கு, ஓரிலக்கணம், நன்மை, நிரை, படைவகுப்பு, பெருமை, மாலை, நுணு.
அணிகம்†-ஆபரணச்செப்பு, சிவிகை.
அணிகலச்செப்பு-ஆபரணடப்பி.
அணிகலம்-ஆபரணம், கம்மாளர்கருவி, பணிமுட்டு.
அணிகலன்-ஆபரணம்.
அணிச்சை-நாகமல்லிகை.
அணிஞ்சில்-அழிஞ்சல், கொடிவேலி, சிற்றுமுட்டி, கொச்சி, முள்ளி.
அணிதல் - அணிந்துநிற்றல், அலங்கரித்தல், படைவகுத்தல், பூணல்.
அணித்து-சமீபித்து.
அணிநுணு-† சீத்தாவென்னு மரம்.
அணிந்தம்-கோபுரவாயிலின் மேடை.
† அணிந்தவைதிருத்தல்-மெய்ப்பாடுகளுளொன்று; அது ஒருபெண் தானணிந்திருக்குங் கடிசூத்திரமுதலியனதிருத்துதல்.
அணிந்து-அழகுபெற்று,தரித்தென்னும்வினையெச்சம்.
அணிந்துரை-பாயிரம்.
† அணிபெறுத்தல் - அலங்காரம்பெறச்செய்தல், புனைதல்.
அணிப்படுத்தல்-அணிப்படுத்துதல், சிங்காரித்தல்.
அணிமா-அட்டசித்தியிலொன்று; அஃது ஆன்மாப்போலாதல்.
அணிமுலை-பூசனிக்கொடி.
அணிமை-சமீபம், நுட்பம்.
அணியம்-கப்பலின்முற்பக்கம், படைவகுப்பு.
அணியல் - அணிதல் , ஆயத்தம், தளபாடம், படவின்முன்பக்கம், மாலை.

† அணியன்-அணியுடையவன், கிட்டினவன்.
அணியிலக்கணம்-பஞ்சவிலக்கணத்தொன்று.
† அணியெண்-முப்பத்தைந்து.
அணிலன்-அட்டவசுக்களி லொருவன்.
அணில்-அணிற்பிள்ளை, அன்றில்.
அணில்வரியன்-ஓர்நிறப்பசு, ஓர்வகைப்பட்டு, ஓர்வகைப் பலாப்பழம், ஓர்வகைவெள்ளரி.
அணில்வாற்றினை-ஓர்வகைத்தினை.
அணிவகுத்தல்-படைவகுத்தல்.
அணிவகுப்பு-படைவகுப்பு.
அணிவடம்-மாதர்கழுத்தணியிலொன்று.
† அணிவியூகம்-படைவகுப்பு.
அணிவிரல்-மோதிரவிரல்.
† அணிவு-அணிதல்.
அணிவேர்-குருவேர்.
அணு - இனம், உயிர், சிறுமை, நுண்மை, பரமாணு.
† அணுக-கிட்ட.
† அணுகம்-சிறியது.
அணுகலர்-அயலார், பகைவர்.
அணுகல்-கிட்டல்.
அணுகன்-சமர்த்தன்.
† அணுகாரணவாதம் - பரமாணுக்கடாமேபிரபஞ்சமாகத் தோன்றிநின் றழியுமென்று சொல்லுதல்.
அணுகார்-பகைவர்.
† அணுகுதல்-அணுகல்.
அணுகுப்பு-அண்ணிதாகநின்று.
† அணுக்கத்தொண்டர்-சமீபமாயுள்ள சீடர்.
அணுக்கம்-சந்தனம்.
அணுக்கர்-சிநேகர்
† அணுக்கன்-அந்தரங்கன், சமீபத்தன், சிநேகிதன்.
† அணுக்கன்திருவாயில் - தன்னையடைந்தாரைச்சிவன்சமீபமாகச் செய்யும்வாயில்.
† அணுக்கு-சமீபம்.
† அணுசதாசிவர்-சதாசிவதத்துவத்திற் சதாசிவமூர்த்தியைச் சூழச்சேவித்துக் கொண்டிருந்து போகங்களைப்புசிக்கும் பரமுத்தர்; இவர்கள் பிரணவர், சாதாக்கியர், தீர்த்தர், காரணர், சுசீலர், ஈசர், சூக்குமர், காலர், தேகேசுவரர், அங்குசெனப்பதின்மராவர்.
† அணுசைவம்-ஓர்வகைச்சைவம்; அதுசிவனையுள்ளும் புறமும்பஞ்சகிருத்தியஞ் செய்வனென் றறிந்துதிகம்பரவேடங்கள் பூண்டு சன்மார்க்க லக்கணத்தோடு கூடிக்குருவி

ங்க வேடம்பொருளாய்ச் சிவன்செய்புந் தொழில்களை யனுபவத்திற் பார்த்தானந் தம் பொங்கி யதன்கண்மனோலயமாவதே மோக்ஷமென்றுசொல்லுவது.

அணுச்சைவம்-சைவம்பதினாறினொன்று.

† அணுத்துவம்-அணுத்தன்மை.

† அணுபட்சநவபேதம் - சத்தியலோக முதற் புவனாதிபதிகளாய் வாஸ்தவபேத தேகிக ளாயிருக்கும் பிரமாமுதற் சிவமூர்த்திபரிய ந்தமொன்பதின்மராகியபேதம்.

† அணுபட்சம்-ஆன்மபட்சம்.

† அணுபரசிவன்-அணுபட்சத்துப்பரசிவன்.

† அணுபேதம்-ஆன்மபட்சபேதம்.

அணுபை-மின்னல்.

† அணுப்பிரமன்-ஆன்மபட்சப்பிரமன்.

† அணுமூர்த்தி-ஆன்மமூர்த்தி.

அணுமை-சமீபம்.

அணுரூபம்-மிகச்சிற்றுரு.

அணுரூபி-ஆன்மா, கடவுள்.

அணுரேணு-சிறுதூளி.

† அணுவங்கபதிகள்-விஞ்ஞானகலரிற் பரிபக் குவம் வந்தவர்களிற்றீவிரபக்குவம் வந்து ள்ளோர்களாய்ச் சூக்கும சிவாபிவியத்தி விளங்கிச் சத்திதத்துவத்துஞ் சிவதத்துவ த்துமிருப்பவர்கள்.

† அணுவலி-ஆன்மசத்தி.

அணுவெழுத்து-இனவெழுத்து.

அணை - அணையென்னேவல், உதவி, கரைப் பொது, செய்கரை, படுக்கை, புணர்ச்சி, மெத்தை, வரம்பு.

† அணைகட்டல்-வரம்புகட்டல்.

அணைகயிறு-ஏணைக்கயிறு, பால்கறக்கக்கட்டு ங்கயிறு.

† அணைக்கட்டு-வரம்புக்கட்டு.

† அணைக்கை-அணைத்தல்.

அணைசல்
† அணைசுதல் } ஒதுங்கல், விலக்கல்.

அணைசொல்-அசைச்சொல், துணைச்சொல்.

அணைதல்-அவிதல், சேர்தல், புணர்தல்.

அணைதறி-யானைகட்டுங்கயிறு.

† அணைதுகில்-ஏணையாடை.

அணைத்தல்
† அணைப்பு } அடுத்துக்கொள்ளுதல், அவித்த ல், சேர்த்தல், தழுவுதல்.

அணையாடை-ஏணைத்துகில், சாணைச்சீலை.

† அணையார்-பகைவர்.

† அணைவு-அணைக்கப்பட்டது, அணைத்தல்.

அனோக்கம்- அனோக்கம், மரப்பொது, மரம், மேனோக்கம்.

அண்-அண்ணென்னேவல், தடியில்வெட்டிய வரை, மேல், வேட்டைநாயினுருவுகயிறு.

† அண்டகடம்
அண்டகடாகம்
† அண்டகபாலம் } அண்டகோள வோடு.

அண்டகம்-குப்பைமேனி, பீசம்.

அண்டகன்-அண்ணகன்.

அண்டகை-அப்பவருக்கம்.

அண்டகோசம் - அண்டசொரூப சாத்திரம், எல்லை, பழத்தோல், பழம், பீசம்.

அண்டகோளகை-கடாகம், கூடம்.

அண்டகோளம்-அண்ட வுண்டை.

† அண்டங்காகம்
அண்டங்காக்கை } ஒருவகைக்காகம், அது க ழுத்தில் வெண்மை தா விய மற்றக்காகங்களைப்போலாதுடன்முழு வதுங் கருமையையுடையது.

அண்டசம்-முட்டையிற்பிறப்பன; அவை அர ணை, ஆமை, இப்பி, உடும்பு, ஓணான், தவ ளை, நண்டு, பல்லி, பறவை, பாம்பு, மீன், முதலை.

† அண்டசன்-பிரமா.

† அண்டசை-கஸ்தூரி.

அண்டச்சுவர்-பித்திகை.

† அண்டதரன்-சிவன்.

† அண்டநாயகி-உமாதேவி.

† அண்டபகிரண்டம் - நூருவ சக்கரத்துட் பட்ட வுலககோளமுமதற்குப் புறத்திலுள் ளகோளமும்.

† அண்டபிண்டம்-பிரமாண்டமுந்தேகமும்.

அண்டப்பார்த்தல்-பொருந்தப்பார்த்தல்.

† அண்டப்புத்தேள்-விராட்புருடன்.

† அண்டமீன்றவன்-பிரமா.

அண்டமுகடு-மூதண்டம்.

† அண்டமூர்த்தி-அண்டரூபி.

அண்டம்-ஆகாயம், உலகம், தலையோடு, பீசம், முட்டை, விதை.

அண்டயோனி-அண்டசம், சூரியன்.

அண்டரசம்-சுத்தரசம்.

அண்டரண்டப்பட்சி-பெரும்பறவை.

அண்டரண்டம்-தேவரண்டம்.

அண்டர்-இடையர், பகைவர், வானோர்.

அண்டர்சிலை-பொன்னூங்காணி.

† அண்டர்பிரான்-சிவன்.

அண்டலர் } பகைவர்.
† அண்டலார் }

அண்டல் - அண்டுதல், அழுந்தல், கிட்டுதல், சேர்தல்.

† அண்டவாணர்-ஆகாயவாசிகள், தேவர்.

† அண்டவாணன்-தேவன்.

அண்டவாதம்-அந்திரவாயு,வளி,விரைவாதம்.

அண்டவாயு-அண்டவாதம், ஓர்நோய்.

† அண்டன்-கர்த்தா, சிவன்.

அண்டா-பெருஞ்சட்டி, பெரும்பாத்திரம்.

† அண்டாகாரம்-முட்டைவடிவம்.

† அண்டாதவன்-பகைவன்.

† அண்டாதிநாதன் - சிவலோகத்திற்கண திசையோலக்கஞ் சேவிக்கும் பதினெண் முக்கியகணேசரிலொருவன்.

அண்டார்-பகைவர்.

அண்டிகம்-செந்நாய், நாய்.

† அண்டிகா-மட்பானை.

அண்டிரன்-மனுஷன்.

அண்டில் - மாடுமுதலியவற்றின் கண்ணிற்பற் றும்பூச்சி.

† அண்டீரன்-ஆடவன், சமர்த்தன்.

அண்டுகை } நெருங்கல்.
அண்டுதல் }

அண்டை-அயல், அருகிடம், ஒட்டு, பீறலடைக்குந்துண்டு, முட்டு, வரம்பு.

அண்டைபோடல்-ஒட்டுப்போடுதல்.

அண்டையர்-அயலார்.

† அண்டைவீடு-பக்கத்துமனை.

அண்ணகன்-கோசா, பீசம்வாங்கப்பட்டவன்.

† அண்ணணித்து-மிகக்கிட்டியது.

அண்ணந்தாள்-அண்ணாந்தாள்.

அண்ணம் - உண்ணா, கீழ்வாய்ப்புறம், மேல்வாய்.

† அண்ணலார்-சிவன்.

அண்ணல்-அரசன், அருகன், சார்தல், சிவன், தமையன், தலைமை, புத்தன், பெருமை, பெருமையிற் சிறந்தோன், முல்லைநிலத்த லைவன்.

அண்ணன்-முன்பிறந்தான்.

அண்ணா-உண்ணா, உண்ணாக்கு.

அண்ணாக்கயிறு-அரைஞாண்.

அண்ணாக்கு-உண்ணாக்கு.

அண்ணாத்தல்-அங்காத்தல், மேனோக்கல்.

அண்ணாந்தாள் - தலைநிமிர்ந்திருக்கப்பூட்டும் கயிறு.

அண்ணாமலை-அருணாசலம்.

† அண்ணார்-பகைவர்.

அண்ணாவி-உவாத்தி, புலவன், மூத்தோன்.

அண்ணி-தமையன்மனைவி.

அண்ணிசு-அணுமை.

† அண்ணிடல்-பொருந்தல்.

அண்ணிது-அண்ணிசு.

† அண்ணித்தல்-பொருந்துதல், மதுரித்தல்.

† அண்ணிப்பான்-மதுரிப்பான்.

† அண்ணியது-கிட்டியது.

† அண்ணியன்-சமீபமானவன்.

அண்ணுதல்-சார்தல்.

அண்ணெரிஞ்சான்பூண்டு - அன்றெரிந்தான் பூண்டு.

† அண்பல்-மேல்வாய்ப்பல்.

† அண்மல் } கிட்டுதல்.
அண்முதல் }

அண்மை-அணுமை.

அண்மைச்சுட்டு- சமீபத்திலிருக்கும்பொருளைச்சுட்டிக்காட்டல்.

அண்மைவிளி - சமீபத்திலிருப்பவரையழைத் தல்.

அதகடி-அதட்டு.

அதகணம்-நாசகணம்.

அதகம்-சுக்கு, பெருமருந்து, மருந்து.

† அதகன்-வைத்தியன்.

அதக்குதல்-இளக்குதல், கசக்குதல், குதப்புதல்.

அதங்கம்-ஈயம்.

† அதங்கோட்டாசான்- அகத்தியமுனிவனிடங்கற்ற தொல்காப்பியன் முதலிய பன்னிருமாணவர்களுளொருவன்.

அதசம்-ஆன்மா, காற்று, மரவுரி.

† அதசி-சணல்.

† அதசிரசு-பரிதானம்வாங்குவோர்புகுநரகம்.

† அதசிரோதோபவம்-இருவகைச் சைவாகமங்களுளொன்று.

அதசு-கேள்வி, நாசம்.

† அதடம்-மலைமுதலியவற்றின் சரிவில்லாத விறக்கம்.

அதட்டம்-அரவுயிர்ப்பு, அரவினச்சுப்பல்.

அதட்டல்-உரப்புதல், உறுக்குதல்.

† அதட்டு-அதட்டென்னேவல், உறுக்கு.

† அதட்டுதல்-அதட்டல்.

† அதத்குணாலங்காரம்- பிறிதின்குணப்பேறின்மையணி.

† அதத்தம்-அபலக்கொடை.
† அதத்தன்-குபேரன்.
† அதத்துவாவிருத்தி-சரீரமுதலியவைகளையுத்தியானேதிகளாற்றெஞ்சிநின்றவான்மாவைத் தெரிவித்தல்.



† அதத்துவியாவிருத்தம் - மற்றைப்பொருளிலிருந்து நீங்கியிலக்கியத்திலிருக்கு மிலக்கணம்.
† அதபலோகம்-பௌத்தமதத்தின் பிரமலோகமிருபதனுட். பதின்மூன்ருவது.
அதப்பியம்-அசப்பியம்.
அதமசரீரம்-கற்பகத்தரு.
† அதமசிருட்டி - ஐவகைச்சிருட்டிகளி லொன்று; இச்சிருட்டி காலத்திற் குணநிலயப் பிரமவிட்டுணுக்களும் பிரமாண்ட நிலயப் பிரவிட்டுணுக்களும் குணுதிபிருதி வியந்த புவனங்களிற் போக்கிய பொருள்களையுந் தூலதேகங்களையும் தேவர்முதலிய தேகிகளையும் படைத்துக்காப்பர்.
† அதமதமப்பிராரத்தம்- அதமதரப்பிராரத்தத்தினுமதிகப்பட்ட பிராரத்தம்; அது இட்டப்படி நடத்தல் புசித்தல் முதலிய பிரமாதங்களுக் கேதுவானது.
† அதமதரப்பிராரத்தம்- கனிட்டப்பிராரத்தத்தினு மதிகப்பட்ட வதமமான பிராரத்தம்; அது முதலில் நிவர்த்திக்கும் பின் பிரவர்த்திக்குங் காரணமானது.
அதமதானம்-முத்தானத்தொன்று.
† அதமத்தோற்கருவி- முழவேழுவகையுளொன்று; அது கணப்பறைமுதலான புறமுளவும் நெய்தற்பறைமுதலான புறப்புறமுளவுமாம்.
† அதமபட்சம்-மிகக்குறைந்தபடி.
அதமபிருதகன்-காக்காரன்.
அதமம்-கடைத்தரம், நீதித்தப்பு.
† அதமர்-கடையாயார், கடைத்தரமானவர்.
† அதமர்ணிகன்-கடன்வாங்கினவன்.
† அதமவாசான்-மூவகைக்குரவருட்கடைத்தரமானவன்; இவன் வைசியர்க்குஞ் சூத்திரர்க்குங் குரு.
† அதமவிஞ்சதி-பிரபவமுதலியவறுபது வருடங்களுட்டீதாக விளங்குங் காலமாகிய பின்னிருபதுவருடம்.
அதமவிமிசதி-அதமவருடமிருபஃது.
அதமன்-கடையானவன்.

† அதமாகல்-அழிதல்.
† அதமாக்கல்-அழித்தல்.
அதமாங்கம்-கால்.
† அதமாதமன்-மிகக்கீழ்மையானவன்.
அதம்-அத்தி, சங்காரம், தாழ்வு, தொலை, பள்ளம், பின்பு.
அதம்பம்-கற்பறிபாஷாணம்.
அதம்பல், † அதம்புதல் } அதட்டல்.
அதரபானம், அதரமதம், † அதரமது } இதழூறல்.
அதரம்-உதடு, கீழுதடு, நிதம்பம்.
அதராமிர்தம்-அதரபானநீர்.
அதராவலோபம்-இதழதுக்கல்.
அதரிகொள்ளுதல்-கடாவிடுதல்.
அதரிசனம்-காணப்படாமை, குருடு, மறைதல்.



அதரிசனன், அதரிசி } கடவுள், குருடன்.
† அதரிதிரித்தல்-கடாவிடல்.
அதரித்திரன்-கன்னன், தரித்திரமில்லான்.
அதருமம்-நீதிக்கேடு, பாவமானசெய்கை.
அதருமாத்திகாயம்-யாதனுசரீரம்.
† அதருவணம்-அதர்வணம்.
அதர் - நீளக்கிடங்கு, நுண்மணல், புழுதி, வழி, விலங்குசெல்வழி.
அதர்கொளல்-வழிப்பறித்தல்.
அதர்கோள்-வழிப்பறி.
அதர்க்கம்-குதர்க்கம்.
† அதர்க்கன்-குதர்க்கி.
அதர்பறித்தல்-குழிவெட்டல்.
† அதர்மசாரி-அதர்மவழியிற் செல்லுவோன்.
† அதர்மம் - தருமமல்லாதது, பாவம்; அது வேதத்துள் விதிக்கப்பட்டன செய்யாமையும் விலக்கப்பட்டன செய்தலுமாம்.
† அதர்மன் - சதருத்திரருளியமதிசையிலிருக்குந் தசருத்திரருளொருவன்.
அதர்மாசாரி-துராசாரி.
அதர்மாத்திகாயம்-காரணகாயத்தொன்று.
† அதர்வசிகை, † அதர்வசிரசு, † அதர்வசிரம் } அதர்வணவேத வுபநிடதத்தொன்று.
அதர்வச்சிரம் - உபநிடத முப்பத்திரண்டினொன்று.
அதர்வணம்-நான்காம்வேதம்.
† அதர்வணவேதோபநிடதங்கள் - அதர்வண

வேதத்துக்குரிய வுபநிடதங்கள்; அவை கா ருடம், தத்தாத்திரேயம், அயக்கிரீவம்,கிரு ஷ்ணம், கோபாலதபனம், பிரச்சினம், திரி பாத்வியமகா நாராயணம், இராமரகசியம், முண்டகம், மாண்டூக்கியம், அதர்வசிரசு, அதர்வசிகை, கணபதி, மகாவாக்கியம், பசு பதபாலம், பாவனை, தேவி, திரிபுராதபினி, பரப்பிரமம், பாசுபதம், ஆத்மம், சூரியன், அன்னபூரணை, பிருகச்சாபாலம், நரசிம்ம தாபனி, நாரதபரிவிராசகம், சீதை, இராம தாபனி, சரபம், சாண்டில்லியம், பரமஹம் ச பரிவிராசகமென்னுமுப்பத்தொன்று.

† அதர்வணன்-சிவன்.

† அதர்வணி-அதர்வணவேதத்தி னற்பயிற்சி யுடைய பிராமணன்.

அதர்வம்-அதர்வச்சிரம்.

† அதர்வேதம்-நான்காம்வேதம்.

அதலகுதலம்-கலகம்.

அதலமூலி-ஆடுதின்னாப்பாலை.

அதலம்-கீழேழுலகிலொன்று.

† அதலன்-சிவன்.

அதவம்-அத்திமரம், பள்ளம், பின்பு.

அதவா-அல்லாமல்.

அதவாபட்சம்-அல்லாதபட்சம்.

அதவிடம்-அதிவிடயம்.

அதவு-அத்தி, செய், பள்ளம்.

† அதவுதல்-கொல்லுதல.

அதழ்-பூவிதழ்.

அதளி-அமளி.

அதளை - அடைகிலப்பீர்க்கு, புளியதளை, வய ல்வெளியிற்கட்டுங் காவற்குடிசை.

அதள்-களகம்பளம், தோல், பட்டை.

அதள்புனையரணம்-தோற்கைத்தளமென்னுங் கருவி.

அதறுதல்-உதிர்த்தல், பதறுதல்.

அதனப்பிரசங்கி-அகங்காரி.

அதனம் } மிகுதி.
அதனு }

† அதன்மசாதனம்-தருமமல்லாதசெயல்.

அதன்மம்-நீதிக்கேடு.

† அதன்மாத்திகாயம்- சமணமதத்திற் சொல் லிய வசீவபதார்த்தத்தினது நான்குவகை யுளொன்றாய்த் தீமைபயப்பதோ ரத்தியா யம்.

அதாசலம்-காட்டுமல்லிகை.

† அதாதா-உலோபி.

† அதாதிமந்தம் - அதாதிமந்தரோகம்; அது அதிமந்தரோக மைவகைகளுளொன்று.

† அதாதிமந்தரோகம்-கண்களில் விரணத்தை ப்பிறப்பித்துப் பார்வையைக்கெடுக்கு மோ ர்வகைநோய்.

அதாதிரு-உலோபி.

† அதாது-தாதுவல்லாதது.

† அதாயன்-தாயத்துக்குரிமையில்லாதன்.

† அதாரன்-விவாகஞ்செய்யாதவன்.

அதாலத்து-நியாயத்தீர்ப்பு ஸ்தானம்.

அதி-அதிதி, மிகுதிப்பொருளைக்காட்டு மசை ச்சொல்.

அதிகசிதம்-பெருநகை.

அதிகடம்-யானை.

அதிகண்டம் - நித்தியயோகத்தொன்று; அது சந்திரனைப்பற்றியது, மரணாவஸ்தை.

அதிகதம்-சென்றது, வாயு.

அதிகதை-பயனில்பேச்சு.

அதிகநாரி-கொடிவேலி.

அதிகந்தம் - ஓர்வாசனைப்புல், கெந்தகம், சண பகப்பூ.

† அதிகப்பற்று-பெரும்பான்மை, வரவேண்டி யதற்குமேற் பற்றுதல்.

அதிகப்பிரசங்கம்-அதிகப்படப்பேசுதல், தன் மேம்பாட்டுரை.

† அதிகப்பிரசங்கி - மட்டுக்குமிஞ்சிப் பேசு வோன்.

அதிகமாதம் - ஆறுவருஷத்துக் கொருதரம் ஒருவருஷத்திலதிகமாகு மாதம்.

† அதிகமாதாபவாதம் - அதிகமாசதோஷநி வர்த்தி.

அதிகம்-அடையாளம், இலாபம், உதாரணங்க ளைப் பலவாறாகப் பிரயோகித்தல், குருக்க த்தி, தோல்வித்தான மிருபத்திரண்டி னொ ன்று, படை, பொலிவு, மிகுதி.

† அதிகரணத்துவம் - அதிகரணமா யிருக்குந் தன்மை.

அதிகரணம் - இடம், உரித்து, ஏழனுருபு, கே ள்வி, மேன்மை.

† அதிகரிக்கை }
அதிகரித்தல் } அதிகப்படுதல்,விசேடித்தல்
அதிகரிப்பு }



† அதிகர்-மேலானவர்.

† அதிகர்த்தபி-இருபத்து நான் குவகை யக்கினிக்கீடங்களு ளொன்று.

அதிகல்-காட்டுமல்லிகை.

† அதிகவுச்சம்-அத்துச்சம்.

அதிகற்குதி-கொடிவேலி.
அதிகன்-ஆதிக்கன், ஓர்வள்ளல்; இவன்தனக்குக்கிடைத்த வமிழ்து விளையுங் கருநெல்லிக்கனியைத் தானுண்டு உடம்புபெருநௌவைக்குக் கொடுத்தோன், சிவன்.
† அதிகாங்கிஷை-பேராசை.
அதிகாசம்-பெருநகை.
அதிகாந்தம்-ஓர்கல், செவ்வானம், மிகுவழகு.
அதிகாயன்-இராவணன் மக்களிலொருவன்.
† அதிகாரசத்தி-சிருட்டியாதி யதிகாரஞ்செய்யுஞ் சாமர்த்தியம், சிவன்; இலயம் போகம் அதிகார மென்பவைகளு ளதிகாரவவத்தையிலிருக்கும்போதவரோடு நிற்குஞ்சத்தி.
† அதிகாரசத்திகள்-பிரமாவை யதிட்டித்துச் சிருட்டிசெய்யும் வாமையும் விட்டுணுவை யதிட்டித்துத் திதிசெய்யுஞ் சேட்டையும் காலருத்திரரை யதிட்டித்துச் சங்காரஞ் செய்யும் ரோதயித்திரியுமாகிய சத்திகள்.
† அதிகாரசிவன்-மகேசர்; இவர் சுத்தமாயையிலுற்பன்னகாரியத்தைச் செய்வதனாலதிகாரசிவனெனப்படுவர்.
† அதிகாரதத்துவம்-ஈசுரதத்துவம்.
அதிகாரத்தலைவன்-அதிகாரி.
† அதிகாரத்திரயம்-கருமகாண்டி பத்திகாண்டி ஞானகாண்டியென்னு மூவகையதிகாரிகள்; இவருள் தேககிருத்தியாதிகளிற் கிரமத்தில் யானெனதென்னு மகந்தையுள்ளவன் கருமகாண்டி, சகல கிரியைகளையுமீசுரார்ப்பணஞ்செய்வோன் பத்திகாண்டி, சகலகருமத்துக்குந் தான் சாட்சிகனென்போன் ஞானகாண்டி.
† அதிகாரபஞ்சகம்-கருமிமுமூட்சு அப்பியாசி அனுபவி ஆரூடனென்னு மதிகாரரைவர்; அவருள் மூடத்தனத்தால் தன்சாதிகருமமாத்திரம் பிடித்துச் சதசென்மத்தில் முத்தனாகிறவன் கருமி, சகம் அசத்தென்று தெளிந்தாத்மகரும நிட்டனாய் மூன்று சென்மத்தில் முத்தனாகிறவன் முமூட்சு, சொப்பனம்போலப் பிரபஞ்ச மித்தையென்றறிந் தப்பியந்தரத்தில் தியானாதிகருமயுக்தனாயிரண்டு சென்மத்தில் முத்தனாகிறவன் அப்பியாசி, விவகாராபேட்சைவிட்டுவிவேகதற்பரனாகியேகசென்மத்தில் முத்தனாகிறவன் அனுபவி, விசுவவிகிருதிதோன்றுமலாத்ம ஞானத்தாற் சத்தியோமுத்தியடைபவன் ஆரூடன்.
அதிகாரப்புறனடை - அதிகாரத்துளெஞ்சிய தற்கோர் விதியாய்நிற்பது.
† அதிகாரமலம் - மலபரிபாகமாந்தியமுடையரான விஞ்ஞானகலரைச் சுத்தாத்துவர்க்களி லதிகாரமுடையராக நிறுத்தும் பெலமுடைய மலம்.
† அதிகாரமுத்தி- ஆன்மா சுத்ததத்துவத்திலதிகாரமலத்தோடு மாத்திர மிருப்ப தாகிய முத்தி.
† அதிகாரமுறைமை-ஒருத்தி; அது முன்னின்றசூத்திரப் பொருண்மை பின்வருஞ்சூத்திரத்துக்கும் பெறற்பாலனப் பெறவைத்தல்.
அதிகாரம்-அதிகரித்தல், உத்தியோகம், உரித்து, ஒழுங்கு, சிலாக்கியம், தத்துவம், நூலுரை பதினான்கினொன்று, நூற்கூறுபாடு, பண்பு.
† அதிகாரர் - தூலபஞ்சகிருத்தியத்தி லுன்முகமாயிருந்த கிரியாசத்திக்குப்பின் இதுவிப்படியாகக் கடவதென்று சங்கற்பத்தைப்பண்ணுஞ் சங்கற்ப விச்சாசத்தி ரூபமாயிருந்த வீசன்.
அதிகாரவுரை - நூலுரை பதினான்கினொன்று.
† அதிகாரன்-மகேசுரன், மேல்விசாரணை செய்வோன்.
அதிகாரி - அதிபதி, நூல்கேட்டற்குரியோன், நூல் செய்வித்தோன், பாட்டுடைத்தலைவன்.
† அதிகாரித்துவம்-உடையனுந்தன்மை.
† அதிகாரியர்-அதிகாரமுடையோர்.
† அதிகாரை-சாதிகாரதீட்சை.
† அதிகாலங்காரம்-பெருமையணி.
அதிகாலம் } விடியற்காலம்.
† அதிகாலை }
அதிகிரமம்-அசட்டை, அதிகப்படல், எதிர்மீறுதல்.
அதிகிருச்சிரம் - ஓர்விரதம்; அஃது ஆறுநாளொவ்வோர்பிடி யன்னமுண்டுமேன்மூன்றுநாளுபவாசித்திருப்பது.
† அதிகிருதர்-அதிகரித்தவர்.
† அதிகிருதன்-அத்தியட்சன், பிராட்விவாகன், வரவுசெலவுக் கணக்கதிகாரி.
† அதிகிருதி-ஒருகவிச்சந்தம்; அது அடியொன்றிற்கிருபத்தைந்தசை யுடைய நான்கடிகொண்டதாய் வருவது.
† அதிகிருதை-அதிகாரமுடையவள்.

† அதிதபனக்கிருச்சிரம்-கிருச்சிரவிரதவகையுளொன்று; அது இருபத்தொரு நாளைக்கு மூன்றுபலப் பசுப்பாலுண்டு செய்யும் விரதம்.

† அதிதபனம்-அதிதபனகிருச்சிரம்.

† அதிதமம்-முதலாந்தொகை நரகமாகியகோரமென்பதற்குள்ள வைந்து நாயக நரகங்களுளொன்று.

அதிதலசிலேட்டுமம்-சிலேஷ்மம்.

† அதிதவளம்-மிகுவெண்மை.

அதிதனு-பொன்.

† அதிதாதா-பெருங்கொடையாளன்.

அதிதாதிரு-ஈகையாளன்.

† அதிதாபகவாதம்-சரீரத்தைத் தபிக்கப்பண்ணுமோர்வகைவாதம்.

அதிதாரம்-இலந்தை.

அதிதானம்-கொடை.

அதிதி - காசிபப்பிரம்மாவின்மனைவிகளிலொருத்தி, சத்தபிதிர்களிலொருவர், சிராத்தத்திற் கொவ்வாததிதி, தேவரையீன்றாள், பரதேசி, புதியவன், பூமி, விருந்தன்.

அதிதிகிரியை-விருந்தோம்பல்.

அதிதிசேவை-விருந்துபசாரம்.

அதிதிநாள்-புநர்பூசநாள்.

† அதிதிபூசனம்
அதிதிபூசை } பரதேசிக்கன்னமிடல்.

அதிதிப்பம்-பசியின்மை.

† அதிதியர்-சூரியர், விருந்தினர்.

† அதிதீரன்-அதிகவீரன்.

† அதிதீவிரம்-மிகக்கடுமை.

† அதிதும்மற்பீனசம் - அதிகத்தும்மலையுண்டாக்குமோர் வகைப்பீனசரோகம்.

† அதிதுர்ப்பலம்-மிகுந்ததுர்ப்பலம்.

அதிதூதர்-அதிகப்பிரதான விசேடங்களையறிவிக்க உலகத்துக் கனுப்பப்படுவோர்.

† அதிதூலரோகம் - சரீரத்தைப் பருக்கச்செய்யுமோர்வகை ரோகம்.

† அதிதெய்வம்-அதிட்டிக்குந் தெய்வம், ஆளுந்தெய்வம், மேலானதெய்வம்.

† அதிதேசம்-ஒப்புமைகாட்டி யுணர்த்துவது.

† அதிதேசவாக்கியம் - ஒருபொருளையறியாதவனுக்கதுபோன்ற வேறொரு பொருளைக் காட்டியறிவிக்கும் வாக்கியம்.

அதிதேவதை-அதிகாரதேவதை.

அதிதேவன்-கடவுள்.

† அதிதைவம்-அதிட்டிக்குந் தெய்வம், ஆளுந்தெய்வம்.

† அதிநிந்திதம்-அதிகநிந்திக்கப்பட்டது.

† அதிநுட்பம்-அதிகநுட்பமுடையது, அதிகநுண்மை.

அதிபசமி-கொன்றை.

அதிபதி-இராசா, சண்பகம், தலைவன்.

அதிபதிச்சங்கம்-வாலுழுவை.

அதிபதுங்கி-கொடிவேலி.

† அதிபத்தர் - அறுபத்துமூன்று நாயன்மார்களிலொருவர்.

† அதிபத்தினி-ஆளுகைசெய்கிறவள், எசமாட்டி, பெருமாட்டி.

† அதிபரமாப்தர்-சதாசிவர்; இவர் தம்மின்மேலாகிய ஆப்தர்பிறரின்மையி னிப்பெயர்பெற்றனர்.

அதிபரன்-சத்துருவைவென்றவன்.

† அதிபர்-முதல்வர்.

† அதிபல-நிவிர்த்திகலையிற்பிருதிவிதத்துவத்திலிருக்கு நூற்றெட்டுப்புவனங்களுளொன்று.

அதிபலம்-நோவாளம், மிகுபலன்.

† அதிபலன்-சதருத்திரருள் வருணதிக்கிலிருக்கும் பதினொன்குருத்திரரிலொருவன்.

அதிபலை-பேராமுட்டி.

அதிபறிச்சம்-வாலுழுவையரிசி.

அதிபன்-இராசன், எசமானன், எப்பொருட்குமிறைவன்.

† அதிபாதகம்-மிகுபாதகம்.

† அதிபாதகர்-மிகுந்தபாதகமுடையவர்.

அதிபாதர்-எதிரிடை, மீறுதல்.

அதிபாரகம்-கோவேறுகழுதை.

அதிபாரகன்-மிகுநிபுணன்.

அதிபாரம்-மிகுபாரம்.

† அதிபாவம்-பெருங்குற்றம்.

அதிபானம்-மதுபானம்.

† அதிபீடிதம்-அதிகமாக விறுக்குதல்.

† அதிபூச்சியர்- அதிகம்பூசிக்கப்படத்தக்கவர்.

அதிபூதம்-பிரகிருதிமாயை.

† அதிபெலம்-அதிபலமென்னும் புவனம்.

அதிமதுரம்-ஓர்சரக்கு, குன்றிவேர், மிகுமதுரம், வெண்குன்றி.

† அதிமந்தம் - சருவநேத்திரரோக மூன்றுவகையுளொன்று; அது வாதாதிமந்தம், பித்தாதிமந்தம், சிலேட்டுமாதி மந்தம், இரத்தாதிமந்தம், அதாதிமந்தம் என ஐந்தாக விரியும்.

அதிமலம்-மாவிலிங்கு.

† அதிமாதம்-அதிகமாதம்.

அதிமாத்திரம்-உயர்வு, மிகுதி.

† அதிமாமிசகம்-ஓர்வகைத்தந்தரோகம்.

† அதிமாமிசம் - கண்ணில்வரு மொருவகைத் தசைச்சுரப்பு நோய்.

† அதிமாமிசரோகம் - பற்களில்வரு மொரு வகைநோய்; அது பல்லின் வேர்ச்சந்தக ளி லாணியையொத்த கட்டிகளைப் பிறப் பித்துக்காதுகளிலுந் தாடைகளிலு நோவு ண்டாக்கும்.

† அதிமாமிசார்மரோகம்-கண்ணில் வருமோர் நோய்; அது வெள்ளைவிழியி லதிகமாமி சம் வளர்வது.

அதிமாயம்-மாயையின்மை.

† அதிமார்க்கநூல் - பாசமயங்களுக்கப்பாற் பட் டசமயமாய்ச் சித்தாந்த மல்லாததாயு ள்ள ஞானத்தைப் போதிக்குஞ் சாத்திரம்; அது பாசுபதம், காபாலம், மகாவிரதமென மூன்றுவகைப்படும்.

† அதிமார்க்கம் - பாசமயங்களுக் கப்பாற்பட் டசமயமாய்ச் சித்தாந்த மல்லாததா யுள்ள ஞானம்.

† அதிமானம்-மிக்க அபிமானம்.

† அதிமானுடம்-தெய்வத்தன்மை, மனுடனுக் குமேற்பட்டது.

அதிமானுடன்-உத்தமபுருடன், சிரஞ்சீவி.

† அதிமிதம்-அளவின்மிக்கது, சுரமில்லாதது, காய்ந்தது.

அதிமிதி-அதிக்குதி.

அதிமித்திரன்-கணவன், மிகுநேசன்.

அதிமிருத்தியாதிமாத்திரை - கோரோசனை மாத்திரை.

அதிமூத்தம்-குருக்கத்தி.

† அதிமுத்தி-சாயுச்சியமுத்தி.

† அதிமூர்க்கம்-கடுங்கோபம்.

† அதிமூர்க்கன்-கடுங்கோபி.

அதிமோகம்-அனேகம், ஒருதலைக்காமம்.

† அதிமோட்சம்-அதிமுத்தி.

அதியட்சன்-கண்காணி.

† அதியட்டி - அடியொன்றிற்குப் பதினேழு சையுடையதாய் நான்கடியால் வருமொரு கவிச்சந்தம்.

அதியம்-அதிகம், ஓர்மருந்து.

† அதியாதரம்-மிகுவிருப்பம்.

அதியாமம்-அறுகம்புல், முயற்புல்.

† அதியுக்கிரகண்டன்-ஓர்யமதூதன்.

† அதியுட்டணம்-மிகுவெப்பம்.

† அதியோகம் - சென்மலக்கினத்துக்காவது சந்திரலக்கினத்துக்காவ தாறுமேழாமெட் டாமிடங்களிற் சுபகிரகமிருக்குநிலை; இது ஞானம், கீர்த்தி, மன்னர்பிரிய முதலிய சுபகாரியங்களைக் கொடுக்கும் யோகம்.

அதிரசம் - இரசம், உப்பு, ஓர்பண்ணிகாரம், ஓர்பானம்.

அதிரதம்-ஓர்பண்ணிகாரம், ஒர்பானம், நால் வகைத்தேரி லொன்று.

அதிரதர்-முழுத்தேரரசர்.

† அதிரதன்-சத்தியகருமன்மகன்; இவன்கங் கைக்கரையில் வந்தடைந்த குந்திசிசுவாகி யகன்னனை யெடுத்துவளர்த்தவன், இவன் மனைவி இராதை, முழுத்தேரரசன்; இவ ன் தேரினின்றமர்புரிந்து தனதுசேனையை யுந் தேரையும் காவல்பண்ணிக் கொண்டு சத்துருவைச் செயிக்குமரசன்.

அதிரதி-அதிரதன்.

† அதிரத்தம்-மிகுசிவப்பு.

அதிரல் - அதிர்தல், புனலிப்பூ, மோசிமல்லி கை, விரிதூறு.

அதிராகம்-கந்தகம்.

† அதிராசன் - அரசனுக்கு மேற்பட்டவன், சிரேட்டராசன்.

அதிராத்திரம்-யாகமிருபத்தொன்றினொன்று

அதிராம்பை-பொற்றலைத்தகரை.

அதிராயம்-அதிசயம்.

அதிரிசம் - கடவுள்காணப்படாத தன்மை, குருடு.

அதிரிசயம்-கலைஞானமறுபத்துநான்கினொன் [று.

அதிரிசனம்-அதரிசனம்.

அதிரிசன்-கடவுள், குருடன்.

அதிரிசியம்-அதிரிசம்.

† அதிரித்தம்-மிகுதி.

† அதிருக்கு-குருடு.

† அதிருசம்-அதிருசியம்.

† அதிருசன்-குருடன்.

† அதிருசியந்தி-அருந்ததி.

† அதிருசியம்-அறுபத்துநான்கு கலைஞானங் களுளொன்று, காட்சிக்கு விடயமாகாதது, காணப்பட யோக்கியமில்லாதது, தாமத குணசித்திகளிலொன்று; அது காணப்படு ம் பொருளைக் காணுமற்போகச்செய்வது.

† அதிருசியன்-கடவுள், பரசிவன்.

† அதிருச்சியம் - காணப்படும் பொருளைக்கா ணுமற்போகச்செய்வது.

† அதிருட்டகன்மம் - மறுமையிற் சுவர்க்க நரகங்களையனுபவித்தற்குக் காரணமாயிருக்கு மிம்மையிற் செய்யப்பட்ட கருமம்.

† அதிருட்டபோக்கியம்-ஒருவர் செய்த கரும ந்தேகாந்தத்திற் சுவர்க்கத்திலாதல் நரகத்திலாதல்மற்றொருபிறப்பிலாதல்பலிப்பது.

அதிருஷ்டம்-பார்வைக்கெட்டாதது.

† அதிருட்டம்-இந்திரியங்களாற் காணப்படாதது, பார்வைக்கெட்டாதது, பாவபுண்ணியத்தொழிலினாற் புத்திதத்துவத்திற் சமவாயசம்பந்தியாய் வைக்கப்பட்டுப் பலபரியந்தமிருக்குஞ் சம்ஸ்காரமாகிய சூக்கும கன்மம்; இது சுவர்க்க நரகபூமிகளுக் கான்மாவுடன் சூக்குமதேகத்திலிருந்து போதலும் வருதலு முடையதென்பர்.

† அதிருட்டானுமானம்- அதிட்டானுமானம்.

† அதிருட்டிபூதனை-ஓர்குருட்டுப் பெண்பேய்; அது குழந்தைகளைவருத்து மேழுபெண் பேய்களுளொன்றென்று சொல்லுவர்.

† அதிருட்டிபூதனைகிரகதோஷம் - அதிருட்டிபூதனையென்னும் பெண்பேயினாற் குழந்தைகளுக்குவருந்தோஷம்; அது அற்பப்பார்வை, வாந்தி, சுரம், இருமல், மலபேதம், தேகநிறமாறுதல், தேகத்திற் றுர்க்கந்தக்க விச்சுவீசுதல், அல்லது அசங்கிய நாற்றம், இளைத்தல், சொற்பநித்திரை, உதடுநோவு, தினவு, விக்கல், பயம், முலைப்பாலிலசங்கியம், ஈனத்தொனி, நடுக்கமுதலிய குணங்களையுண்டாக்கும்.

அதிருத்தி-திருத்தியின்மை.

† அதிரூபம்-மிகச்சிறந்த வடிவம்.

† அதிரேகமாயை-பெரிதாகியமயக்கம்.

அதிரேகம்-அதிசயம், மிகுதி,மேற்பட்டது.

அதிரோகணி-ஏணி.

அதிரோகம்-ஓர்காசம்.

† அதிரோகிணி-ஏணி.

† அதிரோகிதபாவம் - மறைக்கப்படாதிருத்தல்.

அதிரோகிதம்-அடுத்திருத்தல்.

† அதிரோபிதம் - மேலாகவுயர்த்தப்பட்டது, மேலாகவைக்கப்பட்டது.

அதிர் - அதிரென்னேவல், ஒலி, நடுக்கம், பயம்.

அதிர்ச்சி-அதிகப்படுதல், ஆரவாரம், குமுறல், பயம்.

† அதிர்ச்சியம் - காணப்படயோக்கியமாகாதது.

அதிர்தல்-குமுறுதல், நடுங்கல்.

அதிர்த்தல்-அதட்டல், குமுறல், சொல்லுதல்.

அதிர்ப்பு-அச்சம், அதிரல், ஆரவாரம், நடுக்கம்.

அதிர்வு-யாழ்நரம்பைச் சிதறவுந்தல்.

அதிர்வெடி } ஓர்வெடி.
அதிர்வேட்டு }

அதிலவோடாகம்-அடிலவோடாகம், ஓர்பூண்டு.

† அதிலுத்தன்-பிறர்பொருள்களில் மிக்கவாசையுடையோன்.

அதிலோகம்-உலகம், இரசகர்ப்பூரம்.

† அதிலோபம்-தன்பொருளைப்பிறர்க்குக்கொடுக்கவிரும்பாமை, மிக்கபொருளாசை.

அதிவசனம்-பேர்.

† அதிவருணர்-அதிவருணாச்சிரமத்தோர்.

† அதிவர்ணாச்சிரமி-வருணாச்சிரமங்களைக்கடந்து வேதாந்தமகாவாக்கியக் கேள்வியினால் கடவுளையுந் தன்னையுமறிந்த ஞானியாத்ம ஞானி.

† அதிவண்ணாச்சிரமி-அதிவருணாச்சிரமி.

அதிவாசம் - அயல், இடம், உபவாசத்திற்கு முதனாள், கிருத்தியாரம்பச் சடங்கிலொன்று, மிருமணம், வீடு.

அதிவாசனம்-வாசனையேற்றுகம்.

அதிவாதம்-பெருங்காற்று.

† அதிவாதி - பிறமதங்க ளெல்லாவற்றையுங் கண்டித்துத் தன் மதந்தாபிப்பவன்.

அதிவாலகன்-குழந்தை.

† அதிவிகடம் - துஷ்டத்தன்மையானயானை.

† அதிவிகடன்-மிக்ககோபி.

† அதிவிச்சித்திரம்-மிகுந்தவாச்சரியம்.

அதிவிடம்-அதிவிடயம்.

அதிவிடயம்-அத்தம், அவிருகம், ஓர்மருந்து.

† அதிவிடை-அதிவிடயம்.

† அதிவித்தாரம்-அதிகவிஸ்தாரம்.

அதிவியதை-மிகுவேதனை.

† அதிவியப்பு-அதிகவாச்சரியம்.

† அதிவியயம்-அதிகச்செலவு.

† அதிவியயி-பெருஞ்செலவாளி.

அதிவியாத்தி-அருத்தாபத்தி, மிகக்கூறல், மிகவியாபித்தல்.

† அதிவிரகன்-அதிகவுபாயமுள்ளவன்.

† அதிவிருட்டி } பெருமழை.
அதிவிருஷ்டி }

† அதிவினயம் - அதிகக்கீழ்ப்படிவு, மரியாசாரம்.

† அதிவின்னை-தன்கணவன்வேறொருத்தியை

மணஞ்செய்தற்குக்காரணமாயிருந்தமுதன் மனைவி.

† அதிவெப்பம் - இருபத்தெட்டுத்தொகைநரகங்களுண் முதலாவதாகிய கோரத்துக்குள்ளவைந்துநாயக நரகங்களுளொன்று.

அதிவெள்ளைச்சிந்தூரம் - சவ்வீரம், பறங்கிப் பாஷாணம்.

அதிவேகம்-மிருகநி.

அதிவேதனம்-மனைவியைவிட வேறொருத்தியை விவாகம்பண்ணுதல், மிகக்கூலி.

† அதீக்கிதர்
† அதீக்கையோர் } தீட்சையில்லாதவர்.

அதீசன்-எசமான்.

அதீசாரம்-அதிசாரம்.

† அதீச்சன்-மிக்கவிச்சையையுடையவன்.

அதீச்சுரபதவி-நவவிலாச சபைக்குரியவதிகாகாரம்.

அதீச்சுரன்
அதீச்சுவரன் } அரசன், கடவுள்.

அதீட்சணதை-மழுங்கல்.

† அதீட்சணன்-கூர்மையில்லான்.

† அதீதகலை-ஐந்துகலைகளுளொன்றாகிய சாந்தியதீதகலை; அது விகற்பஞானஞ் சாந்தமானதென்கிற நினைவுங்கழன்று பரமாகாசரூபமாய் நிற்பது.

† அதீதகாலம்-இறந்தகாலம்.

அதீதப்பிரமம்-கடவுள்.

அதீதம்-எட்டாதது, கடந்தது, குரான்முன்னுந்தாளம்பின்னுமாய்வருவது, பொன், மேற்பட்டது.

அதீதர்-வானோர், முனிவர், மேலோர்.

அதீதவேதன்-வேதநிபுணன்.

† அதீதன்-எட்டாதவன், கடந்தவன், பாசத்தினின்று விடுவிக்கப்பட்டவன்.

அதீதாவஸ்தை-துரியாதீதம்.

அதீதியம்-ஆசையின்மை.

அதீந்திரியம்-காணப்படாதது, புலனுக்கெட்டாதது.

அதீரம்-கரையின்மை, தைரியமின்மை.

அதீரை-அமையாதவள், மின்னல்.

† அதீனதை-அடிமைத்தன்மை, கீழ்ப்படிதல், சார்ந்திருத்தல்.

அதீனத்துவம்-இட்டம்.

அதீனம்-உரித்து.

அது-அஃது, ஆறுவதனொருமையுருபு.

† அதுக்ககரம்-துக்கமின்மையைச்செய்வது.

அதுக்கம்-அடிப்பு, ஒதுக்கம், குழிவு.

அதுக்கல்-அடித்தல், அடைசுதல்.

அதுங்கல்-ஒதுங்கல், குழிதல்.

† அதுட்டி-துக்கம்.

† அதுநா-இப்பொழுது.

† அதுநாதனம்-இப்பொழுதைக்குரியது.

† அதுநாபாவம்-இப்பொழுதுள்ளது.

அதுலம்-உவமையின்மை, ஓரெண்.

அதுலன்-ஒப்பிலி, கடவுள்.

அதுலிதம்-அசைவின்மை.

அதுல்லியம்-ஒப்பின்மை.

† அதூரம்-சமீபம்.

† அதூவபந்தம் - சமணமதத்திற் கூறியபடி விட்டுவிட்டுப் பந்திக்குஞ் சொரூபத்தது.

அதெந்து-பயப்படாதே, யதெந்து.

† அதேகி-தேகமில்லாதவன்.

† அதேயஞானம்-கொடுக்கத்தகாததைக் கொடுத்தல்.

† அதேயம்-கொடுக்கத்தகாதது.

அதைத்தல்-தாக்கிமீளல், வீங்கல்.

அதைப்பு-தாக்கியெழுதல், வீக்கம்.

அதைரியம்-தைரியமின்மை.

அதொன்மையம்-நூதனம்.

அதோ-கீழ், படர்க்கைச்சுட்டு.

† அதோகததோஷம் - சலரோகசம்பந்தமான வைவகைத்தோஷங்களு ளொன்று; அது நாபித்தானத்தின் கீழ்வாயுவைச் சஞ்சரிக்கச்செய் தடிக்கடிமலம்நழுகல் வாயுலர்தலென்னுங்குணங்களையுண்டாக்கு மோர்நோய்.

அதோகதி - இறங்குதல், நரகம், பள்ளம், பாதலம்.

அதோங்கம்-குதம், யோனி.

அதோசாதி-கீழ்சாதி.

† அதோட்சசன்-விட்டுணு.

அதோபாகம்-கீழ்ப்பக்கம்.

† அதோபுடம்-கீழ்ப்புறம்.

அதோபுவனம்-கீழுலகம்.

அதோமாயை-ஓர்மாயை.

† அதோமார்க்கம் - கீழ்மார்க்கமாகிய சரியை முதலியன.

† அதோமுகக்கட்டு - வயிற்றிலேனு மிடுப்பிலேனுங் கருநிறத்துடன் பருமனாகவெழும்பி யதிகவுபத்திரவத்தையும் வியர்வையுங்கொடுக்குமோர்வகைக்கட்டு.

அதோமுகம்-ஆற்றுநீர்க்கழிமுகம், கீழ்நோக்கியமுகம்.

† அதோமுகரத்தபித்தம்-இரத்தபித்தரோகத்திலொருவகை; அநுசலத்துவாரம், மலத்துவாரம்,உரோமத்துவாரமென்னு மூவகைத்துவாரங்களினுலுமிரத்தம்போகச்செய்யுமொருவகைநோய்.

† அதோமுகராசி - ஆதித்தியனின்றவிராசி.

† அதோமுகவாதம் - மார்பிலும் வயிற்றிலுங் கீழ்வயிற்றிலுங் கவுட்டியிலுங் கீழேயிறங்கி வேதனைசெய்யு மோர்வகைநோய்.

† அதோமுகா-ஆற்றினீர்க்கழிமுகம்.

அதோமுகி-கவிழ்தும்பை.

† அதோமுகியான் - கன்றீன்றுகொண்டிருக்கும் பசு.

† அதோரணர்-யானைப்பாகர்.

அதோலம்பம்-செங்குத்து, தூங்குதல், நிறுத்திட்டவரி.

அதோலோகம்-கீழுலகம்.

அதோவதனம்-அதோமுகம்.

அதோவாயு-அபானவாயு.

† அதோளி-அவிடம்.

† அதோனியாமிகாசத்தி - ஆன்மாக்களுக்குப் போகநுகர்ச்சியை விளைவிக்கு மாணவ மலசத்தி.

அத்-ஒன்று பாதி.



அத்தகடகம்-கைவளை.

அத்தகண்டாதனம்-ஒருகான்மேனீட்டியொரு கைகொண்டு நீட்டின காலைக்கட்டி மற்றக் கையை நிலத்தூன்றியிருப்பது.

அத்தகம்-ஆமணக்கு, கருஞ்சீரகம்.

† அத்தகிரி-சூரியனஸ்தமிக்குமிடமாகச்சொல்லப்படுமேற்குமலை.

அத்தகோரம்-நெல்லி.

† அத்தகோளம்-கோளத்தின்பாதி.

† அத்தக்குன்று - சூரியனஸ்தமனஞ் செய்யு[மலை.

அத்தசகாயம்-பொருளுதவி.

அத்தசதம்-ஐம்பது, நூறுண்டு.

அத்தசந்திரன்-வாலசந்திரன்.

† அத்தசாமப்பூசை - நடுராத்திரியிற்செய்யும் பூசை.

அத்தசாமம்-நடுச்சாமம்.

அத்தசித்திரம் - மார்க்கசடப் பிரமாணத்தொன்று; அஃது அரைமாத்திரையோர்களையாகக்கொண்டது.

அத்தடி-அடிக்கெடுதல், அந்தரிப்பு.

† அத்தத்தாவெனல் - அத்தாவத்தா வெனக்கூறுதல்.



அத்தநாசம்-பொருளழிவு.

† அத்தநாரீசர்-அத்தநாரீசுரர்.

† அத்தநாரீசன் - தனதுடம்பிற்பாதி பெண்வடிவானசிவன்.

அத்தநாரீசுரன்-சிவன், பாதி ஸ்திரியாகவிருப்பவன்.

† அத்தநாரீசுவரன்-அத்தநாரீசன்.

† அத்தநாள்-பதின்மூன்றுநட்சத்திரநாள்.

† அத்தபவளம்-எழாமிராசி.

அத்தபாகம்-பாதி, பொருட்பாகம்.

அத்தப்பிரகரம்-நாலேகாலுழிகைகொண்டது.

அத்தப்பிரகரன் - கரந்துறைக்கோள்களிலொன்று.

† அத்தப்புனருத்தம்-ஒருசிக்கிரகத்தானம்; அது முன்சொன்னபொருளைப்பின்னுஞ்சொல்லுதல்.

† அத்தப்பொருந்தி-ஒருபூடு.

அத்தமண்டபம்-கருப்பக்கிரகமண்டபம், கோவிலினடுமண்டபம்.

† அத்தமத்தகசையோகம் - கையான்மத்தகத்திற்றடவுதல்.

அஸ்தமம் } அஸ்தமிக்கை, அத்தகிரி.
அத்தமம் }

† அத்தமயம் } சூரியன்முதலியனபடுதல்.
† அத்தமயனம் }

† அத்தமலை-சூரியனஸ்தமிக்குமிடமாயமலை.

அஸ்தமனம் } அத்தமனகாலம், அத்தமித்தல்.
அத்தமனம் }

அத்தமானம்-ஆமணக்கு.

அத்தமானியம்-கண்டதிற்பாதி மறைதருதல்.

† அஸ்தமிக்கை } படுகை.
அத்தமிக்கை }

அத்தமித்தல் - அற்றுப்போதல், ஒடுங்குதல், படுதல், மறைதல்.

அத்தமிப்பு-படுகை.

அத்தமேற்காலாதனம் - இருகாலு மேலுறமடக்கி யக்காலிரண்டையுங் கையாற்பற்றிக்கிடப்பது.

அஸ்தம்-அஸ்தமிக்கை, அத்தகிரி, ஓர்நட்சத்திரம், கை.

அத்தம்-அதிவிடயம், அருநெறி, ஆண்டு, ஓர்நட்சத்திரம், ஓர்நாள், ஓர்மலை, கண்ணாடி, காடு, குக்கில், கை, சொற்பொருள், பாதி, பொன், முகில், வழி.

† அத்தயாமம்-ஒருதினத்திற்பதினுறிலொன்றுகொண்டநேரம்.

அத்தாசிதம்-மடல்நூத்தம்.

அத்தர்-முனிவர், தேவர், வனவாசர், வாசனை ப்பண்டம்.

அத்தலைப்பொருந்தி-ஓர்பூடு.

† அத்தவாசனம்-நினைந்தபொருளைச் சொல்லு ஞ்சொல்.

† அத்தவரை-அஸ்தகிரி.

† அத்தவர்-ஆசையுடையோர்.

† அத்தவாகனன்-சிவன்.

அத்தவாரணம்-போதுமெனல்.

அத்தவாளம் - உல்லாசம், காடு, போர்வை, வடகம்.

† அத்தவுதயம்-அருத்தோதயம்.

அத்தவேடணை-பொருளிச்சை.

அத்தனை-அவ்வளவு.

அத்தன்-அருகன், கடவுள், கடுக்காய், குரு, சிவன், பிதா, மூத்தோன், வெள்ளியம்.

அத்தன்மை-அம்மாதிரி.

† அத்தா-தமக்கை, தாய், பெண்கொடுத்தமாமி, மெய்யாய், வெளிப்படையாய்.

அத்தாட்சி-ஒப்பனை, திட்டாந்தம்.

அத்தாணி-அரசிருக்கை.

† அத்தாணிமண்டபம்-அரசிருக்கைமண்டபம்

அத்தாதிகம்-பாதிக்கதிகப்பட்டது.

† அத்தாதிகாரம்-பொக்கிஷாதிகாரியினதிகாரத்தானம்.

அத்தாதுரம்-பொருளாசை.

† அத்தாந்தரம் - எதிரர்த்தம், புறக்காரியம், வேறர்த்தம், வேறுநிமித்தம்.

அத்தாபித்தல்-உரப்பிநெருக்கல்.

† அத்தாப்பித்தல் - உறுத்திவெளிப்படையாயதட்டிப்பேசல்.

அத்தாயம் - அந்தரம், கடைச்சக்கரத்தின் மிதிதடி.

† அத்தார்ச்சனம்-திரவியந்தேடுதல்.

அத்தார்ச்சனை-திரவியசம்பாத்தியம்.

அத்தார்த்தம் - அரைவருடம், பொருணிமித்தம்.

† அத்தார்த்தம்-ஆண்டிற்பாதி, பொருணிமித்தம்.

† அத்தாவரம்-அசைவுள்ளபொருள்.

அத்தானம்-ஆஸ்தாகம்.

† அத்தாணி } சபைகூடுமிடம்.
† அத்தாணிமண்டபம்

அத்தான்-அக்காள் கணவன், மைத்துனன்.

அத்தி-அக்காள், அதவு, அத்தன்மையன், உண்மை, எலும்பு, என்பு, ஓர்மரம், கடல், கணிளிற்கு மோர்நரம்பு, கருவிளா, கொலை, திப்பிலி, பாதி, செய்யென்னேவல், பிடியன்யானை, மலை, யானை, வெருகமரம், கல்லத்தி, காட்டத்தி, கொடியத்தி, பேயத்தி, மலையத்தி, விழலத்தியென வாறுவிதம்.

† அத்திகபம் - கடனுரை, கணவாய்மீனெலும்பு.

† அத்திகம்-வருடந்தோறும்வருவது.

† அத்திகா-அத்திகை.

† அத்திகாயம்-தன்மாத்திகாயம், அதன்மாத்திகாயமென அசீவபதார்த்தங்களோடு கூட்டிவழங்கப்படுமோர் வாய்பாடு.

† அத்திகிரி - காஞ்சிபுரத்துள்ள விட்டுணுதலங்களெட்டனுளொன்று; அது வெள்ளையானைதன்னமிசமொன்றினால் விட்டுணுவைத் தங்கப் பெற்ற காரணத்தால் வந்த பெயரென்பர்.

அத்திகை-அக்காள், அத்தன்மையளாகுகை.

† அத்திகோசத்தான் - ஒருகுழூஉப்பெயர், அது இளந்துணைமகார்தம்மிற் கூடிவிளையாடல் குறித்தபொழுதைக்குத் தாமேபடைத்திட்டுக்கொண்டது.

அத்திசோபம்-ஓர்நயனரோகம்.

அத்திகோலம்-அழிஞ்சில்.

அத்திக்கன்னி-காசிலாங்கண்ணி, வெருகமா [ம்.

† அத்திசஞ்சயம் - இறந்தவரினுடம்பைத் தகனஞ்செய்தபின் னெலும்புகளைக் கங்கைமுதலிய தீர்த்தங்களொன்றி விடும்படி யெடுத்துத்திரட்டல்.

அத்திசம்-நீர்முள்ளி.

† அத்திசமர்ப்பணம் - இறந்ததேகத்தினெலும்பைக் கங்கைமுதலிய தீர்த்தங்களிலெறிதல்.

அத்திசயனன் } பாற்கடலிற் றுயின்றோன், விட்டுணு.
அத்திசயன்

† அத்திசாரம் - எலும்புத் தானங்களிலுள்ள எண்ணெய்ப்பற்றானதுள்.

அத்திசுரம்-எலும்பைப்பற்றினசுரம், ஓர்நோய்.



அத்திதந்தம்-முள்ளங்கி.

† அத்திதாரணம்-எலும்புமாலை தரித்தல்.

† அத்திதி-நிலையின்மை, மரியாதையின்மை.

அத்தித்தல்-பாதிசெய்தல்.

அத்தித்திப்பிலி-யானைத்திப்பிலி.

அத்திநந்தனி-பார்வதி.

அத்திநவநீதகம்-சந்திரன்.

† அத்திநாத்தி - உண்டில்லையெனவும் உள்ளதுமில்லதெனவுஞ் சந்தேகிக்க நின்றதெனவும் பலவேறுபொருள்களைத் தருமொரு வடமொழியவ்வியயம்.

† அத்திநாத்திவாதம்-உண்டில்லை யென்னும் வாதம்.

† அத்திபங்கம்-எலும்புமுறிதல்.

அத்திபஞ்சரம்-என்புக்கூடு, முழுவென்பு.

† அத்திபாதிப்பிரியம்-சச்சிதாநந்தம்.

அஸ்திபாரம் } அடிப்படை.
அத்திபாரம்

அத்திபுரசாதனி-அவுரி.

† அத்திபெறுக்கல்-அர்த்திசஞ்சயம்.

† அத்திபேதம்-ஒருநரகம்.

அத்திபேதி-ஓர்மருந்து.

† அத்திப்பதி-அஸ்தினாபுரம்.

† அத்திப்பிரக்கேபம் - இறந்தவனுடைய எலுமபைக்கங்கைமுதலிய தீர்த்தங்களிலிடுதல்.

அத்திமண்டூகி-முத்துச்சிப்பி.

† அத்திமாலி-சிவன்.

† அத்தியக்கம்-தலைமை, பிரத்தியக்கம், மேல்விசாரணை.

அத்தியக்கினி-சீதனம், வடவாமுகாக்கினி.

அத்தியக்கினிட்டோமம் - யாகமிருபத்தொன்றிலொன்று.

அத்தியசனம்-ஏகோத்திட்டவூண்.

† அத்தியஸ்மி-மிகவுமைக்கியம்.

அத்தியட்சரம்-பிரணவம்.

அத்தியட்சன்-அதிகாரி.

அத்தியந்தகோபம்-மிகுகோபம்.

† அத்தியந்தகோபனம்-அதிகக்கோபம்.

அத்தியந்தபாவம்-முழுதுமின்மை.

† அத்தியந்தப்பிரளயம் - ஐவகைப்பிரளயங்களுளொன்று; அதுமுத்தி, இந்த அவத்தையிலஞ்ஞானஞ் சிறிதுமில்லை.

அத்தியந்தம்-ஓரெண், மட்டற்றது, மிகுதி.

† அத்தியந்தகாதிசயோக்தியலங்காரம்- மிசையுயர்வு நவிற்சியணி.

† அத்தியந்தாபாவம்- அபாவப்பிரமாணவகைகளுளொன்று; அஃதென்றுமில்லாமை.

அத்தியயநம்-வேதமோதல்.

அத்தியயம்- அத்தியாயம், அழிவு, ஆக்கினை, இக்கட்டு, ஒரு பொருளின்பேதத்தையயத்துடனறிதல், குற்றம், நட்டம், பொல்லாங்கு, மரணம், மீறுதல்.

அத்தியயனம்-படித்தல், வேதமோதல்.

† அத்தியவசம்-மிகவும்வசமாதல்.

அத்தியவசயித்தல் - ஒருபொருளின்கணியல்பாய்நிகழுந்தன்மையை யொழித்துத் தானெடுத்தபொருண்மே லேற்றிச்சொல்லல், தற்குறிப்புச்செய்தல்.

அத்தியவசாயம் } தானெடுத்துக்கொண்டது, முயற்சி.
அத்தியவசாயிதம்

† அத்தியவசாயினி - விஷயநிச்சயஞ் செய்பு மது.

† அத்தியற்பம்-மிகவுமற்பம்.

† அத்தியற்புதம்-மிகவுமாச்சரியம்.

அத்தியாகரணம் - தொக்குநின்றதை நிரப்புதல், வாதுபேசுகை, வேதமோதல்.

அத்தியாகாரம்-அவமானம், குற்றம், மிகுபோசனம், வெருவித்தசொல்.

† அத்தியாகாரி-மிகப்புசிக்கிறவன்.

† அத்தியாகாரியம் - ஒருவாக்கியத்திலொருசொல்லங்ஙனம் வெளிப்படையாயிராத மற்றொருசொல்லையவாவிநிற்றல்.

† அத்தியாசசதுட்டயம் - ஒன்றனைமற்றொன்றாகக் கொள்ளுதலாகிய நால்வகை அத்தியாசங்கள்; அவை மித்தியாத்தியாசம், இதராத்தியாசம், இதரேதராத்தியாசம், சத்தியாத்தியாச மென்பன, அவற்றுள் மித்தியாத்தியாசமாவது நித்தியமான வான்மா நெருப்பின் சம்பந்தத்தா னீரினிடத்துச் சூடுவந்ததுபோல வநித்தியமான தேகசம்பந்தத்தாற் றன்னிடத்து வந்த சரித்தன் முதலிய தொழில்களைத் தன்னுடையதாகப் பாவித்தலெனவும், இதராத்தியாசமாவது தனக்குவேறான விந்திரியங்களின் றொழில்களைத் தன்னுடையனவாகக் காண்டலெனவும், இதரேதராத்தியாசமாவது மனமுதலியன யானெனதெனச் சங்கற்பிப்பதைத் தனதாகப் பாவித்தலெனவும், சத்தியாத்தியாசமாவது தானல்லாததைத் தானாகக் கருதுமகங்காரத்தைத் தானாகவறிதலெனவும் வேதாந்திகள் கூறுவர்.

அத்தியாசநம்-ஏகோத்திட்டம்.

அத்தியாசம்-சாட்டுதல், வித்தியாசம், வீற்றிருத்தல்.

† அத்தியாசவாதம்-விபரீதவாதம்.

அத்தியாசனம் - அபரக்கிரியையிறேர்பகுதி, ஏகோத்திட்டம்.

† அத்தியாசாரம் - விதிக்கப் பட்ட வாசாரங்களைக்கடந்து நடத்தல்.

† அத்தியாசாரி - அத்தியாசாரமாய் நடப்பவன்.

† அத்தியாசிரமபாவனை-பிராமியபாவனை.

† அத்தியாசிரமயோகசன்னியாசி - பாரமேசுவரி பாவனையினிற்பவன்.

† அத்தியாசை-அதிகவாசை.

† அத்தியாசோபாதி-மூன்றுவகைச்சீவவுபாதிகளுளொன்று; அது அந்தக்கரணசம்பந்தமாகிய சுகதுக்கங்கண் முழுவதுமாத்துமாவனுபவிப்பதுபோலமுயற்சிப்பது.

† அத்தியாச்சியம்-விடப்படக்கூடாதது. [லை.

† அத்தியாச்சிரமம் - ஆச்சிரமங்களைக்கடந்தநி

† அத்தியாச்சிரமயோகசன்னியாசி - பாரமேசுவரிபாவனையினிற்பவன்.

† அத்தியாச்சிரமயோகி - மூவகையோகிகளுளொருவன்.

அத்தியாதாநம்-கிரமத்தினின்று மாறுபடுதல்.

† அத்தியாத்துமஞானம் - பரமான்மாவையறியுமறிவு.

† அத்தியாத்துமதத்துவநூல் - அத்தியாத்துமஞான சாத்திரம்.

† அத்தியாத்துமம் - யசுர்வேதவுபநிடதங்களுளொன்று.

அத்தியாத்துமா-ஆன்மா, கடவுள்.

அத்தியாத்துமிகநூல்-அத்தியான்மிகநூல்.

அத்தியாத்துமிகம்-கடவுட்கடுத்தது, தன்னாலுருந் துன்பம்.

அத்தியாபகன்-வேதமோதுவிப்போன், உபாத்தியாயன்.

அத்தியாபநம்
அத்தியாபனம் } ஓதுவித்தல், வேதமோதுவித்தல்.

† அத்தியாபிதம்-படிப்பிக்கப்பட்டது.

அத்தியாயநம்-வேதமோதல்.

அத்தியாயம்-இலக்கியச்செய்யுட்பகுதி, காண்டம், சருக்கம், படலம், பரிச்சேதம், வேதநூலைவிரித்தவிலக்கியத்தின் கூறுபாடு, வேதம்.

† அத்தியாரூடம் - மிகவுயர்ந்தநிலை, மிகுந்தவளர்ச்சி.

அத்தியாரோகணம்
அத்தியாரோகம் } ஏறுதல்.

அத்தியாரோபணம்
அத்தியாரோபம் } ஒன்றை யொன்றிலேற்றல்.

† அத்தியாரோபணம் - ஒன்றையொன்றிலேற்றுதல், கயிற்றைச் சர்ப்பமாக விளங்குதல்போல ஒருவஸ்துவை மற்றொருவஸ்துவாக விளங்குதல்.

† அத்தியாவசியகம்-மிகுந்தவவசியம்.

அத்தியாவாகனிகம்-சீதனம்.

† அத்தியானம்-தியானுரூபாவம்.

† அத்தியான்மராமாயணம் - விசுவாமித்திரர்செய்யப்பட்டவோருபதேசநூல்.

† அத்தியான்மர் - அண்டபிண்டமிரண்டினும் வியாபகமாயுள்ள பதின்மூன்று வாயுக்கள்.

† அத்தியான்மிகசடாகமம்-பிறன்படிக்குமாகமவாக்குச் செவியினூற் கேட்கப்பட்டுணரோசையாகியமத்திமவாக்குரூபமாயிருதயத்திற்றோன்றிநிற்பது.

அத்தியான்மிகம்-அத்தியாத்துமிகம்.

அத்தியான்மிகநூல் - பதிநூல்; அதுசாங்கியம் பதஞ்சலியம் வேதாந்தமெனப்படும்.

அத்தியான்மீகநூல்-மூவகைச் சாத்திரம்.

† அத்தியுத்தி - அதியுத்தியலங்காரம், பெருப்பித்துப்பேசுதல், வன்னித்துப்பேசுதல்.

† அத்தியுத்தியலங்காரம்-மிகுதிகவிற்சியணி.

அத்திரூடன்-சிவன்.

† அத்திரேயதா-படிக்கிறமாணாக்கன்.

அத்திரசத்திரம்-அம்பும் வாளும்.

அத்திரசந்தானம்-அம்பின்தொடர்ச்சி.

அத்திரசாஸ்திரம்-வில்வித்தை.

† அத்திரசிகிற்சகன் - சத்திரவைத்தியஞ்செய்வோன்.

† அத்திரசிகிற்சை-சத்திரவைத்தியம்.

அத்திரதர்-காற்சேநாசர்.

அத்திரதேவர்-ஆயுததேவர்.

† அத்திரத்தாமன்-அசுவத்தாமன்.

அத்திரபரீட்சை - கலைஞானமறுபத்துநான்கினொன்று, வில்வித்தைகற்கை.

† அத்திரப்பிரயோகம்-அம்புசெலுத்தல்.

அத்திரம்-அம்பு, இலந்தை, கடுக்காய்ப்பூ, கழுதை, குதிரை, கைவிடுபடை, நிலையின்மை, மலை, முன்விடுமம்பு.

† அத்திரயூகம்-ஒருவகைப்படைவகுப்பு.

† அத்திரலாகவம்-அத்திரப்பிரயோகவன்மை.

† அத்திரவர்-விசுவதேவர்களிலொருவர்.

அத்திரா-அரசு.

† அத்திராகாரம்-ஆயுதசாலை.

அத்திராசம்-பயமின்மை.

அத்திராதரம்
அத்திராதாரம் } அம்புக்கூடு, அம்புறைதூணி.

அத்திரி - உலைத்துருத்தி, ஒட்டகம், நாிருடி; அவர் அத்திரிமாமுனிவர், கணை, கழுதை, குதிரை, சூரியன், தருமநூல்பதினெட்டினொன்று, மலை, விண்.

அத்திரிகிலே-பூமி.

† அத்திரிகை-அரப்சரப்பெண்.

அத்திரிசாதன் - சந்திரன், மூதன்மூன்னுவரு ணைத்தான்.

அத்திரிசாரம்-இரும்பு.

அத்திரிசிருங்கம்-சிகரம்.

† அத்திரிசை } பார்வதி.
† அத்திரிகந்தினி }

அத்திரீசன்-இமையம், சிவன்.

அத்திரு-அரசமரம்.

அத்திரோகம்-மெத்தெனவு.

அத்திலே-செருப்படை.

அத்திவாரம்-அடி, அடியுரம்.

அஸ்தினபுரம் } அத்தினபுரம், அஸ்தனபுரி;
அத்தினபுரம் } இதுவங்காள வடமேற்குமகாணங்களில்மீரட்டென்னும்ஜில்லாவில் மகாபாரதத்திற்சிறந்த சந்திரவமிசத் தரசர்களாகிய பாண்டவர்களின் இராஜதானிப்பட்டினம்.

† அத்திறுபுரம் } அத்தினபுரம்.
† அத்திறுபுரி }

அத்தினி - நால்வகைப்பெண்களிலொருத்தி, பெண்யானை.

அஸ்து-அப்படியாக.

அத்து -அசைச்சொல், அரைஞாண், அரைப்பட்டிகை, இசைப்பு, சாரியை, சிவப்பு, செவ்வை, தைப்பு.

அத்து } (தெலுங்கிலுந் துலிக்கிலும்) எல்
ஹத்து } லே.



அத்துகமானி-அரசு.

அத்துகம்-ஆமணக்கு.

அத்துச்சம் - கிரகநிற்குநல்லுச்சம், சரியுச்சம்.

அத்துணே-அவ்வளவு.

அத்துதல்-இசைத்தல், பொருத்தல்.

அத்துமம்-அரத்தை.

அத்துமானி-அரசு.

அத்துருக்கம்-அகழ்சூழ்ந்தகோட்டை.

† அத்துரோகம்-துரோகமின்மை.

அத்துலாக்கி-கருஞ்சீரகம்.

அத்துவகமனம்-பிரயாணம்பண்ணல்.

† அத்துவகன் -தீர்த்தயாத்திரைக்குவெளிப்பட்டு வழிநடப்போனு யுண்டியின்பொருட்டு வந்தயாசகன்.

† அத்துவசுத்தி-ஆறத்துவாக்களினுங் கட்டுப்பட்டிருக்கின்றபோகங்களெல்லாவற்றையுமேககாலத்திற் புசித்துத் தொலேப்பித்து மோட்சங்கொடுத்தல்.

அத்துவசோதனே-பிரமசோதனே செய்தல்.

† அத்துவத்திரயம்-அத்துவாக்கண்மூன்று; அவை சத்தம், சத்தாசத்தம், அசத்தமென்பன.

† அத்துவபிட்டம்-வழியிலிருப்பது.

அத்துவம்-இரண்டொன்றாயிருத்தல், ஒன்றிப்பு, சிவப்பு, வழி.

† அத்துவயதாரகம் -யசுர்வேதவுபநிடதங்களுளொன்று.

† அத்துவயம்-இரண்டன்மை, பிரமமும் பிரபஞ்சமுமொருபொருளான தன்மை.

† அத்துவயவாதி-பிரமமும்பிரபஞ்சமுமொன்றெனச்சாதிப்போன், பௌத்தன்.

† அத்துவயன்-பௌத்தன்.

† அத்துவரியு-யசுர்வேதம், யாகபுரோகிதன்.

† அத்துவரியுவேதம்-யசுர்வேதம்.

அத்துவர்-பிரமஞானிகள்.

அத்துவர்க்கயம்-கருஞ்சீரகம்.

அத்துவர்க்காயம்-கருஞ்சீரகம், சீரகம்.

† அத்துவலிங்கம்-ஆன்மதத்துவ மடிப்பாகமும் வித்தியாதத்துவம் நடுப்பாகமுஞ் சிவதத்துவங்கடைப்பாகமுமாக வமைந்த சிவலிங்கம்.

அத்துவா-இரண்டொன்றாயிருப்பது.

† அத்துவாகாயாரோகணம்-ஒருதீட்சை.

அத்துவாக்காயம்-கருஞ்சீரகம்.

† அத்துவாசங்கற்பவாதி- அத்துவாவடிவாகச் சிவனேப்பாவிப்போன்.

† அத்துவாசுத்தி- ஆறத்துவாக்களினுஞ்சஞ்சிதமாயிருந்த கன்மங்களேயெல்லாம் நசிப்பித்தல்.

† அத்துவாசுத்திபண்ணல் - அத்துவாக்களிற்சனனங்களுக்கேதுவான கன்மங்களே யெல்லாஞ்சுத்திகரித்தல்.

அத்துவாசைவம்-ஓர்சைவம்.

அத்துவாந்தம்-காலேமாலேவெளிச்சம்.

அத்துவாமூர்த்தி - பிரபஞ்சத்திற்கலந்துநின்றுசேட்டிப்போன்.

அத்துவானம்-கட்டம், செவ்வானம், பாழ்ங்காடு.

† அத்துவிதநிலே-சிவமுமான்மாவுந் தம்முள்வேறு பாடறவொற்றுமைப்பட்டுநிற்றல்.

† அத்துவிதபாஷியம்-வியாசசூத்திரத்திற்குச் சங்கராசாரியர் செய்தபாஷியம்; இதுபரமான்மா வைக்கியமாகவத்துவிதசம்பந்தத்தைக்கூறுவது.

அத்துவிதம்-அத்துவைதம், ஒன்றிப்பு.

† அத்துவிதர் - சிவத்தோடிரண்டறக் கலந்த வர்.

† அத்துவிதாநந்தம் - எண்வகையாநந்தங்களி லொன்று; அது சீவன்வேறு பிரமம் வேறெ னக்கொள்ளுந்துவிதஞானம் நீங்கிய விட த்துண்டான வாநந்தம்.

† அத்துவிதியம்-ஒன்றிப்பு.

அத்துவிதியன்-ஒன்றுனவன்.

அத்துவை - கோழையினது மூழையினதுங் கலப்பு, தெரு, நேரம்.

அத்துவைதம்-பரமாத்துமாவுஞ் சீவாத்துமாவு மொன்றென்கை.

† அத்துவைதவாதி - அத்துவிதமே மெய்யெ ன்று சாதிப்போன்; இவன் சிற்சத்தியே சகத் துபாதானகாரணமென்பன்.

† அத்துவைதி - அத்துவிதக் கொள்கையுடை யோன்.

அத்தூரம்-மரமஞ்சள்.

† அத்தேயம்-களவுசெய்ய நினையாமை, களவு செய்யாமை.

அத்தை-அக்காள், குரு தலைவி, மாதா, மாமி, முன்னிலையசைச்சொல்.

† அத்தையர்-மாமிமார்.

அத்தோ - அதிசயவிரக்கச்சொல், இரக்கச் சொல்.

அத்தோதயம் - அருத்தோதயம், ஓர் விசேட நாள்; இது அறுபதுவருஷத்துக்கொருதரம் தைமாசத்தி லோர் ஞாயிற்றுக்கிழமையில் சூரியன் மகரத்திலும் சந்திரன்விதிபாத யோகஞ்கூடினதிருவோண நட்சத்திரத்தி லு மிருந்தொன்றுக வுதயமாதல், இந்நா ளில் ஸ்நாநம் தருமம் முதலியனசெய்தால் விசேடமென் றெண்ணம்.

† அத்தோர்யாமம் - ஒருயாகம்; அதுசோதிட் டோமயாகத்தி னிறுவாயாகிய வேழாம் பகுதி.

† அநகங்காரம்-அகங்காரமின்மை.

அநகம்-பாவமின்மை, மாசின்மை.

† அநகர்-அழகுடைய வாடவர், அழகுள்ளவர், பாவமற்றவர், மறுவற்றவர், மேண்மக்கள்.

அநகன்-அருகன், கடவுள்.

† அநக்கம்-குருடு.

† அநக்கரம்-சொல்லத்தகாதது, நிந்தை.

† அநக்கரன் - ஊமை, கல்வியில்லாதவன், சொல்லத்தகாதன சொல்லுவோன்.

† அநக்கினி-அக்கினியல்லாத வஸ்து, அக்கி னியில்லாமை, உதராக்கினியின் சேட்டை யற்றவன், விவாகம்பண்ணுதவன்.

அநங்கம் - இருவாட்சி, உடலின்மை, மல்லி கை.

† அநங்கர்-மதனனெனப்படுவோர்பலர்.

† அநங்கலீலை - மதனநூல்வழியாடும் விளை யாட்டு.

அநங்கன்-உடலிலான், கடவுள், மன்மதன்.

† அநங்கு-மன்மதன்.

† அநசூயை-அழுக்காறின்மை, அத்திரிமுனி யின்மனைவி.

† அநச்சரசத்தம் - எழுத்தொலி யல்லாத வொலி.

† அநச்சராத்மகம் - எழுத்தல்லாததனு லாய வோசை.

† அநச்சுவம்-குதிரையல்லாதது.

† அநதிகதம்-அறியப்படாதது, படிக்காதது.

† அநதிகதார்த்தகந்திரு - ஒருக்காலுமறியாத வஸ்துவையறிவிப்பது.

† அநதிகதார்த்தம்-அறியப்படாதவஸ்து.

† அநதிகாரம்-அதிகாரமின்மை.

† அநதிகாரி - அதிகாரமில்லாதது, அதிகார மில்லாதவன்.

† அநதிக்கிரமம்-அதிக்கிரமமின்மை.

† அநதிக்கிராந்தம்-கடவாதது.

† அநதிக்கிராந்தவிந்துகபரசிவம் - விந்துவை நீங்காதவிவயர்; இவர் மகாமாயையினது பரநாதப்பிரதேசத்தை யதிட்டிப்பவர்.

† அநதிக்கிராந்தவிந்துகபராசத்தி-சிவனுடை ய நவபேதத்து ளொன்று அது; பரவிந்து வையதிட்டிக்குஞ் சிவசத்தி.

† அநதிசம்-அதிசயமின்மை.

† அநதிதேசம்-அதிதேசமின்றியுணர்த்துவது.

† அநதிரோகம்-அதிரோகமின்மை.

† அநத்தம்-பயனற்றது.

† அநத்தியயனம் - ஓதுதலொழிந்திருக்க வே ண்டியகாலம்.

† அநத்தியவசாயாத்துமா-பாவம்அது; கிராக கவாத்துமாவுடையசுபாவம்.

† அநத்தியாயம்-அநத்தியயனம்.

† அநநுபாடணம்-தோல்வித்தான மிருபத்தி ரண்டனு ளொன்று; அது பிறன்கூறிய பொருளை யனுவதிக்கமாட்டாமை.

† அநந்த-நிவிர்த்திகலையிற் பிரிதிவிதத்துவத் திலுள்ள நூற்றெட்டுப் புவனங்களுளொ

ன்று, வித்தியாகலையி லிராக தத்துவத்தி லுள்ள வைந்துபுவனங்களு ளொன்று.

† அநந்தகீர்த்தி - அளவிறந்த கீர்த்தியுடையோர்.

† அநந்தகோடி-எண்ணத்தொலையாதன.

† அநந்தசதுட்டயம் - ஆருகதமதத்திற் சொல்லப்பட்ட மோட்சத்திற் பெரும்பயனாகிய அனந்தஞானம், அனந்ததரிசனம், அனந்தவீரியம், அனந்த சுகமென்னு நான்குவகை.

† அநந்தசதுர்த்தசி - புரட்டாசிமாதத்துச் சுக்கிலபக்கச் சதுர்த்தசி திதி; இது விட்டுணுவைப் பூசிக்குமோர்விசேஷதினம்.

† அநந்தசத்தி-அளவிலாற்றலுடைமை; இது கடவுளுடைய வறுகுணங்களு ளொன்று, கடவுள்.

† அநந்தசயனம்-சர்ப்பசயனம், மலையாளதேசத்துள்ள வொருவிட்டுணுதலம்.

அநந்தசயனன்-சேடசயனன், விட்டுணு.

† அநந்தசாயி-விட்டுணு.

† அநந்தசீரிடை-வாசுகியின்மனைவி.

† அநந்தசுகம்-வரம்பிலாவின்பம்.

† அநந்தசொரூபி-கடவுள்.

† அநந்தஞானம்-வரம்பிலாவறிவு.

அநந்தஞானி-கடவுள்.

† அநந்ததரிசனம்-வரம்பில்லாக்காட்சி.

† அநந்ததிட்டி-இந்திரன், சிவன்.

† அநந்ததிருதியை - புரட்டாசி மார்கழி வைகாசியென்னு மாதங்களில் வருஞ்சுக்கிலபக்கத்திருதியை.

† அநந்ததீர்த்தக்கிருத்து-பதினான்காஞ்சமண தீர்த்தகன்.

† அநந்ததீர்த்தம் - சிதம்பரத்திற்றிருக்கோவிலுக்கு மேற்கே திருவனந்தேச்சுரத்துக்கு முன்னுள்ள வொருதீர்த்தம்.

† அநந்ததேவன் - அனந்தேசுவரன், ஆதிசேடன், சேடசயனத்திற் றுயில்கொள்ளுகிற விட்டுணு.

† அநந்தை-நித்தியம்.

† அநந்தத்துவம்-அனந்தமாயிருக்குந்தன்மை

† அநந்தநாதன்-சருவேசன்.

† அநந்தநான்மை-அனந்தசதுட்டயம்.

† அநந்தமயன்-அந்தரியாமி.

அநந்தம் - அளவின்மை, ஆகாயம், ஒபெண், கோளகபாஷாணம், பொன்.

அநந்தரம்-மேல்.

† அநந்தரூபன்-அளவிறந்த ரூபங்களைக் கொண்டவன், சிவன், விட்டுணு.

† அநந்தர் - சுத்ததத்துவங்களு ளொன்றாகிய ஈசுரதத்துவத்திலிருக்குமட்ட வித்தியேசுரர்களுட் டலைமை பெற்றவராகிய சுத்தாத்துவ கருத்தாவாயிருப்பவர்.

அநந்தலோசநன்-கடவுள், புத்தன்.

† அநந்தவாதம்-ஒருவகைவாதரோகம்; அது முகமுங்கழுத்துஞ் சோரும்படிசெய்வது.

† அநந்தவிபவை-பார்வதி.

† அநந்தவியம்-சுவாயம்புவாகமத்திற் சொல்லப்படு மோர்மண்டலம், பஞ்சபாண்டவருட்டலைவனான தருமனுடையவோர்சங்கு.

† அநந்தவிரதம்-புரட்டாசிமாதச் சுக்கிலசதுர்த்தசியில் விட்டுணுசமயத்தா ரனுட்டிக்குமோர்விரதம்.

† அநந்தவீரம்<br>† அநந்தவீரியம் } அளவில்லாதவீரம்.

† அநந்தவீரியன் - சைனமதத்திற் சொல்லபட்டவிருபத்துமூன்றாந் தீர்த்தகரன்.

அநந்தன்-அருகன், கடவுள், சிவன், சேடன், சோரபாஷாணம், திருமால், பலபத்திரன்.

† அநந்தாசனம் - பஞ்சாசனங்களுளொன்று; அது சர்ப்பாசனம்.

† அநந்தானந்தம்-வரம்பிலாவானந்தம்.

† அநந்தியம்-அளவற்றிருக்கை, எண்கூற்றிருக்கை, நித்தியம்.

† அநந்தீச்சுரம்-சிதம்பரத்திற்பதஞ்சலி முனிவராற் றாபிக்கப்பட்ட கோவில்.

† அநந்தேசுரர்-அநந்தேசுவரர்.

† அநந்தேசுவரர் - ஈசுவர தத்துவத்திலுள்ள வெட்டுப்புவனங்களு ளொன்று, சுத்தாசுத்தாத்துமாவிற்குக் கருத்தாவாகிய வனந்தர்; இவர் ஈசுவரதத்துவத்தைத் தமதிருப்பாகக்கொண்டதத்துவத்திற் கபியானதேவதையாயிருப்பவர்.

அநந்தை-பார்வதி, பூமி.



† அநந்நியசன்-மன்மதன்.

†அநந்நியம்-அன்னியமல்லாதது ஒற்றுமை.

† அநந்நியை-அபின்னசத்தி.

† அநந்வயாலங்காரம்-இயைபின்மையணி.

† அநபக்கிரியை-கடனிறுக்காமை, கோப்படுத்தாமை, பழிக்குப்பழிவாங்காமை.

† அநபத்தியம்-பிள்ளையின்மை.

† அநபரன்-பிரமன்.

† அநபாயம் - அழிவின்மை, குறைவின்மை, தேய்வின்மை.

† அநபாயன்-அநபாயனென்னுஞ் சோழச்சக்கிரவர்த்தி, அழிவில்லாதவன், சிவன், நிலையாயிருப்பவன்.

† அநபாயோகம்-சந்திரனுக்குப் பனிரண்டாமிடத்திற் சுபக்கிரகங்கள் நிற்குநிலை.

† அநபிகிதகருத்தன்-அநபிகிதகருத்தா.

† அநபிகிதகருத்தா - தன்செயலையுணர்த்தும் வினைக்கெழுவாயாகாது மூன்றும்வேற்றுமையில் அல்லது நான்காம் வேற்றுமையினிற்குங் கருத்தா (உ-ம்) மகன் றந்தையாலடிக்கப்பட்டா னென்னும் வாக்கியத்திலடித்தலைச்செய்த தந்தை மூன்றும்வேற்றுமையினிற்பதும், அவர்க்குச் செய்யத்தகுமக்காரியமென் னும்வாக்கியத்திற் செய்தற் கருத்தாவாகிய அவர் நான்காம்வேற்றுமையினிற்பதும் போல்வது.

† அநபிகிதகருமம்-செய்வினைக் கெழுவாயாகா திரண்டா மூன்று நான்கா மாறும் வேற்றுமைகளுளொன்றனது ரூபமாகவருஞ் செயப்படுபொருள்; அது மரத்தைக்குறைத்தான், ஆலத்தினு லமுதாக்கிய கோன், அவட்குக்கொள்ளுமிவ்வணிகலம், குடும்பத்தினது குற்றமறைப்பா னென்பவற்றிற் போலவருவது.

† அநபிகிதம் - சொல்லப்படாநிலை, தெரியாநிலை.

† அநபிமதம்-சம்மதமின்மை.

† அநபிவியத்தம்-வெளிப்படையாகாதது.

† அநபிவியத்தி-வெளிப்படையாகாமை.

† அநபேட்சன்-ஆசையில்லாதவன்.

† அநபை-அநபாயோகம்.

† அநப்பியாசம்-அப்பியாசமின்மை.

† அநம்-சோறு.

† அநம்பு-சாதகப்புள், நீரில்லாதது.

அநயம்-அதிட்டவீனம், தீங்கு, வருத்தம்.

† அநரண்ணியன் - சூரியவமிசத்திற் பிறந்த பாண னென்பவனுடையமகன்.

அநரவன்-பஞ்சபட்சி, பாஷாணம், வெந்தோன்றி.

அநருகம்-தகுதியின்மை.

† அநருகர்-தகுதியற்றவர்.

† அநர்க்களம்-தடையின்மை.

†அநர்த்தகம்-பிரயோசனமின்மை.

அநர்த்தம்-பயனிலாச்சொல்.

† அநலக்கிரி-அண்ணுமலை.



† அநலசனபட்சி-தழல்விழுங்கிப்பறவை.

† அநலநட்சத்திரம் - செவ்வாய்நின்றநாளுக் கேழாநாள், பதினன்காநாள், பதினுறுநாள், இருபத்தைந்தாநாளாய் வந்து தோஷமடைந்தநாள்.

† அநலபித்தம்-உண்பதைச்சீரணிக்கச் செய்யுமுதராக்கினி.

† அநலம்-அக்கினி, அநலநட்சத்திரம், உட்டணம், சித்திரமூலம், சிவாகமமிருபத்தெட்டினு ளொன்று, திருத்தியற்றது, பித்தம்.

† அநலர்-அக்கினியுடையவர்.

† அநலல்-கனலுதல், வெப்பமாயிருத்தல்.

† அநலன் - அக்கினிதேவன், அட்டவசுக்களிலொருவன்.

† அநலாடி-சிவன்.

† அநலி-சூரியன், நெருப்பு.

† அநலுதல்-கனலுதல்.

† அநலேறு-இடியேறு.

† அநலோடுவேந்தன் - கார்முகிற்பாஷாணம்.

† அநல் - அக்கினி, உட்டணம், கொடிவேலி, பித்தம், மூலாக்கினி, வன்னியிலை.

† அநல்காலி-சூரியகாந்தக்கல்.

† அநல்வென்றி-தங்கம்.

† அநவசரம் - அகாலம், ஓய்வுநேரமின்மை.

† அநவச்சின்னத்துவம் - அனவச்சின்னமாயிருக்குந்தன்மை.

† அநவச்சின்னம்-எல்லைப்படாதது.

† அநவதானம்-அவதானமின்மை.

† அநவத்தாதோஷம் - முடிபுகாணுமையாகிய தோஷம்.

† அநவத்தானம்-தவறுனநடை, தவறுனநிலை, நிலையின்மை, வாயு.

† அநவத்திதம்-நிலையற்றது.

† அநவத்தை-அநவத்தாதோஷம்.

† அநவத்தைப்படுதல் - முடிபுகாணுதுமுட்டுப்படுதல்.

† அநவபாசம்-தோற்றுமை, வெளிப்படாமை.

அநவரதம்-எப்போழ்தும்.

† அநவலோபம்-இச்சித்தபண்டங்களைத்தந்து திருத்திசெய்தல.

† அநவலோபனம் - கருப்பந்தரித்த மூன்றுமாதத்திற் செய்யப்படுங் கருப்பக்கிரியை.

† அநவ்வியயகிருத்து - அவ்வியயமல்லாதகிருத்து.

† அநற்கல்-சக்கிக்கல்.

† அநற்புதம்-அற்புதமின்மை.

† அநற்றல்-எரித்தல்,கனலச்செய்தல்,சுடுதல்.

† அநற்றிரள்-சோதிரூபி.

† அநற்றுதல்-எரித்தல், சுடுதல்.

† அநாகதசிவமூர்த்தி - அநுகத சிவமூர்த்தங் கொண்டது.

† அநாகதசிவன் - பரசிவத்திலிருந்து தோன் றினவனுஞ் சதாசிவத்தைத் தோற்றுவித்த வனுஞ் சகளநிட்களபோகனு மான சிவன்; இவன் வியாபினிக்குமேல் நாலங்குல வளவிலிருக்கின்ற வியோம வென்னுஞ் சமனையின் தானத்தை வியாபித்தவன்.

† அநாகதநாதம்-பராசத்தி.

† அநாகதம்-அடிக்கப்படாமை, அறியப்படா தது, சம்பாதித்துக் கொள்ளப்படாதது, சொல்லப் படாதது, நோப்படுத்தப் படா மை,வெளுக்கப்படாததும்புதிதுமானசீலை, மானுடசரீரத்தி லுள்ளவாகச் சொல்லப் படுமாறுதாரங்களின் நான்காவது; அது மணிபூரகத்துக்குப் பத்துவிரற்பிரமாணத் திற்குமேல் இருதயகமலத்தின் முக்கோ ணவடிவினதாய்ப் பன்னிரண் டிதழுடை யதா யிருக்கும், வந்தடையாமை, வருங் காலம்.

† அநாகந்துகம்-அநுதியாயுள்ளது, இடையி ல்வந்ததல்லாதது.

† அநாகாமி-பௌத்தமதத்தின் தியானங்களி ந்தனுண் மூன்றாவது.

† அநாகாரம்-உணவின்மை, வடிவின்மை.

† அநாகாலபிருதன்-பஞ்சகாலத்திற்றன்னைக் காத்துக்கொள்ள வொருவனுக் கடுமையா [னவன்.

† அநாகாலம்-பஞ்சகாலம்.

அநாகுலன்-இடைச்சங்கத்தார் காலத்திருந்த தெய்வப்பாண்டியன்.

† அநாசகித்தல்-துராச்சாரமாய்நடத்தல்.

† அநாசத்தன்-விருப்பமில்லாதவன்.

† அநாசரணம்- ஒழுக்கந்தவறினநடை, துன் னடை.

† அநாசாரம்-உபசாரமின்மை, உலகநடைக்கு மாறு, சீலையுடாமை, நல்லொழுக்கமின்மை, நிருவாணம், மரியாதையின்மை.

† அநாசாரன்-நல்லொழுக்கமில் லாதவன்.



† அநாசிகன்-மூக்கில்லாதவன்.

† அநாசிரயம்-சார்பின்மை, பற் றுக்கோடாதலின்மை.

† அநாசிரிதம் - சார்பில்லாதது, பற்றுக்கோ டாகாதது.

† அநாசிரிதர் - அநாசிருதையைப் பொருந்தி னவர், ஒன்றைப்பற்றுக்கோடாகக் கொண் டுபொருந்தாதவர்.

† அநாசிரிதன்-அபேட்சியாதவன்.

† அநாசிரிதை - சாந்தியாதீதகலையிற் சிவதத் துவத்திலிருக்கும் பத்துப்புவனங்களுளொ ன்று, சோடசகலைப்பிராசாதத்திற் பதினை ன்காவதுகலை; இது வியாபினிகலைக் கப் பாலுஞ் சமனைகலைக் கிப்பாலும் நடுவிலிரு க்கின்ற நான்குகலைகளுள் நான்காவதும் அந்நான்கி லொன்றான வநுதைகலைக்கு மே லோரங்குலத்திற் றுவாதசாந்தத்து ளி ருப்பதுமானது, அதன்வடிவு வட்டமெ ன்று சொல்வர்.

† அநாசிரியர்-ஆசிரியரல்லாதவர்.

† அநாதுகி-சன்னியாசி.

† அநாதபம்-குளிர்மை, நிழல், வெயிலின்மை

† அநாதம்-அந்தரித்தது, ஆதாரமற்றது.

அநாதரட்சகர்-கடவுள்.

அநாதரம்-மதியாமை.

† அநாதரித்தல்-பற்றிக்கொள்ளாது விடுதல்.

† அநாதர்-ஆதரிப்போரில்லாதவர்.

அநாதன்-ஆதரவில்லாதவன்.

அநாதி-கடவுள், சிவன், புராதனம்.

அநாதிகரம்பு-நெடுநாளாகப் பாழாய்க்கிடந்த நிலம்.

† அநாதிகாரணம் - பிரபஞ்சத்தினது முதற் காரணமாகிய மாயை.

† அநாதிசடிலன்-சிவன்.

† அநாதிசித்தபதி-அநாதியாய்ச்சித்தித்த பதி த்துவமுடையவர்.

† அநாதிசித்தன்-அருகக்கடவுள்.

† அநாதிசைவம் - பதினாறுவகைச் சைவத்து ளொன்று; அது பதிபசுபாசமென்று மூன் றுமநாதி நித்தமாய் வியாத்தமா யிருக்கின் றனவென்றும் பதிப்பொருளாகிய சிவனை முக்குணவிகற்ப மில்லாதவனுமாக் கண்டு விபூதியுருத்திராக்கம் பஞ்சாக்கரம் குருலி ங்கசேவடம் பொருளாய்க்கொண்டு சிவபூ சைசெய்து பாசம் நீங்கி யான்மாவானது சிவனுடன் சேர்ந்தவனைக்குங்கட்டுருத்தல் பரமுத்தியென்றுசொல்லும்.

† அநாதிசைவன்-சதாசிவமூர்த்தி.

† அநாதிதரிசு-நெடுநாளாகப் பாழாய்க்கிடந்த நிலம்.

† அநாதித்துவம்-தொடக்கமில்லாத நித்திய த்தன்மை.

† அநாதிநாதர் - கௌளயாமளாதிகளைக் கற்பித்த நவநாத சித்தர்களி லொருவர்.

† அநாதிநின்மலன் - அநாதியாகவேமலரகிதமாயிருப்பவன்.

† அநாதிபஞ்சர்-நெடுநாளாய்ப்பாழாகக்கிடந்தநிலம்.

† அநாதிபந்தம்-அநாதியாயுள்ளபந்தம்.

† அநாதிபீடு-நெடுநாளாய்ப் பாழாகக்கிடந்த நிலம்.

† அநாதிபெத்தசித்து-அநாதியே யாணவமலத்திற் கட்டுண்டுகிடந்த வான்மா.

† அநாதிபெத்தன்-அநாதியே மலத்திற்கட்டுண்டவன்.

† அநாதிபோதம்-இயல்பாகவே ஞானமுடைமை, இக்குணமலரகிதமான வான்மாவுக்குரியதாகலா லிதனை யநாதிமுத்தன்மையிலடக்குவர்.

† அநாதிபோதன்- நித்தியஞானமுடையவனெனகடவுள்.

† அநாதிமலமுத்தர்- இயல்பாகவேபாசங்களினீங்கினவர்.

† அநாதிமான்-அநாதியுள்ளதாயிருப்பது.

† அநாதிமுத்தசித்து - இயல்பாகவே பாசங்களின் நீங்கினவனெனகடவுள்.

† அநாதிமுத்தசிவன் - அநாதியே மலபந்தமின்றியிருக்குஞ் சிவன்.

† அநாதிமுத்தத்துவம் - இறைவனதுகுணங்களுளொன்று; அது இயல்பாகவேபாசங்களின் நீங்கியிருக்குந்தன்மை.

† அநாதிமுத்தன்- அநாதியேமலத்தாற்பந்திக்கப்படாதகடவுள்.

† அநாதியமலன் - அநாதியேமலமில்லாத நிட்களசிவன்.

† அநாதியன்-அநாதியாயுள்ளகடவுள்.

† அநாதிரேக்கியம்-மிகுதியின்மை.

† அநாதீநவம் - ஆதீனவமின்மை, சுத்தம்.

† அநாதுரம்-அறிவின்மை, சிரமமடையாமை, தைரியம், நோயின்மை.

† அநாதேயம்-ஆதேயமற்றது.

† அநாதை - ஒருசத்தி; அது ஞான சொரூபமாய் ஞானசத்தியாயிருக்கும் சாந்தியாதீதகலையிற் சிவதத்துவத்திலிருக்கும் பத்துப்புவனங்களுளொன்று, சோடசகலைப் பிராசாதத்திற்பதின் மூன்றுவதுகலை;அதவியாபினிகலைக்கப்பாலுஞ் சமனைகலைக் கிப்பாலும் நடுவிலிருக்கின்ற நான்குகலைகளின் மூன்றுவது மந்தநான்கி லொன்றுன வநந்தைகலைக்கு மேலோரங்குலத்திற்று வாதெசாந்தத்தானிருக்கின்றது மானது.

† அநாத்தன்-ஆத்தனல்லாதவன்.

† அநாத்துமலட்சணம் - ஆத்துமா வல்லாத னிலட்சணம்; அவ்விலட்சணங்கள் சத்துசடமென்பன.

† அநாத்துமா-ஆத்துமாவல்லாத பதார்த்தம், தன்னையடக்கி யாண்டு கொள்ளாமை.

† அநாத்தை-அவசங்கை, நிலையின்மை.

† அநாந்தம் இறுதியல்லாதது.

† அநாமயம்-நோயின்மை.

† அநாமயன் - கடவுள், நோயில்லாதவன்.

அநாமிகை-ஆழிவிரல், பெயரில்லது.

† அநாமை-அநாமிகை.

அநாயகம்-அரசாட்சியின்மை, முதன்மையின்மை.

† அநாயதம்-தடையினில்லாதது, நீளமில்லாதது; பிரிவின்றி நெருங்கிய தொடராயிருப்பது.

† அநாயம்-அநியாயம்.

† அநாயாசகவாதம் - ஒருவகைவாதம்; அது வேகமான வோட்டம், மலசலமுதலியபதினன்கு வேகத்தை யடக்கி விடுதல், சீதளவஸ்துசயபோசன மிவைகளினுற்பிறந்து சகல தாதுக்களிலும் வியாபித்துச் சரீரத்தில் மரத்தல், குத்தல், கனத்தன் முதலிய நானாவித வருத்தங்களை யுண்டாக்கும்.

† அநாயாசம்-அலைவில்லாதது, இலகு, சோம்பின்மை.

† அநாயு - தக்கன்மக்களுளொருத்தி; இவள் விருத்திராசுரன்முதலிய நாற்பது பிள்ளைகளுக்குந்தாய்.

அநாரதம்-எப்போழ்தும்.

† அநாரபதம் - ஆரம்பஞ்செய்யப்படாதது.

† அநாரம்பம்-தொடக்கமின்மை.

† அநாரியதித்தம்-நிலவேம்பு.

† அநாரியர்-ஆரியரல்லாதவர், மிலேச்சர்.

† அநாரோக்கியம்-நோய்.

† அநார்ச்சவம்-மனக்கோட்டம், மனநேர்மையின்மை, வளைவு, வியாதி.

அநாவிருஷ்டி } மழைக்குறைவு.
அநாவிருட்டி }

† அநாவிருதம் - தடையின்மை, மறைக்கப்படாதது.

† அநாவிருத்தி-திரும்பி வாராமை, மறுதரம் பிறவாமை, பாசமுத்தி.

யத்தன்மை குறைவு, மயங்கிய நித்திரை, அறிவின்மையென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.

† அபிநியாசவாதம்-ஒருவகைவாதநோய்;அது வாத பித்த சிலேஷ்மங்களை யதிகரிக்கச்செய்து வருத்தும்.

அபிநிரியாணம்-படையெழுச்சி.

அபிநிவேசம் - அபிப்பிராயம், தொழிலிற்பிரவேசிக்கை, படிப்புமுயற்சி.

அபிநீதி-சயிக்கை, சிநேகம்.

அபிபவம்-கீழ்ப்படுத்தல்.

† அபிபவனம்-கீழ்ப்படுதல், கீழ்ப்படுத்தல், வியாதி முதலியவற்று லறிவு மாறுபடுதல்.

† அபிபூதம்-அபசயப்பட்டது, அறியாமையுள்ளது, கீழ்ப்படுத்தப்பட்டது, மழுங்கினது.

† அபிபூதன் - அறியாமையுள்ளவன், கீழ்ப்படுத்தப்பட்டவன்.

† அபிபூதி-அவமானம், கீழ்ப்படுத்தல், தோற்கச் செய்தல்.

அபிப்பிரணயம்-தயவு, நிவிர்த்தி.

† அபிப்பிரணயனம்-பிராயச்சித்தம்.

அபிப்பிராயச்சந்தம்-அபிப்பிராயம், சம்மதம்.

அபிப்பிராயம்-உட்கருத்து, எண்ணம், நோக்கம், மறைபொருள்.

அபிமதம்-அன்பு, சம்மதம், விருப்பம்.

† அபிமந்தம்-கண்ணோய்.

அபிமந்திரணம் - அழைத்தல், ஆலோசித்தல், ஒன்றில்மந்திரவுருவேற்றல், பிரதிஷ்டை.

அபிமந்திரம்-செபித்தல்.

† அபிமந்திரிதம் - நால்வகைச் சுத்தியுளொன்று; அது மந்திரித்தலாற்செய்யப்படுஞ் சுத்தி, மந்திரஞ் செய்யப்பட்டது.

அபிமந்திரித்தல் - ஒன்றிலேமந்திரவுருவேற்றல், பிரதிஷ்டைபண்ணல்.

† அபிமந்நு- பஞ்சபாண்டவருளொருவனாகிய வருச்சுனனுக்குச் சுபத்திரைபெற்றவொருமகாவீரன். *



அபிமரம்-கொலை, மறியல், யுத்தம்.

அபிமர்த்தம்-ஊர்க்கொள்ளை, தேய்த்தல், யுத்தம்.

† அபிமன்<br>அபிமன்னு } அருச்சுனன்மகன், வீரபிமன்.

† அபிமாநதேவதை - ஒன்றைத் தன்னுடையதாகப் பாவிக்கு மதிதெய்வம்.

அபிமாநம்-களிப்பு, மதிப்பு, மானம்.

அபிமானபுத்திரன்-ஸ்வீகாரபுத்திரன், வைப்பாட்டியின்பிள்ளை.

அபிமானம் - அறிவு, ஆணவமறைப்பு, உருக்கம், களிப்பு, கொலை, நேசம், பெருமை.

அபிமானவிருத்தி-அகங்காரம்.

† அபிமானுக்கினி - அக்கினி மண்டலத்தி லுள்ள வக்கினி தேவர்களாகிய வனலர் நாற்பத்தொன்பதின்மரிற் றலைமைபெற்றவொருவன்; பாவகன், பவமானன், சுசி யென்பவர்களவனுடைய புத்திரர்கள்.

அபிமானி-அபிமானமுடையோன், கனவான்.

அபிமானிதம்-புணர்ச்சி.

அபிமானித்தல் - அளவிடல், கனம்பண்ணல், மதித்தல், மெச்சல்.

அபிமானு-அறிவு, உருக்கம், பெருமை.

அபிமுகம்-நேர்முகம், முகதா.

† அபிமுகர்-அபிமுகமுடையவர், பிரியமுற்றவர்.

† அபிமுகன்-அபிமுகமுடையவன், எதிர்நோக்கிய முகமுடையோன், பிரியமுற்றவன்.

† அபிமுகி - அபிமுகமானது, எதிர்நோக்கிய முகமுடையது.

அபியவகிரீஷணம்-கல்லிப்பிடுங்கல்.

அபியாதி-சத்துரு, பகைவன்.

அபியிதகருத்தன்-எழுவாய்க்கருத்தன்.

அபியிதம்-சொல்லல்.

அபியுத்தம்-பகையெதிர்கொள்ளல்.

† அபியுத்தன்-குற்றஞ்சாட்டப்பட்டவன், சாவதான முடையோன், படித்தவன், வித்துவான்.

அபியூட்சணம்-அமைத்தல்.

அபியோகம்-தடை, தண்டனை, போர்க்கறைகூவுதல், முயற்சி, முறைப்பாடு, யுத்தம்.

அபியோகி-அறைகூறுவோன்.

† அபியோத்தா - பகைவன், முறையிடுசெய்பவன்.

அபிரங்கி-கருநெல்லி.

அபிரட்சை-சருவரட்சணம்.

அபிரதி-சந்தோஷம், தொழில்.

அபிராமம்-அழகு.

† அபிராமன்-அழகன்.

அபிராமி-அழகுள்ளவள், சத்தமாதர்களிலொருத்தி, சரச்சுவதி, பார்வதி.

அபிராமியந்தாதி-பார்வதிபேரிற்பாடினவோர்புத்தகம்.

அபிருசி-கீர்த்திப்பிரியம், விருப்பம்.
அபிரூபன்-அறிவுடையோன், காமன், சந்திரன், சிவன், திருமால், பண்டிதன்.
அபிலாசம்-விருப்பம்.
† அபிலாசா-இச்சித்தல்.
† அபிலாசுகன் - இச்சையுடையவன், விருப்பமுடையவன்.
† அபிலாசை-விருப்பம்.
அபிலாபம்-பேச்சு.
அபிலிகிதம் }
அபிலேகனம் } எழுதுதல்.
அபிவந்தனம்-வந்தனஞ்சொல்லுதல்.
அபிவாகியம்-கொண்டுபோதல்,செலுத்துதல்.
† அபிவாதனம் - பெரியோரைவாழ்த்துதல்; அது கண்டவுடனிருக்கைவிட்டெழுதல் பாதந்தொழுதல் முதலிய வுபசாரங்களாம்.
† அபிவிக்கியாதம்-புகழ்பெற்றது, பெரும்பாலு மறியப்பட்டது, பேர்பெற்றது.
அபிவியக்தம்-தெளிவு, வெளிப்படை.
† அபிவியஞ்சகம்-தெரிவித்தல்,தோற்றுவித்தல், வெளிப்படுத்தல்.
† அபிவியஞ்சகர்-வெளிப்படுத்துவோர்.
† அபிவியத்தம்-மிகுவிளக்கம், வெளிப்படை.
† அபிவியத்தி-வெளிப்படுதல்.
† அபிவியத்தை - வெளிப்படுதல், வெளிப்பட்டிருப்பவள்.
அபிவியாத்தம்-பரம்புதல்.
அபிவியாத்தி-சருவவியாபகம்.
†அபிவியாபகம்-ஒருபொருண்முழுதிலும் பிறிதொருபொருள் வேறறக்கலந் தொற்றுமைப்பட்டிருத்தல்.
அபிவிருத்தி-கதிப்பு, வருத்திப்பு.
† அபிவிர்த்தி- அதிகப்படுதல், கூடுதல்,சித்தியடைதல், பெருவாழ்வு, மிகப்பெருகுதல், வளருதல்.
† அபிவெஞ்சகம் -தெரிவித்தல், தோற்றுவித்தல், வெளிப்படுத்தல்.
அபினி-ஓர்மருந்து.
† அபினே-அபின்ஞசத்தி.
அபின்-அபினி.
அபின்னதை-பேதமின்மை, முழுமை.
† அபின்னநிமித்தோபாதானதை - நிமித்த காரணமு முபாதானகாரணமும் வேறல்லாதிருக்குந்தன்மை.
† அபின்னநிமித்தோபாதானர்-பிரபஞ்சத்திற்கு நிமித்தகாரணமு முபாதானகாரணமும் வேறற வொன்றாயிருப்பவர்.
அபின்னம்-ஒற்றுமை, பேதமின்மை, முழுவிலக்கம்.
அபின்ஞசத்தி-பார்க்கப்படாமை, மாயை.
† அபின்னே-வேறறக்கூடியிருப்பவள்.
அபீகன்-கணவன், காமுகன், சிவன், புலவன்.
அபீசணம்-அமைதல்.
அபீசு-கிரணம்.
† அபீஷணம் }
அபீடனம் } சாந்தம், நோயின்மை, பட்சம்.
† அபீட்சணம் - எப்போதும், கணந்தோறும், திரும்பத் திரும்ப.
அபீஷ்டம் }
அபீட்டம் } மிகவிருப்பம், விரும்பப்பட்டது.
† அபீஷ்டதானம் }
† அபீட்டதானம் } விரும்பியனகொடுத்தல்.
† அபீட்டவரதன்-விரும்பியவரத்தைக் கொடுப்போன்.
அபீட்டிதம்-துதித்தல்.
† அபீட்டியம்-துதிக்கத்தக்கது.
அபீட்யம்-வைதல்.
அபீதம்-பயமின்மை.
† அபீதன்-அச்சமில்லாதவன்.



அபீதி-பயமின்மை.
அபீமானம்-அபிமானம்.
அபீரன்-இடையன். *
அபீரு-அச்சமிலான், வைரவன்.
† அபீனசம்-பீனசமின்மை; அது சளியின்றி நாசிவறண்டிருத்தல்.
† அபீனசரோகம்-சிலேட்டுமத்தைக் கொண்டு மூக்கி னரம்புகளை யடைக்குமொருவகை நாசிகாரோகம்; அது அதிகவுபத்திரவமுந் சுவாசம் விடும்போது குரு குரு வென்று மோர் சத்தமு நாசியில் வியர்வையு முண்டாக்கும்.
† அபுட்பம்-மலராமை.
† அபுண்ணியம்-பாவம்.
அபுத்தம்-உண்ணாதது.
† அபுத்தன்-அனுபவியாதவன்,உண்ணாதவன், புத்தியில்லாதவன்.
† அபுத்தி-அறியாமை, புத்தியின்மை.
† அபுத்திபூருவம் }
† அபுத்திபூர்வம் } அறியாமல், தெரியாமல்.
† அபுத்திரகன் }
அபுத்திரன் } புத்திரனில்லாதவன்.
அபுனராவிருத்தி-பிறவிநீங்கல்.
† அபுனர்ச்சென்மம்-மறுபிறப்பின்மை.
அபுனர்ப்பவம்-மறுபடியும் பிறவாமை.

அபூதம்-இன்மை.

அபூதவுவமை-இல்பொருளுவமம், முன்பில்லதனையுவமையாக்கி யுரைப்பது (உ-ம்) சகலகமலங்களி னழகெலாந்திரண்டிடி னிவண்முகத்துக் கொப்பு.

அபூபம்-அப்பவருக்கம்.

அபூரணகாலசம்-முதிராமற் பிறந்தது.

† அபூரணம்-பூரணமாகாதது.

அபூரணி-பட்டுப்பருத்தி.

அபூருவம்-அருமை, நூதனம்.

† அபூர்ணகாலசம் - காலம் பூரணமாகுமுன் பிறந்தது, முதிருமுன்பிறந்தது.

† அபூர்ணகாலம் - முற்றுதற்குக் குறைவான காலம்.

† அபூர்ணம்-பூரணமின்மை.

† அபூர்வதை-அபூர்வமாயிருக்குந்தன்மை, நான் பிரமனல்லனென்னு மஞ்ஞானத்துக்கு முரணுகக்கூடஸ்த பரமைக்கியங் கூறும் வேதவாக்கியத்தைக் கேட்டலாகிய சிரவணத்திற்குச் சொல்லப்படுமாறுவித லிங்கங்களின் மூன்றாவதாகிய விலிங்கம்; அதுகூடஸ்தனே பிரமமென வப்பியாசித் தநுபவித்த பொருளி லதீசமாதல்.

அபூர்வம் -அருமை, நூதனம்.

† அபூர்வவிதி-புதுவிதி.

† அபூர்வன்-பரமான்மா.

அபெந்தன்-பந்தமகன்றோன்.

† அபேக்ஷை-ஆசை.

† அபேட்சன்-அபேட்சையுடையோன்.

அபேட்சித்தல்-விரும்பல்.

அபேட்சிப்பு-விருப்பம்.

† அபேட்சை-ஆசை.

† அபேதசட்டி-ஒருபொருடானே உடையானுமுடைப் பொருளுமாகிவருமாறும் வேற்றுமை (உ-ம்) இராகுத்தலை.

† அபேதசித்தாந்தம் - பணிபலவாயும் பொன்னொன்றானாற் போல வான்மாவுஞ் சிவமுமொன்றென்றுவாதிக்கு மாயாவாதக்கோட்பாடு.

† அபேதசைவம்-ரூபமரூபம் ரூபாரூப மென்னும் பேதமில்லாமலிருக்குஞ்சிவனைச் சைவத்துக்குரிய வேடம் விபூதி ருத்திராக்கம் பஞ்சாட்சரம் குருலிங்கவேட முதலியவைகளைப் பொருளாகக் கொண்டு வழிபடுஞ்சைவம்.

† அபேதப்பிறப்பு-பொன்னும்பணியும்போலவொன்றினின்று தோன்றியுமதனின் வேறுகாததோற்றம்.

அபேதம்-பேதமின்மை.

† அபேதவாதம்-சிவமுமான்மாவு மொன்றெனவாதிக்கும் வேதாந்தம்.

† அபேதவாதி-சிவமுமான்மாவுமொன்றெனவாதிக்கும் வேதாந்தி.

† அபேதாத்தியவசாயசாதாரணதருமம்- இயற்கையில் வெவ்வேறாய் விளங்கினுங் கவியின் கொள்கையாலபேதமாய்க் கிரகிக்கப்படுந்தன்மைகள்.

† அபேயபானம்-குடிக்கத்தகாதது.

அபேனம்-அபின்.

† அபைசுனம்-நேர்மைகோடாமை

அபையம்-அபயம்.

அபையன்-கடுக்காய். *

அபோகண்டம்-அமைதி, அவலட்சணம், குழந்தை, பயங்கரம்.

அபோகம் - ஐயந்தீர்த்தல், ஞாயம்பேசுதல், போகமின்மை.

அபோகார்த்தம்-விரீபதவுரை.

அபோக்கியம்-அநுபவியாமை.

† அபோசனம்-உபவாசம்.

† அபோச்சியம்-அசுத்தமானது, உண்ணத்தகாதது.

† அபோதசுவரூபன் - அறியப்படாத சுவரூபமுடையவன்.

அபோதம்-அக்கியானம்.

† அபோதார்த்தம்-விபரீதப்பொருள்.

† அபோத்தா-அநுபோகமில்லாதவன், உணவில்லாதவன். [தது.

† அபௌருஷேயம்-மனுஷனினின்று வாரா

† அப்சரசு - தேவருலகத்திலுள்ள வேசிகள்; இவர் காந்தருவருடையமனைவியரென்றும் ஸ்நானஞ்செய்வதின் மிகப்பிரியரென்றுஞ் சூரியசகாயரானவேழுகணத்தவர்களுளொருகணத்தவரென்று மவர் கிருதஸ்தலை, புஞ்சிதஸ்தலை, மேனகை, சகசநியை, பிரமலோசை, அநுமிலோசா, கிருதாசி, விசுவாசி, ஊர்வசி, பூர்வசித்தி, திலோத்தமை, அரம்பையெனப் பன்னிருவரொன்றுமுறையே சித்திரைமுதலிய மாதந்தோறுந்தனித்தனிசூரியனோடுபோக்குவரவுடையவரென்றுஞ்சொல்லப்படுவர்; இவரன்றி வாசஸ்பதி, ஊர்வசி, மேனகை, அரம்பை, மிசிரகேசி, அலம்புடை, விசுவாசி, கிருதாசி, பஞ்ச

ஞடை, திலோத்தமை, பானுவதி, அபலை, இரம்பியையெனப் பன்னிருவரென்று பேதித்துக்கூறுவாருமுளர்.

† அப்சரம்-நீர்வாழும் பிராணிகள்.

† அப்சரர்-ஓர்வகை வீரதேவதைகள்; இவர் வயித்துதகமென்னு நான்காம் பவனுதாரமேகாசிரயபட்டணத்திலிருப்பவர்.

† அப்சன்-சந்திரன், தன்வந்திரி.

அப்தசதம்-நூறாண்டு.

அப்தம்-ஆண்டு.

அப்தா
நப்தா } கிழமை.

அப்தாக்கணக்கு - வாரக்கணக்கு, வாரக்குறிப்பு.

அப்தோரியாமம் - யாகமிருபத்தொன்றினொன்று.

அப்ப
† அப்படா } ஓரதிசயச்சொல்.

அப்படி-அவ்வாறு.

அப்பட்டா-வட்டத்திருப்பி.

அப்பனை-ஆதாரம், உத்தரவு, பிணை.

† அப்பதி-கடல், வருணன்.

அப்பத்தாள்-அக்காள், அப்பாயி.

அப்பப்ப-அதிசயச்சொல்.

அப்பம் - அடை, சிற்றுண்டி, புட்டுத்திருப்பிப்பூடு, வட்டத்திருப்பி.

அப்பர்-சிவனடியார்நால்வரிலொருவர்; இவர் திருமுனைப்பாடித் திருவாமூரிற் சைவவேளாளரிற்பிறந்துஞ் சமணராகச் சூலைநோயணுகத்திருவதிகை வீரட்டேஸ்வரருளாற்றீரச் சைவராகிச்சிவஸ்தலயாத்திரைசெய்துதேவாரம்பாடினர். ஆதலினிவருக்குத்திருநாவுக்கரையரென்றுபெயர், தந்தையர்.

அப்பல்-அணிதல் - அப்புதல்-மோதல், வியங்கோண்முற்று.

அப்பவருக்கம்-சிற்றுண்டிவிதம்.

† அப்பவாணிகர்-ஓர்வகைச்சாதியார்; அவர் அப்பஞ்செய்து விற்பவர்.

அப்பளம்-ஓர்வகைப்பணிகாரம்.

அப்பளாகாரம்-உறைப்பு முவர்ப்புமுள்ளவோர்வஸ்து.

அப்பறுத்தூணி-அம்புக்கூடு.

† அப்பனர்-சிவன்.

அப்பன்-தந்தை.

அப்பா - அதிசயமுந் துன்பமுங் காட்டுஞ்சொல்.

அப்பாகம்-வாலுளுவை.

அப்பாட்டன்-முப்பாட்டன்.

அப்பாயி-தகப்பனைப் பெற்ற பாட்டி.

† அப்பாலைக்கப்பாலைக் கப்பாலான்-சிவன்.

† அப்பாலைக்கப்பாலைக்கப்பால் - அந்த விடத்துக்கு மேலுள்ளவிடத்துக்கு மேலுள்ளவிடம்; அது பிரகிருதிக்கு மேலுள்ள சுத்தமாயைக்கு மேலாகிய சுத்தமாயையைக்கடந்தவெளி; இதனைநாதமுங் கடந்தவெளியென்பர்.

அப்பால்-மேலும்.

அப்பாவி - கபடமில்லான், பாவமற்றவன், பேதை.

அப்பி-அக்காள்.

† அப்பிங்கநம்-அப்பியங்கநம்.

அப்பியங்கஸ்நானம்-எண்ணெய் முழுக்கு.

அப்பியங்கநம்-அப்பியங்கம்.

அப்பியங்கம்-உடம்பில்வாசனையூட்டல், பிண்ணாக்கு, முழுகவெண்ணெய்பூசுதல், மைதீட்டல்.

அப்பியங்கனம்-அப்பியங்கம்.

அப்பியசனம்
அப்பியசித்தல் } அப்பியாசித்தல்.

அப்பியசூயகன்-அழுக்காறுடையோன்.

அப்பியஞ்சனம் - எண்ணெய், எண்ணெய்பூசுதல், மைதீட்டல், வாசனையூட்டல்.

அப்பியந்தம்-தாமதம்.

† அப்பியந்தரகரணம்-அகத்து நிகழ்கருவி.

† அப்பியந்தரசத்தானுவித்தம்- அகச்சத்தானுவித்தமென்னுஞ்சமாதி.

† அப்பியந்தரதிருசியானுவித்தம் - அகத்திருசியானுவித்தமென்னுஞ் சவிகற்பசமாதி.

அப்பியந்தரம்-உள்வீதி, உள்ளிடம், தாமதம்.

† அப்பியமிதன் - நோயினுற் பீடிக்கப்பட்டவன்.

† அப்பியமேகம்-ஓர்வகை மேகரோகம்; அதன்றன்மை மூத்திரமானது யானையின் மதஜலத்தைப்போல வதிகவிரைவா யொவ்வொருவேளைக்கொருபடி யளவாகவிறங்குவதுங் காய்ச்சினு லுவர்மண்ணைப்போல வடியில் வண்டல்படிவதுமாம்.

† அப்பியர்ச்சனம்
† அப்பியர்ச்சை } வழிபாடு.

† அப்பியர்த்தனை-பிரார்த்தனை.

† அப்பியர்த்தி-பிரார்த்திப்போன்.

† அப்பியவகரணம்-உண்ணுதல்.

† அப்பியவகருடணம்-கல்லிப்பிடுங்குதல்.
† அப்பியவகாரம்-உண்ணுதல்.
† அப்பியாகதன்-சந்திக்கவந்தோன், முன்னறியப்படாது வந்தோன்.
† அப்பியாகமநம்-சந்தித்தல், சேருதல்.
அப்பியாகமம் - அயல், எழும்புதல், கொலை, சேருதல், யுத்தம், வைராக்கியம்.
அப்பியாகமனம்-சந்தித்தல்.
அப்பியாகாதம்-சருவுதல்.
அப்பியாகாரம்-களவு.
† அப்பியாசபூமி - ஞானபாதத்துக்குச் சாதனமாகிய சுவேச்சை, விசாரணை, தனுமானசியென்னு நிலைகள்.
அப்பியாசம்-பரீட்சை, பழக்கம்.
அப்பியாசயோகம்-தியானம்.
அப்பியாசி-பயிற்சியுள்ளோன்.
அப்பியாசித்தல்-பழகல்.
அப்பியாதானம்-துவக்கம்.
அப்பியாமர்த்தம்-யுத்தம்.
அப்பியுகடிணம்-அமைத்தல்.
† அப்பியுக்கணம்-நனைத்தல், நால்வகைச்சுத்திகளிலொன்று; அது கவிழ்ந்தபதாகை முத்திரையையுடைய கைத்தலத்தினூற் பதார்த்தத்தினிடத்துத் தோன்றிய சித்தினது பிரகாசமானது தன்னுடைய தானத்தைவிட்டு நீங்காமலிருக்கும்பொட்டு மூடுவது, நீர்தெளித்தல்.
அப்பியுதயம்-சம்பவிப்பது, திருவிழா, வர்த்திப்பு.
அப்பியுத்தானம்-உயர்ச்சி, எழும்புதல், கீர்த்தி, சூரியோதயம்.
அப்பியுபகமம்-சமீபித்தல், சேர்க்கை, வாக்குத்தத்தம்.
அப்பியுபபத்தி-தயவு, தற்காப்பு.
அப்பியுபாயம்-பொருத்தம்.
† அப்பியுபாயனம்-கைக்கூலி, புகழ்ந்துகொடுக்குமுபகாரம்.
† அப்பியுபேத்தியாசுசிரூடை-வேலையைச்செய்வேனென் றொப்புக்கொண்டபின் செய்யாதொழிதல்; இது ஸ்மிருதிகளிற்சொல்லப்பட்டபதினெட்டு வியவகார பதங்களுளொன்று.
† அப்பிரககற்பம் - ஓர்வைத்தியநூல்; அது அப்பிரகத்தைப்பற்றிச் சொல்லுவது.
† அப்பிரகசெந்தூரம்-அப்பிரகத்தாற்செய்யப்பட்டசெந்தூரம்.
† அப்பிரகத்தகடு- அப்பிரகத்தாற்செய்யப்பட்டவோர்வகைத்தகடு.
† அப்பிரகநவநீதம் -அப்பிரகஞ்சேர்த்துச் செய்யப்படு மோர்வகைநெய்.
† அப்பிரகபற்பம்- அப்பிரகத்தைப் பஸ்பமாக்கிச்செய்யப்படு மோர்வகைமருந்து.
† அப்பிரகபாஷாணம் - விளைவுபாஷாணத்தொன்று; இது இரசப்பிரீதி.
அப்பிரகம்-ஓர்வகையுலோகக்கல்; இது கிருஷ்ணப்பிரகம், கெந்தகாப்பிரகம், தேனப்பிரகம், பொன்னப்பிரகம், வெள்ளியப்பிரகம்.
அப்பிரகம்பதை-அசைவின்மை.
† அப்பிரகம்பம்-அசைவின்மை, எதிர்செல்லவேலாமை, நடுக்கமின்மை.
† அப்பிரகலோகம்-பௌத்தமதத்திற்சொல்லப்பட்ட பிரமலோகமிருபதினுள்ளே பன்னிரண்டாவது.
† அப்பிரகாசத்துவம் - பிரகாசமில்லாததன்மை.
அப்பிரகாசம்-இருள்.
அப்பிரகிருட்டம்-காக்கை.
அப்பிரசம்-மலடு.
† அப்பிரசன்-சந்ததியில்லாதவன்.
† அப்பிரசன்னம்- கலங்கல், திருத்திபெற்றிராமை, பிரியவீனமாயிருத்தல்.
அப்பிரசாதம்-தயவின்மை.
அப்பிரசாதை-மலடி.
† அப்பிரசித்தசம்பந்தம் - பக்கப்போலிநான்கனுளொன்று; அது தனக்குமாறாகநின்றவனாராய்ந்து துணிந்தபொருளைத்தானு மவனுக்குப்பொருந்தச் சாதித்துக்கொடுத்தல்.
அப்பிரசித்தம் - பிரபலமின்மை, விளக்கமின்மை.
† அப்பிரசித்தர்-பிரசித்தமாயறியப் படாதவர்.
† அப்பிரசித்தவிசேடணம்-பக்கப்போலிநான்கனுளொன்று; அது தத்தமக்குமாத்திரஞ் சாத்தியாசாத்தியமாயுள்ள துணிவைத் தாமறியாதிருத்தல்.
† அப்பிரசித்திவிசேடியம்-பக்கப்போலி நான்கனுளொன்று;அது தம்முடையவெதிரிக்குத்தாங்கூறுந்தன்மை தெரியாதிருத்தல்.
† அப்பிரசித்தோபயம் - பக்கப் போலி நான்கனுளொன்று; அது தனக்குமாறாயினோர்க்குள் தன்மியுஞ் சாதனதன்மமுமாகிய வவ்விரண்டு மாற்றோரியையாமையாலவை தெரியாதிருத்தல்.
† அப்பிரசை-சந்ததியில்லாதவன்.

†அப்பிரதக்கிணம் } இடசாரியாய்ச்சுற்றுகை.
அப்பிரதட்சிணம் }

அப்பிரதாகம் - முக்கியமின்மை, விளக்கமின்மை.

அப்பிரதாபம்-எளிமை, மங்கல்.

அப்பிரதானம்-முக்கியமற்றது.

அப்பிரதானி-பிரதானமற்றவன்.

† அப்பிரதானிகம்-கொடாமை.

† அப்பிரதிகரம்-ஓர்நரகம்.

† அப்பிரதிகரன்-பழிவாங்காதவன், வன்மஞ்சாதியாதவன்.

அப்பிரதிகாரம்-பதிலின்மை.

† அப்பிரதிட்டம்-ஓர்நரகம்; இதிற்கொடியபாவிகளெந்திரங்களிலிடப்பட்டரைக்கப் படுவார்கள்.

† அப்பிரதிட்டிதை-சேனைக்கூட்டத்தாராகிய மூவரிடத்துச்சபை, நிலையான விடமில்லாமற்சஞ்சரிக்கின்ற வாரணியர், வணிகக்கூட்டத்தார்.

அப்பிரதிபத்தி-அசட்டை, தவறு, நிதானிப்பின்மை.

† அப்பிரதிபா } தடுமாறுதல், திகைத்தல், தோற்றல், விடைசொல்லத்தெரியாது வேறொரு கருத்துடையான்போன் றிருத்தலாகியதோல்வித்தானம்.
† அப்பிரதிபை }

அப்பிரதிரதன்-யுத்தவீரன்.

† அப்பிரதிரூபகதை-எதிரில்லாவாக்கு, நிகரில்லாவாக்கு.

† அப்பிரதிரூபம்-நிகரில்லாதது.

† அப்பிரத்தியட்சம் - இந்திரியங்களுக்கு விடயமாகாதது.

† அப்பிரத்தியட்சன் - பிரத்தியட்சப்படாதவன்.

அப்பிரத்தியயம்-சந்தேகம்.

† அப்பிரத்தியவாயம்-குறைதலின்மை.

† அப்பிரத்துதப்பிரசஞ்சாலங்காரம் - புனைவிலி புகழ்ச்சியணி; அது அவர்ணியத்தை வர்ணிக்க வதனதுசம்பந்தத்தால் வர்ணியந் தோன்றுதல்.

† அப்பிரத்துதம்-சம்பந்தப்படாதது,தொடங்காதது;புகழப்படாதது,வழக்கமில்லாதது.

† அப்பிரநாகம்-அயிராவதயானை.

அப்பிரபிசாசகம் } இராகு. *
அப்பிரபிசாசம் }



† அப்பிரபு-வல்லமையில்லாதவன்.

அப்பிரபுட்பம்-நீர்.

அப்பிரமாணம்-பிரமாணமின்மை.

† அப்பிரமாணன்-கடவுள்.

† அப்பிரமாறுபலோகம் - பௌத்தமதத்திற் சொலப்பட்ட பிரமலோக மிருபதனுளொன்றாவது.

அப்பிரமாணிக்கம்-ஒவ்வாமியாயம், பிரமாணிக்கத்தகாதது, பொய்.

அப்பிரமாணிக்கன்-பொய்யன்.

அப்பிரமாதங்கம்-இந்திரன்யானை.

அப்பிரமாதம்-சுறுசுறுப்பு.

† அப்பிரமாலை-மேகசமூகம், மேகநிரை.

அப்பிரமு-அப்பிரமை.

† அப்பிரமுப்பிரியம்-அயிராவதயானை.

அப்பிரமேயம் - அளவிடப்படாதது, நூறெண், அது தசமகாபூரி.

அப்பிரமேயன்-அறியப்படாதவன், கடவுள்.

அப்பிரமை - கீழ்த்திசையானைக்குப் பெண்யானை.

அப்பிரம் - ஆகாசம், தேவலோகம், பொன்; மேகம்.

† அப்பிரம்லிகம்-மிகவுயர்ந்தது, மேகத்தைத் தொடுவது, வாயு.

அப்பிரயோசகம் }
அப்பிரயோசனம் } பிரயோசனமின்மை.
அப்பிரயோகிகம் }

† அப்பிரயோச்சியம்-எவப்படாதது, பிரயோகிக்கப்படாதது.

† அப்பிரவர்த்தகம் - செயலின்மை, செய்யாவேலாமை.

† அப்பிரவர்த்தனம் - எற்படாமை, சம்பவியாமை, செய்யாதொழிதல், துராசாரம், தொடங்காமை, முன்போகாமை.

அப்பிரவிருத்தன்-பிரவிருத்தியற்றவன்.

† அப்பிரவிருத்தி-செயலொழிந்திருக்கை, முயற்சியின்மை.

† அப்பிராகிருதசரீரம்-பிரகிருதி சம்பந்தமில்லாதசரீரம்.

அப்பிராகிருதம்-பிரதானமானது,மேலானது.

† அப்பிராஞ்ஞதை-அறிவின்மை, கற்றுக்கொள்ளாமை.

† அப்பிராஞ்ஞன்-அறிவில்லாதவன், கற்றுக்கொள்ளாதவன்.

அப்பிராணம்-மரணம்.

† அப்பிராணன்-உயிரில்லாப்பொருள்.

அப்பிராணி - அப்பாவி, ஏழை, வஞ்சகமற்றவன்.

† அப்பிராத்தகாலம் - தர்க்கநூலிற்சொல்லப் பட்டநிக்கிரகத்தானங்களுளொன்று; அது பிரதிஞ்ஞைமுதலிய வைந்தவயவங்களையு முறைபிறழப்பிரயோகித்தல், பிராத்தகால மல்லாதது.

† அப்பிராத்தம்-அடையாதது,வராதது, விதி ப்படிவராதது.

அப்பிராந்தி-குழப்பமின்மை.

† அப்பிராப்பியம்-அடையத்தகாதது.

† அப்பிராமணன்-பிராமணனல்லாதவன், பி ராமணன் போன்றும் பிராமணனல்லாத வன்.

அப்பிராமாணிக்கம்-அப்பிரமாணிக்கம்.

† அப்பிராமாணியம்-பிரமாணத்தா னிச்சயம் பண்ணப்படாதது.

அப்பிரியதரு-ஓதியமரம்.

† அப்பிரியம்-மேகசம்பந்தமானது, வெறுப்பு.

† அப்பிரியன்-சத்துரு.

அப்பிரீதி-சத்துருத்தனம், வெறுப்பு.

† அப்பிருதக்கு - உடனாக, கூட்டமாக, வெவ் வேறன்றி.

† அப்பிரேரகசாதனம் - தன்னையேவுவோனி ல்லாதகருவி; அதுபறவைக்குச்சிறையுங்கா லும்போல்வது.

அப்பீரகம்-புளிமா.

அப்பு - அப்பென்னேவல், அம்பு, கடல், தந் தை, நீர், பாதிரிமரம்.

அப்புக்காய்-ஓர்விதக்காய்.

† அப்புதத்துவம் - முப்பத்தாறுதத்துவங்களு ளொன்று.

அப்புதல்-அறைதல், ஒற்றல், கும்முதல், கொ ட்டுதல், கௌவல், சாத்துதல், பூசுதல்.

அப்புது-யானையைப் பாகனதட்டுமோசை.

அப்புத்திரட்டி-கட்டுக்கொடி.

† அப்புபூதவாதிமதம்-அப்பென்னும் பூதமே பிரமமென்பவனுடையமதம்.

அப்புருவம்-உப்பு, நவசாரம்.

† அப்புலிங்கத்தலம்-திருவானைக்காவென்னு ஞ்சிவத்தலம்; இத்தலத்திலிருக்கிறகோயி லின்மூலத்தானத்திற்சலமூறிக்கொண்டிரு ப்பதை யப்பாகாரசிவலிங்கமென்பர்.

அப்புவின்கோபம்-சேத்துமம்.

அப்புளண்டம்-தகரை.

† அப்புறப்படல்-குறித்தவோரிடத்திற்கப்பா ற்போதல்.

அப்புறப்படுத்தல்-இடமாற்றல்.

அப்புறம்-அந்தப்பக்கம், பிறகு.

அப்புறுத்தூணி-சரகாண்டபாஷாணம்.

† அப்பூதி<br>† அப்பூதியடிகள் } அறுபத்துமூன்றுநாயன் மாருளொருவர்.

அப்பை-அப்பைக்கொவ்வை, கற்கொவ்வை, கொன்றை.

† அப்பைக்காய்-கொவ்வங்காய்.

† அப்பைக்கோவை - ஒருவகைக்கோவைக் கொடி.

அப்பொழுது<br>† அப்பொழுதை<br>அப்போது } அக்காலத்தில்.

† அப்போதைக்கப்போது - ஒன்றுவேண்டிய தாகக்கண்டவுடன்.

† அப்ரத்துதபிரபஞ்சாலங்காரம் - புனைவிலி புகழ்ச்சியணி.

† அப்ரத்துதம் - தொடங்காமை, புனையா மை, வழக்கமின்மை.

† அப்ரமாணம்-அப்பிரமாணம்.

அப்வாபு-சில்லரைபாபத்துகள்.

அமங்கலம்-மங்கலமற்றது.

அமங்கலி<br>அமங்கலை } கைம்பெண்.

அமசடக்கம்-அடக்கம், மறைப்பு.

† அமசம்-காலம், நோய், மதிகேடு.

அமச்சன்-மந்திரி, வியாழன்.

அமச்சியல்-குறளின்பொருட்பாலுளோரியல், மந்திரித்துவம்.

அமச்சு-மந்திரி, மந்திரித்தன்மை.

அமஞ்சி-கூலிகொடாமல் வாங்கும் வேலை.

† அமஞ்சியான்- நெருக்கிடைப்பட்ட வேலைக் காரன்.

அமடு-பொல்லாங்கு, மடிப்பு.

அமடுபண்ணல் - ஆசைகாட்டித்தீமைக்கேவு தல்.

அமட்டு<br>அமட்டுகை } உருட்டு, புரட்டு.

அமட்டுதல், உருட்டுதல், சிக்குப்படுத்தல், புர ட்டுதல், மேற்கொள்ளல்.

அமணம் - இருபதினாயிரம் பாக்கு, அம்மணம் அவணம்.

அமணர்-சமணர், மதிகேடர்.

அமண்-†சமணர், சமண்சமயம்.

அமண்டம்-ஆமணக்குச்செடி.

அமண்டலம்-ஆமணக்கு.

† அமதம் - அறியப்படாதது, காலம், சம்மத மின்மை, நோய், மரணம்.

அமதி-மதியின்மை.
அமத்திரம்-பாத்திரம், வெண்கலம்.
† அமநசன்-மனமுடையனல்லாதவன்.
† அமநஸ்கம் - இராசயோகத்தி னொருவிதம்; அதுமனமிறந்து நிற்பது, கவனமில்லாதது, புத்தியில்லாதது, மனத்தைக்கடந்தது, மனத்தையடக்கியாளுந்திறமில்லாதது.
† அமந்தம்-உக்கிரமானது, ஒருமரம், காரிய சாமர்த்தியம், சாக்கிரதை, மந்தமில்லாமை.
அமந்தலம்-செங்கத்தாரி.
அமந்தி-ஓர்மரம்.
† அமம்-நோய்.
அமயம்-காலம்.
† அமர-இருக்கவென்னும் பொருள்படு மோர் வினையெச்சம், ஒருவமையுருபு.
† அமரகண்டம்-நருமதையாறுபாயுமோரிடம்.
அமரகோஷம்-அமரம்; இது விக்கிரமாதித்திய னுடைய சபையிற் சிறந்தஒன்பது கவிகளி லொருவனுன அமரசிம்மன் செய்த ஓர் கிரந்தநிகண்டு
அமரக்காரன்-காலாட்டலைவன்.
அமரசயம்-அமராசயம், இரைக்குடல்.
† அமரசிங்கம் - அமரசிங்கரென்பவராற்செய் யப்பட்ட வோர்நிகண்டு.
† அமரசிங்கர் - அமரகோசஞ்செய்தவர்; இவர் சைனசமயத்தர், விக்கிரமாதித்தனுடைய சபையிலிருந்த வொன்பது வித்துவான்களு ளொருவர்.
அமரசிலைக்கெந்தகம்
† அமரசிலைக்கெந்தம் } ஓர்பாஷாணம்.
† அமரதை-அழிவின்மை.
அமரத்துவம்-அழியாமை.
† அமரபட்சம் - பதினைந்து, பூரணைக்குப்பின் சந்திரனிற்கும் பக்கம்.
† அமரபதி
† அமரபர்த்தா } இந்திரன்.
அமரமாதர்-தெய்வமாதர்.
அமரம்-அபரம், அழிவின்மை, ஆயிரங்காலாட் களை யாளுகை, இரசம், ஓர்நோய், ஓர்வித க்கண்ணோய், கிரந்தநிகண்டு, சுத்தம், சுவ த்திரிகம், தோணியின் பிற்பக்கம், வெண் மை.
† அமரயோனி-வித்தியாதராதிபர்.
அமரர்-பகைவர், வானோர்.
† அமரர்நாதன்-இந்திரன்.
அமரர்பதி-இந்திரன், கடவுள், தேவலோகம்.
† அமரலோகம்-தேவலோகம்.
† அமரன்-அமரசிங்கனென்றவாசிரியன், தேவன்.
அமராங்கனை-தேவப்பெண்.
அமராசயம்-கருப்பை.
அமராடல்-சண்டைசெய்தல்.
அமராத்திரி-மகாமேரு.
அமராபகை-ஆகாயகங்கை.
அமராபதம்--தேவருலகு.
அமராபரணன்-பயமற்றவீரன்.
அமரார்-பகைவர்.
அமராவதி-இந்திரலோகம், தேவலோகம்.
அமராவதியோன்-தேவேந்திரன்.
அமரி-அமிழ்து, கற்றாழை, சிறுநீர், நார்க்கை, விடம்.
அமரிக்கை-அடக்கம், ஆறுதல்.
அமரிஷணம்-கோபம்.
அமரிதம்-கடுக்காய்.
† அமரிய -பொருதவெனப் பொருள்படுமோர் பெயரெச்சம்.
அமரியம்-குருந்து, செண்பகப்பூ.
அமரியற்றல்-அமராடல்.
அமரியுப்பு - ஒருப்பு, சிறுநீரிலிருந்தெடுக்கு முப்பு.
† அமருடணம்-கோபமுள்ளது.
அமருதல்-அடங்குதல்.
† அமருலகம்
† அமருலகு } தேவலோகம்.
†அமரேச - பிரதிட்டாகலையிலப்புதத்துவத்தி லுள்ள வெட்டுப் புவனங்களுளொன்று.
அமரேசன்-இந்திரன், குய்யகாட்டகரிலொரு வன், சிவலோகத்திலே யுத்தரதிசையோல க்கஞ் சேவிக்கு முக்கியதேவர்களிலொரு வன், பிரகஸ்பதியாகிய தேவகுரு.
† அமரேசுவரம் - அமரேசபுவனம்; அது அப் புதத்துவத்திலிருக் குமெட்டுப்புவனங்களு ளொன்று.
அமரேசுவரன்-இந்திரன்.
† அமரேந்திரமுனி - சைனமுனிவரு ளொரு வன்.
அமரை-அறுகு, இந்திரனகர், கருப்பை, கொ ப்பூழ்க்கொடி, வீடு.
† அமரோசை-தக்கோசை.
† அமரோர்-தேவர்.
அமர்-அமரென்னேவல், போர், மதில், மூர்க் கம், வெறி.

அமர்கொள்ளுதல்-மூர்க்கவெறி யடைதல்.
அமர்க்களம்-ஆரவாரம், பம்பல், போர்க்களம்.
அமர்தல்-அடங்குதல், அமைதல், இருத்தல், நெருங்கல், படிதல், பெருமை, பொருந்தல், பொலிவு, மிகுதி, வாய்த்தல், விரும்பல்.
அமர்த்தல் - அடக்கிக்கொள்ளுதல், அமரச்செய்தல், பொருதல்.
† அமர்த்தியர்-தேவர்.
† அமர்நீதியர்-அறுபத்து மூன்று நாயன்மாருளொருவர்.
அமர்ந்து-பொருந்தி.
† அமர்வித்தல்-தங்கச்செய்தல்.
அமலகமலம்-கோசலம்.
அமலகம்-நெல்லி.
அமலசாந்தம்-சுண்ணம்பு, பசுவின்சாணம்.
அமலம்-அழகு, அழுக்கின்மை, அறிவு, புனிதம், மரமஞ்சள், வெண்மை.
அமலர்-மலமற்றவர்.
அமலல்-சேர்தல், நெருங்கல், பொருந்தல்.
† அமலவாசகம்-பரிசுத்தவாசகம்.
† அமலவாதனை-சுத்தவாதனை.
அமலனிட்டமணி-உருத்திராக்கம்.
அமலன்-அருகன், கடவுள், சிவன், மலமிலி, விட்டுணு.
† அமலன்பாதியாளன்-விட்டுணு.
† அமலா-நெல்லிமுள்ளி.
† அமலுதல்-அமலல்.
அமலை-இலக்குமி, ஒலி, கடுக்காய், கட்டி, கூத்து, கொப்பூழ்க்கொடி, சோறு, சோற்றுத்திரளை, பார்வதி, மலமில்லாதவள், மிகுதி.
† அமலைதாரம்-நாகலிங்கவிருக்ஷம்.
அமல்-அமுல், செறிவு, மிகுதி, விசாரணை.
அமல்தார் - அரசிறைதண்டல்செய்யு முத்தியோகஸ்தன்.
† அமவாசி-அமாவாசி.
அமளி-ஆரவாரம், பள்ளியறை, மக்கட்படுக்கை, மிகுதி, மெத்தை.
அமளிபண்ணல்-போராடல்.
அமளை-ஓர்பூண்டு, கடுரோகிணி.
அமறல்-மிகுதி.
அமனி-தெரு.
அமனோயோகம்-கவனமின்மை.
† அமன்-பன்னிரு சூரியர்களு ளொருவனுனரியமன்.
அமன்ற-நெருங்கின.
அமாசயம்-அன்னந்தண்ணீர் தங்குமிடம்.

அமாதானம்-அடக்கம், சேமம்.
அமாத்தியர்-தந்திரிகள், மந்திரிகள்.
† அமாத்தியன் - ஆலோசனைசொல்லுவோன், மந்திரி.
அமாநசியம்-உபாதி.
அமாநம்-அளவின்மை.
† அமாநிதை-செருக்கின்மை, மரியாதை.
அமாமசி-அமாவாசி.
அமார்-கப்பற்கயிறு.
அமார்க்கம்-துன்மார்க்கம், நாயுருவி, மார்க்கவிரோதம்.
அமார்க்கயிறு-கப்பற்கயிறு.
† அமார்ச்சனம்-உரிஞ்சுப்படாதிருக்கை, சுத்தியின்மை, தட்டாதிருக்கை.
அமாவசி } இரவிமதியோகம், சூரியனுஞ்
அமாவாசி } சந்திரனுங்கூடுநாள்; அது
அமாவாசியை } கிருட்டிண பக்கத்திற் பதி
† அமாவாசை } னைந்தாந்திதி.
அமானத்து-சேமிப்பு.
அமானம்-அளவின்மை.
அமானனம்-அவசங்கை.
அமானி - இராச விசாரணைக்குள்ளானநிலம், புஞ்சியாரை, பொது.
அமானிதை-மரியாதை.
அமிசகம்-நாள்.
அமிசகன்-பங்காளி, பங்கு.
அமிசம்-அதிர்ஷ்டம், செல்வாக்கு, தோள், நிதார்த்தம், பங்கு, பாகை, பின்னம், மேல்வாயிலக்கம், விவாகம்.
அமிசனம்-பிரித்தல்.
அமிசாமம் } பிரமாவின் மானதவாவி.
அமிசாமியம் }
அமிசு-அணு, சூரியன், பிரபை.
அமிசுகம்-இலை, நல்லாடை.
அமிச்சை-ஞானம்.
அமிஞ்சி-அமஞ்சி.
அமிடம்-தசை.
அமிதம்-அளவின்மை.
அமிதாவல்-ஆசைப்பெருக்கம்.
அமித்திரர்-பகைவர்.
அமித்திரன் } சத்துரு.
அமித்துரு }
† அமித்தை-பொய்யல்லாதது.
அமிரம்-மிளகு.
அமிருதக்கவிராயன்-பதினேழா நூற்றாண்டிலிராமநாதபுரியி னரசனாகிய விருநாதசேதுபதியின் சமஸ்தானவித்துவான்; இவனவ்

வரசன்மேலோர்கோவைபாடினன்.

அமிருதசாகரன் - தமிழிலோரிலக்கணஞ்செய்யுள்செய்த சமஸ்கிருதத்திலுந் தமிழிலுஞ் சிறந்தவோர்சமணவித்துவான்.

அமிருதம்-அமிர்தம்.

அமிருதை-திப்பிலி, துளசி, மது.

அமிர்தகலசம்-ஸ்தன்னியம்.

அமிர்தகலை-சந்திரகலை.

அமிர்தகிரணன்-சந்திரன்.

அமிர்தகொடி-சீந்திற்கொடி.

† அமிர்தக்குமரி-ஒருவகைத்தைலம்; அது சீந்திற்கொடி கற்றாழை முதலியவற்றில் வடிக்கப்படுவது.

அமிர்தங்கலங்கல்-மூளைகலங்கல்.

அமிர்தசஞ்சீவநி } உயிர்தருமருந்து, குற்றுயிர்தருமருந்து.
அமிர்தசஞ்சீவி }

அமிர்தசாரம்-கற்கண்டு.

அமிர்தசோதரம்-குதிரை.

† அமிர்ததரங்கிணி-நிலவு.

† அமிர்தத்தானம்-தேவயானவழியாகச்செல்லும்புண்ணியமுள்ளார்பிரமாவின்றினமுடிவுவரையு மின்பத்துடன் வாழ்தற்கேதுவாய மோட்சமென வுபசரிக்கப்படுவதாயுள்ளவோரிடம்.

† அமிர்தநாதம் - யசுர்வேத வுபநிடதங்களுளொன்று.

† அமிர்தபலம்-நெல்லிக்காய்.

அமிர்தபிந்து-உபநிடதமுப்பத்திரண்டினுளொன்[று.]

அமிர்தமூடியவிடம் } மாச்சுக்கு.
† அமிர்தமூடுவிடம் }

அமிர்தம் - அமிழ்தம், இறவாமை, இனிப்பு, உணவு, சோறு, தேவவுண், நஞ்சு, நீர், நெய், பாக்கியம், பால், பொன், முத்தி, மூர்ச்சைதீர்த் துயிர்தரு மருந்து, மோர், யாகசேடம்.

† அமிர்தயோகம் - சுபகாரியங்களுக்குபயோகமான வாரமு நட்சத்திரமுங் கூடியவொரு [கூட்டம்.]

† அமிர்தர்-தேவர்.

அமிர்தவல்லி-சீந்தில்.

† அமிர்தவிந்து-யசுர்வேதவுபநிடதங்களுளொன்று.



அமிர்தன்-கடவுள், † தன்வந்திரியென்னுமோர் தேவவைத்தியன், மரணமற்றவன்.

அமிர்தாகரணன்-கருடன். ※

அமிர்தாசனர்-தேவர்.

† அமிர்தாசனன் - அமுதபோசன முடையவன், தேவன்.

† அமிர்தாமலகத்தைலம் - ஒருவகைத்தைலம்; அது சீந்திற்கொடி நெல்லிக்கனி முதலியவற்றிலிருந்து வடிக்கப்படுவது.

† அமிர்தாமிர்தை -பஞ்சசத்திகலைகளுளொன்[று.]

அமிர்தாரிவலை-சங்கநிதி.

அமிர்தாவல்-ஆசைப்பெருக்கம்.

† அமிர்தீகரணம் - பூசைமுதலியவற்றிற் குபயோகமாகத் தன்னுடம்பை யல்லதொரு பொருளை மந்திரத்தினாற் றகித்ததாகப் பாவித்துமது பின் நிஷ்களங்கமாய்த்தோன்றியதாகப் பாவித்து மமிர்தமயமானதாகக்கற்பித்துக் கொள்ளுதல்.

† அமிர்து-அன்னம்,திரவியம், பால், பாற்கடலிற் கடைந் தெடுக்கப் பட்டதென்னுந் தேவருணவு.

† அமிர்தூட்டல்-பாலூட்டல்.

அமிர்தை-அழிவின்மை, இரசாஞ்சனம், நெலி, வெள்ளைப்பூண்டு.

அமிர்த்தரங்கிணி-சந்திரகிரணம்.

அமில்தார்-ஓரதிகாரி.

† அமிழல்-அமிழ்தல்.

† அமிழும் - ஆழுமெனப்பொருள்பட வமிழெனனும் வினைப்பகுதியடியாற் பிறந்தவோரெதிர்காலப் பெயரெச்சம்.

அமிழ்தம்-அமுதம், இனிமை, மங்கலச்சொல்லினொன்று.

அமிழ்தல்-அமிழ்ந்தல், தாழ்தல்.

அமிழ்து-அமிழ்தம்.

அமிழ்த்தல்-அமுத்தல், தாழ்த்தல்.

அமிழ்ந்தல்-அமுந்தல், தாழ்தல்.

† அமிழ்வித்தல்-அமிழச்செய்தல்.

அமீதுரம்-செம்மறியாட்டுக்கடா.

அமீர்-அரசன், பிரபு.

அமீவம்-பாவம், வருத்தம்.

அமீனு-கிராமவுத்தியோகஸ்தன், கோர்ட்டில் ஜப்திகட்டளை நடத்துமுத்தியோகஸ்தன்.

அமுகம்-கடுக்காய், சீந்தில், நெல்லி.

அமுக்கடி-மந்தாரம், முட்டாயிருத்தல், மூடமாயிருத்தல், மூடிக்கொள்ளுதல்.

அமுக்கல்-உள்ளேயமிழ்ந்தப்பண்ணல், கீழேயமரப்பண்ணுதல்.

அமுக்கனங்கிழங்கு-அசுவகெந்தி.

அமுக்கன்-இரகசியத்திற் கருமமுடிப்போன், தந்திரக்காரன், சித்திரையிலமுக்குமாவி.

† அமுக்கி - நித்திரையிலொருவர் நெஞ்சிலல்
லது வயிற்றிலே யொருபாரத்தினு லமுக்
குண்டாற் போன் றசையப்பேசக்கூடாமிக்க
க் கூடாதிருக்கவும் பதறியமனத்தொடுவிழி
க்கவுஞ்செய்யு மோர்நோய்.

அமுக்கிரா-அசுவகெந்தி.

† அமுக்கிரி-அசுவகெந்திக்கிழங்கு.

அமுக்கு - அமர்த்தித்தள்ளுதல், அமுக்குபா
ரம், அழுந்துகை.

† அமுக்குதல்-அமிழ்த்தல்.

அமுக்குரவு } அமுக்கிரா.
அமுக்குரா }

அமுங்கொத்தி-ஓர்வகைக்கத்தி.

அமுங்கல்-அழுந்தல், தாழ்தல்.

அமுசம்-சிறுசெருப்படை.

அமுசு-ஒட்டறை.

அமுணங்கம்-அடக்கமின்மை.

† அமுதகடிகை - சிலநட்சத்திர காலங்களிற்
சுபகருமங்களுக்கு யோக்கியமாயினவாகக்
கருதப்படும் நாழிகைகள்; அவை பரணியிரு
கசீரிடம் பூரமென்பவற்றிற்குமுப்பதின்மே
லும், பூசத்திற்குப்பதினொன்றின் மேலும்,
அச்சுவினிக் கிருபத்தொன்றின் மேலும்,
கார்த்திகைக் கைம்பதின் மேலும், திருவா
திரை ஆயிலியமென்பவற்றிற்கு நாற்பதி
ன்மேலும், பூராடம் பூரட்டாதி யென்பவ
ற்றிற்குப் பத்தின்மேலும், அத்தத்திற் கே
ழின்மேலும், உத்திரட்டாதிக்குப் பதினெ
ட்டின்மேலும், சோதிக் கிருபத்திரண்டின்
மேலும், இரேவதிக்குப் பன்னிரண்டின்
மேலும், அனுடம் மூலம் உத்தராடம் அவி
ட்டம் புனர்பூசம் உரோகிணியென்பவற்றி
ற்குப் பதினைங்கின்மேலும், சித்திரைக்குப்
பதினாறின்மேலும், கேட்டைக்கு முப்பத்
தொன்றின்மேலும், விசாகம் திருவோண
ம் மகம் சதயமென்பவற்றிற் கிருபதின்மே
லும் உத்தரத்திற்கு முப்பத்து மூன்றின்
மேலும் வரும் நாழிகை, விஷகடிகைக்கு
மேல்வரும் நான்குநாழிகை யமுதகடிகை
யென்பாரு முளர்.

அமுதகதிரோன்-சந்திரன்.

அமுதகம்-நீர், பாற்கடல், முலை.

அமுதகிரணன்-சந்திரன்.

† அமுதகுண்டம்-அமுதம் வைத்திருக்கும் பா
த்திரம்.

அமுதகுண்டை-இரப்போர்கலம்.

அமுதகுலர்-இடையர், சான்றோர்.

அமுதங்கம்-கள்ளி, சதுரக்கள்ளி.

அமுதங்காந்நஞ்சு-கடுமொழியும் நல்ல விரு
தயமுமுள்ளவன், சுக்கின்மேற் பரணம்
போல ஒருமேலான பொருளை மூடிக்கொ
ண்டிருக்கும் விஷமுள்ளவஸ்து.

† அமுதசம்பூதனன்-சந்திரன்.

அமுதசருக்கரை-சீந்தின்மா.

அமுதசாரணி-வெள்வேலமரம்.

† அமுதசித்தயோகம் - ஞாயிற்றுக்கிழமையி
லத்தமுந் திங்கட்கிழமையின் மிருகசிரமு
ஞ் செவ்வாய்க்கிழமையி லச்சுவினியும் புத
ன்கிழமையி லனுடமும் வியாழக்கிழமை
யிற் பூசமும் வெள்ளிக்கிழமையி லிரேவதி
யுஞ் சனிக்கிழமையி லுரோகணியும் வருங்
காலம்.

அமுதசுரு-வெள்வேல்.

அமுததாம்-மஞ்சிட்டி.

அமுததாரணை-ஆகாரமின்றி நிஷ்டையிலிருக்
கு மௌனயோகிக்குச்சிரசின் மூளையிலிரு
ந்துண்டாகும் அனுபவம் ஆதாரணை உண
வாகிய வமுதமூலகாரணம்.

அமுதபார்வை - பிரியநோக்கு, புணர்ச்சிநோ
க்கு.

அமுதபுட்பம்-சிறுகுறிஞ்சா.

† அமுதமதனம் - அமுதத்தின் பொருட்டுக்
கடலைக் கடைதல்.

அமுதமேந்தல் - புண்ணிய மொன்பதினொ
ன்று; அது யாசகருக்கும் பெரியோருக்கு
மன்னமிடல்.

அமுதம்-அமிருதம், இனிமை, உப்பு, உயிர்தரு
மருந்து, கடுக்காய், சீந்தில், சேடம், தயிர்,
திரிகடுகு, திரிபலை, தேவருணவு, நீர், நெ
ல்லி, பால், பெருமை, போசனம், முத்தி,
வேண்டல்.

† அமுதயோகம்-அமிர்தயோகம்; அது ஞாயி
ற்றுக்கிழமையின் மூலம், திருவோணம்,
இரேவதி, அத்தம், உரோகிணி, உத்தரம்,
உத்தராடம், உத்தரட்டாதி யாகியநட்சத்தி
ரங்களிலொன்று வருங்காலம், திங்கட்கிழ
மையின் மிருகசிரம், சோதி, உரோகிணி,
புனர்பூசம், திருவோணமாகிய நட்சத்திரங்
களிலொன்று வருங்காலம், செவ்வாய்க்கி
ழமையி லுரோகிணி, மூலம், உத்தராடம்,
உத்திரமாகிய நட்சத்திரங்களி லொன்று
வருங்காலம் புதன்கிழமையிற் பூரம், பூரா
டம், பூரட்டாதி, உத்தராடம், கார்த்திகை,
உத்தரமாகிய நட்சத்திரங்களி லொன்று

வருங்காலம், வியாழக்கிழமையிற்புனர்பூசம், சோதி, பூசம், அச்சுவினி, மகமாகிய நட்சத்திரங்களிலொன்று வருங்காலம், வெள்ளிக்கிழமையின் மூலம்அத்தம், இரேவதி அச்சுவினியாகிய நட்சத்திரங்களி லொன்று வருங்காலம், சனிக்கிழமையின்மகம், சோதி, கார்த்திகை, உரோகிணி, சதயமாகிய நட்சத்திரங்களி லொன்றுவருங்காலம்.

அமுதர்-இடையர், வானோர்.

அமுதவல்லி-சீந்தில், வள்ளிநாயகி.

† அமுதவிந்து - அமுதத்துளி, அமுதவிந்து வாகிய வட்டம்.

அமுதவெழுத்து - செய்யுள் அல்லது சொன் முதலிலே வரத்தக்க சுபவெழுத்து; அவை அ, இ, உ, எ, க், ச், த், ந், ப், ம், வ்.

† அமுதவேணி-சிவன்.

† அமுதன்-அழிவில்லாதவன்.

அமுதாசனர்-அமிர்தாசனர்.

அமுதாம்பரமணி-கௌத்துவமணி.

அமுதாரி-பூனைக்காலி.

அமுது-அமிழ்து, சுதை, சுவை, சோறு, நீர், பால்.

அமுதுசெய்தல்-புசித்தல்.

† அமுதுததி-பாற்கடல்.

அமுதுபடி-அரிசி.

அமுதுமோர்-பிரைமோர்.

அமுதுறை-எலுமிச்சைக்கனி.

அமுதூட்டல் - சோறு அல்லது பாலுண்பித்தல்.

† அமுதோர்-அமிர்தமுடையோர்.

அமுத்தம்-கையாயுதம், வசநாபி.

† அமுத்தி - அடைபட்டிருக்கை, தன்னிட்டமின்மை.

† அமுத்திர-அங்கே, மறுமையில்.

அமுத்திரம்-மோட்சம்.

† அமுமூட்சு-முமூட்சல்லாதன்.

அமுரி-சிறுநீர்.

அமுரியுப்பு - ஓருப்பு, சிறுநீரிலிருந் தெடுக்குமுப்பு.

அமுல்-களவு.

† அமுறை-பூசினிமொக்கு.

அமூர்த்தம்-உருவமின்மை.

† அமூர்த்தன்-சிவன்.

அமூர்த்தி-உருவமில்லாதவன்.

அமூர்த்திசாதாக்கியம்-சிவன திரட்சண்ணியவுருவத்திறுென்று.

† அமூர்த்தித்துவம் - உருவமில்லாத தன்மை

† அமூலம்-காரணமில்லாதது.



அமெந்துக்கொட்டை-வாதுமைக்கொட்டை.

அமேஷா-எப்போதும்.

அமேதநீக்கி-கற்ருழை. *

அமேத்தியநாறி } ஓர்பூண்டு, ஓர்மரம்.
† அமேத்தியநாறுமரம் }

அமேத்தியம்-அசுத்தம்.

† அமேயதை - அக்கிராகியபாவம், அளவிடப்படாமை.

† அமேயம்-பிரமேயமாகாதது.

† அமேயர்-அளவிடப்படக் கூடாதவர்.

† அமேயன்-பிரமாணுதீதன்.

அமை-அமாவாசி, அமையென்னேவல், ஓர் நாணல், மூங்கில்.

அமைச்சர்-மந்திரிகள்.

† அமைச்சன்-மந்திரி, வியாழன்.

† அமைச்சி-அண்டவாதம்.

† அமைச்சியல்-மந்திராலோசனே.

அமைச்சு-மந்திரி, மந்திரித்தனம்.

அமைதல்-அடங்குதல், சம்பவித்தல், சம்மதித்தல், நிறைதல், நெருங்குதல், பொருந்தல்.

அமைதி-அடக்கம், அமரிக்கை, சமயம், நிகழ்ச்சி, பொருத்தம், மாட்சிமை, வாசஸ்தலம்.

அமைத்தல் - அமயப்பண்ணுதல், சமைத்தல், செய்தல், நியமித்தல்.

அமைப்பு-அநுபோகம், நியமிப்பு, விதி.

† அமைப்போன்-கருத்தா, செய்பவன்.

† அமைய-திருத்திவர.

அமையம்-இலாமிச்சை, காலம், சமயம்.

அமையாமை-கீழ்ப்படியாமை.

அமையான்-ஆருன்.

அமையுமென்றல்-ஆகட்டுமென்றல், வேண்டாமென்றல்.

அமைவடக்கம்-அமசடக்கம்.

† அமைவர-மனத்துட்பதிய.

அமைவர்-ஞானிகள், முனிவர்.

அமைவன் - அடக்கமுடையோன், அருகன், அறிவுடையோன், துறவி.

அமைவு-அடக்கம், பொருந்துகை.

† அமோககாரணி-மாயை.

† அமோகபாணம்-இருளேநீக்குமம்பு.

† அமோகப்படை-மருளகற்றும்படை.

அமோகம் - பெருகுந்தன்மை, மிகுதி, மோகநீயம்.

† அமோகவாசான்-துரோணுசாரியன்.

† அமோகன்-மோகமில்லாதவன்.
† அமோகி-மயக்கமில்லாதவன்.
அமோகை-கடுக்காய்.
அமோட்சம்-அடிமைத்தனம், மறியல்.
அம் - அசைச்சொல், அழகு, இடைச்சொல், சாரியை, தன்மை முன்னிலை யுளப்பாட்டுப்பன்மை வினைவிகுதி (உ-ம்) வந்தனம், தொழிற்பெயர் விகுதி (உ-ம்) தோற்றம், நீர், பண்புப்பெயர்விகுதி (உ-ம்) நலம், மேகம்.
அம்சம்-அன்னம்.
† அம்சர் - அறுவகைச் சன்னியாசவாச்சிரமத்தாரு ளொருவகையார்.
† அம்சாம்சம்-பங்கிற்பங்கு.
† அம்சாம்சி-பங்குபங்காக.
† அம்சாம்சிபாவம்-பங்கும் பங்குடையது மாயிருத்தல்.
அம்பகம்-எழுச்சி, கண், கூத்தாடிக்குப் பொருந்தியகூலி, செம்பு, விடை.
அம்பகன்-சிர்புந்தபாஷாணம்.
அம்படம்-ஆடுதின்னாப்பாளை, புழுக்கொல்லி.
அம்படலம்-அம்மி, இரதம், ஈயம் ஓடம், மரக்கால், வெளி, வெள்ளி.
அம்பட்டச்சி } நாவிதப்பெண்.
அம்பட்டத்தி }
அம்பட்டன்-நாவிதன்.
அம்பட்டன்கத்தி-ஓர்விதக்கத்தி, ஓர்விதமீன்.
அம்பஷ்டை-வட்டத்திருப்பி.
† அம்பட்டை-அம்பட்டப்பெண், வட்டத்திருப்பிப்பூண்டு.
அம்பணத்தி-துர்க்கை.
அம்பணம்-ஆமை, தாகாளக்குமரக்கால், துலாக்கோல், நீர், மரக்கால், வாழை.
அம்பணவர்-ஓர் சாதியார்; அவர் பாணர்.
† அம்பரத்தவர்-தேவர்.
† அம்பரமணி-சூரியன்.
அம்பரம் - ஆகாயம், கடல், சீலை, திசை, பரவெளி, மஞ்சள்.
† அம்பரர்-அசுரர்.
அம்பராந்தம்-திகாந்தம், புடைவையிறோம்.
அம்பராம்புயம்-கடற்றாமரை, பதுமநிதி.
† அம்பரான் - அம்பரென்னுந் தலத்திலிருப்பவன்.
அம்பரீசம்-எண்ணெய்ச்சட்டி, போர்.
அம்பரீசன்-சிவன், திருமால்.
† அம்பரீடம் - ஒருமகாநரகம், துக்கம், நெய்விட்டுப் பொரிக்குஞ்சட்டி, யுத்தம், விலங்கின்குட்டி.
† அம்பரீடன் - சிவன், சூரியன், விட்டுணு, விட்டுணு பத்தனன சூரியவங்கிடத் தோரரசன்.
அம்பரை-கிகிளை.
அம்பரைநாதம்-அப்பிரகம்.
அம்பர்-அவ்விடம், ஓர்மரப்பிசின், ஓர்மருந்து, சோழதேசத்தி லோரூர்.
† அம்பர்மாகாளம்-ஒருதலம்.
அம்பலக்காரன்-கள்ளச்சாதித்தலைவன், சபையின்தீர்மானம் வெளியிடுவோன்.
† அம்பலக்கூத்தன் } சிவன்.
† அம்பலத்தாடி }
அம்பலத்தி-தான்றிக்காய், † தில்லைமரம்.
அம்பலம்-சபை, சித்திரக்கூடம், வெளி.
† அம்பலவர் }
† அம்பலவன் } சிவன்.
† அம்பலவாணன் }
அம்பலவிருக்கம்-தில்லைமரம்.
† அம்பலி-ஒருவாச்சியம்.
அம்பல் - சேர்தன்றேயம், பழிமொழி, புறங்கூறல்.
அம்பருத்தாணி-அப்பருத்தாணி.
† அம்பா-தாய், துர்க்கை, பசுக்கதறல்.
அம்பாயம்-அக்கப்பாடு, உபாதி, பிரசவவுபாதி.
அம்பாரம்-அடுக்கு, குவியல்.
அம்பாரி-அவுதா.
அம்பாலிகை - தருமதேவதை, பாண்டுவின்றாய், பார்வதி, மாதா.
அம்பால்-தோட்டம்.
அம்பாவனம்-சரபம்.
அம்பி-இறைகூடை, ஓடம், சலசூத்திரம், தாம்பு, தெப்பம், மரக்கலம், மிடா.
† அம்பிகாபதி-சிவன், கம்பனதுமகன்.
† அம்பிகாவல்லவர்-சிவன்.
† அம்பிகாவனம் - உமாதேவிக்குரிய வொருசோலை.
அம்பிகேயகன் } கணபதி, கந்தன், திருதராட்டிரன்.
அம்பிகேயன் }
அம்பிகை - காளி, தருமதேவதை, திருதராட்டிரன்றாய், பார்வதி, மாதா.
அம்பிகைதநயன் } குமரன், விநாயகன், வீரபத்திரன்.
அம்பிகைதனயன் }
அம்பிகைபாகன்-சிவன்.
அம்பிற்குதை-அம்புக்குதை.
அம்பினடி-திப்பிலிமூலம்.

அம்பு-ஆடுதின்னுப்பாளை, எலுமிச்சை, கணை, சரகாண்டபாஷாணம், தளிர், திப்பிலி, நீர், பாதிரி, மூங்கில், மேகம்.
அம்புகிராதம்-முதலை.
† அம்புகேசரம்-எலுமிச்சை.
அம்புக்கட்டு-அத்திரக்கட்டு.
அம்புக்குதை-அம்பினிறகு.
அம்புக்குப்பி-அம்புக்குழைச்சு.
அம்புக்கூடு-ஆவநாழி.
† அம்புசத்தி-இலக்குமி.
அம்புசம்-தாமரை.
† அம்புசன்-பிரமன்.
அம்புசன்மம்
அம்புசாதம் } தாமரை. *
அம்புசாதன்-பிரமன்.
† அம்புசி-இலக்குமி.
அம்புசிரன்-சிவன்.
† அம்புசெம்
† அம்புசென்மம் } தாமரைச் செடி.
† அம்புதசாலம்-முகிற்கூட்டம்.
அம்புதம்-கோரைக்கிழங்கு, நீர், மேகம்.
அம்புதி
அம்புநிதி } சமுத்திரம்.
† அம்புபூரணரோகம்-சகசரோகம்.
அம்புப்பிரசாதனம்-தேற்றாங்கொட்டை.
† அம்புயஞாளநூல்-தாமரைத்தண்டினூல்.
† அம்புயத்தவன்
அம்புயத்தன் } அம்புயன்.
† அம்புயத்தி-இலக்குமி.
அம்புயம் - இறைகூடை, தாமரை, நீரிற்பிறப்பன, நீர்.
அம்புயன்-பிரமன்.
† அம்புயாசனம்-பதுமாசனம்.
† அம்புயாசனை-இலக்குமி.
† அம்புயாதம்-தாமரைச்செடி.
† அம்புயாதன்-பிரமா.
† அம்புயை-இலக்குமி.
அம்புரம்-கீழ்வாயிற்படி.
அம்புராசி-கடல்.
† அம்புருகம்-தாமரைச்செடி.
அம்புரோகிணி-தாமரை.
அம்புலி-சந்திரன்.
† அம்புலிச்சோதரி-இலக்குமி.
† அம்புலிப்பருவம் - பிள்ளைத்தமிழிலோருறுப்பு; அது பிள்ளைக்குச் சந்திரனைக்காட்டுதலைக் குறிப்பது.
† அம்புலிமணி-சந்திரகாந்தக்கல்.
அம்புலிமான்-சந்திரன்.
† அம்புவன்-அஞ்சுமானென்னுமாகமங்கேட்டவருளொருவன்.
அம்புவாகம்-முகில்.
† அம்புவாகன்-நீர்கொண்டுசெல்வோன்.
அம்புவாகினி - இறைகூடை, நீரிறைக்கும் பாத்திரம்.
† அம்புவாசினி-எலுமிச்சை, பாதிரிமரப்பூ.
அம்புவி-சகம்.
† அம்புவிடுதூரம்-வில்லில் வைத்தெய்யப்படுமம்பு போகுந்தூரம்.
அம்புறைதூணி-அம்பறாத்தூணி.
அம்பை-காசிராஜன்புத்திரி, வெட்டிவேர்.
அம்போசசனி-பிரமன்.
அம்போசம்-சந்திரன், தாமரை.
அம்போசயோனி-பிரமன்.
அம்போசன்-சந்திரன்.
அம்போதம்-முகில்.
அம்போதரங்கம்- கலிப்பாவி னோருறுப்பு; அது நாற்சீரடியுமுச்சீரடியு மிருசீரடியுமாய்த் தாழிசைக்குந் தனிச்சொற்கு நடுவேயேனுமராகத்திற்குத் தனிச்சொற்கு நடுவேயேனு நிற்பது.
† அம்போதரங்கவொத்தாழிசை - அம்போதரங்க வொத்தாழிசைக் கலிப்பா.
அம்போதரங்கவொத்தாழிசைக்கலிப்பா-கலிப்பாவினத்துளொன்று;அது வண்ணகவொத்தாழிசைக் கலிப்பா வுறுப்பினராகமொழிந்த வைந்துறுப்பையுங்கொண்டு வருவது.
அம்போதரம்-முகில்.
அம்போதி-கடல், காற்று, பாட்டினருத்தம்.
அம்போநிதி
அம்போராசி } சமுத்திரம்.
† அம்போருகத்தர்-பிரமாக்கள்.
அம்போருகம்-தாமரை.
† அம்போருகன்-பிரமா.
† அம்போருகை-இலக்குமி.
அம்ம-உரையசைச்சொல், கேளெனல்.
† அம்மகோ-ஓரிரக்கக் குறிப்புச்சொல்.
அம்மட்டி-கொட்டிக்கிழங்கு.
அம்மட்டு-அவ்வளவு. [நிர்வாணம்.
அம்மணம்-சோரமார்க்கம்,தூஷணவார்த்தை,
† அம்மணி-தனக்குப் பந்துவல்லாத பெண்களையழைக்கும்போதுபிரயோகிக்கப்படுமொரு மரியாதைவார்த்தை.
† அம்மமுண்ணல்-முலைப்பால்குடித்தல்.

அம்மம்-மூலை.
† அம்மம்ம-மிக்கவியப்பைக்குறிக்குமோரிடைச் சொல்.
அம்மல்-சமியாக்குணம், மந்தாரம், மூடம், விறைப்பு.
† அம்மவம்ம - மிக்க வியப்பினைத்தரு மோரிடைச் சொல்.
† அம்மவோ-ஓரிரக்கக்குறிப்புச்சொல்.
அம்மனை-அம்மானை, தாய்.
அம்மன்-தாய்.
அம்மா-அதிசயச்சொல், எசமானி, ஓரசைச் சொல், தாய், விளிச்சொல்.
அம்மாச்சி-தாயைப்பெற்றபாட்டி, தாய்.
அம்மாத்திரம்-அவ்வளவு.
அம்மாம்பச்சரிசி - சித்திரப்பாலாவி, சீதேவியார்செங்கழுநீர்.
அம்மாய்-தாயைப்பெற்றாள்.
அம்மாள்-தாய், மூத்தாள்.
அம்மாறு-பெருங்கயிறு.
அம்மானை-ஓர் பிரபந்தம், ஓர்விளையாட்டு.
அம்மான்-தகப்பன், மாமன்.
† அம்மான்பச்சரிசி-சித்திரப்பாலாவிப்பூண்டு.
அம்மி-அம்மிக்கல், அரைகல், மாமி.
† அம்மிக்கல்-அம்மியிலரைக்குங்குழவி, அம்மி.
அம்மிமிண்டி - அமசடக்கி, சுறுக்கிற்பேசாதவன்.
அம்மியம்-கள், காளம், சிறுசின்னம்.
அம்மியை-மிண்டுத்தனம்.
அம்மிரம்-மாமரம்.
அம்மிலசாரம்-காடி.
அம்மிலம்-புளிப்பு.
அம்மிலவிருட்சம், † அம்மிலிகா, அம்மிலிகை } † புளிப்பு, புளியமரம்.
அம்முக்கள்ளன்-வஞ்சகன்.
அம்முதல்-அடைத்தல், உண்டல், மூடுதல்.
அம்மெனல்-ஒலிக்குறிப்பு.
அம்மை-அழகு, கடுக்காய், தருமதேவதை, தவப்பெண், தாய், பார்வதி, வருபிறப்பு, வைசூரி.
† அம்மைகுண்டலி - தாயாகியகுண்டலிசத்தி.
† அம்மையப்பர்-சிவன்.
அம்மையார்கூந்தல்-கொடியார்கூந்தற்பூண்டு.
அம்மைவனப்பு - சிலவாய மெல்லியசொற்களாலொள்ளியபொருண்மேற்செய்யப்படுவது (உ-ம்.) அறிவினுளெல்லாந்தலையென்பதீயபிறிதிலேனுய் தன்னேய்போற் யோற்றுக்கடை.
† அம்மைவார்த்தல்-மசூரிகைநோய்வரச்செய்தல்.
† அம்மைவிளையாட்டு - மசூரிகை யென்னு நோய்.
† அய-நிவிர்த்திகலையிற் பிருதிவிதத்துவத்திலிருக்கு நூற்றெட்டுப் புவனங்களு ளொன்று, வித்தியாகலையி விராகதத்துவத்திலிருக்கு மைந்துபுவனங்களுளொன்று.
அயகம்-சிறுகுறிஞ்சா, வசம்பு.
† அயக்கதை, அயக்கதையம் } இருப்புத்தண்டம்.
† அயக்கம்-நிராமயம், நோயின்மை.
† அயக்கல்-அசைத்தல்.
அயக்களங்கு-இரும்புருக்கியமணி.
அயக்காந்தம்-ஊசிக்காந்தம்.
அயக்கிரீவகன்-திருமால்.
† அயக்கிரீவம் - அதர்வண வேத வுபநிடதத்தொன்று.
அயக்கிரீவன்-ஓரசுரன், விட்டுணு.
† அயக்கிருட்டி, அயக்கிருதி } காந்தக்கல்.
† அயக்கிட்டம்-இரும்புக்கறை.
† அயசிலவேதை-கோளகபாஷாணம்.
† அயசீசம்-அயம்.
அயசு-உருக்கு, எஃகு, பொல்லாநிலம்.
அயசுபடில்-வெள்ளீயமணல்.
அயச்சிந்தூரம்-இரும்புச் சிந்தூரம்.
† அயணம்-செலவு, வழி.
† அயதார்த்தமரணம் - யதார்த்த மல்லாத நினைவு.
† அயதார்த்தம்-பொய்.
† அயதார்த்தாநுபவம்-யதார்த்தமல்லாதவனுபவம்; அது சமுசயம் தருக்கம் விபரியய மென மூன்றுவகைப்படும்.
அயதி-திருநாமப்பாலை.
அயத்தினம்-முயற்சியின்மை.
அயத்தின்சாரம்-இருப்புக்கிட்டம்.
அயத்தீ-ஓர்பாஷாணம்.
அயத்தொட்டி - இரும்புத்தொட்டி, வைப்புப் பாஷாணத்தொன்று.
† அயநகாலம்-துலாயனத்துக்கு மேடாயனத்துக்கு மிடையே நிகழுங்காலம்.
† அயநசலனம் - கிரகங்கண் மையவரியிலிருந்து பக்கவரிக்குத் திரும்புதல்.
† அயநமண்டலம் - சமரேகைக்குவடக்கே யல்லது தெற்கே சூரியன் செல்லும் வீதி.

† அயநமாசம்-அயநாஞ்சாநுசாரத்தினுற் றின மானமுதலிய வறியும்பொருட்டுக் கற்பிக்க ப்பட்டமாசம்.
அயநம்-பிறப்பு, வருடப்பாதி, வருடம், வழி, வீடு.
† அயபற்பம்-இரும்புத்தூள்.
அயபானி-ஓர்செடி.
† அயமகம்-அசுவமேதயாகம்.
அயமணல்-அயமலே.
† அயமத்தி - இவனிருக்கின்ருனெனப்பொருள்படு மொருவடமொழிவாக்கியம்.
அயமரம் } அலரிச்செடி.
† அயமாரகம் }
அயமாரணம்-அரசமரம்.
† அயமாரம்-அலரி.
† அயமான்மாப்பிரமம் - வேதார்த்தத்தி லிந்த வான்மப் பிரம மெனப் பொருள் படுமதர் வணவேத மகாவாக்கியம்.
அயமி-வெண்கடுகு.
அயமுகம்-ஓரிருக்கை.
அயமேதம்-ஓர்யாகம்.
அயம் - அதிட்டம், அரப்பொடி, அலரி, ஆடு, இரும்பு, குதிரை, குழி, குளம், சிறுபூலா, சேறு, நல்வினே, நிலம், நீர், விழா.
அயம்பற்றி-காந்தம்.
அயரப்போடல் } † சமயம்வாய்க்கும் வரையி லயரவிடுதல்.
அயரவிடல் }
அயர்-அயரென்னேவல், வருத்தம், வாட்டம்.
† அயர்க்குதல்-மறத்தல்.
அயர்ச்சி-உணர்வழிவு, சோம்பு, பலவீனம், மறதி, வருத்தம், வெறுப்பு.
அயர்தல்-செய்தல், சோர்தல், தளர்தல்.
அயர்தி-உணர்வழிவு, மறதி.
அயர்த்தல்-அயர்வு, மறத்தல்.
† அயர்ந்தநித்திரை-மிக்கநித்திரை.
† அயர்ந்தீகம்-செய்வேம்.
அயர்ப்பு-மறதி, மறப்பு.
அயர்வு-அகலம், உன்மத்தம், சோம்பு, தளர்வு, வருத்தம், வெறுப்பு.
அயர்வுயிர்த்தல்-வருத்தந்தீர்தல்.
† அயலகத்தார்-அடுத்தவிடத்திலிருப்போர்.
† அயலவர்-பக்கத்தார்.
அயலவன் } அண்டையான், பிறன்.
† அயலன் }
† அயலாதாரம்-இலக்கணநூலிற் கூறப்பட்ட வேழாம்வேற்றுமையில் வரும் நான்குவகையாதாரகாரகங்களு ளொன்று; அது ஆதேயத்திற்கயலாக விருக்குமாதாரம் (உ-ம்) ஆலின்கட்பசுக்கிடந்தது.
† அயலார்-அயலவர், ஏவல்செய்வோர், பிறர்.
அயலி-வெண்கடுகு.
† அயலுரை-அயலாரோருப்பட்டவுரை, அகப்பொருளிற் றலைமகட்கியாது மியைபில்லாதவுரை.
அயலோர்-அயலார்.
அயல்-அருகிடம், அன்னியமானது, இடம்.
† அயவணம்-ஒட்டகம்.
† அயவந்தி-ஒருசிவத்தலம்.
அயவாகனன்-தீத்தெய்வம்.
அயவாரி-வசம்பு.
அயவி-சிற்றரத்தை.
அயவு-அகலம்.
† அயவெள்ளே-இரும்புப்பற்பம்.
† அயறு-புண்வழலே.
† அயற்படல்-விலகிச்செல்லல்.
அயனகாலம் - சூரியனேரயனத்தைச்சுற்றி வருங்காலம்.
அயனசலனம்-கிரகங்கள் மையவரியிலிருந்து பக்கவரிக்குத்திரும்புதல்.
அயனம்-பரிதி, பிறப்பு, பூ, வருடப்பாதி, வழி, வேதம்.
அயனள்-உரோகிணிநாள், பிரமன்வாழ்நாள்.
† அயனிலம்-சர்க்காருக்கிறைகட்டுநிலம்.
† அயனூருவிலுதித்தோர் } வைசியர்.
† அயனூருவில்வந்தோர் }
† அயனூர்-சீகாழியென்னூந்தலம்.
அயன்-அருகன், கிரமமானது, சரியானது, சர்க்காரைச்சார்ந்தது, சாதாரணமானது, தசரதன்றந்தை, பிரமன்.
அயன்ஜமா-சரியானவசூல்.
அயன்நிலம்-சர்க்காருக்குக்கிஸ்திகட்டுநிலம்.
† அயன்பதஞ்சேர்ந்தோர் } சூத்திரர்.
அயன்பதத்துதித்தோர் }
அயன்மனேவி-சரச்சுவதி. *



அயன்முகத்துதித்தோர்-பார்ப்பார்.
அயன்வாவி-மானதம்.
அயன்றேளுதித்தோர்-அரசர்.
அயா-வருத்தம்.
† அயாசகபிச்சை-கேளாதிருக்கத் தானிருக்குமிடத்தின் மற்றொருவன் கொண்டுவந்து தரவொருவன் வாங்கும்பிச்சை.
† அயாசகம்-அயாசகபிச்சை.

† அயாசகன்-இரந்துகேளாதவன்.
†அயாசிதம்-கேளாமற்றரக்கொள்ளும்பிச்சை.
† அயாசிதவிருதம் - கேளாதுவந்த பிச்சைப் பொருளைக் கொண்டு சீவனம்பண்ணுதல்.
† அயாநம்-இயற்கைக்குணம்.
அயாவுயிர்த்தல் - பெருமூச்சுவிடல், வருத்த நீங்கல்.
அயானம்-சுபாவம்.
அயிகம்-ஊமத்தை.
அயிக்கம்-ஐக்கம்.
† அயிக்கவாதி-ஐக்கவாதி.
† அயிக்கியம்-ஒன்றாந்தன்மை.
† அயிங்கிதை-கொல்லாமை.
† அயிச்சுவரியம் } செல்வம்.
† அயிச்சொரியம் }
அயிஞ்சி-நிலப்பனை.
† அயிஞ்சை-கொல்லாமை.
அயிணம்-ஐணம், மான்றோல்.
† அயிந்திரம்-ஐந்திரவியாகரணம்.
அயிப்பை-ஓர்செடி.
அயிரம்-கண்டசருக்கரை.
அயிராச்சுரபி-காமதேனு.
அயிராணி-இந்திராணி, பார்வதி.
† அயிராணிகேள்வன்-இந்திரன்.
† அயிராவச்சுரபி-காமதேனு.
அயிராவணம்-இந்திரன்யானை, கீழ்த்திசையானை.
அயிராவதப்பாகன்-தேவேந்திரன்.
அயிராவதம்-அயிராவணம்.
அயிராவதன்-தேவேந்திரன்.
அயிரி-நெட்டிப்புல், மீன்முள்ளரிந் திங்கத்தி
அயிரியம்-நெட்டிச்செடி.
அயிரை-ஓர்மீன், நுண்மணல்.
அயிர்- அயிரென்னேவல், சருக்கரை, நுண்மணல், நுண்மை, மணல், வெல்லம்.
அயிர்க்கடு-அங்குசம்.
† அயிர்க்கல் } அனுமானித்தல், ஐயப்படுதல்,
அயிர்த்தல் } †மறைத்தல், †மாறுபடுதல்.
அயிர்ப்பு-சந்தேகம்.
† அயிலம்-இருப்பைவேர்ப்பட்டை.
அயிலல்-உண்ணல்.
† அயிலவன் } கந்தன், வேற்படையுடையவன்.
அயிலான் }
அயிலிடம்-சிற்றரத்தை.
† அயனுதல்-உண்ணுதல்.
அயிலேயம்-முசுமுசுக்கை.

அயில்-அழகு, இரும்பு, உண்ணென்னேவல் கூர்மை, கைவேல், கோரைப்புல்.
† அயல்வித்தல்-உண்பித்தல்.
அயில்வு } அயிலல்.
அயிறல் }
† அயிற்கடு-அங்குசம்.
அயினி-உணவு, சோறு.
† அயினிநீர்-சோறுகலந்தவாலத்திநீர்.
அயின்றல்-உண்டல்.
அயின்றாள்-தாய்.
அயுகலம்-தனிமை.
அயுக்தம்-அயுத்தம்.
† அயுதசித்தசம்பந்தம்-நீக்கமின்றிருப்பவற்றின்சம்பந்தம்; அது கெடாததாயொன்றுமற்றொன்றை யெப்பொழுதும் பற்றிநிற்பது.
† அயுதசித்தம்-சமவாயசம்பந்தம்.
அயுதம்-பதினாயிரம்.
† அயுதாயு-சூரியகுலத்துள்ளவோரரசன்; அவன்சிந்துதீப்னுடையமகன்.
அயுத்தம்-ஓரலங்காரம், பொருத்தமில்லாதது.
அயுத்தி-பிரிவினை, முறைகேடு.
† அயே - அழைத்தலைக் கருதுமோரவ்வியயபதம்.
† அயோகநம்-சுத்தியல்.
அயோகம்-தகுதியின்மை, பிரிவினை, முயற்சி, வெறுப்பு.
† அயோகவன்-சூத்திரனுக்கு வணிகப்பெண்ணினிடத்திற் பிறந்தவன்.
† அயோகவியவச்சேதம் - இயைபின்மை நீக்குதல்.
அயோகவிவச்சேதம்-தெளிவேகாரம்.
அயோகனம்-சுத்தியல்.
அயோகன்-தாரமிழந்தவன்.
† அயோகிருதயம்-இரும்புபோன்ற கடினமானமனம்.
அயோக்கியதனம் }
அயோக்கியதை } யோக்கியவீனம்.
அயோக்கியம் }
† அயோக்கியன்-யோக்கியனல்லாதவன்.
அயோக்கிரம்-உலக்கை, சுத்தியல்.
அயோசனம் பிரிவினை.
† அயோதகதி-இரும்பு சுடுகின்றதெனப்பொருள்படுமோர் வடமொழிவாக்கியம்.
அயோத்தி - இராமன் நகர், சத்தபுரியி லொன்று.
† அயோமயம்-இரும்பினாற் செய்யப்பட்டது.

† அயோமலம்-இரும்புக்கிட்டம்.
† அயோமுகி-ஓரரக்கி.
அயோற்கம்-அரப்பொடி.
† அயோனி-சிவன், தொடக்க மில்லாதது, நித்தியம், பிரமா, யோனியாற் பிறவாதது.
† அயோனிசத்துவம் - யோனியாற் பிறவாத் தன்மை.
† அயோனிசம்-யோனியாற்பிறவாமை.
† அயோனிசை - யோனிவழியாற் பிறவாது கலப்பைச் சாலிற் பிறந்த சீதையெனும் பெண்.
அய்மாசு-பரிசோதனை.
அய்யவி-சிறுகடுகு.
அய்யோ-துன்பச்சொல்.



அர-பாம்பு. *
† அரகர-சிவசிவவெனப்பொருள்படு மோரடுக்குமொழி.
அரக்கம்-நன்னாரி.
அரக்கர்-அசுரர், இராட்சதர்.
அரக்கல்-அரைத்தல், தேய்த்தல், புடைபெயர்ச்சி, வியங்கோண்முற்று.
† அரக்கன்-அசுரன், இராக்கதன்.
அரக்காம்பல்-செவ்வாம்பல்.
அரக்கி-இராக்கதஸ்திரீ.
† அரக்கியர்-இராக்கதப்பெண்கள்.
† அரக்கிலச்சினை - மெழுகினால் வைத்த முத்திரை.
† அரக்கில்-அரக்குமாளிகை.
† அரக்கினிரதம்-கொம்பரக்குக்கஷாயம்.
அரக்கு - அரக்கென்னேவல், சாதிலிங்கம், சாராயம், சிவந்தமெழுகு, சிவப்பு, தேன்.
அரக்குக்காந்தம்-ஓர்மருந்துக்கல்.
அரக்குதல் - அரைத்தல், அழித்தல், இருப்புவிட்டுப் பெயர்த்தல், நெளிந்து நடத்தல்.
† அரக்குத்தைலம் - கொம்பரக்குமுதலியவற்றிலிருந்து வடிக்கு மொருவகைத்தைலம்.
† அரக்குநீர்-இரத்தநீர்.
அரக்குமஞ்சள்-மிகச்சிவந்தமஞ்சள்.
† அரக்குமாளிகை - செம்மெழுகாற் செய்யப்பட்டமாளிகை.
அரங்க-முற்றுக.
† அரங்கக்கூத்தி - பகிரங்கமான நாடகசாலையிற் கூத்தாடும் பெண்.
† அரங்கக்கூத்தியர்-பகிரங்கமான நாடகசாலையிற் கூத்தாடும் பெண்கள்.
† அரங்கசீவகன் - மைப்பூச்சு வேலைசெய்து சீவிப்போன்.
அரங்கசீவன்-வண்ணக்காரன்.
† அரங்கபூசை - அரங்கதேவதைக்குச் செய்யும் பூசை.
† அரங்கபூதி - ஐப்பசிமாசப் பௌரணைவருமிராத்திரி.
அரங்கபூமி-நாடகசாலை, போர்க்களம்.
அரங்கம் - ஆற்றிடைக்குறை, கூத்துப் பயிலிடம், சத்திரம், சபை, சாலை, சிலம்பக்கூடம், சீரங்கம், சூதுபயிலிடம், நடனம், நிறம், போர்க்களம்.
† அரங்கர்-ஸ்ரீரங்கத்துப்பெருமான்.
அரங்கல்-அழிதல், அழுந்தல்.
† அரங்கன்-விட்டுணு.
அரங்கு - அரங்கென்னேவல், அறை, இடம், ஊரில், சபை, சூதாடற்கு வகுத்த வறை, போர்க்களம், யாற்றிடைக்குறை.
† அரங்கேறுதல்-சபைக்குமுன்வருதல்.
அரங்கேற்றம்-சபையிலேறுதல்.
† அரங்கேற்று - அரங்கேற்றம், அரங்கேற்றென்னுமேவலுந் தெரிநிலை வினைப்பகுதியும் பெயரெச்சத்தொகையும்.
அரங்கேற்றுதல்-சபையிலேறச்செய்தல்.
அரங்கொழிசெய்யுள் - புறநாடக வுருக்களுளிறுதியுரு.
அரசங்கம் - அமைச்சு அரண் குடி கூழ் நட்பு படை ஆகிய ஆறிராச வங்கம்.
அரசச்சின்னம்-இராசசீகவடையாளம்.
† அரசண்மை - பகையரசனணித்தாக விருக்கை; அஃது நீதிகளாறனுளொன்று.
† அரசநீதி-அரசுநடாத்துமுறைமைகூறுநூல்
† அரசபரி-இராசகுதிரை.
அரசபரியினிலக்கணம் - அரசபரியினதிலட்சணம்; அது பெண்களது மணம்போல மிக்கமணத்ததாய் வாழை மடலைப்போலச் செவியுளதாய்நான்குகாலும் பிடரு முகமுமுதுகு முன்புறமும் வெண்ணிறமாயெண் பத்திரண்டு விரலுயர்ந்தவிலக்கணத்தையுடையது.
அரசம்-† சாரமில்லாதது, மூலரோகம்.
அரசறுதொழில்-ஈதல், உலகோம்பல், ஓதல், படைபயிற்றல், பொருதல், வேட்டல்.
† அரசரியல்பு- அரசர்க்கெப்பொழுது மிருக்கவேண்டிய தன்மைகள்; அவை அஞ்சாமை, அறிவு, ஈகை, ஊக்கமென்பன.
அரசரொளி-குடியோம்பல், கொடை, செங்கோல், தலையணியாகிய அரசர்க்குரிய மகிமை.

† அரசர்குணம்-மூவிதக்குணங்கள்; அவை தூங்காமை, கல்வி, துணிவென்பன.

அரசர்க்குக்குழு- அரசரைச்சூழ்வோர்; அவர் சேனாபதி, தூதர், புரோகிதர், மந்திரி, வேதியரென்பவர்.

அரசர்க்குத்துணைவர் - அரசர்க்குப் போர்த்துணைவர்.

அரசர்க்குறுதிச்சுற்றம் - இராசாக்களுக் குயிர்த்துணைவர்; அவர் அந்தணாளர், நட்பாளர், நிமித்திகப்புலவர், மடைத்தொழிலர், மருத்துவக்கலைஞரென்பவர்.

† அரசர்க்கெண்பெயராயம் - அரசர்க்குத்துணைசெய்யு மெண்மர்; அவர் இவுளிமறவர், கடை காப்பாளர், கருமவிதிகாரர், சுற்றம், நகரமாக்கள், படைத்தலைவர், மந்திரியர், யானைவீரரென்பவர்.

† அரசர்க்கைம்பெருங்குழு-அரசரோடு கூடித்தொழி னடாத்துமைவர்; அவர் மந்திரியர், புரோகிதர், சேனாபதியர், தூதுவர், ஒற்றரென்பவர்.

† அரசர்பா-அகவற்பா.

† அரசர்பின்னோர்-வணிகர்.

அரசர்மன்னன்-துரியோதனன்.

† அரசவனம்-திருவாவடுதுறை யென்னுமொருசிவஸ்தலம்.

அரசளித்தல்-ஆளல்.

† அரசனாணை-இராசகட்டளை.

† அரசனீதி-அரசாகியகாவலைநடாத்துமுறை.

அரசனுயிர்காத்தோன்-காண்டாமிருகம்.

அரசன்-இராசன், எப்பொருட்கு மிறைவன், எழுத்துத்தான மைந்தினொன்று, கார்முகிற்பாஷாணம், துருசு, பாணகெந்தகம், மூக்குவர்தலைவன், வியாழன்.

அரசன்விருத்தம்-ஓர்பிரபந்தம்.

அரசன்விரோதி-கோவை, பூப்பருத்தி, பூவரசு.

அரசாட்சி-இராசரிகம், இராசாவினாளுகை.

அரசாணி - அரசங்காணாட்டுமேடை, இராசாத்தி.

† அரசாணிக்கால்-விவாக மண்டபத்தி லரசாணியின் முருக்குடன் நாட்டப்படு மரசங்கொம்பு.

அரசாளல்-இராச்சியமாளல்.

† அரசாளுகை-இராச்சியஞ்செய்கை.

† அரசாளுதல்-அரசுசெய்தல்.

† அரசானம் - அரசமரம், அரத்தைப் பூண்டு, பேரரத்தைப்பூண்டு.

அரசி-இராசாத்தி, தலைவி.

† அரசிகம்-இரசமின்மை, சுவையில்லாமை.

அரசியலாறு-அரசர்க்குரிய வியலாறு; அவை அமைச்சு, அரண், குடி, கூழ், நட்பு, படையென்பன.

அரசியல்-இராசரிகமுறை.

அரசியானை-அரசுவா.

அரசிருக்கை-சிம்மாசனத்திருக்கை.

† அரசிருத்தல்-இராசாவாகவீற்றிருத்தல், வீற்றிருத்தல்.

† அரசிருப்பு-அரசிருக்குமிடம்.

† அரசிலியை-ஒருசிவஸ்தலம்.

† அரசிலை-அரசமரத்தினிலை, மிருகங்களுக்கிடு மரசிலைக்குறி.

† அரசிலைத்தூக்கம் - அரசிலைபோலுந் தொங்கல்.

அரசிறை-கப்பம்.

அரசு - இராசா, இராச்சியபாரம், ஓர்மரம், துவர்பத்திலொன்று, நாடு, வியாழன்.

† அரசுகட்டில்-சிங்காசனம்.

அரசுநீழலிலிருந்தோன்-புத்தன்.

† அரசுவா-பட்டத்தியானை.

அரசுவாவினிலக்கணம்-அரசியானையி னிலட்சணம்; அது நான்குகாலுந்துதிக்கையுங் கோசமும்வாலுமாகிய வேழுறுப்பு நிலத்திற்றோய்வதாய்ப் பாலையுஞ் சங்கையுமொத்த வெண்ணிறமான கானகமுடையதாய்க் கால்களாலுந் துதிக்கையாலுஞ் சரீரத்தாலும் வாலாலுங் கொம்பாலுங் கொல்லவல்லதா யேழுமுழ முயர்ந்தொன்பதுமுழ நீண்டு பதின்மூன்று முழஞ்சுற்றுடைத்ததாய்ச் சிறிய கண்களையுஞ் சிவந்தபுள்ளிகளையுமுடையதாய் முன்புயர்ந்து பின்பு தாழ்ந்திருக்குமிலக்கணத்தையுடையது.

அரட்டம்-பாலைநிலம்.

அரட்டர்-குறுநிலமன்னர்.

† அரட்டன்-குறும்பன்.

அரட்டி-அச்சம்.

அரட்டுகம், அரட்டுசம் } தசநாடகத்தொன்று.

அரணம்-அழகு, கதவு, கருஞ்சீரகம், கவசம், காவல், காவற்காடு, காவற்சாலை, கோட்டை, தொடுதோல், மஞ்சம், மதில், வேலி, வேல்.

அரணுசவிக்னை-அக்ஷரக்குறி.

அரணும்பரம்-மதில், வேலி.

† அறையல்-சொல்லல்.
† அறையுண்ணல்-அடிக்கப்படுதல், அறுக்கப் படுதல்.
அறையுற்று-வெட்டுதலுற்று.
† அறைவித்தல்-பறையடிப்பித்தல்.
அற்கம் - காணிக்கை, திரவியம், † தும்பை, விலை, வெண்டுளசி.
அற்கல்-அறிவுடைமை, நிலைபெறுதல்.
அற்களநாதர்-ஒருசமணமுனிவர்.
அற்கன்-அருக்கன்.
† அற்கா-நிலையாத.
அற்காதிபன்-திரவியாதிபன்.
அற்காமை-அறிவின்மை, நிலையாமை.
அற்கி-ஓரிலைத்தாமரை.
அற்கியம்-அருக்கியம்.
அற்குதல்-தங்கல், நிலைபெறுதல்.
அற்சனம்-அருச்சனம்.
அற்சனை-அருச்சனை.
அற்சி-சுவாலை.
அற்சிகன்-கோவிற்பட்டன்.
அற்சித்தல்-அருச்சித்தல்.
அற்சியம்-அருச்சியம்.
அற்பகந்தம்-செந்தாமரை. *



அற்பகம்-குழந்தைப்பருவம்.
அற்பகன்-குழந்தை, மூடன்.
அற்பகேசி-வசம்பு.
அற்பக்கியன்-சிற்றறிவுடையவன்.
அற்பசங்கை - பூணுல்தாரிகள் சலோபாதை கழித்தல்.
அற்பசுருதி-கருமகாண்டம்.
† அற்பசோபாட்சிபாகரோகம் - கண்களில் வரு மொருவகைச் சங்கரரோகம்; அது கண்களி லற்பவீக்கமாய்ச் சோபாட்சிபாக ரோகத்தின் குணங்களையெல்லா முண்டா க்குவது.
† அற்பச்சுருதிவாக்கியம்-கருமானுஷ்டானக் கருமங்களைச் சொல்லும் வேதவாக்கியம்.
அற்பணம்-காணிக்கைசெலுத்துகை.
† அற்பதனம்-திரவியக்குறைவுடைமை.
அற்பதை-இழிவுத்தன்மை.
அற்பத்தனம்-இழிவு.
அற்பதுமம்-செந்தாமரை.
அற்பபத்திரம்-ஓர்துளசி.
அற்பபுத்தி-புத்தியீனம்.
† அற்பப்பிராணன் - சிறுமூச்சு, சிறுமூச்சுட னுச்சரிக்கப்படு மெழுத்துக்கள்; அவை ச மஸ்கிருதபாஷையிற்க வர்க்க முதலிய வைவருக்கங்களினு முதலா மூன்ற மை ந்தா மெழுத்துக்களும் யரல வென்பவைக ளுமாம்.
அற்பமாய்-இழிவாய்.
அற்பமாரிசம் } சிறுகீரை.
அற்பமாரிடம் }
அற்பமூர்த்தி-அருகன், கடவுள்.
அற்பம்-அணு, இலேசு, இழிவு, சிறுமை, நாய், பஞ்சு, பனி, பிள்ளை, புகை.
அற்பரம்-மக்கட்படுக்கை.
அற்பருத்தம்-வாழை.
அற்பர்-கீழ்மக்கள்.
அற்பன்-நீசன்.
அற்பாசமனம்-அற்பசங்கை.
† அற்பாசி-ஆறுதாரங்களு ளொன்றாகிய விசு த்தியினது பதினாறு பதுமதளங்களு ளொ ன்றிலிருக்கு மதிதேவதை.
† அற்பாயு-அற்பவயசு, அற்பவயசுடையவன், குட்டி.
† அற்பாலங்காரம் - சிறுமையணி; அஃதற்ப மான வாதேயத்தைப் பார்க்கினு மாதாரத் தை யற்பமாகக் கூறுவது.
அற்பிதம்-காணிக்கை, பலி.
அற்பீயம்-மிகவற்புதம்.
அற்பு-அரிது, அற்பம், அன்பு.
அற்புதசயா-சூறத்துக்கடுக்காய்.
அற்புதமூர்த்தி-கடவுள்.
அற்புதம் - அதிசயம், அழகு, ஓரலங்காரம், ஓரெண்; அது ஆயிரங்கோடி, ஞானம், பா, வக்குண மொன்பதினென்று.
அற்புதர்-கம்மாளர், ஞானிகள்.
அற்புதவாதம்-ஓர்வாதநோய்.
அற்புதவுருவகம் - ஓரலங்காரம்; அஃது உவ மைக் கியல்பல்லாதவற்றை யுள்ளதாயெடு த்துருவகப்படுத்துவது.
அற்புதவுவமை-ஓரலங்காரம். அஃதுபொருட் குள்ள வியல்பை யெடுத்துக்காட்டி யிவ்விய ல்புக ளெல்லாங் குறித்த வுவமைக் குளவோ லொப்பா மெனக்கூறுவது.
அற்புதன்-கடவுள், சிவன், விட்டுணு.
அற்புதாகமம்-இரகசியங்களை விளக்குங் கிரந் தம்.
அற்புதாகிரகம் - ஓர்வகைநோய், அதுகுழந் தைபிறந்த பன்னிரண்டாநளிலாவது பன் னிரண்டா மாதத்திலாவது பன்னிரண்

டாம் வருடத்திலாவது குழந்தைக்கல்லது தாய்க்குவருவது.
அற்புதை-பார்வதி.
அற்புத்தளை-நேசபந்தம்.
அற்போருரு-நேசத்திரட்சி.
† அற்ற-அறுவென்னும் வினையடியாற் பிறந்த வோரிறந்தகாலப் பெயரெச்சவினை.
அற்றடி-அடிகேடு.
அற்றடிப்படுதல்-அடிகெடுதல்.
அற்றம்-அச்சம், அழிவு, உண்மை, சமயம், சோர்வு, மறைவு, மெலிவு.
† அற்றவர்-பொருளற்றவர்.
அற்றறுதி-முட்டமுடிவு, முழுநாசம்.
அற்ருர்-இறந்தோர், தரித்திரர்.
அற்ருன்-இறந்தோன்,தரித்திரன், முனிவன்.
அற்று-அத்தன்மைத்து, சாரியை (உ-ம்) பலவற்றுக்கோடு.
அற்றுப்போதல்-இல்லாமற்போதல்.
† அற்றுவிடல்-கழலுதல்.
அற்றை-அன்று, சிறுமை.
† அற்றைக்காரியம் - அற்பகாரியம், அன்றையிற்காரியம்.
†அற்றைக்கூலி-அந்தந்தநாளிற் பெறுங்கூலி, அற்பக்கூலி.
† அற்றைநாள்-அந்தநாள்.
† அற்றைப்பரிசம் -விலைமாதராடவரிட மன்றன்றுவாங்கும் விலை.
† அற்றைவாக்கியம்-சோதிட நூலில் நிகழ்கின்ற பஞ்சாங்க வாக்கிய காலமாகிய விருநூற்று நாற்பத்தெட்டுத் தினங்களி லெடுத்துக்கொண்ட தினமாகிய வன்றையத்தினத்திற்காகிய வாக்கியம்.
† அன-ஒப்பான.
அனகங்காரம்-பெருமையின்மை.
அனகம்-கீழானது, பாவமின்மை, புல்லுருவி, மாசின்மை.
அனகன்-அருகன், கடவுள்.
அனங்கதிலகை-ஒரு வப்ஸரஸ்திரீ.
அனங்கமாதா-அரக்கு, செம்பஞ்சு.
அனங்கம்-அறிவு, ஆகாயம், இருவாட்சி, உடலின்மை, மல்லிகை.
அனங்கன்-உடலிலான், கடவுள், மன்மதன்.
அனசனம்-உபவாசம்.
அனசூயம்-எரிச்சலின்மை.
அனஞ்சனம்-ஆகாயம்.
அனட்சம்-குருடு.
அனதிகாரி-உரித்தற்றவன்.
அனத்தம்-நாசம், பயனில்லாமை.
அனந்தசயனம்-மலையாளஜில்லாவி லோர்விட்டுணுதலம், சர்ப்பசயனம்.
அனந்தசயனன்-விட்டுணு.
அனந்தஞானி-கடவுள், பார்வதி, பிரமன்.
அனந்தமுடிச்சு-மாதர்களணியுமோராபரணம்
அனந்தம் - அந்தங்கெட்டது, அளவின்மை, அறுகு, ஆகாயம், ஓரெண்; அது பத்துக்கோடி கோடாகோடி, குப்பைமேனி, கோளகபாஷாணம், சிறுகாஞ்சொறி, பெருநன்ஞொரி, பொன், முடிவிலாமை.
அனந்தரம்-நிதம், பிரிவின்மை, பின்பு, மேல், வேலிப்பருத்தி.
அனந்தர் - கள்ளின்செருக்கு, நித்திரை, பருத்தி, பித்து, மயக்கம், மயிர்ச்சூட்டு.
அனந்தலோசனன்-கடவுள், புத்தன்.
அனந்தல்-நித்திரை, மதம்.
அனந்தவாதம்-ஓர்நோய்.
அனந்தவிசயம்-தருமராசன்சங்கு.
அனந்தவிரதம்-ஓர்விரதம்.
அனந்தற்பத்தி-சூரியவெப்பந்தெரியாமலிருக்கும் பச்சிலைக்கொடிப்பந்தர்.
அனந்தன்-அட்டநாகத்தொன்று,அரன், அரி, அருகன், ஆதிசேடன், கடவுள்,பலதேவன் பிரமன், புத்தன்.
அனந்தை-கொத்தான்கொடி, பார்வதி, பூமி.
அனபரன்-பிரமன்.
அனபாயம்-நிரபாயம்.
அனபிகிதகருத்தன் - மூன்றனுருபின் கருத்தன்.
அனப்பியாசம்-அப்பியாசமின்மை.
† அனம்-அன்னம்.
அனம்பு-சாதகப்புள், நீரில்லாதது.
அனரவன்-வேந்தோன்றி.
அனர்க்கலம்-தடையற்றது.
அனர்த்தம்-பயனின்மை, பொல்லாங்கு.
அனலம் - உட்டணம், சித்திரமூலம், சிவாகமமிருபத்தெட்டினென்று, வடவாக்கினி.
அனலல்-எரிதல், கனலல்.
அனலன் - அக்கினி, அஷ்டவசுக்களி லொருவன், விபீஷணன் மந்திரி.
அனலாசனப்பட்சி-தழல்விழுங்கிப்பட்சி.
அனலி-சூரியன், நெருப்பு. *



அனலேறு-இடி.
அனலோடுவேந்தன்-கார்முகிற் பாஷாணம்.

அனல்-அக்கினி, அனலென்னேவல், இடி, உட்டணம், உணர்வு, உயிர்வேதனையி ளென்று, கொடிவேலி.
அனல்காலி-சூரியகாந்தக்கல்.
அனல்வென்றி-தங்கம்.
அனவசரம்-விடுதலின்மை.
அனவதானம்-அவதானக்கேடு.
அனவஸ்தானம்-உறுதியின்மை, துன்னடை.
அனவரதம்-எப்பொழுதும்.
அனற்கல்-சக்கிக்கல்.
அனற்றல்-கனலல், சுடல், புலம்பல்.
அனற்று-அனற்றென்னேவல், திருணம்.
அனன்னியசன்-மன்மதன்.
அனன்னியன்-விட்டுணு.
அனகதம் - அறிவுக்கதீதமானது, ஆருதாரத் தொன்று; அது இதயத்தானம், நூதனவஸ் திரம், வரப்போகிறது.
அனுகலன்-ஓரிழிகுலத்தான். [தல்.
அனுகாரம் - உறுப்பின்மை, பசியினல் வருந்
அனுகாலம்-பஞ்சகாலம்.
அனுசரணம்-துன்னடை.
அனுசரித்தல்-ஆசரிப்பின்மை.
அனுசாரம்-ஆசாரமின்மை, நிருவாணம்.
அனுசிகன்-மூக்கறை.
அனுசிப்பூ-ஓர்பூ.
அனுசிரயம்-பற்றின்மை.
அனுதகி-சந்நியாசி, யதி.
அனுதபம்-கூதிர், நிழல்.
அனுதம்-அந்தரித்தது, ஆதரவற்றது.
அனுதரம்-அவசங்கை, அவமானம், ஆதரவின் மை, விருப்பமின்மை.
அனுதரவு-அலட்சியம், உதவியின்மை.
அனுதி- ஆதியின்மை, கடவுள், சிவன், விட் டுணு.
அனுதிசடிலன்-சிவன்.
அனுதிசைவம்-சைவம் பதினறி னென்று.
† அனுதித்துவம்-நித்தியம்.
அனுதிநாதர்-நவநாதசித்தரிலொருவர்.
அனுதிமுத்தன்-அநித்தியமில்லாஞானி, கட வுள்.
அனுதிரேகம்-வியப்பின்மை.
அனுதீனவம்-நிராதீனம்.
அனுதுரம்-வெறுப்பு.
அனுதேயம்-ஆதேயமற்றது, ஏற்றுக்கொள்ள த்தகாதது.
அனுஸ்தை-அவசங்கை, நிலையின்மை.

அனுந்தம்-அழகின்மை.
அனுமத்து-சேமிப்பு, பொது.
அனுமயம்-நோயின்மை.
அனுமயன்-நோயில்லான்.
அனுயதம்-சமீபித்தது, நீளமற்றது.
அனுயதித்தம்-நிலவேம்பு.
அனுயாசம்-இலகு, சோம்பின்மை.
அனுரதம்-எப்பொழுதும்.
அனுரம்பம்-தொடக்கமின்மை.
அனுரியதித்தம்-நிலவேம்பு. *



அனுரோக்கியம்-நோய்.
† அனுர்-அவர்கள், ஒத்தவர்கள.
அனுர்ச்சபம்-வளைவு, வியாதி.
அனுவிருஷ்டி, அனுவிருட்டி - மழையில்லாமை, வரட்சி.
அனுவிலன்-சுக்கிரன். *



† அனுள்-அன்னுள்.
† அனுன்-அன்னுன்.
அனிகம்-அனீகம்.
அனிசம்-மிருதி.
அனிச்சம்-அருப்பலம், விருப்பின்மை.
அனிச்சை-அனிச்சப்பூ, ஓர்பூடு, ஓர்மரம், நா கமல்லி, விருப்பின்மை.
அனிஷ்டம், அனிட்டம் - பிரியவீனம்.
அனிமிடம்-மீன்.
அனிமிடன்-தேவன்.
அனிமேடன்-நன்ரு யாலோசிப்பவன்.
அனியமச்சிலேடை-நியமத்தின் மேலுமோர் நியமச்சிலேடை (உ-ம்) சிறைபடுவ புட்கு லமே தீம்புனலுமன்ன.
அனிருத்தன்-தடையற்றவன், தூதன்.
அனிலசகன்-தீ.
அனிலசம்-செம்முகக்குரங்கு.
அனிலநாள்-சோதிநாள், விசாகநாள்.
அனிலம்-காற்று, பிறப்பு.
அனிலன்-அட்டவசுக்களி லொருவன், ஓரிரா க்கதன், வாயுபகவான்.
அனிலாமயம்-வாதநோய்.
அனீகம் - அனீகினி, கவலையின்மை, படை, யுத்தம்.
அனீகிதம்-அசந்தோஷம்.
அனீகினி - சேனை, தாமரை, படையிலோர் தொகை; அஃது இரண்டாயிரத்து நூற் றெண்பத்தேழு யானையுமவ்வளவிரதமுமா ருயிரத்தைஞ்ஞூற்றறுபத்தேழு குதிரையும்

பதினுயிரத்துத் தொளாயிரத்து முப்பத்தைந்து காலாளுங் கொண்டது.
அனீசன்-தலைவனில்லாதவன், விட்டுணு.
அனீசு-நட்சத்திரசீரகம், பெருஞ்சீரகம்.
அனீசுவரவாதி-தேவனில்லையென்பவன்.
அனு-அடையாளம், அற்பம், ஒழுங்கு, கதுப்பு, கீழ், கூட, சமீபம், தனிமை, பங்கு, பின் மோனை, இவற்றைக் காட்டுமோரு பசருக்கம்.
அனுகதம் - ஈட்டப்பட்டது, கூடிப்போதல், பின்வருவது.
அனுகதனம்-சம்பாஷணை.
அனுகமனம்-கூடப்போதல்.
அனுகம்-செஞ்சந்தனம்.
அனுகம்பை-உருக்கம்.
அனுகரணம்-உவமை, செயல்விளங்கிநிற்பது.
அனுகருஷணம்-அழைத்தல், கவர்தல்.
அனுகவீனன்-இடையன்.
அனுகற்பம்-பதில்.
அனுகன்-கணவன்.
அனுகாமி-தோழன்.
அனுகுணம்-ஓரலங்காரம், தகுதி.
அனுகூலம்-காரியசித்தி, கிருபை, சம்மதம், பட்சம், விக்கினமின்மை.
அனுகூலன் - உபகாரி, சிங்காரநாயகர் நால்வரிலொருவன்.
அனுகோதம்-சின்னமூளை, துணைமூளை.
அனுக்கம் - அனுங்குதல், செஞ்சந்தனக்கட்டை, சோம்பல், பயம், பாம்பு, புலம்புதல், வருத்தம், வாட்டம்.
அனுக்கல்- ஒன்ருேடொன்று முட்டச்செய்தல், வருத்தல்.
அனுக்காட்டல் - சாடைகாட்டல், சிரிதோன்றல்.
அனுக்காட்டுதல்-சாடைகாட்டுதல்.
அனுக்கியடித்தல்-ஓர்விளையாட்டு.
அனுக்கிரகம்-கிருபை.
அனுக்கிரகாங்குரம்-கிருபையுண்டாதல்.
அனுக்கிரகித்தல்-கிருபைசெய்தல்.
அனுக்கிரமணம்-தொடர்ந்துபோதல்.
அனுக்கிரமணிகை-பொருளட்டவணை.
அனுக்கிரமம்-ஒழுங்கு.
† அனுக்கு - அனுக்கென்னேவல், தெரிநிலை வினைப்பகுதி, பெயரெச்சத்தொகை.
அனுக்குதல்-அனுக்கல்.
அனுக்குரோசம்-தயை.

அனுக்கை-விடை.
அனுங்கல்-அனுங்குதல், முட்[டு]... வாடல்.
அனுங்கியடித்தல்-ஓர்விளையா[ட்டு]
† அனுங்கு - அனுங்கென்[னேவல்] வினைப்பகுதி, பெயரெச்ச[த்தொகை]
அனுங்குதல் - அசைதல், சி[...]தல், புலம்பல், வருந்தல்.
அனுசங்கம்-உருக்கம், புணர்[...]
அனுசந்தானம்-ஆராய்வு, வி[...]
அனுசந்தானம்பண்ணல்-வில்[...]
அனுசந்தித்தல் - அம் பிடைவி[...]கித்தல், விடாது தியானித்[தல்]
அனுசயம்-பற்று,மனஸ்தாபம், [...]
அனுசரணம் } இணக்கம், உ[...]
அனுசரணை } தல், வழக்கம்[...]
அனுசரன்-தோழன், வேலைக்[காரன்]
அனுசரிக்கை-அனுசரிப்பு.
அனுசரித்தல்-சார்ந்துநடத்தல், [...] நடத்தல், வழிபடுதல்.
அனுசரிப்பு-கொண்டாடல், பின்[...]
அனுசன்-தம்பி.
அனுசாசகன்-ஆள்பவன்.
அனுசாசனம் } கட்டளை.
அனுசாஸ்தி }
அனுசாதன்-தம்பி.
அனுசாதை-தங்கை.
அனுசாரம்-அடுத்துநடத்தல், [...] வக்கிரகம்,சுபாவம்,தத்துவம், [...] நடபடி, பலன், வழக்கம்.
அனுசாரி-உதவிக்காரன், சார்ந்[...] வழிபடுகிறவன்.
அனுசிதம்-அசுத்தம், தகுதியின்[மை]
அனுசிந்தை-தியானித்தல்.
அனுசிவகன் } சேவகன்.
அனுசிவி }
அனுசை-தங்கை.
அனுசோகம் } துக்கம்.
அனுசோசனம் }
அனுச்சிட்டம்-சுத்தம்.
அனுச்சுவரம்-மூதனிலையாய் நின்[...] விந்தெழுத்து.
அனுஷம் } ஓர்நாள்.
அனுடம் }
அனுட்டணம்- சத்தவிசனத்தொ[...] சோம்பு, வெப்பமின்மை.

அனுஷ்டானம் } அனுட்டிப்பு, தகுதி, துவக்
அனுட்டானம் } கம், நிலைநிறுத்தல்.

அனுட்டித்தல்-ஆசரித்தல்.

அனுட்டிப்பு-ஆசரிப்பு.

அனுஷ்டுக் } எட்டாவது சந்தஸ்ஸு.
அனுஷ்டுப் }

அனுதமம்-சிரேட்டமானது.

அனுதரம் - எற்றுமதிக்கூலி, படகேறுதல், மெலிவு.

அனுதரிசனம்-பானபாத்திரம்.

அனுதரித்தல்-அணைத்தல், படகிலேற்றல், மெலிதல்.

அனுதாத்தம்-படுத்தலோசை, வேதஸ்வரத்தி னொன்று.

அனுதாபம்-ஒன்றிற்கிரங்கல்.

அனுதாயம்-மனந்திரும்புதல்.

அனுதாரம்-இல்லொழுக்கம், பிசுனித்தனம்.

அனுதாவனம்-பின்றொடர்தல்.

அநுதினம்-எப்போழ்தும்.

அனுத்தமம்-அதமம்.

அனுத்தம்-பொய்.

அனுத்தரம்-ஒவ்வாமறுமொழி.

அனுத்தரன்-உத்தமன், ஒவ்வாமறுமொழி புகலுவோன்.

அனுத்தானம்-முகங்குப்புறக்கிடத்தல்.

அனுத்தியோகம்-முயற்சியின்மை.

அனுத்துவாகம்-பிரமசரியச் சன்னியாசம்.

அனுத்தேகம்-விருப்பின்மை.

அனுநயம்-விருந்தோம்பல்.

அனுநாசிகை-மெல்லினம்.

அனுநாதம்-எதிரொலி.

அனுபதிதம்-இறங்குதல், போதல்.

அனுபஸ்தானம் } இன்மை.
அனுபஸ்திதி }

அனுபஸ்தியேது - ஓரளவை; அது குளிரின்மை பிணியின்மையைக்காட்டுதல்போலும்.

அனுபந்தசதுஷ்டயம்-அனுபந்தம்.

அனுபந்தம்-ஒற்றுமை, ஒன்றிப்பு, காரணகாரக சம்பந்தம், கூடுதல், சிசு, தொடர்ச்சி, பாவம், முகனை.

அனுபந்தன்-குழந்தை, மாணுக்கன்.

அனுபந்தி-தாகம், விக்கல்.

அனுபபத்தி } முடிவுபெருததருக்கம்.
அனுபபத்தியேது }

அனுபமம்-ஒப்பின்மை.

அனுபமன்-அழகன், சமானரகிதன்.

அனுபமை - உவமை, யின்மை தென்மேற்றிசையானையின்பெண்யானை, மேன்மை.

அனுபம்-மிகுதியுநீர்ப்பாங்கான நிலம்.

அனுபயோகம்-பிரயோசனமற்றது.

அனுபலத்தி - ஓரலங்காரம்; அது காரியமின்மை காரணமின்மையைக் காட்டல்.

அனுபல்லவி-பல்லவிக்கயற்பல்லவி.

† அனுபல்லவும்-பதத்தின்முதற்சிற்றடி.

அனுபவப்படல்-உற்றறிதல்.

அனுபவம்-அனுபோகம், சுகபோகம், தோற்றுதல், பிறத்தல்.

அனுபவித்தல்-துய்த்தல்.

அனுபவிப்பு-அனுபோகம்.

அனுபாகம்-அலகுக்குரியபாகம்.

அனுபாதகம்-பெருங்குற்றம்.

அனுபாவம்-அபிநயம், மனோநிச்சயம்.

அனுபானம் - உடன்பருகுவது, மருந்தனுபானம்.

அனுபூதி-சிந்தனை, பிரமாணங்களைக் கொண்டறிந்த வறிவு.

அனுபோகம்-அனுபவப்படுவது.

அனுபோகித்தல்-அனுபவித்தல்.

அனுப்பல்-அனுப்புதல்.

அனுப்பிராசம் - அனுராகம், வழியெதுகை, விரகம்.

அனுப்பிவிடல்-போகவிடல்.

அனுப்பினுட்சுவை-உப்பு.

அனுப்பு-அனுப்புவது, அனுப்பென்னேவல்.

அனுப்புதல்-போகவிடுதல்.

அனுப்புவித்துக்கொள்ளல் - போக வுத்தரவு கொடுத்தல்.

அனுமக்கொடியோன்-அருச்சுனன். [மதி.

அநுமதி-ஒழுங்கு, கட்டளை, சதுர்த்தசி, சம்

அனுமதை-ஓர்வகைப்புல்.

அனுமதோட்டி-எட்டாவது மேளகர்த்தா.

அனுமந்தன்-அனுமான், ஆஞ்சனேயன்.

அநுமரணம்-அடுத்திறத்தல், உடன் கட்டையேறுதல்.

அனுமன்-அனுமந்தன்.

அநுமாசாக்கா-பொன்னுங்கண்ணி.

அநுமானப்பிரமாணம் - ஓரளவை; அஃது அனுமானத்தா லனுமேயத்தையறிதல்.

அநுமானம்-ஓர்பிரமாணம்; அஃது உரைத்தவற்றைப் பிரமாணமாகக்கொண் டுரையாத பொருளையறிதல்.

அநுமானுபாசம்-சந்தேகப்பிரமாணம்.

அனுமானானுமானம்-கருதலனுமானம்.
அனுமானிதம்-குதிரைக்கனைப்பு.
அனுமானித்தல்-ஆர்த்தல், ஐயப்படுதல், குதிரைகனைத்தல்.
அனுமானோத்தி-நியாயசாஸ்திரம்.
அனுமான்-அஞ்சனைகுமாரன், சிற்பநூன்முப்பத்திரண்டினுென்று.
அனுமிதி-அனுமானம்.
அனுமித்தல் - அனுமானித்தல், காரியத்தாற் காரணமறிதல்.
அனுமேயம்-ஓரளவை; அஃது அனுமானித் தறியப்படுபொருள்.
அனுமை-அருத்தாபத்தி, கண்ணின்புறவருகு.
அனுமோதனம்-இன்பம், உவகை.
அனுயோகம்-கண்டனை, கேள்வி, தியானம், மன்றாடுதல்.
அனுயோசனம்-கேள்வி.
அனுரகசம்-ஏகாந்தம்.
அனுரஞ்சகம்-திருத்தியாதல்.
அனுரஞ்சனம்-அன்பு, உருக்கங்காட்டுதல்.
அனுரதம்-பற்று, விருப்பம்.
அனுரதி-அன்பு.
அனுராகபோகம்-காமானுபவம்.
அனுராகமாலை-ஓர்பிரபந்தம்.
அனுராகம்-காமம்.
அனுருபம்-இணக்கம், தடை, மத்தியட்சம்.
அனுரோதகம்-சம்மதித்தல்.
அனுரோதம்-பிறர்கருமமுடித்தல்.
அனுலாபம்-கூறியது கூறல்.
அனுலேபகம் } அபிடேகம்.
அனுலேபம் }
அனுலேபனம்-அபிஷேகம்பண்ணல், பூசுதல், வாசனையூட்டல்.
அனுலோமசன் } உயர்குலத் தந்தைக்குமிழி
அனுலோமன் } குலத்தாய்க்கும் பிறந்த பிள்ளை.
அனுவசனம்-ஒத்த வாக்கியம்.
அனுவதித்தல்-சொன்ன நியாயத்தையே திரும்பச்சொல்லல்.
அனுவர்த்தனம்-கடமைப் படுத்தல், பலன்.
அனுவழி-புதன்.
அனுவாகம்-ருக்யஜுஸ் ஸாமசமுதாயங்கள்.
அனுவாகாரியம்-பிதிர்கருமம்.
அனுவாக்கியை-வேதமந்திரம்.
அனுவாசம் } அன்பு, கூடியிருத்தல், வாச
அனுவாசனம் } னையூட்டல், வேலைச்சாலை.

அனுவாசிதம்-வாசனை யூட்டப்பட்டது.
அனுவாதம் - சம்மதம், நிந்தை, முற்குறித்த பொருளைப்பற்றித் திரும்பச் சொல்லுகியாயம்.
அனுவாதி-கானலோலன்.
அனுவாதேயன்-அடையப்படாதவன்.
அனுவாரோகணம்-உடன்கட்டை யேறுதல்.
அனுவிரசனம்- வழிவிட்டனுப்பல்.
அனுவிருத்தம்-இயற்கைப்பார்வை.
அனுவிருத்தி-உபசரணை, புறனடை.
அனுற்பத்தி-தவறு, பிறப்பின்மை.
அனூகம்-ஆமோதித்தல், சாதனம், நன்னடை, வமிசம், வில்.
அனூகன்-பிறப்பில்லாதவன்.
அனூடன்-விவாகம்பண்ணுதவன்.
அனூநகன்-பூரணன்.
அனூபசம்-இஞ்சி.
அனூபம்-ஈரம்.
அனூரு-அருணன், புதன்; மூடவன்.
அனூர்த்துவாஸ்தி-மேல்தாடையெலும்பு.
அனூனம்-முழுமை.
† அனே-அன்னையே.
அனேகபம்-யானை.
அனேகம்-ஒன்றுக்கு மேற்பட்டது.
அனேகாகாரம்-பலமாதிரி.
அனேகாங்கவுருவகம் - ஓரலங்காரம்; அஃது ஒன்றினங்கம் பலவற்றையுமுருவகஞ் செய்துரைப்பது.
அனேகாந்திகபேதம் } அனைகாந்திகம்.
அனேகாந்திகம் }
அனேடமூகம்-அணுப்பு, செவிடு மூமையும்.
அனேடன்-அறிவில்லாதவன்.
அனை-அத்தன்மை, ஓர்மீன், தாய்.
அனைகாந்திகம்-ஏதுப்போலி மூன்றனுளொன்று; அஃது காரண காரிய மொன்றற்கொன்று மாறுபடக்கூறுவது.
அனைக்கியம்-அன்னியோன்னியவிரோதம், பன்மை.
அனைக்குமம்-ஐக்குறைவு, பன்மை.
அனைசுவரியம்-வறுமை.
அனைச்சொல்-ஐக்கியபதம்.
அனைத்து-அவ்வளவு, எல்லாம்.
† அனைமார்-தாய்மார்.
அனைய-உவமையுருபு.
† அனையது - அத்தன்மை, அத்தன்மையது, அவ்வளவு, ஒத்தது.
† அனையம் - அத்தன்மையினே மெனப்பொருள்படுமொரு குறிப்புவினைமுற்று, ஒத்து

ளேமெனப் பொருள்படுமொரு குறிப்பு வினைமுற்று.
† அனையர்
† அனையவர் } அத்தன்மையர், அவர்கள், ஒத்தவர்.
† அனையவள்-அத்தன்மையள், அவள், ஒத்தவள்.
† அனையவன்-அத்தன்மையன், அவன், ஒத்தவன்.
† அனையவை-அத்தன்மையுடையவை, அவை, ஒப்பானவை.
† அனையள் - அத்தன்மையள், அவள், ஒத்தவள்.
† அனையன-அத்தன்மையன, அவை, ஒத்தவை.
† அனையன் - அத்தன்மையன், அவன், ஒத்தவன்.
† அனையார்-அத்தன்மை யுடையவர், அவர்கள், ஒத்தவர்.
† அனையாள் - அத்தன்மையள், அவள், ஒத்தவள்.
† அனையான்-அத்தன்மையானவன், அவன், ஒத்தவன்.
† அனையிர்
† அனையீர் } ஒத்தீர்.
† அனையெம்
† அனையேம் } ஒத்தேம்.
† அனையேன்-ஒத்தேன்.
† அனையை-ஒத்தாய்.
† அனையோம்-ஒத்தோம்.
† அனையோர் - அத்தன்மையோர், அவர்கள், ஒப்பானவர்.
அனைவரும்-எல்லாரும்.
† அனைவிரும்
† அனைவீரும் } நீங்களெல்லீரும்.
அனைவோரும்-எல்லாரும்.
† அனோர்-அன்னோர்.
அன் - இன்மை எதிர்மறை பிறிது இவகளைக் காட்டுமோ ருபசருக்கம், உயர்திணையாண் பாற்படர்க்கை யொருமைவிகுதி, சாரியை.
அன்பகம்
அன்பகர் } சமுத்திரசோகி.
அன்பகன்-நல்லவிருதயமுள்ளவன்.
அன்பன்-தோழன், நாயகன், பத்தன்.
அன்பு-ஆசை, தயை, நேசம், பெரியோரியல் பினொன்று.
† அன்புடைமை-காதலுடைமை.
அன்புறல்-நேசத்திலழுந்தல்.
அன்புறுத்தல்-நேசமுண்டாக்கல்.
அன்மயம்-சந்தேகம்.

அன்மை-அல்லாமை, தீமை.
அன்மொழி-பிறமொழி.
அன்மொழித்தொகை-உம்மை, உவமை, பண்பு, வினை, வேற்றுமை யென்னுந் தொகை நிலைத் தொடர்மொழிகளின்புறத்துத்தொக்குநிற்பன (உ-ம்) பொற்றொடி.
அன்வயம்-அன்னுவயம்.
† அன்றன்று-நாளுக்குநாள்.
அன்றாடம்-தினேதினம்.
அன்றி-அல்லது, அல்லாமல்.
† அன்றியனைத்தும்-அவ்வனைத்தும்.
† அன்றியில்-அல்லாததன்மையில், அல்லாதில்.
அன்றில்-ஓர்புள், கிரௌஞ்சம், மூலநாள்.
† அன்றிற்றீவு-கிரவுஞ்சத்தீவு.
அன்றினர்-பகைவர்.
அன்று-அசைச்சொல், அந்நாள், அல்ல.
† அன்றுதல்-மாறுபடுதல்.
அன்றெறிந்தான் - அண்ணெறிஞ்சான்பூண்டு, சிறுபுள்ளடி.
அன்றே-அன்றையத்தினம்.
† அன்றேல்-அல்லதேல்.
† அன்றை-அந்நாள்.
† அன்றைக்கன்று-அந்தந்தநாளுக்கு.
அன்றைத்தினம்-அன்றையத்தினம்.
† அன்றோ - தெளிவுப்பொருளும் பிறபொருளு முணர்த்துமோ ரிடைச்சொற்றொடர்.
அன்ன-ஒருவமையுருபு.
அன்னகந்தி-வயிற்றுளைவு.
† அன்னகாலம்-போசனக்காலம்.
அன்னகோட்டகம்-களஞ்சியம்.
அன்னகோட்டகன்-சூரியன், விட்டுணு.
அன்னகோட்டம்-பண்டாரம்.
அன்னக்களை-பசிக்களை.
† அன்னக்காவடி - யாசகர்பொருட்டு வீடுகடோறும் யாசித்துவாங்கிய வன்னங்கொண்டுபோகுங் காவடி, விக்கிரகத்திற்கு நைவேதிக்கும்படி யன்னங்கொண்டுபோகுங் காவடி.
அன்னக்கொடி-சத்திரத்தில் தருமச்சாப்பாடு போடுவதைக்காட்டுங்கொடி, பிரமன தன்னப்புட்கொடி.



அன்னக்கொடியோன்-பிரமன்.
† அன்னக்கொடை -அன்னதானம்.
அன்னக்கொப்பு - அன்னப்புட் செதுக்கின மகளிர்காதணி.

அன்னசத்திரம்-அன்னசாலை.
அன்னசலம்-தாபரம்.
அன்னசாரம்-கஞ்சி.
அன்னசாலை-சாப்பாடுபோடுமிடம்.
அன்னசுத்தி-நெய்.
† அன்னணம்-அந்தப்பிரகாரம்.
அன்னதன்
அன்னதாதா } அன்னங்கொடுக்கிறவன்.
அன்னதாதிரு
அன்னதாழை-அன்னுசி.
அன்னதானம்-அன்னக்கொடை.
† அன்னது - அது வென்னுஞ் சுட்டுப்பொருட்டாய வொருபெயர், அத்தன்மையதெனப் பொருள்படுமொரு குறிப்புவினை முற்று, ஒத்தது, சுட்டுப்பொருளில் வருமொருகுறிப்புவினையாலணையும் பெயர்.
† அன்னத்தவன்-பிரமா.
அன்னத்தூவி-பஞ்சசயனத்தொன்று; அஃது அன்னச்சிறை.
அன்னபம்-ஆல்.
அன்னபானம்-சாதமுந்தண்ணீரும்.
அன்னபானுதிகள்-சாதந்தண்ணீர் முதலியன.
† அன்னபானேற்காரம்-சோற்றையு நீரையும் வாந்திசெய்தல்.
அன்னபூமி-சோற்றுக்கும்பம்.
† அன்னபூர்ணி
† அன்னபூர்ணை } துர்க்கை.
அன்னபேதி-ஓர்மருந்து.
அன்னப்பாகு
அன்னப்பால் } கஞ்சி.
அன்னப்பிராசனம்-சோறூட்டல்.
அன்னமயகோசம் - பஞ்சகோசத் தொன்று; அஃது உடல்.
† அன்னமயம் - அன்னமயகோசம், சரீரம், போசனத்தாலாயது.
அன்னமலம்-கஞ்சி.
அன்னமுரசு-சோறிட விடும் பறை.
† அன்னமூர்த்தி-பிரமா.
அன்னம்-ஓர்புள், கவரிமா, சோறு, தயா விருத்தி பதினுன்கி ஞென்று; அஃது உணவு கொடுத்தல், தானியம்.
அன்னம்பாறல்-புலம்பல்.
அன்னயம்-உடல், போசனமுள்ளது.
அன்னரசம் -உணக்களிற் றேகத்திற் சேருஞ் சாரம், கஞ்சி.
அன்னரேகை-ஓர்கைவரை.
அன்னர்-அத்தன்மையர்.

அன்னலார்-பெண்கள்.
அன்னவஸ்திரம்-சாப்பாடும் வஸ்திரமும்.
அன்னவம்-கடல்.
† அன்னவர்-அத்தன்மையானவர், அவர்கள், ஒப்பானவர்.
† அன்னவள் - அத்தன்மையானவள், அவள், ஒத்தவள்.
† அன்னவன்-அத்தன்மையானவன், அவன், ஒத்தவன்.
† அன்னவாகனன்-அன்னத்தை வாகனமாக வுடையவன், பிரமதேவன்.
† அன்னவாகன்-அன்னவாகனன்.
† அன்னவாகிசுரோதம்-கண்டத்தினின் றுணவையன் னுசயத்துக்குக்கொண்டுசெல்லுங் கால்வாய்.
அன்னவாசயம்-உணவசிக்குமிடம்.
அன்னவிகாரம்-இந்திரியக்கழிவு.
அன்னவூர்தி - அன்னவாகனம், சரச்சுவதி, பிரமன்.
அன்னவூறல்-அன்னரசம்.
அன்னவேதி-ஓர்பூடு.
† அன்னவேறு-ஆணன்னம்.
† அன்னவை-அத்தன்மைகள், அவை, ஒப்பானவை.
†அன்னள்-அத்தன்மையள், அவள், ஒப்பானவள்.
† அன்னன் - அத்தன்மையன், அவன், ஒத்தவன்.
† அன்னுகாரம்-சோற்றுணவு.
† அன்னுசயம் -வயிற்றினு ளுணவுபோய்த்தங்குமிடம்.
அன்னுசி
அன்னுசு } பரங்கித்தாழை.
† அன்னுதாம் -சோறு புசித்தவி லுண்டாகும் விருப்பம்.
அன்னுதன்-வளர்ப்புப்பிள்ளை.
அன்னுபிஷேகம்
அன்னுபிடேகம் } ஓரபிஷேகம்.
† அன்னுய்-அன்னையே, ஒத்தவளே, ஓரசைநிலை.
அன்னுர்-அல்லார்.
† அன்னுலத்தி - விக்கிரகங்களுக்கு முன்னு மணவாளனுக்கு முன்னுங் கண்ணூறுகழித்தற்குச் செய்யுஞ் சோற்றுலாத்தி.
அன்னுலாத்தி-திருஷ்டிகழிக்குஞ் சாதவாலாத்தி.
† அன்னுள் - அத்தன்மையள், அவள், ஒப்பானவள்.

† அன்னுன் - அத்தன்மையன், அவன், ஒத்தவன்.

† அன்னியகாமி - பரதாரகமனஞ்செய்பவன், பரபுருஷனிடம் போகிறவள், வியபிசாரி.

அன்னியகுணசகனம் - தயாவிருத்தி பதினுன்கினுென்று; அஃது பிறர்குணத் தழுக்காறின்றிப் பொறுத்தல்.

† அன்னியகுலம்-வேற்றுக்குலம்.

அன்னியசன்மம்-மறுபிறப்பு.

† அன்னியசாகன்-மார்க்கபதிதன்.

† அன்னியதர-இரண்டனுளொன்று, மற்றையது.

† அன்னியதரகன்மசம்- இரண்டிலொன்றன் கன்மத்தாற்பிறந்தது.

† அன்னியதா-தவருய்,திருத்தமில்லாததாய், வேறுவிதமாய், வேருெருபொழுது.

அன்னியதாகர்த்தத்துவம் -ஒன்றையொன்ருக்குந்தத்துவம்.

அன்னியதாசித்தி - அன்னிய காரணங் கொண்டு சுயகாரணத்தாளுய காரியத்தைமறுத்தல்.

† அன்னியதாஞானம் - ஒன்றைவேருென்ருயறிதல்.

† அன்னியதாப்பிரதிபத்தி - போலி; அஃது ஒன்று நின்றவிடத் ததுபோன்ற வேருென்று வந்தடைதல்.

† அன்னியதோவாதரோகம் - சர்வநேத்திரரோக பேதத்துளொன்ருகிய சங்கரரோகமெழுவகையுளொன்று; அது கண், நெற்றி, வாதநரம்பு, மற்றைய நரம்பாகிய விந்தவிடங்களில் வாயுதங்கிச் சஞ்சரிக்கும்போது பிறந்து கண்களிற் சிவப்பு, வீக்கம், அதிகநோவு, நீர்க்கம்ம லென்னு மிக்குணங்களையுண்டாக்கும்.

† அன்னியநாத்தி-வேறன்மை.

†அன்னியபாவம்-வேருயிருக்கை

அன்னியபிருதம்-குயில்.

† அன்னியபிருத்து-காகம். *



அன்னியபுட்டம்-குயில்.

† அன்னியமநஸ்கம்-கவனம் வேருயிருத்தல்.

† அன்னியமபுபுட்சு -நியமமின்றிப்புசிக்கவிரும்புவோன்.

அன்னியமம்-நியமில்லாதது.

அன்னியம்-குயில், வித்தியாசம், வேறு.

† அன்னியயோகவியவச்சேதம்-பிறிதி னியைபு நீக்கல்.

அன்னியர்-ஈனர், பிறசாதியர்.

† அன்னியவாதி-ஒவ்வாமற் பேசுவோன், புரட்டிப் பேசுவோன்.

† அன்னியவோடாலிகாகிரகம் - பலரைத்தொடருகின்ற பன்னிரண்டு பெண்கிரகங்களுளொன்று; அதுகுழந்தைபிறந்த வெட்டா நாளிலாவ தெட்டாமாதத்திலாவ தெட்டாம் வருடத்திலாவது சிசுவையல்லது தாயைப்பிடிக்கும்,அப்போதன்னத்துவேஷம், அடிக்கடிநாவைநீட்டுதல்,இளைத்தல்,நோவு, சதாவழுகை, கண்மூடலென்னு மிக்குணங்களையுண்டாக்கும்.

† அன்னியன்-பிறன்.

† அன்னியாதீனன்-பிறருக்குக்கீழ்ப்பட்டிருப்பவன், பிறரைச்சார்ந்திருப்பவன்.

† அன்னியாயம்-அநீதி.

† அன்னியூர்-ஒரு சிவஸ்தலம்.

† அன்னியேத்துகவாதரோகம்- வாதரோகவகையுளொன்று; அது உப்புவஸ்து,உட்டணபதார்த்தம், சிலேட்டும சீதளபதார்த்தம், இலைக்கறியென்னு மிவைகளினுற் பிறந்து தோள், முதுகு, கழுத்து, சிரசு, விலாவென்னு மிடங்களில் வேகமாக வியாபித்துப் பித்தத்துடன்கூடி யொன்றைவிட் டொருநாளின் மிகுவேதனைசெய்வது.

† அன்னியை-பின்னுசத்தி.

அன்னியோன்னியகலகம்-பகை.

அன்னியோன்னியபாவம் - ஒன்றற்கொன்ருதாரமில்லாதது.

அன்னியோன்னியம்-ஐக்கம், ஒன்றற்கொன்றிருக்கிற சம்பந்தம்.

† அன்னியோன்னியவத்தியாசம் - இந்த வத்துவின் றரும மந்தவத்துவி னிடத்து மந்தவத்துவின் றரும மிந்தவத்துவினிடத்து மாகத்தோற்றப்பட்டது.

† அன்னியோன்னியவிருத்தம் -அன்னியோன்னியவிரோதம்.

அன்னியோன்னியவிரோதம்-பகை.

† அன்னியோன்னியாச்சிரயதோஷம் - இருபொருள்க ளொன்றற் கொன்று பற்றுக்கோடாயிருக்கு மென்னுந் தோஷம்; அது இருவினைக ளுடலின்காரியமாயு முடலிருவினையின் காரியமாயுமிருக்குமென்று சொல்லுதல் போல்வது.

† அன்னியோன்னியாச்சிரயம்-இருபொருள்க ளொன்றுக்கொன்று பற்றுக்கோடாயிருத்தல்.

† அன்னியோன்னியாபாவம் - ஒன்றிலொன்றில்லாதிருக்கை.

† அன்னியோன்னியாலங்காரம் - ஒன்றுக்கொன்றுதவியணி; அது ஒன்றற்கொன்று பரிகரித்தலைச் சொல்லுதல்.

அன்னுபாஷணம் - வாதிசொன்னபொருளையறிந் தனுவதியாதிருத்தல்.

† அன்னுவயச்சொல்-பரார்த்தானுமான மென்றுசொல்லப்பட்ட சொல்லினொருவகை; அது திருட்டாந்த பூர்வமாகப் போதிக்கு முடம்பாட்டுச்சொல்.

அன்னுவயம்-காரணகாரிய சம்பந்தம், சேர்ந்திருக்கை, வமிசம்.

† அன்னுவயலக்கணம்-பொருத்தமான பதங்களையெடுத்துக் கோத்துச் சொல்லப்படும் வாக்கியத்திற்குரிய விலக்கணங்கள்; அவை கருத்தா, கருமம், கிரியை, விசேடணம், விசேடிய மென்பன.

† அன்னுவயவியதிரேகி-பரார்த்தானுமானவகையுளொன்று; அது அன்னுவயத்தானும் வியதிரேகத்தானும் வியாத்தி யுடையது; யாண்டுப்புகை, ஆண்டுத்தீ, எங்ஙனமட்டி விலென்பது அன்னுவயவியாத்தி, யாண்டுத்தீயில்லை, ஆண்டுப்புகையுமில்லை, எங்ஙனமடுவிலென்பது வியதிரேகவியாத்தி, இப்படி யிருவகைவியாத்தியினுனு மலைக்குத்தீயுண்மை சாதிக்கப்படக் கிடந்ததனு லிந்த நியாய மன்னுவய வியதிரேகி.

† அன்னுவயவியதிரேகியனுமானம்-உபநயம், ஏது,திருட்டாந்தம், நிகமனம், பிரதிஞ்ஞையென்னும் ரூபங்களைந்தினு லன்னுவய வியதிரேக வியாத்திகளைக்கொண்டு சொல்லப்படு மனுமானம்.

† அன்னுவயவியாத்தி-யாண்டுப்புகை, ஆண்டுத்தீயென்பதிற் போல வன்னுவய வுண்மையது காட்சியைச்சொல்லு முடனிகழ்ச்சி நியாயம்.

அன்னுவயவிலக்கணம்- கருத்தா கருமம் கிரியை விசேடணம் விசேடிய மிவற்றின் சம்பந்தம்.

† அன்னுவாகாரியபசனம்-தக்ஷிணக்கினி.

† அன்னுவாகாரியம்-இறந்தபெற்ருருக்கு முதல்வருடத்தின் மாசந்தோறுஞ் செய்யப்படு மாசிகசிராத்தம், மாசந்தோறும் வரு மமாவாசித்தினத்திற் பிதிருக்குச் செய்யுஞ் சிராத்தம்; அது புதிதாயும் நாற்றமில்லாதாயுமிருக்கிற மாமிசத்தாற் செய்யத் தக்கது.

அன்னுவாசனம்-அனுவாசனம்.

அன்னுவாதேயம்-கணவன் வழியார்கொடுத்த நன்கொடை.

அன்னுவாரோகணம்- அனுவாரோகணம்.

† அன்னுழி-அப்பொழுது.

† அன்னே-தாயே, தாயையொத்தவளே.

அன்னை-அக்காள், தாய், தோழி.

அன்ஞே-அதிசயச்சொல், இரக்கச்சொல்.

† அன்ஞேர்-அவர்கள்.

அன்ஞேன்-அத்தன்மையன்.

அன்ஞேன்றி-பெலனற்றவன்.



# ஆ

ஆ - அஃறிணைப்படர்க்கை எதிர்மறைப்பல வின்விகுதி, ஆக என்பதின்குறுக்கம், ஆச்சாமரம்,ஆதலைச்செய்யென்னேவல்,இசை, இரக்கம், இரண்டா முயிரெழுத்து, எதிர்மறை யோர்வினையெச்சவிகுதி, சொல்லிசை, பசு, பெண்மரை, பெண்ணெருமை, வியப்பு, விலங்கின் பெண்பொது, வினு அந்தம் இணைப்பு உருக்கம் குறைவு பிரிப்பிவற்றைக்காட்டுமோருபசருக்கம்.

ஆஅ-அதிசயச்சொல், அதிசயவிரக்கச்சொல், இரக்கச்சொல்.

† ஆஆ-அதிசயவிரக்கச்சொல்.

ஆக-உவமையுருபு, முழுவதும்.

† ஆகசம்-உடலிலிருந்துண்டானது.

ஆகஸ்மீகம்-சடிதி.

† ஆகடியஞ்செய்தல் - அநியாயம்பண்ணல், கொடுமைசெய்தல், பரிகாசம்பண்ணல்.

ஆகடியம்-அநியாயம், கொடுமை, பரிகாசம்.

ஆகணைக்கிளை - சாதாரணகாந்தாரம்.

ஆகணதாரம்-கைசிகநிஷாதம்.

ஆகண்டலன்-இந்திரன். ✻



ஆகதம் - கந்தைப்புடவை, புதுப்புடவை.

† ஆகந்துகசுரம்-ஓர்வகைச்சுரம்; அது அருந்துகின்றவறுசுவை வருக்கங்களின் காரணமில்லாமல் வருவது.

† ஆகந்துகமசூரிகை-ஆகந்துக மசூரிகை ரோகம்.

† ஆகந்துகமசூரிகைரோகம் - ஓர்வகைமசூரிகைரோகம்; அது திரிதோஷ மசூரிகைக் கொப்பளங்களைப் போலிருக்கினு மதைப் போ லொரேகாலத்திற் பிறக்காமல் முதல் முதலோரவயவத்திற் பிறந் துடனே சரீர முற்றிலும் வியாபிப்பது.

† ஆகந்துகம்-இடையிலுள்ளது.

† ஆகந்துகவிரணம் - ஓர்வகை விரணநோய்; அது காயத்தினுற் பிறப்பது, சத்தியோவிரணம்.

† ஆகமகலை
† ஆகமசாத்திரம்
† ஆகமநூல் } மனுதருமசாத்திரமுதலிய பதினெண் ஸ்மிருதிகள்.

† ஆகமந்தம்-உடற்சோர்வு,சுறுசுறுப்பின்மை.

† ஆகமபதி-கடவுள்.

ஆகமப்பிரமாணம் - மூவளவையி னென்று; அது உபதேசகலை தந்திரகலை மந்திரகலை யெனப்படும்.

ஆகமமலைவு-தருமநூல் சொல்லியவாறே சொல்லாது பிறழக்கூறுவது.

ஆகமம்-அகமம், ஆகமநூல், உறுதிக்கதோசி, ஓர் சாத்திரம், கல்வி, சேருதல், ஞானம், தருமநூல், தோன்றல் விகாரம், மரப்பொது, மிகுத்தல், முதல்வன்வாக்கு.

† ஆகமர்ந்தோன்-விநாயன் *

ஆகமனகாலம் - சங்கிராந்தி, பிரசவகாலம்.

ஆகமனம்-வந்துசேருதல்.

† ஆகமனித்தல்-வருதல்.

ஆகமன்-சிவன்.

† ஆகமிலி-மன்மதன்.

ஆகம்-உடல், சுரை, பாரை, மார்பு.

ஆகம்பிதமுகம்-சினத்தானுஞ் சம்மதியானும் மேல்கீழ்த் தலையாட்டல்.

ஆகம்பிதம் - சம்மதக் குறிகாட்டு முகம், நடுக்கம்.

ஆகரணம்-ஏவுதல், பிடித்தல்.

† ஆகரணன்-ஏவலன்.

ஆகரம்-உறைவிடம், குற்றுடைவாள், சாலாங்கபாஷாணம், சுரங்கம், திரள், மண்வெட்டி, மேலானது, வீடு. *

ஆகரன்-கள்வன், குடியிருப்போன்.

ஆகரி-ஓரிராகம், திப்பிலி.

† ஆகருஷணத்தம்பனவாதம் - ஓர்வகைவாதரோகம்; அதுசரீரத்தை வில்லைப்போலிழுத்திழுத்து வளைத்துச்சற்றுநேரமிமிரவொட்டாமல் ஸ்தம்பிக்கச்செய்வதோ டிமையாடாதிருத்தல், தாழ்வாய்க்கட்டை பிடிப்பு, விலாவெலும்புச் சந்துக்களிற் றளர்ச்சி, வாயிற் கோழையுடனீர்சுரத்தல், வாந்தி, பகவிற்சுரமென்னு மிக்குணங்களை யுண்டாக்கும்.

ஆகருஷணம்
ஆகருடணம்
ஆகருஷணை
ஆகருடணை
ஆகருஷித்தல்
ஆகருடித்தல் } அட்ட கருமத்தொன்று, அழைத்தல், இழுத்தல், கலைஞான மறுபத்து நான்கி னொன்று.

ஆகருணனம்-கேட்குதல்.

ஆகலநம்-எண்ணுதல், பிடித்தல், விருப்பம்.

ஆகல்-ஆகுதல்.

† ஆகவகளம்
ஆகவபூமி } போர்க்களம்.

ஆகவம்-சிலை, போர்.

ஆகவனம்-பலி.

ஆகவனீயம்-வேதாக்கினிமூன்றி னொன்று.

ஆகவே-ஆகையால்.

ஆகளரசம்-அபின்.

ஆகற்பகம்-இருள், பச்சாத்தாபம், மதிகெடல், முடிச்சு.

ஆகற்பம்-அதிகப்படுத்தல்,அலங்காரம்,நோய்.

ஆகனம்-கன்னக்கருவி, பாரை.

ஆகனிகம்-எலி, பன்றி, மண்ணகழ்கருவி.

ஆகனிகன்-ஒட்டன், கள்வன்.

† ஆகன்-விநாயகன்.

ஆகன்னம்-காதுபரியந்தம்.

ஆகா - எதிர்மறைப் பன்மைப்படர்க்கைவினை - முற்று, கந்தருவர், வியப்புச்சொல்.

† ஆகாக்கருமம்-ஒருகாலத்து முடியாதசெய்கை, தகாதசெய்கை.

ஆகாக்களங்கு-மிறுதாறுசிங்கி; அஃது முப்பத்திரண்டு பாஷாணத்தினொன்று.

† ஆகாக்காரியம்-நடைபெறாதகாரியம், தகுதியற்றகாரியம்.

ஆகாங்கிசை
ஆகாங்கிஷை } அவாய்நிலை, மிகுவிருப்பு.

ஆகாசகபாலம்-புரளித்தனம்.

ஆகாசகபாலி-புரளிக்காரன், மிகவல்லவன்.

ஆகாசகமனம்-ஆகாயகமனம்.

† ஆகாசகமனி - அந்தரமார்க்கமாய்ச் செல்லுவோன்.

ஆகாசகருடன் - கொல்லன்கோவை, சீந்தில், பேயத்தி.

ஆகாசகரை-மனோராச்சியம்.

ஆகாசகாமி-அந்தரமார்க்கமாய்ப் போகுங்குதிரை.

† ஆகாசகாமியர்-அந்தரமார்க்கமாய்ப் போகுங்குதிரையையுடையவர்.

ஆகாசக்கத்தரி-ஓர்கத்தரி.

ஆகாசக்கரைக்கட்டு-ஆகாசகரை.

ஆகாசக்கல்-சூரியகிரகணத்தணு.

† ஆகாசக்குணம்-ஆகாயத்தின் ஐவகைக்குணங்கள்; அவை ஆங்காரம், உலோபம், மதம், மானம், வெகுளியென்பன.

† ஆகாசசம்-அந்தரத்திற் பிறந்தது.

† ஆகாசச்சொல் -மூவகைச்சொல்லினுளொன்று; அது தானே கூறுதல்.

ஆகாசதீபம்-தீபாவளித்தீபம்.

ஆகாசத்தாமரை-அந்தரத்தாமரை, ஓர்நிலப்பூண்டு, கொட்டைப்பாசி, பொய்.

ஆகாசபட்சி-சாதகப்புள்.

† ஆகாசபதி-இந்திரன்.

ஆகாசபாலம்-ஆகாசகரை.

ஆகாசப்பட்சி-ஆகாசபட்சி.

† ஆகாசப்புளு-பெரும்பொய்.

† ஆகாசப்புளுகன்-பெரும்பொய்யன்.

ஆகாசப்பொய்-பெரும்பொய்.

† ஆகாசப்பொய்யன் - பெரும்பொய் சொல்பவன்.

ஆகாசமண்டலம்-பரதவுறுப்பு ளொன்று, வானமண்டலம்.

ஆகாசமயம்-சூனியம்.

ஆகாசமார்க்கம்-அந்தரவழி.

† ஆகாசமார்க்கன்-அந்தரவழியாகச் செல்லுவோன், ஆகாயகமனி.

ஆகாசம்-அந்தரம், ஆகாயம், இடம், ஓர்பூதியம், வான், வெளி.

ஆகாசயானம்-அந்தரகமனரதம்.

ஆகாசவல்லி-ஓர்கொடி, சீந்தில்.

ஆகாசவாசிகள் - அந்தரசஞ்சாரிகள், பதினெண் கணத்துளொருவர்.

ஆகாசவாணி-அசரீரிவார்த்தை.

ஆகாசி-சீந்தில்.

ஆகாசேசன்-இந்திரன்.

† ஆகாச்செயல் - செய்யத்தகாதசெயல், நிந்திக்கத்தக்ககாரியம், முடியாதகிரியை.

ஆகாடம்-வெண்ணாயுருவி.

ஆகாதம்-அடி, குளம், கொலை, கொலைக்களம்.

† ஆகாதன-முடியாதன.

ஆகாதனம்-கொலை, கொலைக்களம்.

† ஆகாத்தியக்காரன் - எதிரிடை செய்பவன், பொல்லாங்கு புரிவோன்.

ஆகாத்தியம்-எதிரிடை, பொல்லாங்கு.

† ஆகாத்தியன்-ஆகாத்தியக்காரன்.

† ஆகாமி-வருதல்.

† ஆகாமியகருமம்
† ஆகாமியகர்மம்
† ஆகாமியகன்மம் } மூவகைக் கன்மங்களுளொன்று; அது வருத்தமான சனனத்திற் செய்யப்பட்டு மறுசனனத்திற் கேதுவான கன்மம்.

ஆகாமியம்-அக்கிரமம், மூக்கன்மத்திலொன்று; அது வருங்கன்மம்.

ஆகாயகணம் - நிரையசை யிரண்டும் நேரசையொன்றுமாக வருவது (உ-ம்) நிரையெதிர்.

ஆகாயகமனம் - அந்தரமார்க்கமாய்ப்போதல், கலைஞான மறுபத்து நான்கிலொன்று.

† ஆகாயகமனி-அந்தரமார்க்கமாகச் செல்லுவோன்.

ஆகாயகருடன்-ஆகாசகருடன், சீந்தில்.

ஆகாயகாமி-ஆகாசகாமி.

† ஆகாயகாமியர்-அந்தரமார்க்கமாய்ப் போகுங்குதிரையையுடையவர்.

ஆகாயக்கத்தரி-ஆகாசக்கத்தரி.

† ஆகாயக்குணம்-ஆகாசக்குணம்.

† ஆகாயசம்-அந்தரத்திற்பிறந்தது.

† ஆகாயச்சொல்-மூவகைச் சொல்லினுளொன்று; அது தானே கூறுதல்.

ஆகாயத்தின்குணம்-ஆகாயக்குணம்.

ஆகாயத்தின்கூறுபாடு - இராகம், இலச்சை, துவேஷம், பயம், மோகம் என்பன.

ஆகாயத்தாள்-ஒட்டடை.

ஆகாயபதவி-திரிசங்குபதவி.

† ஆகாயபதி-இந்திரன்.

ஆகாயப்பிரவேசம் - அந்தரத்துட்புகுதல், கலைஞான மறுபத்து நான்கிலொன்று.

ஆகாயமஞ்சி
ஆகாயமாஞ்சி } சிறுசடாமாஞ்சி.

ஆகாயம்-அட்டமூர்த்தத் தொன்று, பஞ்சபூதியத்தொன்று, வான்.

ஆகாயவழுதலை-ஓர்வழுதுணை.

† ஆகாயவாசியர் - அந்தரத்தில் வசிப்பவர், தேவர், பதினெண்கணத்து ளொருவர்.

ஆகாயவாணி-ஆகாசவாணி.

ஆகாயவீதி-நட்சத்திரவீதி.

ஆகாரசுத்தி-மாசாலம்.

ஆகாரசம்பவம்-நிணம்.

ஆகாரணம்-அழைத்தல்.
ஆகாரதாகம்-வீடுசுடுதல்.
ஆகாரம் - அடையாளம், உடல், ஓரெழுத்து, நெய், போசனம், மனப்பொது, வடிவு.
ஆகாரி-உயிர், பூனை.
ஆகாவம்-நீர்த்தொட்டி, யுத்தம்.
ஆகிஞ்சனம்-தரித்திரம்.
† ஆகிஞ்சனன்-வறியன்.
ஆகிரதம்-வணங்கல்.
ஆகிராந்தம்-புன்குமரம்.
ஆகிரம்-விரிவு.
ஆகிருதி - அங்கம், அடிதோறுமிருபத்திரண்டசைகொண்டு நான்கடியாய் முடியும் பாட்டு, உடல், மாதிரி, வடிவு.
ஆகிருநனந்தம்-புன்குமரம்.
† ஆகீசன்-விநாயன்.
ஆகு-எலி, கள்வன், கொப்பூழ், சாமரை, பன்றி, பெருச்சாளி.
ஆகுகன்-கணபதி.
ஆகுஞ்சனம்-அடக்குதல், குவித்தல், விளைத்தல்.
ஆகுண்டிதம்-கோழை.
ஆகுதம்-உயிர்க்குறுதிசெய்தல்.
† ஆகுதல்-ஆகல்.
ஆகுதி-ஓமாக்கினியி னெய்விடுதல், பலி.
† ஆகுபதி -பெருச்சாளிவாகனத்திற் கதிபதியாகிய விநாயகர்.
ஆகுபாஷணம் - எலிப்பாஷாணம், வெள்ளைப்பாஷாணம்.
† ஆகுபு-செய்புஎன்னும் வாய்பாட்டான்வந்த ஆகியென்னும் பொருடருமோரிறந்தகால வினையெச்சம்.
ஆகுபுகு-பூனை.
ஆகுபெயர்-சம்பந்தமான வொன்றின் பெயர் மற்றொன்றிற்கு வழங்குவது.
ஆகுரதன்-கணபதி.
ஆகுலத்துவம்-கலக்கம்.
ஆகுலம் - ஆரவாரம், ஒலி, கலக்கம், துன்பம், வருத்தம்.
ஆகுலி-ஆவிரை, கலக்கம், சிற்றரத்தை.
ஆகுலித்தல் - அழுதல், ஆரவாரித்தல், வருந்துதல்.
† ஆகுவது-ஆவது.
† ஆகுவன-ஆவன.
ஆகுவாகனன்-விநாயகன்.
ஆகுளி-சிறுபறை.
ஆகுனி-வாதமெண்பதினென்று.

ஆகூதம்-அழைப்பு, கருத்து, விருப்பம்.
† ஆகூர்தி-கணபதி.
ஆகேடகம்-வேட்டை.
ஆகேறு-கொன்றை.
ஆகை-சம்பவிக்கை.
ஆகோடிபம்-தடை, மறியல்.
ஆக்கச்சொல்-ஆக்கம்பெற்று வருஞ்சொல்.
ஆக்கஞ்செப்பல் - பத்தவத்தையி னொன்று; அது தன்மனவருத்தத்தைப் பிறர்க் குரைத்தல்.
ஆக்கதம்-முதலை.
ஆக்கப்பெயர்-இடுகுறிப்பெயர்.
ஆக்கப்பொருள்-ஆகுபெயர்ப்பொருள்.
† ஆக்கமன்-ஆக்கப்பொருளைக்காட்டுமன்னென்னுமோரிடைச்சொல்; அது பண்டு காடுமன்னெனபதி லின்றுவயலாயிற்றென்பது செல்வத்தையுடைவரசன்.
ஆக்கம்-ஆகுதல், இலக்குமி, இலாபம், எழுச்சி, கொடிப்படை, செல்வம், படைவகுப்பு, பெருக்கம், பொன்.
ஆக்கல்-சமைத்தல், செய்தல், படைத்தல்.
ஆக்கவினை - ஆக்கத்தால்வரும் வினைச்சொல்.
ஆக்கவினைக்குறிப்பு - ஆக்கச்சொல் விரிந்தேனுந் தொக்கேனு நிற்பது (உ-ம்) பெரியன்.
ஆக்கவும்மை - ஆக்கத்தைக் காட்டு மிடைச்சொல் (உ-ம்) பாலுமாம் மருந்துமாம்.
† ஆக்கி- சமைத்தென்னும் பொருடருமிறந்தகாலவினையெச்சம், சமைப்பவன்.
ஆக்கினேயம் - தென்கீழ்த்திசை, பதினெண்புராணத்தொன்று, விபூதி.
ஆக்கியம் } † எழுவாய், நாமம்.
† ஆக்கியா }
ஆக்கியாதம்-சொல்லல், † பயனிலை.
ஆக்கியாபித்தல்-கட்டளையிடல்.
ஆக்கியானம்-கட்டுக்கதை.
ஆக்கியோன்-செய்தோன், படைத்தோன்.
ஆக்கிரகம் - ஆங்காரம், கடுங்கோபம், சூரம், தத்துவம், தாபரிப்பு, பொல்லாங்கு, மேற்கொள்ளுதல்.
ஆக்கிரகாயணி-மிருகசீரிடம், யாகமிருபத்தொன்றினொன்று.
ஆக்கிரகித்தல்-உக்கரித்தல், தாபரித்தல், பலவந்தமாயெடுத்தல், வலிமைகாட்டல், வெல்லல்.
ஆக்கிரந்திதம் - ஆஸ்கந்திதம், குதிரையின் விரைவுநடை.

ஆக்கிரமம்-அடைதல், எதிர்த்தல், கடத்தல், சுமத்தல், பரப்பல், விரித்தல்.
ஆக்கிரமித்தல்-ஆங்காரம் பண்ணுதல்.
ஆக்கிரயணம்-யாகமிருபத்தொன்றி னொன்று.
ஆக்கிராணம்-திருத்தி, மணத்தல், மூக்கு, மூக்குப்பொடி.
ஆக்கிராணவிந்திரியகாட்சி-ஓரளவை;அது கந்தமறிதல்.
ஆக்கிராணவிந்திரியம்-மூக்கு.
ஆக்கிராணித்தல் - மணத்தல், மூக்கிற்றாளிடுதல்.
ஆக்கிராந்தி - கடந்துபோதல், மேற்கொள்ளுதல்.
ஆக்கிராயணம்-விளைவு காவல்செய்தல்.
ஆக்கிரிடம் }
ஆக்கிரிஷம் } கோபம்.
ஆக்கிரீடம் }
ஆக்கிரீஷம் } ஆராமம், பொழுதுபோக்கு.
ஆக்கிரோசகம் }
ஆக்கிரோசம் } ஆணைசாபம்,துர்ப்பாவனை
ஆக்கிரோசனம்-சாபம்.
ஆக்கினைகரணம்-கீழ்ப்படிதல்.
ஆக்கினைகரன்-ஏவல்செய்வோன்.
ஆக்கினைசக்கரம் - ஆணை, செங்கோன்முறைமை.
† ஆக்கினைதானம்-இலாடத்தானம்.
ஆக்கினைபங்கம்-கீழ்ப்படியாமை.
† ஆக்கினைபங்கன்-கீழ்ப்படியாதவன், வணங்காதவன்.
ஆக்கினைபத்திரம்-கட்டளைச்சட்டம்.
† ஆக்கினைபயதி-ஆணைவேதி.
ஆக்கினிஸ்நானம்-எழுவகை ஸ்நானத்தொன்று; அது விபூதி யுத்தூளனமாய்ப் பூசுதல்.
† ஆக்கினீயம்-ஆனிமாதம்.
ஆக்கினேயம்-ஓரஸ்திரம், பதினெண்புராணத்தொன்று; அஃது அக்கினிபுராணம்.
ஆக்கினை-ஆருதாரத்தொன்று; அஃது இலாடத்தானம், கட்டளை, தண்டனை, முன்னிலையொருமை வினைமுற்று.
† ஆக்கினைச்சட்டம்-ஆக்கினைப்பத்திரம், கட்டளை, தண்டனைச்சட்டம்.
† ஆக்கு-ஆக்கென்னு முன்னிலையேவலொருமை, பெயரெச்சத்தொகை.
ஆக்குகை }
ஆக்குதல் } ஆகச்செய்தல், குணமாக்குதல், கைதூக்கிவிடல், சமைத்தல்.
ஆக்குரோசம் - கோபம், மூர்க்கமானசத்தம், வைதல்.
ஆக்குரோசனம்-வைதல்.
† ஆக்குரோசன் - ஏசுவோன், கோபமுடையோன், மூர்க்கமாயவயமிடுவோன்.
ஆக்குரோடம்-மார்பு.
ஆக்குவயம்-நாமம்.
† ஆக்குவித்தல்-ஆகச்செய்வித்தல், குணமாக்குவித்தல், கைதூக்கிவிடுவித்தல், சமைப்பித்தல், சிருட்டிப்பித்தல்.
† ஆக்கேபம்-ஆட்சேபம்.
† ஆக்கேபிக்கை-ஆட்சேபிக்கை.
† ஆக்கேபித்தல்-ஆட்சேபித்தல்.
† ஆக்கேபிப்பு-ஆட்சேபிப்பு.
ஆக்கை-உடம்பு.
† ஆக்கையிலான் }
† ஆக்கையிலி } மன்மதன்.
† ஆக்கையில்லான் }
ஆக்கொத்துமம்-கொன்றை.
ஆக்கொல்லி-ஓர்புழு.
ஆங்க-ஓரசைச்சொல்.
ஆங்கண்-அவ்விடம், ஊர்.
† ஆங்கரிக்கை }
† ஆங்கரித்தல் } ஆங்கரிக்குதல்.
† ஆங்கரிப்பு-ஆங்காரிப்பு.
ஆங்காரம்-இறுமாப்பு, கெருவம்.
† ஆங்காரன் - கெருவமுடையவன், செருக்குடையோன்.
ஆங்காரி-செருக்கன்.
ஆங்காரித்தல்-செருக்குதல், காட்டுதல்.
† ஆங்காரிப்பு - இறுமாப்பு, கெருவம், செருக்கு.
† ஆங்காரியம்-செய்துமுடிக்கக் கூடியகாரியம், செய்யத்தகுங்காரியம்.
ஆங்காலம்-ஆகுங்காலம்,நற்காலம்.
ஆங்கிரசம்-ஆங்கீரசம்.
ஆங்கிரசன்-ஆங்கீரசன்; † இவன்வடமொழி வைத்திய சாத்திரங்களில் மிகவும்பேர்போனவோரிருடி.
ஆங்கிரம்-அட்டாதசவுபபுராணத்தொன்று.
ஆங்கிரன் }
ஆங்கிரா } ஆங்கிரசன்.
ஆங்கீரச-ஓர்வருடம்.
ஆங்கீரசம்-தருமநூல் பதினெட்டினொன்று.
ஆங்கீரசன்-சத்தவிருடிகளிலொருவன்.
ஆங்கு - அக்காலத்தே, அசைச்சொல் (உ-ம்) விருந்தொக்கரு னொன்ருங்கு, அவ்விடம், உவமைச்சொல் (உ-ம்) மகற்கண்டதாய் மறந்தாங்கு.

ஆங்஗னம் - அங்஗னம்.
ஆசகவம் - சிவன்வில்.
ஆசகாரம் - சிவனேறு.
ஆசங்கம் - அடர்த்தி, கூட்டம், சேர்த்திக்கை.
ஆசங்கித்தல் - ஐயங்கொள்ளல்.
ஆசங்கிப்பு-சந்தேகம்.
ஆசங்கை - ஐயம், பயம்.
ஆசட்சு - கண்.
† ஆசத்தன்-விருப்புடையவன்.
ஆசத்தி - சம்பாத்தியம், விருப்பம்.
ஆசந்தன் - விட்டுணு.
ஆசந்தி - பாடை.
ஆசமனகம் - துப்பற்காளாஞ்சி.
ஆசமனம் - உட்கொள்ளல், சிறுகநீருட் கொள்ளல்.
† ஆசமனித்தல்-உட்கொள்ளுதல், குடித்தல்.
† ஆசமனிப்பு-உட்கொள்ளுகை,நீருருந்துகை.
ஆசமனியம் - ஆசமனஞ் செய்தற்குத்தகுதியான நீர்.
† ஆசமனீயதிரவியம் - ஆசமனீயத்திற் குரிய பொருள்கள்; அது ஏலம், கிராம்பு, சாதிக்காய், சண்பகப்பூமொட்டு, பச்சைக்கருப்பூரம், பூலாங்கிழங்காகிய வாறுமாம்.
† ஆசமனீயம்-ஆசமனியம்.
ஆசமித்தல் - குடித்தல், நீர்முதலியவற்றைச் சிறுகவுட்கொள்ளல், விழுங்கல்.
ஆசமிப்பு - குடிப்பு, உட்கொள்வது.
ஆசம் - இருக்கை, உரைகல், சிரிப்பு, நெய், வில்லு.
ஆசயம்-அதிட்டம், ஆதனம், இட்டம், இரைக்குடர், உறைவிடம், குணம், சுபாவம், தங்குமிடம், புகலிடம், மனம்.
ஆசரணம் } ஆசரிப்பு, வழிபாடு.
ஆசரணை }
† ஆசரிக்கை - அனுட்டிப்பு, கைக்கொள்ளுதல், கொண்டாடல், வணங்குதல், வழிபடுதல்.
ஆசரித்தல்-அனுட்டித்தல்,கைக்கொள்ளுதல், கொண்டாடுதல், வழிபடுதல்.
ஆசரிப்பு-கொண்டாட்டம், வழிபாடு.
ஆசரிப்புக்கூடாரம்-வழிபாட்டுப் படாம் வீடு.
ஆசவத்திரு-பனைமரம்.
† ஆசவபாண்டேசுரன் - காசியி லிருக்குமோர்ற்பதேவதை; அதையுபாசித்துவந்த சான்றானுக்கு மவன் மனைவிக்கு மது கட்குடத்திற்றேன்றி யனுக்கிரகஞ்செய்த தென்பதோரைதீகம்.

ஆசவம்-கள்.
ஆசவுசம்-ஆசூசம்.
ஆசறுதி-முடிவு.
† ஆசனபேதம் - ஆசனத்தினது பகுப்பு; அது சித்தாசனம், சிங்காசனம், சுவத்திகாசனம், சவ்வியாசனம், சூலாசனம், சுகாசனம், சர்வதோ பத்திராசனம், கோமுகாசனம், கருடாசனம், மயூராசனம், மச்சேந்திராசனம், மற்சாசனம், முற்கராசனம், மண்கோசனம், மிருகாசனம், நாகாசனம், குக்குடாசனம், குஞ்சராசனம், கூர்மாசனம், காஷ்டாசனம், கிரவுஞ்சாசனம், கடகாசனம், காமதகனாசனம், வியாக்கிராசனம், வைனிகாசனம், வத்திராசனம், வாசவாசனம், வீராசனம், வராகாசனம், பரியங்காசனம், பதுமாசனம், பதாசனம், பச்சிமத்தானாசனம், திரிபதாசனம், அத்தாசனம், அயிம்மாசனம், அர்த்தாசன மென்பனவாம்.
ஆசனமேற்றல்-உட்காருவித்தல்.
ஆசனம் - இராசசின்னத்தொன்று, இருப்பு, பீடம்.
ஆசனவாயில்-மலவாயில்.
ஆசனனகாலம் - பின்னேரம், மரணவேளை.
ஆசனனம்-பின்பொழுது.
ஆசனன்-சுக்கிரன்.
ஆசனுத்தம்-நிலைக்கண்ணுடி.
† ஆசன்-சிரிப்புண்டாக்குவோன், நகையாடுவோன்.
† ஆசன்னப்பிரசவம் - ஓர்வகைப் பிரசவநோய்.
† ஆசன்னப்பிரசவரோகம் - ஓர்வகைப் பிரசவநோய்; அது வயிற்றிற் கருப்ப நிறைந்தின்றைக்கோ நாளைக்கோ வென்றிருக்குங் காலத்தி லாயாசம், வயிறுதளர்தல், கண்கள் குழிவிழுதல், பலவித விளைப்பு, சோகை, கீழ்வயிறு கனத்தல், அரோசகம், வாய்நீ ரூறல், அடிக்கடி நீரிறங்கல், தொடை வயிறு முதுகு இடுப்பு மார்பு கீழ்வயிறு அபானமென்னு மிவ்விடங்களில் நோதல், அல்குல் விரிதல், அவ் வல்குலில திரல், வேதனை, சிலவேளைகளி லூசியாற் குற்றல்போற் குற்றல், சலம் பெருகுதல் முதலிய குணங்களை யுண்டாக்கும்.
ஆசாசி-சீந்தில்.

ஆசாடம் } ஆடிமாதம், பொதியமலை, மரக்
ஆஷாடம் } கொம்பு, முருக்கு.

ஆசாட்டம்-அழுகை, தோற்றம்.

ஆசாதனம்-வஸ்திரம்

ஆசாதிதம்-பெறுபேறு.

ஆசாபங்கம்-நம்பிமோசம்போதல்.

† ஆசாபங்கன் - நம்பி மோசம்போனவன், முற்றுந் துறந்தவன், விருப்பமற்றவன்.

ஆசாபந்தம்-சிலம்பிநூல், நம்பிக்கை.

ஆசாபாசம்-ஆசைமயக்கம், ஆசையாகியகட்டு.

ஆசாமி-இடமுள்ளவன், நபர்.

† ஆசாரகாண்டம்-நான்கு வருணத்தாருக்குமுரிய தருமங்களும் பிறவாசாரங்களுஞ் சொல்லப்படுமோர் காண்டம்; அது விஞ்ஞானமென்னுந் தரும சாத்திரத்திலோர் காண்டம்.

ஆசாரக்கள்ளன்-மாயக்காரன், முகத்துதிசெய்பவன்.

† ஆசாரக்கள்ளி-மாயக்காரி, முகத்துதிசெய்பவள்.

ஆசாரச்சாவடி-ஆசாரவாயில், பொதுச்சாவடி.

ஆசாரபோசன்-பெருந்தேகி.

ஆசாரப்பிழை - அசுத்தம், ஒழுங்கின்மை.

ஆசாரம்-அரசிருக்கை, அனுட்டானம், ஒழுக்கம், கட்டளை, சீலை, சுத்தம், படைவளைப்பு, பிரதிஷ்டைபண்ணல், பெருமழை, முப்பொருளினொன்று; அஃது அறப்பொருள், வழக்கம், வழிபாடு.

ஆசாரவாசல் } தலைவாசல், வெளிவாயில்.
ஆசாரவாயில் }

† ஆசாரவிதம்-ஆசாரத்திற் குரியவிதம்; அது ஒழுக்கம், வழக்கு, தண்டமென மூவகைப்படும்.

† ஆசாரன்-ஒழுக்கமுடையவன்.

ஆசாரீ-உவாத்தி, ஒழுக்கமுள்ளவன், கம்மாளன், குரு, பணிக்கன்.

† ஆசாரியதண்டி - தமிழிற் றண்டியலங்காரமென்னு நூலியற்றிய வித்துவான், வடமொழியிற் காவிய தரிசமென்னு மலங்கார சாத்திர மியற்றிய தண்டியென்னு மியற்பெயரையுடைய வோராசிரியன்.

ஆசாரியபிஷேகம்-ஆசாரியாபிடேகம்.

ஆசாரியபுருஷன்-ஆசாரியன்.

ஆசாரியவிருத்தனம்-ஆசாரியாதிகாரம்.

ஆசாரியன்-ஆசாரி, துரோணன்.

ஆசாரியாபிஷேகம் } குருவுத்தியோகத்திற்கு
ஆசாரியாபிடேகம் } நியமித்தல்.

ஆசாள்-குருவின்றேவி, தலைவி.

ஆசானுபாகு } உத்தம புருடன், முழந்தாளளவுநீண்டகையுடையோன்.
ஆசானுவாகு }

ஆசான் - அருகன், உவாத்தி, கம்மாளன், குமரன், குரு, சுக்கிரன், தலைவன், பணிக்கன், பாலையாழ்த்திறம், மூத்தோன், வியாழன்.

† ஆசான்சாதி - ஆசானென்னும் பண்ணியலாகிய சாதி; அது அகச்சாதி, புறச்சாதி, அருகு சாதி, பெருகு சாதி யெனநான்கு வகைப்படும். அவற்றுள் அகச்சாதி காந்தார மெனவும், புறச்சாதி சிகண்டியெனவும், அருகுசாதி தசாக்கரி யெனவும், பெருகுசாதி சுத்தகாந்தார மெனவுங் கொள்ளப்படும்.

ஆசி-ஆசியென்னேவல், சமநிலம், நிந்தை, யுத்தம், வாழ்த்து.

† ஆசிகரோகம்-ஓர்வகையுரோகம்; அது இரத்தத்தாற் கருவிழியி லாட்டின் புழுக்கையைப்போ லுயர்ந்தும் பளபளத்து மிருக்கின்ற விரணக் கொப்பளத்தை யுண்டாக்கிச் சுற்றிலுஞ் சிறுசிறு கொப்பளக்கணிறையக் கண்ணிலதிக நோவையு முதிரம்போற் சிவந்த சலவொழுக்கையு மிகுவிக்கும்.

ஆசிகன்-வாட்காரன்.

ஆசிகூறல்-ஆசீர்வதித்தல்.

ஆசிக்கல்-காகச்சிலை.

ஆசிடல்-ஆசிடையிட்டுக் கொள்ளல், பொன்பற்றவைத்தல்.

ஆசிடை - ஆசாக இடையிட்டுக்கொண்டசொல், கூட்டம், சீலை, வாழ்த்து.

ஆசிடையிட்டெதுகை-பதத்தின் முதலெழுத்திற்குமிரண்டாமெழுத்திற்கு மிடையேயிறிதோர்மெய்பெற்றுவழங்குமெதுகை (உ-ம்) ஆவேறு பால்வேறு.

ஆசிடைவெண்பா - ஆசிடை யிட்டவெண்பா.

† ஆசிட்டநெடிலெதுகை-செய்யுட்களினடிகளிலுள்ள முதலெழுத்திற்கு நெடிலாயவிரண்டா மெழுத்திற்கு மிடையி லொன்றோ விரண்டோ மெய்பெற்று வழங்குமெதுகை. (உ-ம்) ஆய்ந்தாய்ந்து தான் சாந்துயரம்.

ஆசிதசுதன்-சகரசக்கரவர்த்தி.

ஆசிதம் - ஆசனம், நகரம், பத்துப்பறைகொண்டது.

ஆசிதையன்-நாவிதன்.

ஆசித்தல்-விரும்பல்.

ஆசிப்பு-ஆசை.

† ஆசியகதகரான்னவிலக்கணம் - விடங்கலந்தவன்னத்தைவாயிற்போட்டுமிழ்ந்தோர்க்குண்டாகுங்குணம்; அது வாயில் நீர்வடிதல், அதரமு நாவுமதர்த்தல், விருவிருத்தல், தந்தங்கள் சிலுசிலுத்தல், அறுசுவையுமுருசிமாறுதல் முதலியனவாம்.

† ஆசியக்காரன் - சிரிப் புண்டாக்குவோன், நகையாடுவோன்.

† ஆசியக்காரி - சிரிப்பவள், சிரிப்புண்டாக்குபவள்.

† ஆசியக்குவாதவாதம் - ஓர்வகை வாதரோகம்; அது ஆசியவாதங்களை யுண்டாக்குதற்குரியவத்துக்களினுற்பிறந்து வாயிலிருந்துகொண் டுபத்திரவத்தைச் செய்யும்; அக்காலத்தில் வாயிலொருவத்துவையும் போடக்கூடாம விரணம்போலிருப்பது மன்றி நாவில் மேடும் பள்ளமுமாதல், மார்பு நோதல், கண்டத்திற் குருகுருவென்னுந் தொனிசேட்ட லாகிய விக்குணங்களை யுண்டாக்கும்.

ஆசியபத்திரம்-தாமரை. *



† ஆசியபாகபித்தம் - ஓர்வகைப் பித்தநோய்; அதுவாயிற் கொப்பளங்க ளெழும்பிப் பழுத்துடைதல், மார்பில் நெருப்பிட்டதுபோலெரிதல், சகல வத்துவு மரோசித்தல், மலம் பந்தித்தல், பலவீனமாதல், ஏப்பம், சுரம், சீதளம், மந்தாக்கினி, துர்க்கந்தம், தொடை நோவு, கோபம், கொட்டாவி, விக்கல், சூலை, அற்பவுணவாகிய விக் குணங்களை யுண்டாக்கும்.

† ஆசியபாகவாதம்-ஆசியக்கு வாத வாதரோகம்.

ஆசியம்-அவமதிச்சிரிப்பு, அவ்விடம், சருஞ்சீரகம், முகம், வாய்.

ஆசியாசவம்-உமிழ்நீர்.

† ஆசியாட்சேபவாதம் - ஓர்வகை வாதநோய்; அது கிழங்கு, இலை, கீரை, வேர், கனி, காய், எண்ணெய், மாமிச முதலியவைகளையுட்கொள்ளுவதினுற் பிறந்து காது, நாசி, தாடை, வாய்முதலிய விடங்களிற் சஞ்சரித்துக்கொண்டிருக்கும். அக்காலத்தில் நாக்குத்தம்பித்தல், தழுதழுத்துப்பேசுதல், பற்கடித்தல், சிரசு, முகம், பாதமுதலியன துடித்தல், பிரமித்தல், கழுத்தில் நோதல், நரம்புகள் வலித்தல், இரத்தங் கக்கல், பார்வை சிதறல், மறத்தல், சரீரமதர்த்தல், நாசியில் நோதல், பீனசம் வடிதலாகிய குணங்களை யுண்டாக்கும்.

ஆசிரபத்தன்-மூலநட்சத்திரத்திற்பிறந்தவன்.

ஆசிரபம்-மூலநட்சத்திரம்.

ஆசிரமம்-ஆச்சிரமம்.

ஆசிரம்-இடம், தீ.

ஆசிரயம்-இடம், இருத்தல், கொள்கொம்பு, சமீபம், புகலிடம், வழக்கு, வாசம்.

†. ஆசிரயவிகீனன்-உவமைப்போலி பதினெட்டனுளொன்று; அது இந்த வேதுசாத்தியங்களுக் காகாயத்திற் பூப்போல வென்கிற திருட்டாந்தம் பொருந் துகையினுலென்பது.

† ஆசிரயவீனன்-உவமைப்போலி பதினெட்டனுளொன்று; அது இந்த வேதுவுக்குத் தானே ஆகாயத்திற் பூப்போல வென்கிற திருட்டாந்தமாயிருக்கிறவாகாயபுட்ப மில்லாதபடியினு லென்பது.

ஆசிரயன் - † சமீபத்தி லுள்ளவன், தற்காப்போன்.

† ஆசிரயிகர்-தொண்ணூற்றெருசாதியிலொருசாதியார்.

† ஆசிரயித்தல் - அனுட்டித்தல், கைக்கொள்ளல், விரும்பல்.

ஆசிரவம் } இணக்கம், உடன்படிக்கை, உபத்திரவம்.
ஆசிராவம் }

† ஆசிரிதம்-ஆசிரயமானது.

† ஆசிரிதர்-பொருந்தினவர்.

† ஆசிரிதன்-திஷ்யந்தன் பௌத்திரன்; இவனுக்குப் பாண்டியன், சோழன், கேரளன் என மூவர் புத்திரர். இவர் மூவரும் தனித்தனி வமிசத்தராய்ப் பின்னர் பிரகாசிக்குமாறு தத்தம் பெயரால் ஜனபதங்களை யுண்டாக்கினுர், பற்றுகிறவன்.

ஆசிரியச்சீர்-ஆசிரியப்பாவிற் குரியதளை; அது மா நாள் என்னும் வாய்ப்பாடுகளின்பின் னேரசையும் விள மலர் என்னும் வாய்ப்பாடுகளின் பின் னிரையசையும் வருவது.

† ஆசிரியச்சுரிதகம்-கலிப்பாவி னுறுப்புகளானுள் தனிச்சொற்குப் பின்னர் மூன்றடி

யிற் குறையாது பலவடியா லாகிவரு மா சிரியப்பா.

† ஆரியத்தளை-ஆசிரியச்சீர்.

ஆசிரியத்தாழிசை - அகவற் பாவினத்துளொன்று; அஃது எனைத்துச்சீரானுந் தம்முளளபொத்து மூன்றடியாய்த் தனித்தேனும் ஒருபொருண்மேல் மூன்றடுக்கியேனும்வருவது.

† ஆசிரியத்துள்ளல்-துள்ள லோசை மூவகையு ளொன்று; அது வெண்டளையுங் கலித்தளையுங்கலந்துவருதலாற்பிறக்குமோசை.

ஆசிரியத்துறை - அகவற்பாவினத்து ளொன்று; அஃது எனைத்துச் சீரானும் வருமடி நான்குடைத்தாய் ஈற்றயலடிகுறைந்தேனு மிடை மடங்கியேனு முதலடியு மூன்றாமடியுங் குறைந்தேனும்வரும்.

† ஆசிரியத்தூங்கல்-தூங்கலோசைமூவகையு ளொன்று; அது ஒன்றாதவஞ்சித்தளையாற் பிறக்கு மோசை.

† ஆசிரியநிகண்டு-ஆசிரியப்பாக்களாற் செய்யப்பட்டவோர் நிகண்டு.

ஆசிரியநிலைவிருத்தம் - அடிமறியாதே வருவது.

ஆசிரியப்பா - ஐந்துபாவி னொன்று; அஃது அகவல்.

ஆசிரியமண்டலவிருத்தம் - அடிமறியாக வருவது.

† ஆசிரியமதம்-ஆசிரியர்க் குரிய மதங்கள்; அவை பிறர்மதத்திற் குடன்படுதல், பிறர் மதத்தை மறுத்தல், பிறர் மதத்திற் குடன்பட்டுப் பின்பு மறுத்தல், தானொரு பொருளையெடுத்து நாட்டி அதனை வருமிடந்தோறு நிறுத்தல், இருவரால் விரோதமாகக் கொள்ளப்பட்ட விரண்டனு ளொன்றனிடத்துத் துணிதல், பிறர் நூலிலுள்ள குற்றத்தை யெடுத்துக் காட்டல், பிறர் மதத்திற் குடன்படாதுதித் தன் மதத்தைக்கொள்ள லென்பனவாம்.

ஆசிரியம் - ஆசிரியப்பா, இருத்தல், கொள்கொம்பு.

† ஆசிரியரிலக்கணம் - ஆசிரியாது இலட்சணம்; அது உயர் குடிப்பிறப்பு சிவகாருண்யம் கடவுள் வழிபாடிவைகளா லாகிய மேன்மையும், பலநூல்களிற் பழகிய தேற்றமும், நூற்பொருளை மாணுக்க ரெளிதிலுணரும்படி தொடுத்துச் சொல்லும் வன்மையும், நிலத்தையும் மலையையும் துலாக்கோலையும் பூவையு மொத்த குணங்களும் இவைபோல்வனபிறவுமாம்.

ஆசிரியர் - உபாத்தியாயர், குரு, நூலாசிரியர்.

† ஆசிரியர்நல்லந்துவனர்-கடைச்சங்கப் புலவரு ளொருவர்; இவர் கலித்தொகை யென்னு நூல் செய்தவர்.

† ஆசிரியர்மதம்-ஆசிரியமதம்.

ஆசிரியவசனம் - குருவாக்கியம், பதினன்குரையி லோருரை.

† ஆசிரியவிசை-அகவ லோசை (உ-ம்) அகவலிசையனவகவன் மற்றவை ஏ ஓ ஈ ஆய் என் ஐ யென்றிறுமே.

ஆசிரியவிருத்தம்-அகவற்பாவினத்து ளொன்று, அஃது அளபொத்த கழிநெடிலடி நான்கினன் வருவது, ஓர்கவி.

ஆசிரியவுரிச்சீர்-அகவற்குரியசீர்.

† ஆசிரியவோசை-ஆசிரியப் பாவிற்குரிய சந்தம்; அது நேரொன்றாசிரியத்தளையாற் பிறப்ப தேந்திசையகவ லெனவும், நிரையொன்றாசிரியத்தளையாற் பிறப்பது தூங்கிசையகவ லெனவும் அவ்விரு தளைகளின் கலப்பாற்பிறப்ப தொழுகிசையகவ லெனவுஞ் சொல்லப்படும்.

ஆசிரியன்-உபாத்தி, குரு, நூலாசிரியன்.

ஆசிலேடம்-ஆலிங்கனம்.

† ஆசிலேடித்தல்-ஆலிங்கனம் பண்ணல்.

ஆசினி-ஆகாயம், ஈரப்பலா, மரவயிரம், மரவுரி.

ஆசீயம்-கருஞ்சீரகம்.

ஆசீர்வசனம், ஆசீர்வதித்தல், ஆசீர்வதிப்பு, ஆசீர்வாதம் } ஆசிகூறல், வாழ்த்து.

ஆசீவகப்பள்ளி-சமணமுனிவர்மடம்.

ஆசீவகர்-சமணமுனிவர்.

ஆசீவம், ஆசீவனம் } சீவனம்.

ஆசு - அற்பம், ஆசுமணை, இரு குறணேரிசை வெண்பா விடையிற் றனிச்சொற்கு முன்னிற்பது, இலக்கு, கவசம், குற்றம், கைக்கவசம், கைக்கருவி, சடுதி, சமிசை, நாற்கவியி னொன்று, நூலிழைக்குங் கருவிகளி னொன்று, தூசி, பற்றாசு, முப்பத்திரண்டு பாஷாணத்தொன்று.

ஆசுகம்-அம்பு, காற்று, பறவை.

ஆசுகவி-ஆசுகவிபாடும் புலவன், நாற் கவியி னொன்று; அஃது பொருளடிபாவணிமுதலி யனகொடுத்து மற்றொருவன்பாடுகவெனப் பாடுங்கவி.
ஆசுகன்-காற்று, வாயுதேவன்.
ஆசுகி-புட்பொது.
ஆசுணம்-அசோகு, அரசு.
ஆசுபத்திரி-ஓர்மரம்.
ஆசுமணை-நூல்சுற்றுங்கருவி.
† ஆசுமேசுவரம்-சிவத்தலங்களாயிரத்தெட்டி னொன்று.
ஆசுரதம்-சம்மதித்தல்.
ஆசுரம்-அசுரமணம்; அதுபெண்ணுக்குஞ் சுற் றத்துக்கும் வேண்டுவன கொடுத்துக் கொள்ளுமணம், இஞ்சி.
ஆசுரவைத்தியம்-இரணவைத்தியம்.
ஆசுரி-இரணவைத்தியன்.
ஆசுவயம்-விரைவு, வேகநுட்பம்.
ஆசுவயுசி-யாகமிருபத் தொன்றினொன்று.
ஆசுவலாயநீயம் - உபநிடத முப்பத்திரண்டி னொன்று.
† ஆசுவலாயனசூத்திரம்-உபநிடத முப்பத்தி ரண்டினு ளொன்று; அது ஆசுவலாயன னென்னு மகாவிருடியா லிருக்குவேத வி கித கருமங்களைக் குறித் தெழுதப்பட்ட வோர் சூத்திரநூல்.
† ஆசுவலாயனன்-ஓர் மகாவிருடி; அவன் இ ருக்குவேத விகிதகருமங்களைக் குறித்துச் சூத்திரஞ் செய்தவன்.
ஆசுவினம் } ஆசுவின் } ஆசுவீசம் } ஐப்பசிமாதம்.
ஆசூசம்-சூதகம்.
ஆசூடனம்-உரிஞுதல்.
ஆசூரம்-வெள்வெங்காயம்.
ஆசெடை-ஆசெடுத்தல்.
ஆசெதுகை-ஆசிடையிட்டெதுகை.
ஆசேசனம்-தெளித்தல்.
ஆசை-அன்பு, திசை, நீளம், பதினெண்குற்றத் தொன்று, பொன், மனத்தீக்குண மூன்றி னொன்று, மாயையாக்கை, விருப்பம்.
ஆசைப்பெருக்கம்-அவா, பேராசை.
ஆசையறுத்தல் - மனதின் சற்குணம்நான்கி னொன்று; அஃது விருப்பகற்றல்.
ஆசோதை-இளைப்பாறல்.
ஆசோத்தியம்-ஆயாசமின்மை.

ஆசௌசம்-அசுத்தம், அசூசம், தீட்டு.
ஆஸ்கந்திதம்-ஆக்கிரந்திதம்.
ஆச்சந்திரகாலம்-சந்திரனுள்ளமட்டும்.
ஆச்சந்திரார்க்கம் - சூரியசந்திரா ளுள்ளமட் டும்.



ஆச்சமரம்-மூகைப்புல்.
ஆச்சரியம்-அதிசயம்.
ஆச்சல்-அசைத்தல்.
ஆச்சா-ஓர்மரம். *
ஆச்சாட்டு-சிற்றீரம்.
ஆச்சாதநபலை-பருத்தி.
ஆச்சாதம் } ஆச்சாதனம் } உறை, புடவை, மூடி, மேல ங்கி.
ஆச்சி-தாய்.
ஆச்சிபூச்சி-ஓர்விளையாட்டு.
† ஆச்சியகந்தமேகம்-ஓர்வகை மேகரோகம்; அது மூத்திரமானது நெய்யை யொத்துத் துணியிற்றோய்த்துக் கொளுத்தினு லெரிவ தும் நாளொன்றுக்கு நான்குபடி யளவாக விறங்குவதுமாம்.
ஆச்சியசுத்தி-தக்கிருதசுத்தி, நெய்யினுற்சுத்தி செய்தல்.
ஆச்சியம்-நெய்.
ஆச்சிரமத்தான்-ஆச்சிரமத்தையுடையவன்.
ஆச்சிரமம்-நிலை, பன்னசாலை.
ஆச்சிரமி-ஆச்சிரமத்தையுடையோன்.
ஆச்சிரயம்-ஒருவனையடுத்திருத்தல், பாது கா ப்பு.
† ஆச்சிரயவிகீனன்-உவமைப்போலிபதினெ ட்டனு ளொன்று; அது ஆசிரயவிகீனன்.
† ஆச்சிரயவீனன் - உவமைப்போலி பதினெ ட்டனு ளொன்று; அது ஆசிரயவீனன்.
ஆச்சிராமம்-ஆளுகைசெல்லுமிடம், ஓரூர்.
ஆச்சிலை-கோமேதகம்.
ஆச்சு-ஆயிற்று.
ஆச்சுரிதகம்-குதிரைக்கனைப்பு, நொடித்தல்.
ஆச்சுவரி-அரசு.
ஆச்சேதம் } ஆச்சேதனம் } நறுக்குதல், வெட்டுதல்.
ஆச்சோதனம்-வேட்டை.
ஆஸ்பதம்-சத்து, புகலிடம்.
ஆஞா } ஆஞீ } தகப்பன்.
ஆஞ்சனேயன்-அனுமான்.
ஆஞ்சான்-அந்தரிப்பாயசைவது, கட்டிச்சாம் புங்கயிறு, சிறியதனிக்கொப்பு, நிறுக்குங்

கருவிகளின்கயிறு, மரக்கலப்பாய் கட்டுங் கயிறு.

ஆஞ்சான்பற்றி-மரக்கலப்பாய் கட்டும் ஸ்தம்பம்.

ஆஞ்சி - அலையல், ஏலம், கூத்து, சோம்பல், சோம்பு, விளையாடல்.

ஆஞ்சில்-ஓர்விதப்பூடு, சங்கஞ்செடி.

ஆஞ்செலகை-கப்பல், தெப்பம்.

ஆஞ்ஞாபித்தல்-கட்டளையிடல்.

ஆஞ்ஞை-அஞ்ஞை, ஆணை, ஆருதாரத் தொன்று; அஃது நெற்றித்தானம்.

ஆடகத்தி-குங்குமபாஷாணம்.

† ஆடகமாடம் - இரவிபுரம்; இது மலைநாட்டிற் கன்னியாகுமரிக்கு வடமேற் கெல்லையிலேழு நாழிகைவழித் தூரத்திலுள்ளது, திருவனந்தபுரம்.

ஆடகம் - † கூத்தாடுமிடம், சிறுநாகப்பூ, துவரை, நால்வகைப் பொன்களுளொன்று, பொன்.

† ஆடகாங்கநிதானம்-வடமொழியிற் சிறந்தவோர்வைத்தியநூல்.

ஆடகி-துவரைச்செடி.

ஆடகூடம்-செப்புமலை.

† ஆடகேசுரர்-பாதலத்தைக் காக்கின்றகோடியுருத்திரருட் டலைவர்.

† ஆடகேசுவரம் - சிவத்தலங்களாயிரத்தெட்டினொன்று.

ஆடம்-ஆமணக்கு, இருபதுகொத்துக்கொண்ட வோரளவு.

ஆடம்பரம்- இடம்பம், கண்மடல், கோபம், சந்தோஷம், துவக்கம், பெருமை, போர்ப்பறை, யானைபிளிறொலி, வேடிக்கை.

ஆடரி-சுப்பிரமணியன்.

ஆடலை-பூவில்லாமரம், பூவினா.

ஆடல் - அசைதல், குளித்தல், கூத்தாடல், கூத்து, செய்தல், சொல்லல், ஸ்நானஞ்செய்தல், நயச்சொல், புணர்தல், பொருதல், வார்த்தை, விசயம், விளையாடல்.

ஆடவர் - ஆண்மக்கள், இளையோர், பிராயமுப்பத்திரண்டிற்கு நாற்பத் தெட்டிற்குமிடைப் பட்டவர்; இவர் மன்னரெனவும் படுவர், புருடர்.

ஆடவிருத்தம்-வயது நாற்பத் தெட்டிற்கு மறுபதுக்குமூடானபருவமுள்ளவர்; இவர் மூத்தோ ரெனவும் படுவர்.

ஆடவள்-பெண், மங்கைப்பருவம், விருத்தை.

ஆடவன்-புருடன், வயது முப்பதின்மே னாற்பத்தெட்டுக்குட்பட்டவன்.

ஆடவை-ஏவல், நிருத்தசபை, பெண், மிதுனவிராசி.

ஆடற்கூத்தியர்-அகக்கூத்தாடுவோர்.

† ஆடற்கூறுபாடு-கூத்தினது பகுப்பு; அது தாண்டவம், நாட்டியம், நிருத்தமென மூவ்வகைப்படும்.

† ஆடற்பேதம்-கூத்தினது வேற்றுமை; அது நின்றாடல், வீழ்ந்தாடலென விருவகைப்படும்.

ஆடாதொடை }
ஆடாதோடை } பாவட்டை.

ஆடி - அளைந்து, உத்திராடநாள், கண்ணாடி, கர்க்கடகமாதம், காற்று, கூத்தாடி.

ஆடிக்கரு-கர்ப்போடக மேகம்.

ஆடிப்பட்டம் - ஆடிப்பருவத்திற் பயிரிட வுத்தேசிக்கு நாட்கள்.

ஆடிய-அளைந்த.

ஆடு-அசம், ஆடென்னேவல், கூத்து, கூர்மை, மறியாடு, மேடவிராசி, வெற்றி.

ஆடுகோல்-துலாநிற்குமரம்.

ஆடுதல்-ஆடல்.

ஆடுதின்னாப்பாலை }
ஆடுதின்னாப்பாளை } ஓர் மருந்துப்பூடு, புழுக்கொல்லி.

ஆடுதொடை-தொடையின் கீழ்ப்புறம்.

ஆடுபெந்தர்-நடைப்பந்தர்.

ஆடுமாலை-ஓரிடத்துந் தரித்திராதவன், யௌவனஸ்திரீ.

† ஆடுவான்-ஆடப்பட்டவன், நடேசன்.

ஆடூஉ-ஆண்மகன்.

ஆடூஉவறிசொல்-ஆண்பாண்மொழி.

ஆடை-சித்திரைநாள், சீலை, நேத்திரப்படலம், பனங்கிழங்கினுட்டோல், பால் முதலிய, வற்றினேடு, போர்வை.

ஆடையொட்டி-ஒட்டுப்புல், சிலைப்பேன்.

ஆடோபம்-பெருமை, வாயு.

ஆடோபன்-பெருமைக்காரன்.

† ஆடோபி-பெருமைக்காரி.

ஆட்காட்டி - † ஆள்காட்டுகின்றவள், † ஆள்காட்டுகின்றவன், ஓர்புள், சுட்டுவிரல்.

ஆட்கொல்லி-கொலைகாரன், † கொலைகாரி, பணம்.

ஆட்கொள்ளுதல்-அடிமைகொள்ளுதல், உருக்கொள்ளுதல்.

† உன்முகன்-சக்ஷுர்மனுவுக்கு நடுவலையிடம் பிறந்த புத்திரன், பாரிபுஷ்கரிணி, மக்கள் அங்கன், சுமனசன், கியாதி கிருது, அங்கிரசன், கயன்.
உன்மேதை-கொழுப்பு.
உன்மை-தசைபிடுங்குங்குறடு.
உன்னதம்-உயர்ச்சி, மேன்மை.
உன்னதி-வத்திப்பு.
உன்னமனம்-எழுச்சி.
உன்னம்-அன்னப்புள், மரம், தசைபிடுங்குங் குறடு, நினைவு, நீர்வாழ்பறவைப் பொது, மனம்.
உன்னயம்-உயர்வு.
உன்னயனம்-உந்நயம், அருத்தாபத்தி, ஆலோசித்தல், தியானம்.
உன்னலர்-பகைவர்.
உன்னல்-உன்னுதல், நினைத்தல்.
உன்னுகம்-காடி.
உன்னுமம்-உயர்த்துதல்.
உன்னுயம்-உயர்வு.
உன்னுலயம்-இதயம்.
உன்னி-அழிஞ்சில், குதிரை.
உன்னிப்பு-உயர்வு, ஊகிப்பு, கவனிப்பு, குறிப்பு, பலம், முயற்சி.
உன்னியம்-அயிக்கம்.
உன்னியர்-பந்துக்கள்.
உன்னுதல் - இழுத்தல், உந்தல், கிளர்தல், நினைத்தல், பாய்தல், விரைந்தெழும்பல்.

## ஊ

ஊ-உணவு, ஊன், ஓரெழுத்து, ஓரொலிக்குறிப்பு, வருத்தமாற்று தனுங்கல், வினையெச்சவிகுதி.
ஊகடன்-முருங்கை.
ஊகம்-ஊமத்தை, கருத்து, குரங்கு, தியானம், நினைவு, படைவகுப்பு, புலி.
ஊகனம்-தீர்த்தல், நியாயஞ் சொல்லுகை.
ஊகனி-துடைப்பம்.
ஊகாரம்-ஓரெழுத்து.
ஊகித்தல் - உத்தேசித்தல், நியாயஞ்சொல்லல், நினைத்தல், மட்டுக்கட்டுதல், யோசித்தல்.
ஊகிபாவை-யூகிபாவை.
ஊகை-யூகை.
ஊக்கம்-உண்மை, உயர்ச்சி, உள்ளமிகுதி, உற்சாகம், முயற்சி, வலி.
ஊக்கல்-எழுப்பல், ஏறுதல், தளர்த்தல்.
ஊக்கு-ஊக்கம், முயற்சி.
ஊக்குதல்-உற்சாகங்கொள்ளுதல், எழுப்பல், ஏறுதல், முயலுதல்.
† ஊங்கனூர்-சேர நாட்டிற் கடற்கரைக்கண்ணதோ ரூர்; இதன் பக்கமாகக் கடலில் வஞ்சத்தால் முளைத்துநின்ற ஒரு கடப்பமரத்தைச் சேரனொருவன் வெட்டினன்.
ஊங்கு-உயர்ச்சி, உவ்விடம், மிகுதி, முன்னிலையிடம், விசேடம்.
ஊங்கென-மிகவும்.
ஊசரத்திராவணம்-வெடியுப்பு.
ஊசரம்-பூவழலை.
ஊசலாடல்-அடிக்கடி போக்குவரத்தாயிருத்தல், ஊஞ்சலாடுதல்.
ஊசல்-அசைதல், ஊஞ்சல், ஊழல், ஓர் பிரபந்தம்; அஃது ஆசிரிய விருத்தத்தாலுதல் கலித்தாழிசையாலுதல் ஆடிரூசல் ஆடாமோ ஊசலென முடிவுறக்கூறுவது, பதனழிதல்.
ஊசா-மூக்குத்திக்கொடி.
ஊசாடுதல்-ஊடாடுதல்.
ஊசாட்டம்-உலாத்து, களவு, வரத்துப்போக்கு, விரைவு.
ஊசி-இழைவாங்கி, எழுத்தாணி, சூசி, நிரைக்கழு.
† ஊசிகன்-கிருதி புத்திரன்.
ஊசிக்கண் } ஊசித்தொளை.
ஊசிக்காது }
ஊசிக்காந்தம் - இரும்பிழுக்குங் காந்தக்கல், சலாகை, சும்பகம்.
ஊசிக்கார்-ஓர்வகைநெல்.
ஊசிக்கால்-மச்சுக்கால்.
† ஊசித்துளை-பாசம்.
ஊசித்தொண்டை-சிறுமிடறு.
ஊசிப்பாலை-ஓர்பாலை.
ஊசிப்புல்-ஓர்புல்.
ஊசிமல்லிகை-ஓர்மல்லிகை.
ஊசிமிடறு-சிறுத்தொண்டை.
† ஊசிமுல்லை-ஓர்வகை முல்லை.
ஊசிமுனை-ஊசிநுனி.
ஊசிமூலைத்தலைவாரை-ஓர்தலைப்பெட்டி.

ஊசுதம்-அச்சம்.
ஊசுதல்-நாறுதல், பதனழிதல்.
ஊஞ்சல்-ஊசல்.
ஊடகம்-ஓர்மீன்.
ஊஷம்-உவர்மண், விடியற்காலம்.
ஊஷணம்-சுக்கு, மிளகு, மிளகுக்கொடி.
† ஊஷிணை-திப்பிலி.
ஊஷரக்கல்-சுக்கான்கல்.
ஊஷரத்திராவணம்-வெடியுப்பு.
ஊஷரம் } பூவழலை.
ஊடரம் }
ஊடலுவகை-ஊடலினாலே கூடலின்பஞ் சிறந்ததெனக் கூறுவது.
ஊடல்-கலவியிற்பிணங்கல், பிரிவு, விரோதித்தல், வெறுத்தல்.
ஊடல்விரி-வெள்ளணியணிந்து விடுத்துழித் தலைவன் வாயில் வேண்டன் முதலாகப் பாங்கி தலைவனை யன்பிலைகொடியை யென்றிகழ்ந்த வீருகியவை.
† ஊஷவானு-உழமண் பூமி.
ஊடறுத்தல் - நடுவெறுத்தல், வழக்குத் தீர்த்தல்.
ஊடாடல்-கல்விபயிலல், நடமாடல், பழகல்.
ஊடாடிப்பார்த்தல்-ஆராய்ந்து பார்த்தல்.
ஊடாடுதல்-கல்விபயிலுதல், நடமாடுதல், பழகுதல்.
ஊடாட்டம்-பழக்கம்.
ஊடான்-ஓர்மீன்.
ஊடு-உள், ஊடென்னேவல், ஏழனுருபு, தார்நூல், நடு.
ஊடுசெல்லல்-ஊடுபோதல்.
ஊடுதல்-பிரிதல், பிரியவீனப்படுதல்.
ஊடுதாக்கல்-பலத்தைச் சோதித்துப் பார்த்தல், பின்னிடாம லெதிர்நிற்றல்.
ஊடுபற்றுதல்-விளக்குள்ளே பற்றியெரிதல்.
ஊடுபோக்கல்-உருவச்செய்யல், நடுவெறுத்தல், வழக்குத் தீர்த்தல்.
ஊடுருவல்-தட்டுருவல்.
ஊடுருவுதல்-நுழைதல், பீறுதல், புதைதல்.
ஊடுவெளி-இடைவெளி.
ஊடேடே-அடிக்கடி, இங்குமங்கும்.
ஊடை-நூற்றூர், புடவையின் குறுக்கு நூல், மனைவி.
ஊடையம்-நீரரண்.
ஊட்டம்-உண்டி.
ஊட்டல்-ஊட்டுதல்.
ஊட்டி-உணவு, பறவையுணவு, மழை, மிடறு, வினையெச்சம், வினையாலணையும் பெயர்.
ஊட்டிரம்-தேட்கொடுக்கி.
ஊட்டு-உண்பிக்கை, கவளம்.
ஊட்டுக்கன்று-பால்குடிக்குங்கன்று.
ஊட்டுக்குற்றி-மிடறு.
ஊட்டுணை-தலையாட்டம்.
ஊட்டுதல் - அகிற்புகை பஞ்சு மை முதலிய வூட்டுதல், இன்ப துன்பங்களை யருத்தல், உண்பித்தல், கன்றுமுதலிய பாலுண்ணல், தினைப்பூட்டல், விருந்திடல்.
ஊட்டுந்தாய்-அஞ்சுதாயரு ளொருத்தி; அவள் பிள்ளைக் கூட்டுதல் செய்பவள், செவிலித்தாய்.
† ஊஷ்மகம்-கோடைகாலம்.
† ஊஷ்மாகமம்-கோடைகாலம்.
ஊணம்-ஓர்தேயம்.
ஊணர்-ஊணதேயத்தார், பேருண்டிக்காரர்.
ஊணல்-ஊணுதல்.
ஊணன்-போசனப்பிரியன், மிகவுண்போன், மிலேச்சன்.
ஊணுதல்-ஊன்றுதல், நடுதல்.
ஊண்-இரை, உண்டி, சோறு.
ஊண்பாக்கு-உண்டபின்னிடும் பிளவிலை.
ஊதநாதன்-இனத்தைக்காக்கும்யானை.
ஊதம்-கேட்டல்.
ஊதல்-ஆரவாரம், ஊறுதல், காற்று, வீங்கல்.
ஊதா-மங்கனிறம்.
ஊதாரி - அழிப்புக்காரன், வீண்செலவுக்காரன்.
ஊதாரித்தனம்-அழிப்பு, வீண்செலவு.
ஊதிகை-முல்லைக்கொடி.
ஊதிடுகொம்பு - கொம்பினாற்செய்த இசைக்குழல்.
ஊதியம்-இலாபம், கல்வி, பலன்.
ஊதியொடுக்கம்-சுவாசம்.
ஊதுகட்டி-சொக்கவெள்ளி.
ஊதுகரப்பன்-ஓர்கரப்பன்.
ஊதுகாமாலை-ஓர்நோய்.
ஊதுகுழல்-ஓர்வாச்சியம்.
ஊதுகொம்பு-ஊதிடுகொம்பு.
ஊதுதல்-அரித்தல், காற்றுநோய்தாய் வீசல், குழல் முதலியவூதல், பொருமுதல், வீங்கல்.
ஊதுமா-ஓரினிப்புக் கூழ்.
ஊதுமாந்தம்-ஓர்நோய்.

ஊதுவழலை-ஓர்பாம்பு.
ஊதுவாரம்-வெள்ளி.
ஊதுவிரியன்-ஓர்பாம்பு.
ஊதை-காற்று, குளிர்காற்று, வாதம்.
ஊத்தை - அழுக்கு, ஊன், சுரோணிதநீர், புலால்.
ஊத்தைகுடியன்-ஓர்பிசாசம். *



ஊத்தைச்சீலை-அழுக்குச்சீலை, சூதகச்சீலை.
ஊத்தைநாறி-துர்க்கந்த முடையவள், பீநாறி.
ஊத்தைப்பாண்டம் - அழுக்குப்பாத்திரம், உடம்பு.
ஊத்தைப்பிணம்-அழுக்குடம்பு,நாறியபிணம்.
ஊந்து-கச்சோலம்.
ஊமச்சி-ஊமைச்சி.
ஊமணை-அந்தங்கெட்டது, ஊமை, ஊமை முகமுள்ளது, மந்தன்.
ஊமணைச்சட்டி-நன்றாய்வேகாத மட்சட்டி.
ஊமணைச்சி-அழகற்றவள்.
ஊமணையன்-அவலட்சணன்.
ஊமத்தங்கூகை-ஊமைக் கோட்டான்.
ஊமத்தம் } ஊமத்து } ஊமத்தை } உன்மத்தை.
ஊமல்-கிழங்குகழிந்த பனங்கொட்டை.
ஊமற்கச்சி - உலர்ந்த பனங்கொட்டையிற் பாதி.
ஊமற்கரி-பனங்கொட்டையின் கரி.
ஊமன்-ஊமை, கூகை.
ஊமாண்டி-உம்மாண்டி, ஊமை, பூச்சாண்டி.
ஊமிள்-சிறுபூளை.
ஊமை-உறுப்புக்குறை யெட்டினொன்று; அஃது மூங்கை, ஓர்வாத்தியம், கீரி.
ஊமைக்கட்டி - பொன்னுக்குவீங்கி, முகங்கொள்ளாத கட்டி.
ஊமைக்காடை-ஓர்காடை.
ஊமைச்சி-ஊமைப்பெண், ஓர் நத்தை.
ஊமைத்தேங்காய்-குலுங்காத தேங்காய்.
ஊமைப்பயில்-கரபாஷை, கைப்பயில்.
ஊமையன்-ஊமை.
ஊமையெழுத்து-ஒலியற்றவெழுத்து.
ஊமைவிளையாட்டு-ஓர்விளையாட்டு.
ஊம்-மவுனம்.
ஊம்பல் } ஊம்புதல் } சூப்புதல்.

ஊய்தல்-பதனழிதல்.
† ஊரகம்-நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்று.
ஊரண்டினூர்-கள்ளி.
ஊரப்பார்த்தல் - ஊர்ந்துசெல்ல மந்திரித்தல்.
ஊரல்-ஈரம், உரிஞ்சல், ஊறுதல், காய்ந்துவருகிறபுண், கிளிஞ்சில், நகர்தல், பசுமை, குருவை என்னும் பறவை.
ஊரல்பதம்-பச்சைப்பதம்.
ஊரல்புண்-காய்ந்துவரும் புண்.
ஊரவியன்-வைசியன்.
ஊரன்-மருதநிலத் தலைவன்.
ஊராண்மை-மிக்கசெயல்.
ஊரார்-ஊரவர், பிறர்.
ஊராளி-ஊரதிகாரி, ஓர்சாதியான்.
ஊரி-இளமை, சங்கு, மேகம்.
ஊரிலிகம்பலை-கலாதி.
ஊரின்னிசை-ஓர் பிரபந்தம்; அஃது பாட்டுடைத் தலைவனூரினைச்சார வின்னிசை வெண்பாவாற் றொண்ணூறேனும் எழுபதேனுங் கூறுவது.
† ஊரீகிருதம்-அங்கீகரிக்கப்பட்டது.
ஊரு-அச்சம், அட்டை, தொடை.
ஊருகால்-சங்கு.
ஊருசன்-வைசியன்.
ஊருடை } ஊருடைமுதலியார் } முருங்கை.
ஊருணி - ஊரடுத்தகுளம், ஊரெல்லா முண்ணுங்குளம், கிணறு.
ஊருதல்-ஏறுதல், செலுத்தல், நகருதல்.
† ஊருஸ்தம்பவாதம்-ஓர்வகை வாதநோய்.
ஊரெல்லை-ஊரினெல்லைமானம்.
ஊரெழுச்சி - ஊரவர்க ளொன்றுயெழுதல், ஊர்க்கலகம்.
ஊரேறு-ஊர்ப்பன்றி.
ஊரோச்சம் - ஊரெல்லாம் பேசத்தக்கதாயிருத்தல்.
ஊர்-ஊரென்னேவல், நாடு, பரிவேடம்.
ஊர்கலிகம்பலை-கலாதி.
ஊர்கூடுதல்-ஊரவர்கள் திரளுதல்.
ஊர்கோலம்வருதல் - பட்டினப் பிரவேசம்வருதல்.
ஊர்கோள் } ஊர்கோள்வட்டம் } பரிவேடம்.
ஊர்க்கதை-நிசமற்றபேச்சு, வீண்செய்தி.

ஊர்க்கலகம் - இராசதுரோகமான கலகம், ஊரிலுண்டாகுங் கலகம்.
ஊர்க்காறுபாறு - அன்னியருடைய காரியவிசாரிப்பு, ஊர்க்காரியம், ஊர் விசாரிப்பு.
ஊர்க்குருவி-அடைக்கலங்குருவி.
ஊர்க்கூட்டம்-ஊரார்களொன்று கூடுங் கூட்டம்.
ஊர்க்கொள்ளை-ஊழிநோய்.
† ஊர்சூழ்சோலை-வனம்.



† ஊர்ச்சஸ்வதி - பிரியவிரதன் மகள், சுக்கிரனது மனைவி, தேவயானை. *
ஊர்ச்சம்-கார்த்திகைமாதம்.
ஊர்ச்சிதம்-உறுதி, தத்துவம், திரம், நிலைப்படுதல்.
† ஊர்ச்சிதன் - கார்த்தவீரியார்ச்சுனன் மகனாகிய சூரன்.
† ஊர்ச்சை-வசிஷ்டன் பாரி.
ஊர்ணநாபி-சிலம்பிப்பூச்சி.
ஊர்ணம் - ஆடுமுதலியவற்றின் மயிர், நூலிழை, புருவநடுவிலுள்ள சுழி.
ஊர்ணு - ஆடு, ஆட்டுமயிர்க்கமலம், சிலம்பிப்பூச்சி.
ஊர்தல் - ஊருதல், ஏறுதல், செலுத்துதல், தவழ்தல், தினவுறல், பரத்தல்.
ஊர்தி-எருது, பண்டிமுதலிய வாகனங்கள்.
† ஊர்த்ததாண்டவர்-திரு வாலங்காட்டிலே கோயில் கொண்டிருக்குந் தேவியார்.
ஊர்த்தம் - ஊர்த்துவம், சைவம் பதினாறினொன்று.
† ஊர்த்துவகததோஷம் - ஓர்வகை தோஷநோய்; அது பித்தகபஸ்தானத்திற்குமேலபானவாயுவைச் சஞ்சரிக்கச் செய்து பீனிசம், இருமல், இரைப்பு, தோளில் நோவு அல்லது தலைவலி, குரற்கம்மல், அரோசகமென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
ஊர்த்துவகதி-மேற்கதி, மேனோக்கு.
ஊர்த்துவகபுரம்-அரிச்சந்திரனுடைய நகரம்.
ஊர்த்துவகம்-மேலேறுதல்.
ஊர்த்துவகாமினி-மேனோக்கிய பார்வையுள்ள குதிரை.
ஊர்த்துவகாயம் - உடல், சரீரத்தின் தலைப்புறம்.
† ஊர்த்துவகுதம்-ஓர்வகைக்குதநோய்; அது கொப்பூழின் கீழிருக்கு மபானவாயு மூலரோகத்தினாலாவது குன்மரோகத்தினாலாவது சிலேஷ்மரோகத்தினாலாவது மேனோக்கியேறும்போது பிறந்து அவ்வாயுவு மலசலாதிகளிற் சேர்ந்து மேல்நோக்க வாயிற் றூர்க்கந்தத்தை யுண்டாக்குவது.
† ஊர்த்துவகேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
ஊர்த்துவசீலம்-செருப்பு.
† ஊர்த்துவசுவாசம்-ஓர்வகைச் சுவாசநோய்; அது சாதாரணமாக வருஞ் சுவாசமானது நீண்டு மேல்நோக்கி வருதலால் தலையைக் குனியக்கூடாமல் நிமிரல், சிலேஷ்மநிறைவினால் முகத்தினரம்புக ளெல்லா முப்புதல், அதிக சுவாசவருத்தத்தால் மேற்பார்வை மயங்கல், சுற்றிச்சுற்றிப் பார்த்து விழித்தல், மர்மஸ்தானங்களின் நோவினாலழுதல், பேச வேலாதிருத்தல் என்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
ஊர்த்துவதேவன்-விட்டுணு.
ஊர்த்துவபாதம்-எண்காற்புள்.
† ஊர்த்துவபித்தம்-ஓர்வகைப் பித்தநோய்; அது அதிக கோபம், சதா சண்டை, இரைந்து கூவல், ஆதாளம், பூமியிற் குழிவிழும்படியான பேதி, பிரமை, கண் சிவப்பு, அதிநித்திரை, சரீரத் தாவிப்பென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.
ஊர்த்துவபுண்டரம் - மேனோக்கியிடும் திருமண்.
ஊர்த்துவமுகம்-மேற்பக்கம்.
† ஊர்த்துவமுகரத்தபித்தம்-ஓர்வகைப் பித்தநோய்; அது கண், செவி, நாசி, வாயென்னு மிந்நான்கின் வழிகளாலு மிரத்தத்தை வெளிப்படுத்துவது.
† ஊர்த்துவமுகவாதம்-ஓர்வகை வாதநோய்; அது மலபந்தவஸ்து, சீதள விரோதவுண்டி, பகல் நித்திரை, சதாபடுக்கை அல்லது உட்கார்ந்திருத்தல், மலசலமடக்கல் முதலியவைகளாற் பிறந்து மேல்வயிற்றையு மார்பையும் பற்றி அபானசமான வாயுக்களுடன்கூடி விஷரூபமாக அதிகரித்து மிகு வேகத்துடன் மேலெழும்பிக்கொண்டிருப்பது. அப்போது எலும்புக ளெல்லாம் நொறுங்கினதுபோல் வேதனை, குடல் விலா கண் முகம் இவைகளில் அதிகநோவு, வயிற்றி லுப்பிசம், கனம், தாழ்வாய்ப்பிடிப்பு, நடுக்கம், அறிவின்மை, பிரலாபம்,

வாயில் நுரை ஆகிய விக்குணங்க ளுண்டாகும்.
ஊர்த்துவம்-மேல், மேனோக்கம்.
ஊர்த்துவராசி-மேனோக்கிராசி.
ஊர்த்துவலிங்கன்-சிவன்.
ஊர்த்துவலோகம்-தேவலோகம்.
ஊர்த்துவலோசனம்-சரபம்.
† ஊர்த்துவாமிச்சிரவாதம் - ஓர்வகை வாத நோய்; அது தோளில் மதர்த்தல், நோதல், கனத்தல், பலவீன முதலிய குணங்களை யுண்டாக்குவது.
ஊர்நேரிசை - ஓர்பிரபந்தம்; அஃது பாட்டுடைத்தலைவ னூரினைச்சார நேரிசைவெண்பாவாற் கூறுவது.
ஊர்புல்-ஓர்புல்.
ஊர்ப்பகை, ஊர்ப்பழி } ஊர்நிந்தை.
ஊர்ப்பாடு-அன்னியருடைய காரியம்.
ஊர்ப்புகைச்சல்-புகைநிறமாய்த் தோற்றல்.
ஊர்ப்புரளி-ஊர்க்குழப்பம்.
ஊர்ப்புலம்-ஆமணக்கு.
ஊர்மச்சி-ஊமச்சி.
ஊர்மனை-குடியிருப்பு.
ஊர்மன்று-ஊரம்பலம், பொதுமனை.
ஊர்மி-அலை, வருத்தம், வஸ்திரமடிப்பு, வயிறுமுதலிய விடங்களிலுள்ள மூன்றுமடிப்பு, விரகமாற்றுமை, விரைவு.
ஊர்மிகை-அலை, மோதிரம்.
ஊர்மிமாலி-கடல்.
ஊர்மிளை - இலக்குமணர்மனைவி, கணவனால் விரும்பப்பட்ட கற்புள்ள மனைவி.
† ஊர்வசன்-சுசிமகன்.
ஊர்வசி-சுவர்க்கலோகவேசை.
ஊர்வரப்பன்-வெள்ளரி.
ஊர்வலம்வருதல்-பட்டினப்பிரவேசம்.
ஊர்வன, ஊர்வனவு } எழுபிறப்பினொன்று; அஃது ஊரும்பிராணி.
† ஊர்வன்-இவன் அத்தி யுக்கிரதவஞ் செய்யும்போது நாரதாதி தேவரிஷிகளும், பிரமவிருஷிகளும் வந்து ஒரு புத்திரனை யுற்பத்தி செய்து தருகவென்ன ஒரு நாணற் கூர்ச்சத்தைக்கையிலெடுத்துத்தனதுதொடையை ஓமாக்கினிமேல் நிறுத்தி அக்கூர்ச்சத்தால் அத்தொடையைக் குடைந்தமாத்திரத்தில் சுவாலாமாலி யென்னும் புத்திரன் பிறந்தான். அத்தருணத்தில் பிரமா பிரசன்னமாகி இப்புத்திரனை சமுத்திரமத்தியில் வடவாமுக ரூபமாக இருக்குமாறு செய்கவென்று வேண்ட அப்படியே செய்தவன். சுவாலாமாலி ஔர்வன எனவும் படுவன். அவனுக்கு ஆகாரம் சலம்.
ஊர்வெண்பா-ஓர் பிரபந்தம்; அஃது பாட்டுடைத்தலைவனூரினைச்சார வெண்பாவாற் பத்துச்செய்யுள் கூறுவது.
ஊலுகம் - ஆந்தை, ஓர்வகைக்கரை, கோட்டான்.
ஊழகம், ஊழம் } வைகறை.
ஊழலித்தல்-அருவருத்தல், இளைத்தல், நாற்றமடைந்துகெடுதல், பதனழிதல்.
ஊழல்-ஆகாதது, ஊத்தை, கெட்டது, நரகம், நாற்றம், பழுதானது.
ஊழல்நாற்றம்-துர்க்கந்தம்.
ஊழி-உறைகாலம், ஓர்பிசாசம், நெடுங்காலம், பிரமனாயுள், பூமி, யுகமுடிவு, விதி.
ஊழிகாலம்-உகாந்தகாலம், நெடுங்காலம்.
ஊழிக்காய்ச்சல் - கொள்ளைநோய், தொத்துசுரம்.
ஊழிக்கால்-உகாந்தவாயு.
ஊழிக்காற்று-யுகமுடிவி லுண்டாகுங்காற்று, விஷக்காற்று.
ஊழித்தீ-வடவாமுகாக்கினி.
ஊழிநாள்-முடிவுநாள்.
ஊழிநீர்-உலகமுடிவி லுண்டாகுஞ் சலப்பிரளயம்.
ஊழிநோய்-தொந்தவியாதி,பெருவாரிநோய்.
ஊழியக்காரன்-வேலைக்காரன்.
ஊழியஞ்செய்தல்-தொண்டுசெய்தல்.
ஊழியம்-தொண்டு.
ஊழியூழிகாலம்-நித்தியம்.
ஊழைக்குருத்து-துளசி.
ஊழ் - உலகமுடிவு, ஊழ்த்தலைச் செய்யென்னேவல், குணம், நியமம், பகை, பழவினை, பழமை, பூர்வகன்மம், முடிவு, முறை, விதி, வெயில்.
ஊழ்த்தல்-உதிர்தல், ஊன், சமயம், சிதைவு, சிந்திப்பு, செவ்வி, நினைத்தல், பதனழிவு, புலால், மடித்தல், மலர்தல், முதிர்தல், வாடுதல்.
ஊழ்த்துணை-மனைவி.
ஊழ்முறை-நியதி, பூருவநியாயம்.
ஊழ்விதி-பிராரத்துவவிதி.

ஊழ்வினை-பழவினை.
ஊளன்-ஆணரி, நரி.
ஊளா-நெடுவாய்மீன்.
ஊளான்-நரி.
ஊளி-ஊளா.
ஊளை-ஊத்தை, சளி, நாய், நரிமுதலிய வோலிடுஞ் சத்தம்.
ஊளைகொள்ளுதல் } ஒலிடல், குரவையிடுதல்.
ஊளையிடுதல் }
ஊறணி-ஊறல், ஊற்று, கசிவுநிலம், சேற்றுநிலம், வருவாய்.
ஊறல்-ஊறுதல், ஊற்று, களிம்பு, காய்ந்தபச்சை, சருமத்தின்மேலுண்டாகும் ஓர்நோய், தினவு, பஞ்சலோகக்கலப்பு, வருவாய்.
ஊறவைத்தல்-ஊறும்படிவைத்தல்.
ஊறற்பாக்கு-நீரிலூறியபாக்கு.
ஊறு - இடையூறு, ஊறென்னேவல், காயம், கொலை, தழும்பு, தீண்டல், தீமை, பரிசம்.
ஊறுகாய்-அடைகாய்.
ஊறுகோள்-காயம், கொலை.
ஊறுதல்-சாரமேறுதல், நனைதல், நீர் பெருகுதல், பலவழியினும் பொருள் வந்தடைதல், மாமிசஞ் சேர்ந்துபிடித்தல்.
ஊறுநீர்-ஊற்றுநீர்.
ஊறுபாடு-இடையூறு, இரணம், காயம், சேதம், தீமை.
ஊறுபுண்-ஆறிவருங்காயம்.
ஊறுவைத்தல் - இடையூறுண்டாக்கல், தழும்புபடுத்தல், வடுவைத்தல்.
ஊற்றங்கால்-வயல்முதலியவைகளில் நீர்வடியும்படி யிடுங்கால்.
ஊற்றங்கோல்-ஊன்றுகோல்.
ஊற்றம்-அசைவின்றிநிற்றல், அறிவுடைமை, ஆற்றல், பற்றுக்கோடு, புகழ், மிகுதி, முயற்சி, வலி.
ஊற்றல்-நீர்முதலியவூறிவருதல், பெய்தல்.
ஊற்றாணி-இடையூறு, ஊறு, கலப்பையுறுப்பினொன்று.
ஊற்றும்பெட்டி-ஊற்றுப்பெட்டி.
ஊற்றல் - உரோகணிநாள், கரப்பு, மீன்கூடு.
ஊற்றல்கவித்தல் } கரப்புக்குத்துதல்.
ஊற்றல்போடல் }
ஊற்று - ஈரம், ஊற்றென்னேவல், ஊன்றுகோல், நீரூற்று.
ஊற்றுக்கண்-ஊற்றுத்துவாரம்.
ஊற்றுக்குழி-நீரூறும்படி தோண்டுங்குழி.
ஊற்றுக்கோல்-ஊன்றுகோல்.
ஊற்றுண்ணல்-சாதல், சித்தப்படல்.
ஊற்றுதல்-எண்ணெய் முதலியவூறச்செய்தல், கீழேயொழுக்கல், வார்க்குதல்.
ஊற்றுநீர்-ஊறுநீர்.
ஊற்றுப்பட்டை-ஊற்றிறைக்கும் பட்டை.
ஊற்றுப்பூ - எண்ணெயூற்றின தேங்காய்ப்பூ.
ஊற்றுப்பெட்டி-எண்ணெயூற்றும்பெட்டி.
ஊற்றுப்பெயர்தல்-ஊற்றுத்திரும்புதல்.
ஊற்றுமரம் - எண்ணெயூற்றுகிறமரம், செக்குலக்கை.
ஊற்றெடுத்தல்-ஊறலெழுதல்.
ஊனகத்தண்டு-கருவண்டு.
ஊனக்கண்-கட்பொறி, குருட்டுவிழி.
ஊனமானம்-உரோசாபிமானங்கள்.
ஊனம் - ஈனம், குறைபாடு, கேடு, சாரம், இமை, மாமிசநீர்.
ஊனன்-குறைவுள்ளோன்.
ஊஞங்கொடி-ஊஞன்.
ஊஞயம்-நாஞயம், பிழை.
ஊஞன்-ஓர்கொடி.
ஊனி-அழுக்கிராக்கிழங்கு.
ஊனுருக்கி-கபவியாதி.
ஊனெட்டி-உடும்பிறைச்சி.
ஊன்-உடல், தசை, பிணம், மாமிசம்.
ஊன்விற்போர்-இறைச்சிவிற்போர்.
ஊன்றக்கட்டுதல்-பலப்படுத்தல்.
ஊன்றல்-இறுகப்பிடித்தல், சார்தல், தள்ளல், நடுதல், நிறுத்தல், நினைத்தல், பதித்தல், பலப்படுத்தல், மெய்ப் பரிசமொட்டி ஞென்று.
ஊன்றள்ளல்-ஊன்வளரல்.
ஊன்றி-ஓர்பாம்பு.
ஊன்றிக்கேட்டல்-உறுதியாய் வினவல், கருத்தாய்ச் செவிகொடுத்தல்.
ஊன்றிக்கொள்ளல்-சார்ந்திருத்தல், நிலைபெறல்.
ஊன்றிப்பேசல்-அசைவறத்திப்பேசல், பலப்படுத்திப்பேசல்.
ஊன்றுகால்-உதைகால்.
ஊன்றுகோல்-பற்றுக்கோல்.
ஊன்றுதல்-அமர்த்தல், தாபரம் கொடுத்தல், நடுதல், நிலைப்படுத்தல், பதித்தல், பலப்பித்தல், வேர்வைத்தல்.

(ச.) ஸ்ரீ சரசுவதி வசனித்தல்:—மாய்வுற்ற வேந்தை = நினது பர்த்தாவை, மலரால் மறைவித்து = புட்பமண்டபத்தில் மறைத்து வைக்குதி, இவனுடைய சீவன் பொன்மண்டபம் பாய்வுற்றகலாது பற்றி நிற்கும். நினது அந்தப்புர மண்டபத்தி னின்றும் ஓரிடம் விட்டோரிடந்தாவி நீங்காமற் றிதிபெற்றிருக்கும் விரைவிற் றேய்வுற்று.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ சரசுவதிதேவி கூறியபடி செய்துந் துயரமகலாமையின் மீட்டுந் தேவியை யழைத்தல்:—வாடாவென.

வாடாவச ரீரிதன் சொற்படி மன்னை வைத்தா
ளோடாதவா வியுடை யாளுளத் துன்ன வரணி
நீடாதுவந் தாளென தன்பனை நீங்கி வாழ்தல்
கூடாதவன் சேர்வுழி கூட்டுதி வல்லை யென்றாள். (11)

(ப -ரை.) வாடா வசரீரிதன் சொற்படி = கெடாத திவ்யபாரதியின் உத்தரவின் படியே, மன்னைவைத்தாள் = தனது நாயகனைப் புட்பக்குழுவினுள் மறைத்துவைத்தனள், ஓடாத ஆவியுடையாள் = மூர்ச்சையினாற் பிராண னசைவற்றவளாய், மிகுந்த துயரத்தினால் மரிக்குந் தருவாயிலிருக்கும் அந்த லீலையானவள், உளத்துன்ன = ஞான தேவியாகிய சரசுவதியை மனத்தில் தியானஞ்செய்த மாத்திரத்தில், வாணி நீடாது வந்தாள் = ஸ்ரீ வாக்தேவி தாமதியா துடனே பிரசன்னமானாள், ஆகி வேண்டிய தென்னென, எனதன்பனை நீங்கிவாழ்தல் கூடாது = அடியாளது உயிர்போன்ற நாயகனை விட்டுத் தனியேவாழ்தல் முடியாத காரியமா யிருக்கின்றபடியால், அவன் சேர்வுழி = எனது பர்த்தா எத்தகையனாய் என்னசெய்துகொண்டு எங்கேயிருக்கின்றனனோ அங்கே அவன் சமீபத்தில், வல்லை = அதிவிரைவில், கூட்டுதியென்றாள் = அடைவிப்பாய் தயையினால் என்று பிரார்த்தித்துக் கொண்டாள்.

(ஸ்ரீ - வீர.) புட்பராசியினாலே மறைத்துப் பதியைத்தாபித்து நிதிகிடைக்கப்பெற்ற தரித்திரியானவள் மகிழ்ந்ததேபோலச் சிறிது மகிழ்வுற்றிருந்தனள்; அதே தினத்திற் பாதியிரவில் வேலைக்காரிக ளெல்லாம் நன்றாய்த் தூங்கும்போது ஞானமயமாய்ப் பகவதியா யிராநின்ற தேவியைச் சுத்தியான மகாமதியால் துக்கம் பொறுக்க முடியாமல் வரவழைத்தனள். அந்த ஸ்ரீதேவியானவள் அவளை யடைவுற்றுக் கூறுவதாவது, ஹே குழந்தாய் எதன்பொருட்டாக என்னைத் தியானித்தாய்; என் மிகச்சோகத்தோடு கூடியிருக்கின்றாய், கானனீரானது பயனின்றியே தோற்றுமாபோலச் சமுசார மயக்கங்கள் தோற்றாநிற்கும், என்ன அதற்குலீலை கூறுவதாவது, ஹேதாயே! எனது நாயகரானவர் எங்கே போயிருக்கிறார், என்னசெய்கிறார், எத்தகையராக இருக்கிறார், என்னை யவருடைய சமீபத்திற் சேர்ப்பித்தருள வேண்டும். நான் ஒண்டியாய் வாழமுடியவே மாட்டாது என்றனள்.

(ச.) ஸ்ரீ வசிட்டர்: உளத்துன்ன ஞப்திரூபமான ஸ்ரீசரசுவதிதேவியைத் தியானஞ் செய்ய, வாணி நீடாது வந்தாள். லீலை: வாழ்தல் கூடாது = ஒண்டியாய்ச் சீவித்தற்குச் சகியேன், அவன் சேர்வுழி = அவனது சமீபம், வல்லை கூட்டுதி யென்றாள் = எனது பர்த்தா எவ்விடத்திருக்கின்றான், என்செய்கின்றான், எத்தன்மையன் என்னும் வினாவுக்கு உத்தரந்தாழய் அறியச்செய்யுஞ் சமர்த்தியான ஸ்ரீ வாக்கீசுரியே! நீ யென்னைச் சீக்கிரஞ் சேர்க்குதி என்றான்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பிரஹ்மத்தை யறிந்தபோது அதன்கண்ணே சித்தவிருத்தி நிரோதவடிவ யோகத்தினாலே அயோகிகளாலே கவரமுடியாத பதார்த்ததரிசன சமர்த்

தியம் சம்பவிக்கும் என்பதனுனே லீலைக்கு அந்தப் புரமண்டப ஆகாசத்திலிருக்கும் பர்த்தாவின் றரிசன சாமர்த்தியசித்தியின் பொருட்டுப் பிரஹ்மசொரூபத்தை ஸ்ரீபகவதி சரசுவதிதேவி பிரதிபாதிக்கின்றுள்:—இகலோகம்போலப் பரலோக கற்பனைக்கும் சின் மாத்திர அதிஷ்டான முடைமையைக் காண்பிக்கும் பொருட்டுச் சிதாகாசத்தைப் பகுத்துக் காண்பிக்கின்றார் தேவியார்:—மனவென.

மனவானமும் வானமும் மாசறு ஞான வானும்
மெனவான மூன்றின் முதல்வான மிரண்டு மின்றிக்
கனஞானவா னெய்துதல் கண்டதை விட்டுப் போத
நனவாயய லொன்றையுற் றுனடு ஞான வானும். (12)

(ப - ரை) மனவானமும் = சித்தாகாசமும், வானமும் = ஆகாசமும், மாசறு = குற்றமற்ற, ஞானவானும் = சிதாகாசமும், என=என்று சொல்லப்பட்ட, மூன்றில் = மூன்றுகாயத்துள், முதல்வான மிரண்டு மின்றி = முதலின் மொழிந்த உள்ளாகாசம் வெளியாகாசம் இரண்டினும் சூனியதரமாக, கனஞானவா னெய்துதல் = அறிவுமய ஆகாயம், இருப்பதாக அறிதி, போதம் = சம்வித்தானது, கண்டதைவிட்டு = கண்டவத்துவைவிட்டு, அயலொன்றையுற்றுல் = அயலொருவத்துவை யெண்ணினுல், நடு = மத்தியிலிருப்பது, நனவாய்=ஜாக்கிரதையா யுற்று = நோக்கின், ஞானவானும்=ஞானுகாசமாக அறியலாம்.

(ஸ்ரீ - வீர.) கூறப்பெறும் விதூரத பாரிவடிவ லீலைக்கேபோலப் பிரஹ்மப் பிரதிபாதனுகி யில்லாமலேயும் லீலையின்பொருட்டு வேறுசிருஷ்டியின் றரிசன சாமர்த்தியத்தையேன்சரசுவதி கொடுக்கவில்லை, பிரஹ்மப் பிரதிபாதனுதியின் கண்ணே யேன் பிரவிருத்திக்கின்றனள் எனின்? அதலுறும், லீலையானவள் வரும் லீலைபோலச் சமுசாரசம்பந்த பலாபிலாஷையால் ஆராதியாமையினுனும், பரமேசுரியை சமுசாரத்தினின்று விடுபடுவேனுகவும் எனக்கருதி யாராதித்தமையானும் தேவியும் அதற்கனுகூலமாகவே பிரவிருத்திப் பாளாயினுள். சித்தமே சொச்சத்தன்மை சூக்குமத்தன்மை முதலிய வற்றுனே ஆகாச கற்பத்தன்மையால் ஆகாசம், சிற்பரமான்மாவே யாகாசம் சிதாகாசம், மகாபூதமெனப் பெயரிய ஆகாசம் என ஆகாசமூன்றும், சொச்சத்தன்மை சூக்குமத் தன்மை முதலியவற்றுனே உலகிற் பிரசித்தமாய அம்மூன்றினுள் எச்சிதாகாசம் உளதோ அது அவ்விரண்டினும் அத்தியந்தம் மகாசூனியமென அறிதி. அல்லது வானமுமென வியாகிருதம் விளம்பப்பட்டதாம், முதல்வான மிரண்டு மின்றி யென்றதனுல் பிரஹ்மத்திற்கு நிஷ்பிரபஞ்சத்தன்மை நிகழ்த்தப்பட்டது; சித்த அவ்யாகிருதத்தினும் அயலாக அகிலமில்லாமையின். சம்வித்தாகிய சித்தத்திற்கு ஒருதேசத்தை விட்டு ஒரு தேசத்தை யடைவதென்னும் ஒருவிடயத்தை விட்டு ஒருவிடயத்தை யடைவதாங்கால் மிக அற்பகாலத்தால் தோற்றுகின்ற எம்மத்திய முளதோ அதுவே சிதாகாசமென வுணர்ந்துகொள்ளுதி. சித்தத்தினது பூர்வவிருத்தி நட்டமாகியவழி உத்தரவிருத்தி யுண்டாம் வழி யிடையே எங்ஙீர்விடயம் சந்தி சாகூிவடிவமான சைதன்யம் சுயமாகப் பிரகாசிக்கின்றதோ, விருத்திகளின் மத்தியிற் பிரதீயமான மாதலின் மத்தியம் எனமலரப்பெறுகின்றதோ, அது சிதாகாசமென வறிதியென வறைந்ததாயிற்று அங்ஙனமே ஏழுபூமிகளை நிரூபிக்கும் அவசரத்தில் ஒருபொருணினைவை யொழித்து மேலப்பா லொருபொருணினைவுறி லந்த, விருபொருணடுவு ணினைவற விருக்குமிது சொரூபத்தியல்பு. எனக் கூறப்பெறும். "செறிதரு சந்திகள் விருத்திகலி னெழிவு முழுதுந் திகழ்வனவாம்

விகாரமிலா வெவ்வறிவாலந்த, நிறையறிவே கூடத்தனெனலாகும் " எனப்பெரியோர்க ளாலும் கூறப்பெற்றுளதாம் விருத்தி சந்திகளும் விருத்தி யபாவங்களும் எச்சைதன்யத் தினுல் ஒளிர்விக்கப் படுகின்றனவோ அது கூடஸ்தமென் றறியப்பெறும் என்பது பொருள். வாதனைமயமாய சித்தாகாயமெனவும், பிரசித்த விவகாரசம்பந்தமான ஆகாய மெனவும், சாற்றிய இரண்டிற்கும் இடையில் உபயசூனியமா யிலக்கியமாஞ் சிதாகாச மெனவும், ஆகாசம் மூன்றுவித மென்றறிதி; சிதாகாசமே தன்னுவரண அஞ்ஞானத்தி னும் வேறுபடுத்தப் படாததாய் விளங்கி அசத்துலக வடிவமா யிப்போ திலங்குகின் றது. சிதாகாசத்தினது ஏகாக்கிர சிந்தனத்தினுலே விரைவில் நினது நாயகனை ஈண்டே காணலாம், அதன்பொருட்டுச் சிதாகாச பாவனையைப் பயிலுதி. ஓரிடம்விட்டு மற்றோ ரிடமடையின் இடையே யிருக்கும் அறிவே நிமிட மூணரலாம், அதுவே சிதாகாசமாம் என்றறிதி முறையாக வரும் விடயமிரண்டாபாச சந்தியின் கண்ணே அதனுபய சூனிய சிதாகாசம் எளிதிலே யுணரலாமன்றோ.

(ச.) ஸ்ரீதேவி யனுக்கிரகித்தல்; மனவானமும் வானமும் மாசறுஞானவானும் என வானமூன்றின் முதல் வானமிரண்டு மிந்தக் கனஞானவா னெய்துதல்=சித்தம் வியோ மம் சைதந்யம் என்னும் மூன்றும் அமூர்த்தமாதலின் ஆகாச சப்தவாச்சியமாம், அவற் றில் சித்தம் ரூபாதி சூனியமாயினும் விகாரமிருந்ததும்சடமுமாம், வியோமம், நிர்விகாரம் பரிபூர்ணமாயினுஞ் சடமாம், ஆகவின் சித்த பூதாகாகமென்னு மிரண்டினுஞ் சிதாகாச மிகு சூன்யமாம் என்று வரானனைநீ யுணர்தி. கண்டதைவிட்டுப் போதநனவா யய லொன்றையுற்று னடுஞானவானும், கண்டது=விடயம், பூருவம் கிருகித்த விடயத்தி னின்று நீங்கி மற்றொருவிடயக்கிரகண சமயத்தில் போதநடு = போதத்தின் மத்தியம், பூர்வங் கிரகித்ததின் பரித்தியாகத்தினுனும் அன்னியத்தின் அக்கிரகணத்தினுனும் விடயசம்பந்தமற்ற போதத்தினுருவம் சிதாகாசமாம் என வரவர்ணினி நீயுணர்தி. வியப தேசிக்கப் பெறுகின்றது இதனுல் சம்வித்தெனத் தேசம் விடயமாம். அதனையறியும் உபாய முபதேசித்தல். நனவால் என்பது. நனவால்=விழித்த நேத்திரத்தால் வாகி யார்த்தக் கிரகணமாயிற் சீக்கிரம் மூடப்படும் அதனுலென்பது பொருள். அப்போதகிற் போதத்திற்கு வெளியிற்செல்லப் பிரதிபந்த மாதலினுனும் அந்தரத் தறியவேண்டும் பொருள் அற்பமு மின்மையானும் அடைத்த கதவுடைய கர்ப்பக்கிரகத்திற் பிரகாசிக்குந் தீபரூபம்போற் சின்மாத்திரமே சேடித்து விளங்கு மென்பதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இங்ஙனம் பிரஹ்மாத்மகஞ் சிதாகாசத்தைப் பிரதிபாதித்து அதன் விடயபோகத்தையும் அதன் பயனையும் கூறுகின்றார்:—ஆகலின் நினக்கு அதன் அடைவே அத்தன்மையை யடைந்திருக்கும் நாயகசமீப அடைவாம்; ஆண்டே நினது நாயகரின் பரலோக கற்பனை யாதலின் என்னுங் கருத்தாற் கூறுகின்றார்:— சங்கற்பவென.

சங்கற்ப சாலந் தவிர்ந்தா லுபசாந்த மாகித்
துங்கப் புவியாவையு மாகிய சோதி தோன்றும்
இங்கற்பு பமுங்காண் யனவில்லை வெறும் பொய்யென்றோ
லங்கப்பொழு தவ்வறி வாலது சேர்தலாகும். (13)

(ப - ரை.) சங்கற்ப சாலந் தவிர்ந்தால் = எல்லா எண்ணங்களையும் அடியோடு விட்டுவிடுவையே யானுல், உபசாந்தமாகி = பரமசாந்தமாய், துங்க = பரிசுத்தமாய், புவியாவையுமாகிய = சர்வான்மகமாய், இராநின்ற, சோதி = சிவப்பிரகாச வடிவம்,

தோன்றும்=நின்வடிவமாய் நிகழும், இங்கு அற்பமும் காண்பன இல்லை= இவ்விடத்தில் தோற்றுகின்ற எவையுமே ஒருசிறிதும்கிடையவே கிடையாது, வெறும்பொய் என்றால்= அத்தியந்தம் மித்தையென அறுதிவந்தால், அங்கு அப்போழுது = அவ்விடத்தில் அக் காலத்திலேயே, அவ்வறிவால்=அந்த அகண்டப் பிரஹ்மாகார விருத்தினால், அது = அப்பரம் பொருளானது, சேர்தலாகும் = சொரூபமாகவே யடைதல்கூடும். (13)

(ஸ்ரீ - வீர.) அநாத்ம ஆகாரங்களாய எல்லாச்சங்கற்பங்களையும் அடியோடும் விடுதி யேல்ாயின், ஞான முடையவளாகிச் சகல துயரங்களினின்றும்விடுபடுவாய். "மனத்தினை விருத்தியின்றி மருவுறக்குயிற்றி யாலும், கனத்தினை யுணருவானைக் கருதரும் பரம மான, இனித்தனி லேகமாக்கி யிடரெலாங் களைந்தேயுய்க, முனித்தனி யோகமீதே முக்கிய மென்னலாகும்." எனவும், சகலமான பொருள்களையுஞ் சமாதியமர்வோன் காண்கிலனுயகல வசங்கப்பரம்பொருளி லழுந்தி யேகவறிவாகிச், சுகமதாக விருந்தொ ளிருந் தூயபோதிற் கேவலமா யகமதான பரசிவமா யகண்டவடிவா யமைகுவனால். என வும் அவ்வாறே அறையப் பெற்றுளது. சர்வான்மகபத அடைவின் கண்ணே யுபாய முரைப்பார், இங்கற்பமு மென்றார். உலகமானது அத்தியந்தம் அசத்திய மென்னும் துணிவினாலே இச்சர்வான்மக பதத்தை யடைவாய். அதன்கண்ணே சர்வசங்கற்பங் களையும் விட்டு நிலைபேறை யடைவையேயானால் எல்லாவடிவையு முடைய பதமாகிய தத்துவத்தை யடைவா யென்பதன்கட் சமுசயமே கிடையாது; ஆயின் எங்ஙனம் அதை யடையலாமெனின், அதற்குபாயத்தைக் கேட்டி, தத்துவதரிசனத்தினாலே அவி த்யைத யழிவுறவேதுவைத மனுதயமாகவே யுலகின் அத்தியந்த அபாவ அடைவாம்; ஆகவேயதனால் இஃதடையப்பெறும் அயனெறி யதற்கின்றென்னும் அருமறை முறைப் படி வேறொன்றாலும் முடியாது.

(ச.) சங்கற்பசாலம் அந்தச் சிதாகாசத்தில் தவிர்ந்தால் உபசாந்தமாகிய, துங்கப் புவி யாவையுமாகிய = சர்வான்மகமான, சோதிதோன்றும், சேரலாகும், மற்றொன்று வுஞ் சேரலாகாதென்ப தாயிற்று.

(ஸ்ரீ-வீர - அ-கை.) ஆயின் எனக்கு ஞானப்பிராப்தியானது எங்ஙனமாமென எண் ணுதே யெனல்:—நம்மாலென.

நம்மாலது சேர்கென நாமக ணல்கி யேக
விம்மாது விகற்ப மிறந்த சமாதி யெய்தித்
தம்மா லுறைகூட கல்புள் ளெனத் தாவுநெஞ்ச
மைம்மா லுறுகூட் டினைமாற்றி னளக் கணத்தில். (14)

(ப - ரை.) நம்மாலது சேர்கென = எமது வரப்பிரசாதத்தால் விரைவில் அதனைச் சாக்ஷாத்கரிப்பாயாக வென்று, நாமகள் நல்கி = ஸ்ரீசரசுவதிதேவி திருவருள்செய்து, ஏக = திவ்வியமான தமது பரந்தாமத்திற் கெழுந்தருள, இம்மாது=இந்தலீலையானவள், விகற்பமிறந்த = நிருவிகற்பமான, சமாதியெய்தி=சமாதியை யெளிதாகவே யடைந்து, தம்மாலுறை கூடகல் புள்ளென = தாமாகவே இருக்குங் கூட்டினின்றுஞ் சென்று சுதந்திரமாய் விளையாடும் பக்ஷியைப்போல, தாவுநெஞ்ச மைமாலுறு கூட்டினை = விட யாகாரமாய்ச் சலிக்கும் மனமயக்கத்தைப் பேதித்து மயக்கங்கட் கெல்லாங் காரணமா கிய தூலதேகக் கூட்டினை, அக்கணத்தில் = அப்போதே, மாற்றினள் = விட்டகன் றாள், சுதந்திரமாயினள். (14)

(ஸ்ரீ - வீர.) எமது வரப்பிரசாதத்தினாலே விரைவில் நீயவ்வறிவை யடைவாய்; என்றருளிச்செய்து அவ்வுல கன்னையானவள் தமது திவ்யஸ்தானத்திற்கு எழுந்தருளவே லீலையானவள் வரப்பிரசாத மகிமையால் பயிற்சியின் சிரமமில்லாமல் விளையாட்டாகவே நிருவிகற்ப சமாதியை யடைவுற்றனள். ஒரு நிமிடத்தினில் லோகபஞ்சரம் போலும் பேதிக்க முடியாததான அந்தக்கரண சகிதந் தூலதேகம் விடுத்துப் பறவையானது கூட்டைவிட்டு வெளிப்போந்து ஆகாயத்திற் பறப்பதேபோலப் பறந்தனள்; சித்தத்தை நிலைநிறுத்தி அபிமானத்தியாகமோண்டு கூற விழைந்ததாம், மரணம்போலும் தேகம் விடுத்து வெளியே செல்லுதலல்லவாம்.

(ச.) ஸ்ரீவசிஷ்டர்: நம்மால் = எமதுவரத்தால் நீ சீக்கிரம் அது. திவ்யமான சொச்சோரூபா சிரபத்தைக் குறித்து ஏக. இம்மாது = இந்தலீலை லீலையினாலேயே விகற்பமிறந்த நெஞ்ச மைம்மாலுறு கூட்டினை = மனம் புத்தியாதிகட்குப் பஞ்சரம்போல் ஆசிரயரூபமான தன்றூலதேகத்தை; அக்கணத்தின் மாற்றினள்; அதன்பின் தம்மாலுறை கூடகல் புள்ளென = சூக்ஷ்மரூபியாய் ஆகாசத்திற் றன்மனோரதப்படி சஞ்சரிப்பவளானாள் என்பது பொருள்.

(ஸ்ரீ-வீர-அ-கை.) சென்ற நாயகன் நின்றநிலையை யறிவிக்கின்றார்:—மங்காதவென.

மங்காத ஞானவிசும் பூடொரு மாநகர்க்கே
வெங்கா தலனெட் டிரண்டாண் டுளவீர னாகிச்
சிங்காதன மேற்செறி வேந்தருஞ் சேனை நாலும்
பொங்கா தரமாதரும் போற்ற விருத்த லோடும். (15)

(ப - ரை.) மங்கா = கெடாத, ஞானவிசும்பூடு = சிதாகாசத்தின்கணே, ஒருமாநகர்க்கே = ஒப்பற்ற பெரியதேசத்திற்கு, வெங்காதலன் = பெருமாசைக்கு விடயீபூதமாய நாயகன், எட்டிரண்டாண்டுளே வீரனாகி = பதினாறுவயதுடைய காவலனாகி, சிங்காதனமேல் = சிம்ஹாசன சமாரூடனாய், செறிவேந்தரும் = நெருங்கிய மன்னவரும், சேனைநாலும் = நால்வகைச் சேனைகளும், பொங்காதர மாதரும் = மிகுந்த ஆதரவோடு கூடிய மங்கையரும்; போற்ற = ஜயஜீவவெனத் தோத்தரிக்க, இருத்தலோடும் = வீற்றிருப்பதைக் கோலாகல சம்பிரமத் தோடும் நோக்கி. (15)

(ஸ்ரீ-வீர.) தன்னுடைய கிருக ஆகாயத்தின் கண்ணே கண்டனள். ஜயஜீவ = வெற்றியோடும் வாழ்க, சிதாகாயத்தின் கண்ணே யிருப்பவளாய் அவ்வாலய ஆகாயத்தின் கண்ணே வெளிப்பட்டதன் வாதனை கரும அனுரூபமாகத் தோற்றுந் தேக கிருகாதியோடெற்றிருக்கும் தனதுநாயகனைத் தரிசித்தாள். அப்போதவன் அநேகமரசர்கள் கூட்டமுற்ற ஆஸ்தான மண்டபத்தில் சிங்காதனத்தில் வீற்றிருக்கும் பூபாலனாய்க் காணப்பட்டான். நீ நீடூழி வெற்றிபெற்று வாழ்கவென வாழத்தப் பெற்றிருந்தான்; அவனெதிரிற் கைகுவித்து மண்டலாதிகமானது காரியத்தை யினிது முடிப்பான் காத்துக்கொண்டிருக்கின்றது.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தனது நாயகனிருக்குங் கோலாகலத்தைக் காணுதலும் ஐயப்பட்டு ஸ்ரீவாக்குத் தேவியை வரவழைத்தலும் காட்டல்:—தன்னென.

தன்னுயிர்க்கேள் வனையந்த லீலைநோக் கிச்சபைபுகுந் தாண்மிகவியந்தாள் சபையைச் சூழ்ந்த, மன்னவரு முனிவருமறை வல்லோரு மங்கையரு நாற்படையு மற்றுளோரு, நன்னிலமுங் குன்றுகளுமூரு நாடுநதித்திரளும் பலபொருளு நண்ணிநோக்கி, மின்னனையாண் மீண்டுதன திடத்தின்மேவி வெண்ணிற வாணியை நினைத்தாள் விகுப்பினோடும். (16)

(ப - ரை.) தன் உயிர்க்கேள்வனை = தனது பிராணநாயகனை, அந்தலீலை நோக்கி அந்தலீலாதேவி பார்த்து, சபைபுகுந்தாள் = அரசசபைக்குட் சென்றனள், மிகவியந்தாள் = மிகமிகவும் அற்புதத்தை யடைந்தனள், சபையைச் சூழ்ந்த = சபையின் கண்ணே நெருங்கிக்கூடி, மேற்குவாயிலை யனுசரித்திருக்கும், மன்னவரும் = அளவற்ற இராஜராஜேச மண்டலத்தையும், கிழக்குவாயிலை யனுசரித்திருக்கும், முனிவரரும் மறைவல்லோரும் = அளவில்லாத முனிவிப்பிர இருடிமண்டலத்தையும், தெற்குவாயிலை யடுத்துப்பரவிய, மங்கையரும் = அளவில்லாத மதோன்மத்த மடந்தையரையும், வடக்குவாயிலை யனுசரித்து நிற்கும், நாற்படையும் = அசங்கிய ரதகஜதுரகபதாதி சேனைகளையும், மற்றுளோரும் = அன்னிய பிரஜைகள் அநேகரையும், நன்றாகப்பார்த்துவிட்டு, நல்நிலமும் = நல்லதேசங்களையும், குன்றுகளும் = பருப்பதங்களையும், ஊரும் = நகரங்களையும், நாடும் = நாடுகளையும், நதித்திரளும் = நதநதிக் கூட்டங்களையும், பல பொருளும் — மற்றும் பிறபொருள்களையும், நண்ணி நோக்கி = நன்றாக உற்று உற்றுப் பார்த்து, மின்னனையாள் = மின்னலைப்போன்ற அந்தலீலாதேவி, மீண்டுந் தனது இடத்தின் மேவி = மறித்துந் தன்னுடைய அரண்மனையை வந்துசேர்ந்து, விருப்பினோடும் வெண்ணிறவாணியை நினைத்தாள் = மிக்கன்புடன் சுவேதவரண ஹம்சவாணியைத் தியானித்தனள்.

(ஸ்ரீ - வீர.) லீலையினாலே முன்னரனுபூத தேசாதிகளும் வந்தியாதிகளுமே ஸ்மரிக்கப்படுகின்றன. நகரமென்றதனானே சாகாநகரங்களாகிய புரங்களையும். பட்டணமாகிய மூலநகர ராஜதானியையும் கொள்க. கொடிக்கூட்டங்களால் வியாபிக்கப்பட்ட இராஜதானியின் பிரதான அரண்மனையின் கண்ணே அவன் எழுந்தருளியிருப்ப அவ்வரண்மனையின் கீழ்வாசலில் எண்ணில்லாத விப்பிரர் முனிவர் இருடியர் கூட்டங்க ணிறைந்திருந்தன; தெற்குவாசலிலோ எண்ணில்லாத இராஜ இராஜேசுர மண்டலங்கள் காத்திருந்தன; மேலைவாசலிலோ எண்ணில்லாத பெண்மணிக் கூட்டங்க ணிறைந்திருந்தன; வடக்குவாசலிலோ ரதகஜ துரகாதிகள் எண்ணில்லாதன நண்ணி நின்றன அக்காட்சியானது ஒரு நகரத்தினின்றும், மற்றொரு நகரத்திற்கு யாவரும் வந்திருப்பது போலத் தோற்றியது; அவர்களியாவரும் தன் தேசத்திலுள்ளவர்கடம் ஆசாரத்தையே செய்பவர்களா யிருந்தார்கள்; பாலகர்களும் தன்றேயத்தினர்; சிறுமிகளும் தன்றேயத்தினர்; மந்திரிமார்களும் முன் றன்றேயத்தி லிருந்தவர் ஆகவே காணப்பட்டனர். அப்பூபாலரே, அப்பண்டிதரே, இரகசிய ஆலோசனை செய்யும் சகாய அம்மந்திரிமாரே அவ்வேலைக்காரரே இருக்கக்கண்டனள் தருநிகள் நதிகள் நதங்கள் சைலங்கள் புரங்கள் பட்டணங்கள் நிறைந்திருப்பதையும், நானா நகரங்கள் விந்யாசமாய காடுகள் கிராமங்கள்நிறைந்திருப்பதையுங் கண்டனள். பழைய ஜரைமுதலியவை யொன்றுமின்றி பதினாறு வயதுடைய காளையாகப் பூபாலனைக் கண்டனள். சர்வபழைய ஜனக்கூட்டங்களையும் சர்வ கிராமவாசிகளையும். லீலையானவள் கண்டு மிகவுஞ் சிந்தையோடு கூடியவளானாள். அந்த வாசனா நகரத்தி லவர்களை யெல்லாங்கண்டு இஃதென்னே முன்னிருந்த நகரத்தி லிருந்தவர்க ளெல்லாம் இறந்துபோய் விட்டார்களா ? என்றாச்சரியப்பட்டு மீண்டும் ஸ்ரீசரசுவதிதேவியின் பிரசாதத்தினாலே யுண்டாகிய வுணர்வாற் சமாதியினின்றுக் கிளம்பிப் பழைய அந்தப்புரத்தை யடைந்தனள்; அவ்வர்த்தராத்திரியில் அங்கு முன்போன்று இருந்த யாவரையும் கணத்திற் கண்டனள். கண்டு சித்தத்திற் சிந்திப்பதாவது. அகோ! இம்மாயை ஆச்சரியமாகவன்றோ இருக்கின்றது, எல்லாப்பிரஜைகளும் சமாதியிற்கண்ட உள்ளவகாச தேசத்திலும் வெளியித்தேசத்திலும் அன்றோ இருக்கின்றார்கள், மலையாதி

களும் ஆங்கேபோ லீங்குமுள. இம்மாயைத் தன்மையை யுவமித்துப் பார்க்கின் கண்ணுடியின் உள்ளும் புறம்பும் பர்வதம் அனுபவிக்கப் படுவதேபோலும் சிற்கண்ணுடியில் உள்ளில் வெளியிலும் உலகசிருஷ்டி யனுபவிக்கப் படுகின்றது, ஆனுல் திருஷ்டாந்தத்தைப்போலவே இரண்டனுள் ஒன்றனுக்கே பொய்ம்மையாம்; இரண்டிற்கும் ஆகாதெனச் சம்பவித்தலின் இதன்கண் ஐயமன்ருே உளதாகின்றது, இவ்விரண்டனுள் மயக்கமயச் சிருஷ்டியாதாம் உண்மை யுலகமியாதாம்? இவ்விஷயத்தை ஸ்ரீ வாக்தேவியை இனிதாராதித்து அத்தேவியின் சந்நிதியில் ஐயமாயிருக்கின்ற தென்று விண்ணப்பித்து அவ்வையம் நீங்கும் வண்ணம் வினவித் தெரிந்துகொள்வேன்" எனத்துணிந்து அக்கணமே யன்போடும் அவள் அருச்சித் தேத்தினள்.

(ச.) மறைவல்லோரும் = விப்பிர இருடி மண்டலமும், ஊரும் = புரமும், நாடும் = பட்டணமும், அவனுலே இரக்ஷிக்கப்பட்ட மற்றுளோரும் = நூதனமான பண்டிதர், சுகிர்தர் முதலான ஏனையோரும், அவற்றின்றிசைகளும் சமாசாரங்களும், பலபொருளும் மேல்வாயிலின் மன்னவரும், கீழ்வாயிலில் முனிவரும், தென்வாயிலில் மங்கையரும், வடவாயிலில் நாற்படையும் என்றுணர்க.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ வாக்குத்தேவி பிரசன்னமாதலும் தனதையம் வினுதலும், கூறல்:—வந்தென.

**வந்துயரா தனத்திருந்த வாணிதன்னை வணங்கியெ னதன்பனுக்கு மரித்த பின்பு, பந்தமுறு மயக்கமே வடிவாய்நிற்கப் பழையபடி பிறப்புற்ற படியிதென்ன, விந்தவுலகுறு மயக்கம்போகச் சொல்வாயென லீலைகேட்டலுமே யிறைவிசொல்வாள், உந்து சிருட்டியின் முன்புமயக்க மட்டே யுருவாமிச்சிருட்டி வேறுதித்ததாகும். (17)**

(ப - ரை.) வந்து = எழுந்தருளி யாகிவந்து, உயர் ஆதனத்திருந்த = மேன்மைமிக்கு மேலான பத்ராசனத்தில் வீற்றருளியிருந்த, வாணிதன்னை = ஸ்ரீசரசுவதிதேவியை, வணங்கி = நமஸ்கரித்துத் தோத்தரித்து, என தன்பனுக்கு = எனது நாயகனுக்கு, மரித்தபின்பு = மரணாந்தரம், பந்தமுறு மயக்கமே வடிவாய் நிற்க = கட்டுறும் அமூர்த்தமாய் மயக்கமே யுருவமாயிருக்க, பழையபடி பிறப்பு — மீண்டும் வேறுசன்மம்; உற்றபடி = வந்தவகை, ஈதென்ன = இஃதென்னற்புதம்! இந்தவுலகுறு மயக்கம்போகச் சொல்வாயென — இச்சகம் தோற்றமோ மாற்றமோ வென்னும் பிராந்தி நீங்கும்படியாக வுபதேசிப்பாய் என்று, லீலைகேட்டலுமே = லீலை வினவியபோது, இறைவி — ஜகன்மாதா, சொல்வாள் — திருவாய் மலர்ந்தருள்வாள், உந்து சிருஷ்டியின் முன்பு = முன் ஸ்மிருதியினுல், மயக்கமட்டே யுருவாம் = பிராந்திமாத்திர வடிவமாய, இச்சிருட்டி = இச்சருக்கம், வேறுதித்ததாகும் = எப்படி யுதிதமாமோ. அப்படி யெனுவருங் கவியோடன் வயம். (17)

(ஸ்ரீ - வீர.) பத்திராசனம் = சிங்காசனம் = நிருபாசனம் — சுபாசனம். பதுமநிருபனுல் மரணத்தின் பிற்கணத்திலேயே அதேயில்ல ஆகாசத்தில் கண்டவேறுபிரபஞ்சத்தின் உற்பத்தியின் கண்ணே தக்கதேச காலசாதனுதி யின்மையின் சொப்பனப் பிரபஞ்சம்போலப் பொய்ம்மை துணிந்து அத்திருஷ்டாந்தத்தானே சம்பவித்திரா நின்ற சகத்தின் மித்தியாத்துவத்தின் நிச்சயப் பொருட்டுப் பதியின் பிரபஞ்ச அயன்மயற் காரணம் வினவுகின்றுள், எனதன்பனுக் கென்பதாதியாய். அம்மயற்காரணம் அறிந்தவழி அக்காரணத்தையுடைய சர்வஜகத்திற்கும் மித்தியத்துவம் துணிதல் எளிதாகக் கூடும்

என்பதாம் மூர்த்தம் = அவயவத்தோடு கூடியது அஃதற்ற தமூர்த்தமாம். அமூர்த்தத் தன்மையிலேது, மயக்கமே வடிவமா யிருத்தலின் என்பதாம். இவ்வுலகமியாவுமே மயல் வடிவமேயாம் ஆண்டு முன்மயலால் பின்பின் மயக்கவுற்பத்தியாம் எனச்சித்தாந்தம் நிலை நின்றவழி நினது நாயகனுக்கு மரணத்தினும் முன்பதான வுலகமயக்கம் எங்ஙனம் முன் சன்மசஞ்சிதத்தா லுண்டாயதோ அங்ஙனமே மரணத்தின் பின் பவிக்கும் பிரபஞ்ச மயக்கமும் பூர்வஜன்ம பாவனையால் உண்டாயதாம் என்றுத்தரந் தந்தருளுகின்றாள் உந்து என்பதாதியாய். முன்றரிசனந் தந்தடைவுற்ற குமாரிவடிவ திவ்யமூர்த்தியைக் கண்டு கண்களிகூர்ந்து பரமார்த்த மகாசக்தியும் பத்திராசனத் தெழுந்தருளி யவளும் ஆகிய அவ்வாக்தேவியைப் புவியிலுற்ற லீலாதேவி கைகூப்பி யினிதாகச் சந்நிதியி லிருந்து வினவுவாளாயினள்.—ஹே பரமேசுரி! எம்மனோரை தயோசித விடயத்திலல் லவோ உத்தமர் சாதுரியமாய்ப் பஜிப்பர், ஆகையால் தேவரீரது சந்நிதியில் விண்ணப் பித்துக் கொள்ளும்! விடயங்கட்குச் சமாதானத்தை திருவருள் செய்யவேண்டும்! எங்ஙனம் பதிக்கு அமூர்த்தமாக இச்சர்க்கத்தினின்றுஞ் சர்க்கம் மயக்கவடிவமா யுண்டாமோ அங்ஙனம் உலகமயக்க நீக்கப்பொருட்டு அனுக்கிரகித்தருள வேண் டும். இச்சர்க்கமும் முற்சர்க்க கோசர சமஸ்காரஜன்ய மயக்கமேயாகும், எனக் கூறியபொருளை மெய்ப்பிக்கும் பொருட்டு மண்டப உபாக்கியான ஆரம்பத்தை ஸ்ரீஅம் பிகை பதிஞ்ஞைசெய்து கூறுகின்றாள், உந்து என்பதாதியாய். முன்மிருதியினால் மயக்க மாத்திரவடிவ இச்சர்க்க முதித்தது.

(ச.) உயராதனம் = பத்திராசனம், ஞப்திமயமான வாணிதன்னை வணங்கி, லீலை யின் பிரசினம், எனதன்பனுக்கு இச்சன்மத்தினின்றும், மரித்தபின்பு, சமாதியிலிருந்த வென்றால் இப்போது காணப்பட்டு, பந்தமூறும், அந்நியர்க்கு அதிருசியமாதலின் அமூர்த் தமாய் = மயக்கமே வடிவாய், பதினாறுவயது முதலியவைகள் அசம்பவமாதலின், அயதார்த்தமாய், நிற்க = பழையபடி பிறப்பு = ஜன்மாந்தரம், உற்றபடி = வந்தபிரகா ரத்தை, ஈதென்ன = என்னென்று சொல்வேன் இஃதற்புதம் அற்புதம், இந்தவுலகுறு மயக்கம்போக = சப்பிரமை நிவிருத்தியாக, சொல்வாய் = எனக்கு அருள்செய்வாய் எனலீலை கேட்டலுமே இறைவி சொல்வாள், உந்து சிருட்டியின் முன்பு = பூருவஜன் மத்தெழுந்த சமஸ்கார வேதுவினால், மயக்கமட்டே யுருவாம் = பிராந்திமாத்திர ரூப மான, இச்சிருட்டி = இந்தச் சம்சாரம், எப்படி வேறுதித்த தாகுமோ. (17)

(ஸ்ரீ - வீர - அ - கை.) பதிஞ்ஞை செய்த அதனையே விரித்துரைத்தல்:—அப்படி யேயென.

அப்படியே யுன்கணவற் கிரண்டாஞ் சென்மமாயின தாலீதுரைப்ப வறிந்து கேட்பாய், மைப்படி விலா விமலஞான விண்ணின் மற்றொரு பான்மாயா மண்டபமொன்றுண்டாஞ், செப்பரிய விசும்பென்னு மயூரப்பீலித் திரை யாலே மறைத்திருக்குஞ் செம்பொற்குன்றுங், கப்புறுபொற் றாணிலுறையுலக பாலர் காரிகையா ரெனும் பொறிகள் கலந்துநிற்கும். (18)

(ப - ரை.) அப்படியே = அவ்வாறே, உன்கணவற்கு = உனது நாயகனுக்கு இரண்டாம் சன்மம ஆயினதால் = இரண்டாவது பிறப்பு ஆகியிருக்கின்றது, ஈதுரைப்ப = இதனையாம் தெளிவுபடுத்த, அறிந்து கேட்பாய் = உணர்வுடன் ஒருமையுடன் கேட்குதி, மைபடிவிலா = யாதொரு களங்கமும் உண்மையின்னோராத, விமலஞான விண்ணில் = நிருமல சிதாகாசத்தில், மற்றொருபால் = இன்னொரு பக்கத்தில், மாயாமண்டபம் ஒன்

றுண்டாம் = ஒரு சமுசாரமண்டப மானது இருக்கின்றது, செப்பரிய = சொல்லுதற் கொல்லாத, விசும்பென்னும் = விண்ணென்னும், மயூரப்பீலித் திரையாலே = மயிற் றோகைத் திரைச்சீலையினாலே, மறைத்திருக்கும் = ஆச்சாதிக்கப்பட்ட ஆகிருதியுடைய தாகவிருக்கும், செம்பொற்குன்றாங் கப்புறு பொற்றூணில = செம்பொன்னாலாய பருவத மென்னும் பலமுடி பொருந்திய ஸ்தம்பத்தின்கண், உறை = வாழும், உலகபாலர் = லோகேசர், காரிகையார் = அவர்தங் குடும்பினிகள், என்னும் = என்றுசொல்லாநின்ற, பொறிகள் = பதுமைகள், கலந்து நிற்கும் = கூடியலங்காரமா யிலங்கா நிற்கும். 'மயூரப் பீலி கவிநாயகரதாம். (18)

(ஸ்ரீ - வீர.) திருஷ்டாந்தமே பொருத்த மற்றதாமென ஆசங்கிப்ப விடைதருவார் ஈதுரைப்ப என்றார். இதனை வெட்ட வெளியாகத் தெளியுமாறு கூறுவாம் என்றதாம். பதுமலீலைகட்கு வேறு சருக்கத்தில் பிராஹ்மண தம்பதிகளாக முன்னர் இருந்தமையா தியை காட்டும் பொருட்டு அவர்தம் பூர்வ சமுசாரத்தை ஜீர்ண மண்டபமாகத் தள்ளும் பொருட்டு வருணிக்கின்றார் மைப்படிவிலா வென்பதாதியாய். ஆகாசமே நீலத்தகைமை யான் நீலக்கற்றள வடிவமான மறைப்பீட்டும்பொருளாம், அதனால் ஆச்சாதிக்கப்பட்ட = மறைக்கப்பட்ட, ஆகிருதி = ஆகாரம் உடையதா யிருக்கும். மேருவே ஸ்தம்பமாம், அதன் கண்ணுள்ள லோகேசர்களாகிய இந்திராதிகளின் குடும்பினிகளே பதுமைகளா வார்கள் அவர்களை யுடையதாம். கனமயல் வடிவமா யிலங்குகின்ற இவ்விதத்தை யியம் பக் கேட்பாயாக, இச்சமுசாரமானது ஒரு ஜீரண மண்டபமேயாகும், எங்குளதெனின்? அஞ்ஞானத்தான் மறைபட்ட அங்கிசமாய் அதனினும் சிருஷ்டிப்பவன்றன் அந்தக்கரண பாக சிதாகாசத்தில் அசமுசார மண்டப முளதாம், ஆகாசரூபமான யாதொரு காசகண் டம் போலும் நீலமேலவயவச் சேர்க்கையான் மறைவுற்ற ஆகிருதியுடையதாகும்; அதன் கண்ணிருக்கும் மேருகிரியாகிய தம்பத்தின்கண் ணமைக்கப் பெற்ற உலகபாலர்களாகிய இந்திரனிந்திராணி முதலிய பதுமைகள் மிக அலங்கிருதயாகும்; பதினான்கு லோகங்க ளாகிய உள்வீடுகள் அதன் கண்ணுண்டு; திரிபுவன அந்தராளப் பள்ளமுமுண்டு; ஆண் டாதித்தனே யணையாத் தீபமாம்.

(ச.) அப்படியே நின்கணவற்கு இரண்டாஞ் சன்மமாம் = துவிதீய சிருஷ்டியும், ஆயினது = உதித்தது, அதிலுங் பூர்வசன்ம சமஸ்காரமே காரணமென்பது பொருள். ஈதறிந்துரைப்ப = இஃதனைத்துஞ் சித்தித்தபடியான் அறிந்து மொழியக் கேட்பாய், மைப்படிவிலா நிமலஞான விண்ணில் = சின்மாத்திர ரூபமான ஆன்மாவில், அவர்க்கே பிரபஞ்ச அதிட்டானத்துவ மாதலின், மற்றொருபால், மாயாமண்டபம் = சம்சாரமென் னும் மண்டபம் ஜனாசிரயத் துவமாதலின், ஒன்றுண்டாம் செப்பரிய விசும்பென்பன முதலியவை மண்டபசாமிய சாதகங்களான விசேடணங்களாம், செம்பொற் குன்றாம் = மேருவே மண்டபாதாரத் தம்பமாம், கப்புறு பொற்றூணிலுறை = அம்மேருத் தம்பத் திற் பொருந்திய, உலகபாலர் = புரந்தராதிய ருடைய, காரிகையாரெனும் சசிமுதலி யரே, பொறிகள் = பிரதமைகளாக, கலந்துநிற்கும்! காசதளம் = காசமென்பது பாக சித்தமண் விசேடமாம், ஆகாசமே காசதள கற்பித மறைப்பீட்டும் பொருளாம், அதனால், மறைபட்ட ஆகிருதியை யுடையது.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மாயாமண்டப வர்ணனை:—ஒரு என.

ஒருகோணங் தனிற்பூதப் புற்றுமாங்கே யுறைகின்ற மலைகளெனு மோடு டாம், வருகாதற் புத்திரர்சூழ்விருத்த வாலமறையவனுங் கொருவனுறை

மனையதாகுங், குருவான வாயுவின் மார்க்கத்துலாவு கோலவிமானப் புழுவின் குழுவைமேவு, மருகான விண்ணினுறை சித்தர் கூட்ட மானகொது கிரைகின்ற வரவ நண்ணும். (19)

(ப - ரை.) ஒரு கோணந் தனிற் பூதப்புற்றும் = ஒரு மூலையிற் பூதவன்மீகங்களும், ஆங்கே = அவைகளால் உறைகின்ற = வியாப்தமா யிராநின்ற, மலைகளெனும்=பருவதங்கள் என்னும், ஓடு முண்டாம், லோஷ்டங்களும் இருக்கின்றனவாம்; வருகாதற்புத்திரர் சூழ் = வாராநின்ற அன்பிற்கு விடயீபூதராய அநேக புத்திரராற் சூழப்பெற்ற, விருத்தவால மறையவன் ஆங்கு ஒருவனுறை மனையதாகும் = ஜரடப்பிரஜேசப் பிராஹ்மணன் வாழும் இல்லமும் அங்கிருக்கின்றது, குருவான = கனமான, வாயுவின் மார்க்கத்துலாவும் = வாதமார்க்க மகாவம்சத்தில் இங்கு மங்குமாய்த் திரியும், கோலவிமானப் புழுவின் குழுவைமேவும் = நாநாவித அலங்காரம் நண்ணிய விமானங்களுடனாகிய கீடக்கூட்டங்களுடன் கூடி விளங்கும், அருகான விண்ணினுறை=கண்ணிற்கெட்டாத ஆகாயவீதியில் நெருங்கி விளையாடும், சித்தர் கூட்டமான=சித்தர் கூட்டமென்று சொல்லப்பட்ட, கொதுகு=மசகம், இரைகின்ற = சப்திக்கின்ற, அரவம் நண்ணும்=கும்கும் ஒலி நிறைந்திருக்கும். (19)

(ஸ்ரீ - வீர.) மண்டபம் நெடுங்காலம் ஆய்விட்டதாயின் வன்மீக நிறைந்த லோஷ்டமுடையதாய் விடும்; அவ்வாறே சமுசார மண்டபமும் மூலையிலுள்ள பூதவன்மீக வியாப்த பர்வதலோஷ்ட முடையதாம், லோஷ்டம்=மட்பிண்டம், தூளிக்கட்டி பர்வத கோணங்களில் இராநின்ற பிராணிகள் பூதசப்தத்தானே கூறப்படுகின்றன, பர்வதங்களே லோஷ்டங்களாம், கோணத்திருக்கும் பூதங்களேயாய வன்மீகங்களால் வியாப்தங்களாய பர்வதலோஷ்டங்களை யுடையதாம். அல்லது கோணத்திரா நின்ற பூதவன்மீக வியாப்த பர்வத லோஷ்டங்களை யுடையதாம். ஜரடம் = ஜரையோடு கூடியிருத்தல், அநேகபுத்திரர் மரீசியாதியர், ஜரையையும் அளவிலா மைந்தரையு முடையவராய் பிரஜைகட் கீசரா யிருக்கும் பிராஹ்மணரது இருப்பிடமாம். மண்டபமானது மேற்பாகத்திற் குறுக்கில் நீண்ட பெருமூங்கிலிலுள்ள கீட்முடையதாம், அவ்வாறே சமுசார மண்டபமுமாம். மேகமார்க்கத்திற்கும் சௌரமார்க்கத்திற்கும் இடையில் வாயுமார்க்கம் பிரசித்தமாம் எம்மார்க்கத்தைப் பற்றிப் பீமசேனனால் எடுத்தெறியப்பட்ட அநேக ஆயிரங்கஜங்கள் பஞ்சுகள் போலப் பறந்தனவோ. விமானத்திற் செல்பவரே புழுக்கள் ஆவர்கள், வாயுமார்க்கமே பெருமூங்கிலாம் அதன்கண் ணிராநின்ற விமான சம்பந்திப் புழுக்களை யுடையதாம். ஆகாயத்தில் வசிக்கும் சித்தக் கூட்டங்களே மசகங்கள், அவற்றால் ஆக்கப்பெற்ற குங்குமத்தொனியை யுடையதாம். ஒரு கோணந்தனிற் புற்றுண்டாக்கும் உபதிகைவம்ரி என்னுஞ் சந்துக்களின் வன்மீகங்களேயாய நகராதி வியாப்த மலைமட்கண்டங்கள் அங்குண்டு, அநேகம் புத்திரர்களோடு கூடிய விருத்தரான பிரஜைகட்கீசராம் பிரஹ்மாவென்னும் பிராஹ்மணர் வீடும் அங்குளதாம். ஜீவக்கூட்டங்களாகிய கோசகாரப் புழுக்களின் கூட்டமங்கதிகம், இவைகள் தம்பந்தனக் கூடுசெய்யும் புழுக்களாம்; விண்மேற்றலங் கருமையா யிருக்கும், ஆகாய வீதியிலுலாவும் சித்தக் கூட்டங்களாகிய கொதுகுகள் கும்கும் என இரைந்துகொண் டிருக்கும்; வாயுமார்க்கமாகிய மகாவம்சத்தின் கண்ணே (மதுவித்தையின் கண்ணே சுவர்க்கமே குறுக்காயிருக்கும் வம்சமாகுமாதலின் என்க) இருக்கும் விமானத்தேறி யுலவும் புழுக்கள் எண்ணிறந்தனவாம், மேகங்களாகிய இற்புகைகளின் உக்கிரக் கூட்டத்தாற் சூழப்பட் டிருண்டிருக்கும் ஒரு கோணமாம்.

(ச.) ஒரு கோணந்தனில் பூதப்புற்றும் இருக்கின்ற பூதங்களென்னும் வன்மீகங்களும், ஆங்கேயுறைகின்ற = அவைகளால் வியாப்தமான, மலைகளெனும் ஓடும் = மட்பிண்டங்களும், உண்டாம், வருகாதல் = அநேகராய் வராநின்ற அன்புள்ள புலத்திய புலநாதிகள் என்னும் பிரஜாபதிகள் ஆகிற புத்திரர்சூழ், குருவான = கனமாகிய, வாயுவின் மார்க்கத்து = அந்தரிக்ஷ மென்னும் வம்சத்தில், மூங்கிலில் = தோற்சாரத்தில் உலாவும் கோல விமானத்தையுடைய, (தேவர்களென்னும்) புழுவின் குழுவை, கபோதாதிரூப ஜந்துக்களை மேவும், அரவம் = குங்குமத்தொனி, நண்ணும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சமுசாரமண்டப வர்ணனையை யுபசங்கரித்து பிரகிருதந் தொடங்கல்:—வானவரென.

வானவர்தா னவரென்னுந் தீய மக்கண் மதத்தவிளை யாட்டோசை மாறு தாகும், ஆனதொரு மாமாயா மண்டபத்தி லாங்கொருபா லொருகோணத் தகத்தி னுள்ளே, மானமிகு மலையென்னு மோட்டி லொன்றின் மலைகளினு லாறுகளால் வனங்கடம்மான், மேனலமார் நகரொன் றுண்டதனில் வாழ்வோன் வெங்கனலோன் வேதியரின் மிகவு மிக்கோன். (20)

(ப - ரை.) வானவர் தானவ ரென்னும் = சுர அசுரர்களென்று சொல்லப்பட்ட, தீயமக்கள் = துர்ப்பாலரது, மதத்த = கலகஞ்செய்து கொள்ளும், விளையாட்டோசை = லீலாகலகல ஆகுலமானது, மாறுதாகும் = எப்போது முளதாம், ஆனதொரு மாமாயா மண்டபத்தில் = இத்தகையதாகிய மாக்ஷிமைதங்கிய சமுசாரமண்டபத்தில், அங்கொருபால் = குறிப்பான ஓரிடத்தில், ஒருகோணத் தகத்தினுள்ளே = ஒரு மூலையினது அகட்டினுள்ளே, மானமிகு மலையென்னும் = யாவரானும் புகழுதன் மிகுந்த வளப்பமும் வனப்பும் வாய்ந்த பர்வதமாகிய, ஓட்டில் ஒன்றில் = லோஷ்டதல மொன்றில், மலைகளினுல் = குன்றுகளால், ஆறுகளால் = நதிகளால், வனங்கள் தம்மால் = பூங்காவனங்களினுல், மேல் நலமார் = மேன்மையான நன்மைமிருந்து விளங்கும், நகர் ஒன்றுண்டு = கிரிக்கிராமமென் றோருசிறு பட்டண கர்த்தமுளதாம், அதனில் = அந்நகரின்கண், வாழ்வோன் = இல்வாழ்க்கையை நடத்தப் பட்டவனுகி, வெங்கனலோன் = அக்கினி கோத்திரஞ் செய்பவனுகி, வேதியரின் மிகவும் மிக்கோன் = மறையை நிறையவுணர்ந்து நடையுடையனுகலின் மறையவர் யாவரினும் மிகமிகவும் மேன்மையுற்றவனுகி ஒரு பிராஹ்மண சிரேஷ்டன் மனையாளுடன் வாழ்ந்தான். (20)

(ஸ்ரீ - வீர.) சுராதியரே துஷ்டபாலர் அவர்தம் லீலை கலகலவென அரவமிகுத்துக் கோலாஹலத்தால் ஆகுலமாம், அகடு = அபவரக உதரம் = கர்ப்பாகாரம் பர்வத லோஷ்ட கீழ்பாகம் மலையோட்டின் சரிவு. கிரிக்கிராமம், கிராமநாமம் = அக்கிராமம் பர்வதத்தின் கீழ்ப்பிரதேசத்தில் இருப்பதைக் காட்டும் பொருட்டே கர்த்தமெனப் பதவுரையில் இடப்பெற்றது. கர்த்தம் = பள்ளம். ஒருபால் சுரர் அசுரர் முதலிய தீயமக்களின் விளையாட்டோசை கலகலவென மாறுது நிறைந்துறையும்; பூவாதிலோகங்களின் உள்ளடங்கிய புரம் கிராமங்களாகிய மண்டபத்துற்ற பாண்டபதார்த்த அதிசயங்களாம், எரி நதி, கடல், தடாகஜலங்களால் ஈரப்படுத்தப்பட்ட மகீதலமு மாங்குண்டு, பாதாளம் பூதலம் சுவர்க்கம் என்னும் பாகங்களா யிலங்கும் பொந்துகளு மாங்குண்டு, அத்தகைய மண்டபத்தின் கண்ணே ஏதோ ஒரு ஏகதேசகோணத் தேகதேச பொந்தாகாயத்திலிருக்கும் மலையோட்டடியில் ஒரு சிறிய கிரிக்கிராமக் குழியுளதாம்; ஆறுகளாலும் குன்றுகளாலும் உபவனங்களாலும் சூழப்பெற்ற அந்தக்கிராமத்தில், யாகாக்கினியை யுடை

யவனும் கற்புக்கரசியை யுடையவனும், அநேகம் மைந்தர்களை யுடையவனும், அரோக திடகாத்திரனும் பாற்பசுக்களும் வாகனங்களும் உடையவனும், அரசபய மணுகாதவனும், எல்லாவருண ஆசிரம அதிதிகளையும் பூசிப்பவனும், போஷிப்பவனும், அறநெறி நின்றோனும், ஆகிய அருமறையோன் ஒருவனிருந்தனன்.

(ச.) வானவர் தானவர் என்னும் = சுராசுராதிக ளென்னும், தீயமக்கள் = துட்ட பாலகர் கலகசீலராதலின், அவர்களுடைய மதத்த விளையாட்டோசை = லீலா நிமித்தமான கலகலத்தொனி மாறாதாகும்; கோணத் தகத்தினுள்ளே = திக்கென்னுங் கர்ப்பக்கிரக மத்தியில், ஓட்டில் ஒன்றில் = மட்பிண்டத்தோர் தலத்தில், நகர் = கிரிக்கிராமம், கிரியிலிருக்கும் கிராமரூபமான சுவதேசம், ஒன்றுண்டு; பெண்டு பிள்ளைகளோடும் அரோகனுகி வாழ்வோன்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) உவமான பூர்வகமாக அம்மறையவனையும் அவன்மனைவியையும் புகழுல்:—வடிவென.

வடிவுபொருள் வயதொடுக்கஞ் சேட்டை விஞ்சை வசிட்டனுக் கொப்போனந்த வசிட்டனென்றே, படியுமுணர் வினனல்லன் பெயரா லிந்தப்பனவனையும் வசிட்டனெனப் பகரலாகும், அடிபரவு மருந்ததியை யொப்பா ளந்த வருந்ததிபி னுணர்வினளன் றமைந்த பேரா, னெடியவருந்ததியாகு மிவற்குத் தேவி நிலத்திலிவள் விண்ணிலவ ணிகர்வே றில்லை. (21)

(ப - ரை.) வடிவு பொருள் வயது ஒடுக்கம் சேட்டை விஞ்சை = வேஷம் வித்தம் வயசு அடக்கம் நடை வித்தை வைதிககருமம் ஐசுவரியம் என்னும் இவற்றானே, வசிட்டனுக் கொப்போன் = பிரசித்த வசிட்டமுனிவற் கொப்பானவன், ஆனால், அந்தவசிட்டன் என்றே படியும் உணர்வினன் அல்லன் = வசிஷ்ட சம்பந்தமான சேதனன் அல்லன், பெயரால் = வசிட்டன் என்னும் நாமத்தால், இந்தப் பனவனையும் = இம்மறையோனையும், வசிட்டனெனப் பகரலாகும் = வசிட்டன் என்று சொல்லிக் கொள்ளுவார்கள், அடிபரவும் அருந்ததியை = அவ்வசிஷ்ட முனிவரது பதங்கட்கு அன்புடன் பணிசெய்யும் அருந்ததிதேவியை, ஒப்பாள் = ஒப்பிடத்தக்க இந்து சுந்தரியானவள், இவற்குத்தேவி = இம்மறையவனுக்கு மனைவியாக இருந்தனள், ஆனால், அந்த அருந்ததியின் உணர்வினள் அன்று = அருந்ததி சம்பந்தமான அறிவுடையவள் அல்லள்: அமைந்தபேரால் = வுடற்கமை வுற்றநாமத்தால், நெடிய வருந்ததியாகும் = நீண்ட கலியாணகுண அருந்ததியாவள், அதிகமாக அறைந்தென். நிலத்திலிவள் விண்ணிலவள், நிகர்வேறில் = பூமியில் இவ்வருந்ததியும் வியோமத்தில் அவ்வருந்ததியும் இருக்கின்றார்கள் என்பதேயல்லாமல் உவமிக்க அயலொன்றுமே யின்றாம். (21)

(ஸ்ரீ - வீர.) வசிட்டனுக் கொப்போன் = வசிட்ட சதிருசனேயாவன். வசிட்ட சதிருசனே யல்லாமல் வசிட்டசம்பந்தி ஜீவனல்லவேயாம், பிரசித்த வசிட்டனினும் வேறொருவனேயாவன் வசிட்டனென்னும் பெயர் மாத்திரையானே இவன் விக்கியாதியுடையவன், தெய்வதனம் மநுடதனம் வடிவம், வயது, தொழில், வித்தை, பெருமை, சேட்டை முதலியலற்றால்வசிட்டனுக்கே அம்மறையவன் ஒப்பாவான், என்னும் வசிட்டனது இருத்தியங்களாகிய இக்ஷுவாகு வங்கிசத்திற்குக் குருத்தன்மை செலுத்தல் ஸ்ரீ இராம உபதேசாதிகள் இல்லாதவனுவன்; வசிட்டனென்னும் பெயரானே வழங்கப்பெறுவன். அவனது அடிபரவும் இந்து சுந்தரியாய மனைவி அருந்ததியெனப் பெயர் பெற்றவளேயாவள்; ஆனலவள் விண்ணருந்ததி இவள் மண்ணருந்ததியாவள்; வித்தம்,

வேஷம், வயதுகருமம், வித்தை, விபவம், சேஷ்டை முதலியவற்றானே இவளும் அவ் வருந்ததியையே யொப்பாவாள் எனினும், சேதன சொரூபஸ்திதியி லொப்பாகாள்; அம்மறையவன்பால், மிகமெய்யன்புடையவள், விலாச மந்த நடையுடையவள், வெள் ளாம்பல்போலும் புன்னகை யுடையவள் இத்தகைய இவள் அவனது சமுசார சர்வைசு வரியமாக இருந்தனள். இவ்விருவருக்கும் அவ்விருவருக்கும் வேற்றுமை, தத்வஞானம் வரும்பிறப்பில் உளதாவதாக இருத்தலால் அக்கால் அஞ்ஞானாதலின் கட்டுப்பட் டிருத்த லினானும், தத்வஞானம் அப்போதே யிருத்தலின் ஜீவன்முக்தத் தன்மையோடு கூடி யிருத்தலினானும் என்றுணர்க.

(ச.) வடிவு பொருள் வயது ஒடுக்கம் சேட்டை விஞ்சை ஆகிய விவற்றால் விப்பிர தம்பதிகள் வடிவு பொருள் அனைத்தினாலும் நாமத்தானும், அருந்ததி வசிட்டரோடு சமா னராம் அன்றி யவர்களது சேதனத்தினாற் சமானரன் றென்பதாம்.

(ஸ்ரீ வீர - அ -கை.) அம்மறையவனது அரசதரிசனமும் அரசாக்ஷி யாசையும் கூறு கின்றார்:—இந்தவென.

இந்தவருந் ததிகணவ னென்று சொன்ன விவ்வசிட்ட னம்மலையி னிலங்கு சாரன், முந்தியொரு நாளிருப்ப வேட்டைக் காங்கோர் முடிநிருபன் சேனை யொடு முன்வந் தெய்த, வந்தநிரு பனைநோக்கி வசிட்டன் றேர்வா னகோ வகோ மன்னவர்வாழ் வறவுநன்றாஞ், சுந்தரமாம் புவிக்கரசாய்ச் சேனைசூழத் துணைக்கவரி பரிமாறச் சுகிப்ப மெந்நாள். (22)

(ப - ரை.) இந்த வருந்ததி கணவன் = இப்பூலோக வருந்ததி நாயகன், என்று சொன்ன = எனமேன்மைப் படுத்தி மிழற்றிய, இவ்வசிட்டன் = இவ்வசிட்டப் பிராஹ் மணன், அம்மலையின் = அபபர்வதத்தின், இலங்குசாரல் = விளங்காநின்ற சார்பிலுள்ள பசும்புற்றரை சூழ்ந்த பாறையில், முந்தியொருநாள் இருப்ப = முன்னொரு சமயத்தில் உல்லாசமா யமர்ந்திருப்ப, வேட்டைக் காங்கோர் முடிநிருபன் = கீழ் தாழ்வரைப் பக் கத்தில் நவரத்நகசித கிரீடந்தரித்த ஓரரசன் வேட்டையாடும் பொருட்டு, சேனையொ டும் = நால்வகைச் சைனியங்களோடும், முன்வந்தேய்த = தன் விழிபட வழிகொண்டு செல்ல, அந்தநிருபனை நோக்கி = அந்த இராஜராஜேசுரனைக் கண்குளிரக்கண்டு, வசிட் டன் றேர்வான் = வசிட்டப் பிராஹ்மணன் சிந்திப்பதாவது; அகோ அகோ = அந்தோ அந்தோ! மன்னவர் வாழ்வு அறவும் நன்றாம் = அரசனாக விருந்து அரசாக்ஷி செய்யுந் தன்மை அத்தியந்தம் ரம்மியமாம், சுந்தரமாம் புவிக்கரசாய் = சர்வ சௌபாக்கியங்க ளோடுகூடி எல்லாத் திசைகட்கும் மகாராஜாவாய், சேனைசூழ = சதுரங்க சைனியஞ் சூழ, துணைக்கவரி பரிமாற = இருபுறமுஞ் சாமரமிரட்ட, சுகிப்பம் எந்நாள் = ஆநந்திக் கும்படியாகவும் ஒருகாலங் கிட்டுமோ? (22)

(ஸ்ரீ - வீர) மூலத்தில் சாத்வலம், சாதஹரித மென்பதால், சாதத்தால்=இளம்புற் களால், ஹரிதமான = நீலமான தேசம் சாத்வல மென்பது அமரமாம், ஸ்ரீ பாணினிபக வானும், சாதம் இருக்கின்றது இவ்விடத்தில் என என்னு மிப்பொருளில் நட்சாதாத்ட் வலச் என்றுட்வலச் விகுதி கூறியுள்ளார், அதாவது சேறு முதலிய அருத்தங்களைச் சாதசப்த முணர்த்தாது கேவலம் இளம்புல் வாசகமாகிப் பாலதிருணத்தை மாத்திரம் உணர்த்துமானால் சாதத்தினின்றும் ட்வலச்விகுதியா மென்பார், எனினும், அப்பொருட் கேண்ட சம்பவமாதலின் சாத்வலசப்தத்தானே ஹரிதத்தன்மையே கொள்ளவேண்டும்,

வேண்டவே சரல விருக்ஷங்க ளென்னும் பூதிகாஷ்ட, தேவதாரு, செம்பிளிச்ச, கடு விருக்ஷங்களா ஹரிதமான சைலப்பிரதேசத்தில் என்பதாம். மஞ்சள் கடமரம் சலரம் பூதிகாஷ்டமென்ப தமரமாதலின். அம்மறையவன் அம்மலையின் சார்பின் சோலையிற் பசும்புற் சூழ்ந்த சமநிலத்தில் ஒருகால் உட்கார்ந் திருந்தபோது பூமியிற்செல்லும் பூபதி யொருவனை நன்குகண்டனன்; அந்த பூபதியானவன் எல்லாப் பரிவாரங்களோடும் வேட்டையாடும் வேட்கையோடும் பெருஞ்சேனையின் ஆரவாரத்தோடும் மிருகங்களைப் பிளக்கும் ஆசையோடும் மேருகிரிக்கொப்பாகச் சென்றான் சென்ற அம்மகிபாலனைக் கண்ணுற்று இதனைச் சிந்தையோடு மெண்ணுகின்றான்:—சர்வ சௌபாக்கியங்களோடுங் கூடி விளங்காநின்ற அரசியற்கை என்ன இரம்மியம் அகோ ஆச்சரியம்! இரதகஜதுரக பதாதிகளாலும் கொடி குடை வெண்சாமரைகளாலும் சோபிக்கப்பெற்ற இதுவன்றோ மகாபாக்கியம்! பத்துத் திசைகளிலும் பரந்த இராச்சியங்கட்குச் சக்கிரவர்த்தியாக எப்போது ஆவேன்.

(ச.) சர்வ சௌபாக்கிய சாலியராகிய மன்னவர் வாழ்வு, துணைக்கவரி பரிமாற = சத்திரசாமரங்களினால் வாயுக்கள் மகரந்த சுகந்தங்களை வீச, சுகிப்பே மெந்நாள். (22)

(ஸ்ரீ - வீர.-அ - கை) அந்தணனது ஆசைப் பெருக்கமும் அப்பெருக்கத்துடன் மரித்தலும் விரித்தல்:—கொடியென.

கொடிகுடையி னிழனெருங்க வாழ்ந்து மாதர் குங்குமக் கொங்கையின்
மூழ்கிக் குளிப்போ மெந்நாள், முடிவறுமிப் பயனென்று பெறுவ மென்றே
மொய்காத லன்றுமுதன் முளைத்த நெஞ்சன், மடியறுதன் கருமத்தினின்றான்
மூப்பு வனசஞ்சேர் பனியின்வர மனைவி நிற்போ, லடிபரவி யெனைவேட்டும்
வரமு மீந்தே னந்தணனு மிறப்புற்றா னாசையோடும். (23)

(ப - ரை) கொடி குடையின் நிழல் நெருங்க வாழ்ந்து = பதாகை சத்திரசாமரை களினது சம்பிரமம் பூரிக்கச் சாம்பிராஜ்ய வாழ்க்கை யடைந்து, மாதர் = யவ்வன உல்லாச தருணியரது, குங்குமக் கொங்கையில் மூழ்கி = குங்குமப்பூ, கலந்த செங்கலவை நிறைந்த தனங்களில் காடாலிங்கனஞ்செய்யா லாழ்ந்து, குளிப்போ மெந்நாள் = எக்காற் காமரசத்தால் ஸ்நானம் செய்வோம், முடிவறும் இப்பயன் = அந்த மில்லாத இந்தப் பலனனது, என்று பெறுவம் = எப்போது அடைவோம், என்று எ = என்பதாகவே, மொய்காதல் = முற்றானும் பற்றிய பேராசை, அன்று முதல் = அரசனைக் கண்ட அக் காலந்தொடங்கி, முளைத்த, = உதித்த, நெஞ்சன் = மனத்தையுடைய அவ்வந்தணன், மடியறுதன் = கெடாததனது, கருமத்தின் = லௌகீக வைதிகத் தொழிலை, நின்றான் = செய்துகொண் டிருந்தான், வனசஞ் சேர்பனியின் = பங்கஜத்துற்ற பனியே போல, மூப்புவர = விருத்த அவஸ்தை எய்த, மனைவி = அவ்வருந்ததி, நிற்போல் = உன்னைப்போல, அடிபரவி எனைவேட்டும் வரமும் ஈந்தேன் = என்னை யுபாசனைசெய்து விரதத்துடன் பாதங்களில் வணங்கி வரமுங்கேட்பதானாள் யானுந் திருவருளையும் செய்தேன், அந்தணனும் = அம்மறையவனும், காலகதியால், இறப்புற்றான் ஆசையோடும் = முன்மொழிந்தபடிபேராசையுடனே மரணத்தை யடைந்தான்.

(ஸ்ரீ - வீர.) அம்புயத் தன்மை யழிக்குந்தன்மை பனிக்கேயிருத்தலின், பதுமத்திற்குப் பனியிடியாம். மரணமெனினும் பஞ்சத்தன்மை யெனினும் ஒரு பொருள் = அந்தப்புர அழகியர்களோடு ஆலிங்கன லீலைகள் ஆற்றியதாலுண்டான சிரமத்தெழுந்த வேர் வைத்துளிகளை, புட்பங்களின் மகரந்தப் பொடிகளுடன் கலந்து சுகந்தமடைந்த வாயுக்

கள் எப்போது மாற்றுகிற்குமோ ! இவ்வண்ணம் அவ்வேதியன் இச்சித்துப்பின் அது முதல் இஷ்டவிடயத்தை நினைந்துகொண்டே யிருந்தான் ; வாழ்நாள் முழுதும் சோம்பலின்றி நித்யம் தனது தருமத்தில் வழுவாதவனாகவே இருந்தான், தாமரையைப் பனியிடி தகர்ப்பதேபோலும், தடாகநீரைக் கரையிடுதல் கெடுத்தலேபோலும் அம்மறையவனை ஜர்ஜரஞ் செய்யுமாறு ஜரையானது வந்தடைந்தது, மரணத்தையடைய நெருக்கமாக விருக்கும் அம்மறையவனது மனைவி வசந்த இருதுவானது சென்றபின் உஷ்ண இருதுவின் பயத்தால் வாடுங்கொடிபோல வாட்டத்தை யடைந்தனள். அதன் பின்னவள் உன்னைப்போல எம்மை யன்புடன் ஆராதித்தனள், சாவாதிருத்தல் அடைய முடியாதென் வெண்ணி இவ்வரத்தை எம்பால் வேண்டிக் கொண்டாள். ஹே இராஜ இராஜ ஈசுரி ! எனது நாயகர் மரித்தபின்னர் அவ்வுயிர் இம்மண்டபத்திலேயே யிருக்கவேண்டும், இதனைவிட்டு வெளியி லேகலாகாது எனப் பிரார்த்தித்துக்கொண்ட அளவில் அவ்வாறே யாகுகவென வரமீந்தேன், பின்பு அவ்விப்பிரன் காலவசத்தால் மரணத்தை யடைவுற்றனன்.

(ச.) மாதர் = அந்தப்புர மங்கையருடைய, வரமும் = மிருதபர்த்தாவின் சீவன் தனது மண்டபத்தினின்று நீங்காதவரத்தையும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பின்னத்தம்பதிகள் என்னானார்கள் என அறியும் வேட்கை யுண்டாக அவர்கள் அடைந்த நிலைமையைப்பற்றிக் கூறல்:—அவனென.

அவன் மனையாகாசத்திற் சீவாகாசமாய் நின்றா னாகாசவடிவா னானே,
கவருறுமுன்னா ளழுந்து சங்கற்பத்தாற் காவலன்றானேயாகிக் கலந்துநின்றான்,
றவமறையோன் சவமாக மனைவிசோர்ந்து றன்னிதயத் திரண்டாகிச் சரீரந்
தன்னை, யுவமையுறு கணவனுடன் சவமாய்ப் போக்கி யுயர்சூக்கவுடலோ டவ
னுடன் போயுற்றாள். (24)

(ப - ரை.) அவன் = அம்மறையவன், மனையாகாசத்தில் = அதேகிருக ஆகாகத்தில், சீவ ஆகாசமாய் நின்றான் = ஜீவ ஆகாசவடிவமாக இருந்தான், ஆகாசவடிவு ஆனானே = ககனவடிவம் வாய்ந்த அவ்வந்தணனே, கவருறுமுன்னாள் அழுந்து சங்கற்பத்தால் = வாதனையேறும் படியாகக் கிரகித்துக்கொண்ட பூர்வகாலத் தழுந்திச் செய்த மனோராச்சிய வயத்தால், காவலன் = இராஜாதி ராஜன் தானேயாகி = எனச் சுயமாகவே ஆய், கலந்து நின்றான் = பரமசக்தியாதிகளைப் பற்றி விளங்கினான், தவமறையோன் = தவதனாகிய அவ்வந்தணன், சவமாக = பிணமாகி வீழ்ந்த அளவில், மனைவி சோர்ந்து = அவ்வருந்ததி சோகமிகவுற்று, தன்னிதயத் திரண்டாகி = தனது இதயத்தால இருவகையாகி, சரீரந்தன்னை = தனது தூலதேகத்தை, உவமையுறு = தனக் கேற்ற கல்யாணகுண மமைந்த, கணவனுடன் = நாயகனுடன், சவமாய்ப் போக்கி = அமங்கலமாக விடுத்து, உயர் சூக்கவுடலோடு = பதிவிரதா தருமாதிகளால் யாவரும் புகழும் மேன்மைதங்கிய இலிங்கதேகத்துடன், போய் அவனுடன் உற்றாள் = ஏகி அந் நாயகனுடனே யமர்ந்தனள்

(ஸ்ரீ - வீர.) ஜீவ ஆகாசமாக = ஜீவனே சொச்சத்தன்மை சூக்ஷ்மத்தன்மை முதலியவற்றானே ஆகாசம் போலிருத்தலின் ஆகாசமாம், அதன் றன்மையதாக என்பதாம். சுயம் ஆகாசவபுவேயா யிருந்தும், பழைய அற்பமல்லாத சங்கற்பவயத்தால் பரம சக்திமானாகிய பூபதியாய் நின்றனன் என்பதாம். அக்கிருக ஆகாயத்திலேலே அந்தக்கரண வாசனாவச்சின்னப் பிராஹ்மமாய ஜீவாகாசத் தன்மையானே யிருந்தனன், பின்றானு

கவே முன்செய்த அளவில்லாத திடபாவனையின் வயத்தினுலே ஆகாய சரீரமுடைய ஞகவே நினது பதியுயர்ந்த தெய்வமானுட சக்திமானுன மன்னவனுனன்; மனுடப்பிர பாவத்தாற் பூமண்டல முழுவதையும் வெற்றிகொண்டும், தெய்வப்பிரதாபத்தால் தெய்வ லோகத்தையும் அடக்கிக்கொண்டும், பாதாளத்தை வெற்றிகொண்டு கிருபைபாலித்தும் மூவுலகவிஜய மன்னவனு யிலங்கினுன். அக்கிருகத் துள்ளிருக்கும் ஆகாயத்தில், சித்த சமஸ்கார அவச்சின்னப் பிரஹ்மாகாசப் பிரசுரவடிவப் பூதாகாசவடிவம் வாய்ந்த அம்ம றையவன் தேகம் நீங்கியபோது, அவனது மனைவியாகிய பார்ப்பினியானவள் சோகத்தா லத்தியந்தம் மூர்ச்சித்து வாடிகாய்ந்த உளுந்து இரண்டாக வெடிப்பதேபோல இருதயம் பிளந்திறந்தாள். நாயகனோடு சவமாய தேகத்தைசேய்மையில் விட்டுவிட்டுப் பரலோகத் திற்குக் கொண்டுசெலுத்தும் மானச தேகத்தோடும் நாயகன்பால் நண்ணினள்.

(ச.) அந்த மனையாகாசத்தில், சீவ ஆகாயமாய் = சீவசொரூபமான சிதாகாசரூப மாய், நின்முன், அழுந்து சங்கற்பத்தால் = மிகுந்த சங்கற்பவசத்தினுல், தானே = சுவ யம், காவலனுகி = பரமசக்தி மானுன பூமிபாலனுய், சோர்ந்து = சோகத்தினு லத்தி யந்தம், தளர்ந்தவளாகி, தன்னிதயத்து = அந்தப் பிராஹ்மணப் பெண் தனதிருதயத் தில், இரண்டாகி = துவிதமாய், கணவன் = பர்த்தா, போக்கி = தூரத்திற்றள்ளி, உயர்சூக்க வுடலொடு = ஆதிவாகிய தேகத்தோடு (தால்) அவனுடன் போயுற்முள் = பர்த்தாவை யவள் அடைந்தாள், உ-ம்: மனம் புத்தி யகங்காரம் பிராணுதி பஞ்சவாயுக் கள் சீவனோடுகூடச் செல்கின்றன தத்துவ மறியாதமட்டும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அங்குற்ற வைபவமும் காலக்குறுக்கமும் அறைந்து அவ் விருவரும் நீங்களே யாவீரென் றுரைத்தல்:...ஆயவென.

**ஆயமறை யோன்மக்கண் மனையும் பூமியடவிகடா வரங்களெலா மங்கே யுண்டாய், மேயவுயிர் போயவற்கு நாளெட் டாகும் விண்வடிவாஞ் சீவனு மவ் வீட்டி னிற்கும், போயபவத் துனக்கன்பனுன வந்தப் பூசுரன்பூ பதியா கிப் புணர்ந்தா னன்று, தூயவருந் ததிப்பெயர்கொள் பனவி யாகித் துணை வியா மந்தமடத் தோகை நீயே.** (25)

(ப - ரை) ஆயமறையோன் = அவ்வாருய மறைவலானது, மக்கள் = மைந்தரும், மனையும் = கிருகமும், பூமி = பூவும், தனங்களும், தானியங்களும், அடவிகள் தாவரங் கள் = வனங்கள் விருக்ஷாதிகள், எலாம் = முதலியயாவும், அங்கே உண்டாய் = அவ் விடத்திலேயே அப்படியே யிருப்ப, மேயவுயிர்போய் = அவன் றேகத்திற் பொருந்திய பிராணன் நீங்கி, அவற்கு = அவ்வந்தணனுக்கு, நாள் எட்டாகும் = தினங்கள் எட்டா யிருக்கின்றன, விண்வடிவாம் = ஆகாய ரூபமாம், சீவனும் = உயிரும், அவ்வீட்டில் = அக்கிருகத்திலேயே, நிற்கும் = இருக்கின்றது, போயபவத்து = சென்ற ஜன்மத்தில் உனக்கன்பனுன = நினக்கு நாயகனுன, அந்தப் பூசுரன் = அந்த அந்தணன் பூபதி யாகி = அரசனுகி, புணர்ந்தான் = இராஜ்ஜிய சம்பத்தை யடைந்தான், அன்று = அப்போது, தூய = பரிசுத்தமான குணத்துடன் கூடி, அருந்ததிப் பெயர்கொள் = அருந்ததி யென்னும் நாமம்கொண்டு விளங்கி, பனவியாகி = பிராஹ்மணியாகி யிருந்த, துணைவியாம் = தருமபத்தி நியாம், அந்த மடத்தோகை நீயே = அந்த அழகுவாய்ந்த அன்னநடை மயிலியலினள் நீயேயாவாய்.

(ஸ்ரீ - வீர.) கிரிக்கிராம கந்தரத்தி லிருங்கும் அம்மறையவன் பூபத்தன்மையை யடைந்து இப்போதுனக்குப் பர்த்தாவா யிருக்கின்முன்; அந்தக் கிரிக்கிராமத்தின் கண்

ணே அம்மறையவனுடைய வீடுகளிருக்கின்றன; பூஸ்தாவராதி தனங்களு மிருக்கின்றன மரணமாகி யிப்போது எட்டுத்தினங்களாயின; உயிரும் கிரிக்கிராமகிருக மண்டபத்திற்று ணிருக்கிறது. அம் மறையவன்றான் இப்போது மன்னவனுந் தன்மையை யடைந்து நினக்கு நாயகனுக விருக்கின்றனன், அருந்ததியாகவிருந்த அவளே இப்போது லீலையாகிய நீயாயிருக்கின்றாய்.

(ச.) ஆயமறையோன் = இந்த விப்பிரனது, மனை = கிருகங்கள் தனங்கள் எலாம், ஆங்கே யுண்டாயிருக்க, ஆங்கேயுண்டால் பாடபேதம், மேயவுயிர் போயவற்கு = மிர்தமானவனுக்கு, நாளெட்டாகும் = எட்டா நாளாயிற்று, அவ்வீட்டில் = கிரிக்கிராம மனையாகாயத்தில், சீவனும் நிற்கும் = இருக்கின்றது. ஸ்ரீ தேவி வாக்கியம்: போயபவத் துனக்கு அன்பனான = பர்த்தாவான அந்தப்புசுரன், இன்று = இப்பவத்து உன் கணவனை பூபதியாகிப் புணர்ந்தான்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) கூறிவந்ததை யுபசங்கரித்தல்:—புதியென.

புதியனசக் கரவாகந் துணைய தென்னப் பூதலஞ்சே ருமையொடு புராரியென்ன, வதிகநலத் துணைவரா மிருவராயிங் கரசுசெயு நீரவரே யாதலாலே, மதிநுதலாய் முதற்பிறப்பின் மயக்கஞ் சொன்னே மற்றிதுதான் மயக்கமாத் திரமதாகு, முதிதமுறு மாகாய வுடலாஞ் சென்ம மொளிபெறத் தோன்றிய தென் றாளுலகி லன்னே. (26)

(ப - ரை.) புதியன சக்கரவாகம் துணையதென்ன = பிரியதம நவசக்கரவாகப் புட்கள்கூடி வாழ்வதே போலும், பூதலஞ்சேர் உமையொடு புராரியென்ன = பூமண்டலத்தை யலங்கரிப்பான் எழுந்தருளி யிருக்கும் ஜகன்மாதாவாகிய சிவை திரிபுராசங்காரன் ஆகிய சிவன் என்னும் ஜகத்பிதா என்பவர்களே போலும், அதிக நலத்துணைவராம் = பேரானந்தத்திற்குப் பரஸ்பரம் சகாக்களாம், இருவராய் = ஒருளமிருடம்பெனப் பெற்றவராய், இங்கு அரசுசெயும் = இவ்விடத்தில் அரசாக்ஷி செய்யும், நீர் = நீங்கள், அவரே = அவ்வந்தண தம்பதிகளே, ஆதலாலே = ஆகையினுலே, மதிநுதலாய்=நிலவுபோலும் நெற்றியாய்! முதற் பிறப்பின் மயக்கஞ் சொன்னேம் = பழைய சமுசார மயக்கசருக்கம் இன்னவிதமென வியம்பினேம், மற்றிது தான் = கேவலத் தோற்றம், மயக்கமாத் திரமதாகும் = பிராந்தி மாத்திரமேயாம். உதிதமுறும் ஆகாயவுடலாம் = பொய்யாகப் பொலியா நின்ற, ஆகாய தேகமாம்; சென்மம் = சர்க்கம், ஒளி பெறத்தோன்றியது = மெய்போல மிளிர்ந்தது, என்றாள் உலகிலன்னை — ஜகன்மாதா இங்ஙன மியம்பினுள்.

(ஸ்ரீ - வீர.) சிவை சிவன் = பார்வதி பரமேசுரர். ஆயின் எமக்குப் பழையசமுசாரம் சத்தியம் ஆமென்னுஞ் சங்கையை நீக்கும் வாயிலா யுபசங்கரித்துப் பலிதங்கூறுவார் மயக்கமென்றார். சொரூமமற்றதா யிராநின்ற மயன்மாத்திரமே யாமிது. எத்தோற்றம் தோற்றுகின்றதோ அது இங்ஙனங்கூறிய நியாயத்தானே ஆகாயதேகமாம்=பொருளற்றதாம் வெட்டவெறு மயலாம். நீங்கள் இருவருந்தா னப்போது அரசனும் அரசியும் ஆகவிருந்து அற்புதமான சக்கரவாகப் புட்களைப்போலும் புவியின்கண் ணெழுந்தருளிய உமையும் உமாநாயகனும் போலும் மகிழ்ந்து அரசுசெலுத்து கின்றீர்கள். முடிவாகக் கூறுமிடத்து இரண்டு சிருஷ்டிகளைப் போலும் பழைய சர்க்கமும் மயக்கமாத்திரமே யாகும்; இங்ஙனம் முன்னடந்த சிருஷ்டிக்கிரம முழுதையுங்கூறினேம்; அதன்கண்ணே பிரஹ்மாகாசத்தைச் சீவரூபமாகப் பார்த்த மயலே மூலமாகுமென்றறிதி, மயன்மாத்தி

யடைந்த ஆகாசந்தான் இங்ஙனம் ஜீவரூபத்தைத் தரித்தாடுகின்றது. பின்பின் ்கு முன்முன் மயலே காரணமாகும், இம்மயலினின்றும் சிதாகாயத்தின் கண் ம்மயக்கம் பிரதிபிம்பித்த தென்றறிக, தனது திருஷ்டியினுலே அசத்தியமே அதிஷ்டான திருஷ்டியினுலோ சத்தியமேயாகும் என்றுணரின் பவம் நீங்கிச் றலாம், இவ்வாருகவே மித்தையான அனர்த்த உணர்ச்சியாலுல் எல்லாச் சர்க் ீம அல்லியமேயாகும் ஆகையால் சிருஷ்டிமயன் மயமியாதாகும் மயலற்றது ாகாரும் இவ்வண்ணம் இடரிலாது அநர்த்தத்தை யுணரின் அயலொன்றுந் ிவ தோற்ருதாம்.

) புதியன சக்கரவாகந் துணையதென்ன, பூதலஞ்சேர் — பூமியை யடைந்த ணவராம் = இன்பத்துக் கிணைந்தவராய், இருவராயிங்கு, அரசுசெயும்=இராக் · யாளாகின்ற; முற்பிறப்பின் = பூர்வம் விப்பிரஜன்மத்தி லுண்டான, மயக் ம்சாரப் பிரமையை, சொன்னேம், மற்றிதுதான் = இந்த நிருபஜன்மமும், ாத்திரமதாகும்—பிராந்திமாத்திரத்தா லுதித்ததாம், ஆதலாலே புதிதமுறும்= ாரணத்தால் பிராந்திமாத்திரத் துதித்ததோ அந்தப்பிரமையே ஆகாசவுடலாஞ் = டமித்தியா கற்பித சொரூபமான சர்க்கமாய், ஒளிபேறத் தோன்றியதென்ரு ன் னே = முன் விப்பிரஜன்மத் துதித்த நிருபதி சம்சாரசங்கற்பமே அத்தன்மை ர்க்கமாய் விளங்குகின்ற தென்பது கருத்து.

— வீர - அ - கை.) பொருத்தமில்லாப் பொருளெனப் புகன்றதை யாக்ஷேபித் ங்ஙனந் தேவி கூறியதைகேட்டு அசம்பாவனையால் நெடுநேரம் மிகவும் விஸ்ம மலர்ந்த நேத்திரக்களை புடையவளாய் லீலையானவள் தத்தளித்த அக்ஷர ாாற் றேவியை நோக்கிக்கூறல்:—இந்தவென.

ந்தவுரை கேட்டலுமே லீலை சொல்வா ளிறைவி பொய்யே யியம்பினையீ ா கூடு, மந்தணன் வீட்டுறை சீவனதுவெங் கேயோ வன்னியமா யிருந் டைந்ததெங்கே. முந்துறுமவ் வேற்றுலகத் திருப்பாரந்த மொய்கிரிக சகண் முற்றுஞ்சேர, வந்தினிதிங் கியாங்களுறை வனையினூடே மருவு வைப்படியோ மாசிலாளே. (27)

- ளா.) இந்த உரை கேட்டலுமே = இங்ஙனந் தேவி யனுக்கிரகித்ததைச் சிர வுடனே, லீலை சொல்வாள் = லீலையானவள் கூறுகின்ருள், இறைவி = ஹே தாவே ! போய்யே யியம்பினை = மித்தையே சொன்னுய், ஈதெங்ஙன்கூடும் = ய விவகாரம் யாங்ஙனம் பொருந்தும்? அந்தணன் வீட்டுறை சீவனது வெங் = அப்பிர ஜீவனுனது தனது கிருகத்தில் இருக்கின்றது எவ்விடத்திலேயோ, மா யிருந்த யாமடைந்த தெங்கே = அயலாக இங்கே யிருக்கின்றயாம் பொரு து தான் எவ்விடத்தில், முந்துறும் அவ்வேற்றுலகத் திருப்பார் = கண்காணத் அந்த அன்னியமாகிய லோகத்திருக்கப்பெற்றவர், அந்தமொய்கிரிகள்=அந்த பொருந்திய விஸ்தாரமலைகளும், தகதிசைகள் = பத்துத்திசைகள், முற்றுஞ் = யாவுங்கூடிவந்து, இனிது இங்கு யாங்கள் உறை= இனிமையாக யாங்கள் வ்விடமாகிய, மனையினூடே = எங்கள் வீட்டின் உள்ளே, மருவும் அடைவு பா = பொருந்தும் பொருத்தம் எங்ஙனமாமோ? மாசிலாளே = இயற்கையா தொரு குற்றமுமற்ற தேவியே! என்று பிரார்த்தித்தனள்.

(ஸ்ரீ - வீர.) இவ்வியாம் எத்தேசாந்த ராதிகளில் இப்போ திருக்கின்றேமோ அத்தகைய தேசாந்தராதிகள் வசிஷ்டவிப்பிர கிருகத்தினுள்ளே எவ்வாறடங்கும், எங்ஙனமும் அடங்காதாம் என்க. வசிஷ்ட விப்பிரதேசத்தைக் குறித்து வேற்றுலகு என்றதாம். “எங்ஙனமடங்கு மில்லத்தினுள்ளேயெவற்றில், என்பர்த்தா விருந்திடுவானோ” என்றும் சுலோக பாடபேதமாம். ஹே ஜகதிசுரியே! உம்முடைய திருமொழி பொய்யேயாகும் மெய்யேயாயினும் இத்தகைய விருத்தமானவிது எங்ஙனஞ் சம்பவிக்கும்; மறையவனுயிர் தன்வீட்டி லெங்கே! இந்நாமெங்கே யிருக்கின்றோம்; விஸ்தாரமான தேசத்தில் அற்புதம்! சமாதியிற் கண்ட நாயகரது சர்க்கமும் என் வீட்டிற்றானெவ்வாறு சம்பவிக்கும்? அத்தகைய வேறு உலகமும், அப்பூமியும், அம்மலைகளும்; அப்பத்துத்திசைகளும் ஆகிய எனது நாயகரிருக்கும் அவைகள் எல்லாம் இவ்வீட்டகத்தே யெங்ஙனம் இலங்கா நிற்கும்?

(ச.) இறைவி = தேவி! நீ, ஈது = இத்தன்மை, அன்னியமாய் இவ்விடத்திருந்தயாம், = நாங்களிருவரும், அவ்வேற்றுலகம் = அத்தன்மையான லோகாந்தரம் நதி பார் = ஆறும் பூமியும், மனையினூடே = கிருகத்தி னகத்தின், மருவுமடை வெப்படியோ மாசிலாளே.

(ஸ்ரீ - வீர - அ - கை.) அசம்பாவனை புஷ்டியாமாறு ஸ்ரீதேவி கூறிய பொருளில் திருஷ்டாந்தங்களினால் நன்மையின்மையை லீலை கூறுகின்றாள்:—மத்தவென.

**மத்தவயி ராவதமோர் கடுகினோர்பான் மறிபடுமோ வடமேரு வந்தோர் கஞ்ச, வித்தினிடைப் புகுந்திருந்தோர் வண்டின்குஞ்சான் மிகநெரியு மோ கொதுகு வெகுண்டு மோதி, யுத்தமியற் றிடச்சிங்கமநேகமத்தோ டோரணுவினிடைப்புகுமோ வுரைத்தநின்சொல், லித்திறமே யொன்றுக்கு மிசையாதாகு மெனலீலை சொல்லுதலு மிறைவி சொல்வாள். (28)**

(ப - ரை.) மத்த வயிராவதம் = மதோன்மத்த ஐராவணம், ஓர்கடுகின் ஓர் பால் = ஒரு சிறுகடுகினது ஒருபாகத்தில். மறிபடுமோ = பத்தப்படுமோ, வடமேருவந்து = பொன்மேரு கிரியானது வந்து, ஓர் கஞ்சவித்தினிடை = ஒரு தாமரைக் கொட்டையினுள்ளே, புகுந்து = பிரவேசித்து, இருந்து = வாசஞ்செய்து, ஓர் வண்டின் குஞ்சால் மிகநெரியுமோ = ஒரு அற்பவண்டின் இளங்குஞ்சினாலே தூள்தூளாய்ப் போய்விடுமோ, கோதுகு வெகுண்டுமோதி யுத்தமியற்றிட = மசகம் சினந்து தாக்கிப் போர்புரிய, சிங்கம் அநேகம் = சிங்கக் கூட்டங்கள், அத்தோடு — அக்கொதுகோடு போர்புரிய முடியாமல் ஓடி, ஓரணுவினிடைப் புகுமோ = ஒரு அணுவின் பொந்திற் புகுந்தொளியுமோ, இத்திறமே உரைத்த நின்சொல் = இங்ஙனமே கூறிய தங்களது திருவாக்கியம் ஒன்றுக்கும் இசையாதாகும் = ஒருவகைக்கும் யொருத்தமற்ற தாகும், என லீன சொல்லுதலும் = என்று லீலை கூறியதைக் கேட்ட இறைவிசொல்வாள் ஸ்ரீதேவியானவள் திருவருள் செய்கின்றாள்.

(ஸ்ரீ - வீர.) ஐராவதமெனினும் ஐராவணமெனினும் பரியாயம். ஹே சருவேசுர ஈசுரியே! மதத்த ஐராவதமானது ஒருகடுகின் றுளையிற் கட்டுப்படுவது போலும், ஒரு புன்கொதுகாற் செய்யப்பட்ட போர்க்காற்றாது வீரசிங்கக் கூட்டங்கள் அணுவின் றுளையிலடைக்கலம் புகுந்ததுபோலும்; தாமரைவிரையிற் றுபித்த மேருகிரியானது அங்கிருந்த ஒரு சிறுவண்டின் குஞ்சால் நெரிந்து தூளானதே போலும், கனமேகங் கர்ச்சிப் பக்கேட்டுச் சித்திரமயில் ஆடுவதேபோலும் அருளியது அனைத்தும் அசங்கதமேயாகும்,

வீட்டிற்குள்ளே பிருதிவியும் பர்வதங்களும் எங்ஙனந்தா னிருக்கும்? பிரசாதத்தை யனுக்கிரகிக்கும் விடயத்திற் பெரியோர்கள் சிறிதும் வருந்தார்க ளல்லவா? ஆகலின் இது எவ்வாறு பொருந்துறுமோ அவ்வாறு நின்மலமான திருவுள்ளத்திற்கருணைபுரிந்து அருளல் வேண்டு மென்று லீலை கேட்ப அதற்குத்தேவி யனுக்கிரகம் செய்கின்றாள்.(28)

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஈசுரியாகிய எமது பரம ஆப்தத்தன்மை வுண்மையானே நன்குதெரிந்து வினவியதேயாகு மிவ்வினு வென்னுந் திருக்கருத்தானே பரிகாரந்தேவி செய்தல்: பொருந்தாததை யுண்டாக்கும்படியான பொய்யைப் பரிகரித்துத் தேவி கூறல்:—பொய்யென.

**பொய்யாக வுரைத்திலம்யா மிதனினுண்மை புகலக்கே ளெமைப்போல் வார் புத்தேணீதி, மெய்யாகக் கொள்வதலாற் பேதியார்கள் வேதியன்றன் சீவனவ னூரில்வீட்டி, லெய்யாமை யுறைகின்ற திந்தநாடு மிவ்வரசும் விண் வடிவே யிவற்றையெல்லா, மையாரும் விழிமடவா யந்தவிண்ணே வடிவான வவன்றானே மகிழ்ந்து பார்க்கும். (29)**

(ப - ரை.) பொய்யாக வுரைத்திலம் யாம் = மித்தையாகக் கூறினே மில்லையாம், இதனின் உண்மை = இது விடயத்தினது யதார்த்தத்தை, புகலக்கேள் = கூறக்கேட் குதி, எமைப்போல்வார் புத்தேள் — எம்மைப் போன்றவர்களாகிய தேவதைகள், நீதி மெய்யாகக் கொள்வதலால் பேதியார்கள் = நியதியை உண்மையாகப் பாலிப்பதே யல் லாமல் வேறுபடுத்த மாட்டார்கள், வேதியன்றன் சீவன் = அத்துவிஜ ஜீவாத்மா, அவ னூரில் வீட்டில் = அக்கிரிக் கிராமத்திலுள்ள அவனது விட்டில், எய்யாமை = விவர்த்த மாதலின் பொருந்தாதாயும், உறைகின்றது = பொருந்து கின்றதாகிய, இந்த நாடும் = இந்தத்தேசமும், இவ்வரசும் = இவ்விராஜ்யமும் சம்பத்தும், விண்வடிவே = சிதாகாச வடிவமேயாம், இவற்றை யெல்லாம் = இத்திருசிய சம்பத்துக்களி யாவற்றையும், மையா ரும் = அஞ்சனந் தீட்டிய, விழிமடவாய் = நீள்விழி மடந்தையே! அந்த விண்ணேவடி வான = அவ்வாகாசமே வடிவமா யிராநின்ற, அவன்றானே = அம்மறையவனே, மகிழ் ந்து = சந்தோஷித்து, பார்க்கும் = காணும். (29)

(ஸ்ரீ - வீர.) நியதி = ஜகத்தின் மரியாதை. கிரிக்கிராம பிராஹ்மண ஜீவாத்மாவே வியோமாத்மா = சித்தசரீரம்; சித்தாகாசம் சிதாகாச மென்பது முன்னே சொன்னோம். அல்லது வியோமாத்மா = நிராகாரம், வியோமமே யாய இம்மகிராஷ்டிரத்தை = நிஜ சொரூபமேயாய இம்மகி சகிதராஷ்டிரத்தைக் கனுக்காண்போன்போலக் காண்கின்றது வியோமாத்மா = ஆகாசவடிவம். ஒருகாலும் பொய்மொழியே யாங்கள் புகலேம்; உள்ள படியே கூறக்கேட்டி "பொய்ம்மொழி புகலற்க" வென்னும் நியதிகளை எம்போலியர் கடந்து நடவார்; அன்னியர்களாற் பேதிக்கப்படும் மரியாதையையாமே ஸ்தாபிப்பேம்; யாம் அம்மரியாதையைக் கடந்தால் மற்றெவர் காப்பர்? அக்கிராமத்திருக்கும் மறையவ னாகிய ஜீவான்மா அத்தன் வீட்டின் கண்ணே விண்ணின்கண்ணே இம்மகாராஜ்யத்தை அரசவாசனை யுபகித சிதாகாச வடிவமாக விருந்தே காண்கின்றது?

(ச.) புத்தேணீதி = நியனசொரூபமான பரமேசுரசக்தியை பேதியார்கள், எங்க ளால் மற்றொரு பிரகாரமாகக் கூடா தென்பதாம், வேதியன்றன் சீவன் = முற்கூறிய கிரிக்கிராமவாசியான, துவிஜனுடைய ஜீவாத்மா, அவனூரின் விட்டில் = அந்தக்கிரு கத்தில், இந்த நாடும் = இந்த மகாராட்டிரமும்; வியோமவடிவே.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஆயின் எங்களுக்குப் பூர்வசம்சார விஷயஸ்மிருதி யேன் றொடர்வதில்லை, என்றூன் அதனினும் அயலாய இப்பிரவிருத்தி யுதித்தது? எனக் கடாவ விடைதருகின்றூர். அவர்களே யாங்களாக விருக்கும் பக்ஷத்தில் அவ்வாறு பிரத்தியபிஞ்ஞை யேன் உண்டாகலாகாது, மரணத்திற்குத்தான் என்னவடிவம் எனக் கூறுகின்றூர்:—தொன்மையென.

(ச.) யாங்களிருவரும் அந்தவிப்பிர தம்பதிகளேயாயின் அத்தன்மையான ஸ்மிருதியே னின்றெனில்? தொன்மையென,

தொன்மையா மந்தநினை வுங்களுக்குத் தோன்றூது வேறுகித் தோன்றுங் கண்டாய், பன்மையா நனுநினைவு கனவிற்றேன்றூப் பரிசெனவம் மரணத்தின் பான்மை தோன்றூத், தன்மயமாஞ் சத்ததினுல் விளங்கு மந்தத்தடஞான விசும்பிடையோர் தனிமூலைக்கே, வன்மையா மிப்பூமி தோன்றி நிற்குமன நினைவிற் கண்ணடியில் வயங்கு மாபோல். (30)

(ப -ரை.) தொன்மையாம் = பழைமையான, அந்த நினைவு = அந்தஸ்மிருதி, உங்களுக்குத் தோன்றூது = உங்களுக்கு மறைந்துபோம், வேறுகித் தோன்றுங் கண்டாய் = அயல்வகையாகப் பிரதீதியாம், பன்மையாம் நனுநினைவு = அநேக விதமான ஜாக்கிரசம்பந்தி ஸ்மிருதிகள், கனவில் = சொப்பனத்தில், தோன்றூப் பரிசென = பிரதீதியாகாத தன்மைபோல அம்மரணத்தின் பான்மைதோன்றூ = அவ்விறப்பின் றன்மை பிரதீதியாகாதாம், தன்மயமாஞ் சத்ததினுல்=தன்மயமாகிய உண்மையினுலே, விளங்கும் அந்தத் தடஞான விசும்பிடை = பிரகாசியாநிற்கும் அவ்விசால அறிவாகாயத்தின் மாட்டு, ஓர்தனி மூலைக்கே = ஒரு சிறிதான அற்ப கோணத்திலேயே, மன நினைவில் கண்ணடியில் = உள்ளத்தின் எண்ணத்தில் தருப்பணத்தில், வயங்குமா போல் = தோற்றுவதேபோல, வன்மையால் = கடினுதி சிறப்புகள் வாய்ந்த, இப்பூமி தோன்றூ நிற்கும் = இந்தப் பூமண்டலம் பிரதீதியாகா நிற்கும். (30)

(ஸ்ரீ-வீர.) நனவில் அனுபவித்த பதார்த்த விடயஸ்மிருதி கனு அவஸ்தையின்கண்ணே உண்டாவதில்லையாம். வேறுவகையாய்த் தோற்றமு முண்டாகின்றது, அதுபோலவே முற்பிறப்பின் கண்ணே யனுபவித்த பதார்த்த விடயஸ்மிருதி இப்பிறப்பில்லோபமாய்ப் போய்விடுகின்றது, தொடர்வதில்லையாம், பூர்வஜன்மத்திற் பாவனை விசேடத்தானே வேறுவகையாகவும் பிரதீதியாகின்றது, இந்தமரணமே அதன்கண்ணே காரணமாம். மரணமோசமஸ்காரவடிவ ஸ்மிருதி பீஜத்தை மாறுபடுத்தி மறைப்பதாம், ஆகலின் ஸ்மிருதி தொடர்வதில்லை யென்பது கருத்தாம். மருவும் அடைவெப்படியோ வீட்டினூடே என்னும் வினுவின் பரிகாரத்தைத் தெளிவுபடுத்தும் பொருட்டுத் தன்மயமென் பதாதியாம். உண்மையானே விளங்கா நின்ற அத்திவ்யபரமாத்ம ஆகாசத்தின் ஜீவத்வ உபாதிபூத அந்தக்கரணத்தின் உள்ளேயுள்ள தனினும் உள்ளே இப்பூமி சைலவன கானனத்துடன் உளதாம். சங்கற்ப சப்தத்தானே மனேராஜ்யம் செய்யாநின்ற புருடனுடைய சங்கற்பம் கவரப்பெறுகின்றது, அல்லது மூலத்தில் அந்தரிருப்பது என்பதற்கு மனத்திலிருப்பது எனப் பொருள்கொள்க, கொள்ளவே இப்பக்ஷத்தில் இச்சுலோகத்தின் பிற்பாதிக்குமே லன்வயமாம். அப்பழைய ஸ்மிருதியானது உங்கட்கு உண்டாக மாட்டாது, வேற்றெண்ணமே யுண்டாகும், கனவின்கண்ணே நனவின்மிருதி எங்ஙன முண்டாக மாட்டாதோ அங்ஙனமே மரணப்பான்மையுந் தோன்றூதாம்; கனவிற் றிரிபுவனம் போலவும், மனநினைவிற் றிரிவித வுலகம்போலவும் கதைப் பொருட்போர்

போலவும்( மரும்பூமியில் மன்னுநீர் போலவும் அம்மறையவனது வீட்டினுள்ளே பர்வத வனபட்டணத்தோடு கூடிய பூமிமுழுதும் மனத்தினுங் கண்ணுடியிலும் வயங்குமாபோ லிருந்து விளங்குகின்றது. கனமான இச்சிருஷ்டியானது சத்தியம்போல அசத்தியமா கவே தோற்றுகின்றது, அசத்தியமா யிருந்தபோதினும் சத்தியமாகத் தோற்றுவான் என் எனின்? பஞ்சகோசத்துள் ளிருக்கும் பரமசத்தாஞ் சிதாகாசத்தின் நிமித்தத் தானே சத்தாகத் தோற்றுகின்றது.

(ச.) உங்களுக்கு = உங்களிருவருக்கு, தொன்மையா மந்தநினைவு, மரணதுக்கமகி மையால், தோன்றாது, மறைபட்டதாகி, வேறாகி = சம்ஸ்கார வசத்தினுல் மற்றொரு பிரகாரமாகத் தோன்றும், கண்டாய், பன்மையா நனுநினைவு கனவிற்றென்றுப் பரி செனை = சொப்பனத்தில் ஜாக்கிரஸ்மிருதி (சாக்கிர சம்பந்தமான சம்ஸ்காரஜந்நியமாகிய சவிஷய (விடயசகித) பிரத்யயமானது சொப்பன மென்னும் வசனத்தினுல்) மற்றொரு பிரகாரமாகத் தோன்றுவதுபோல, இம்மரணத்தின் பான்மை தோன்று = பூர்வானு சந்தானரகிதமாய் மற்றொரு பிரகாரமாகவே இந்தஸ்மரண முதிக்கும். இல்லாதவஸ்து இவ்விடத் தெப்படித்தோன்று மெனின்? வன்மையாமிப் பூமியென்பது உபலக்ஷணம், திருசியமாய்த் தோன்றுகின்ற இந்தப்பிரபஞ்சம் மனநினைவிற் கண்ணடியில் வயங்குமா போல எப்படிச் சங்கற்பத்தகத் திருக்குமோ, எப்படித்தர்ப்பணத்திற் பிரதிபிம் பிக்கு மோ, அப்படி தன்மயமாஞ் சத்ததினுல் விளங்கும் அந்தத் தடஞான விசும்பிடை = சிதாகாசத்தினகத்தில், ஓர்தனி மூலைக்கே தோன்றி நிற்கும், சத்ததினுல் விளங்கும் = சத்திய சங்கற்பத்தோடுகூடி விளங்கும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஜகத்துள்ளே யிருக்கின்றது என்னுமிது ஒருபாலேதான் எல்லாவிடங்களிலும் என்றெண்ணற்க என்கின்றார்: ஆகாசாதி ஜகத்சர்க்கமாவதில் முன் னுள்ளது நிரவகாசத் தன்மை விரோதியன்று மெனப் பரமாணு வவச்சின்ன சிதான்மா வின் கண்ணும் அது சம்பவித்தவழி யசம்பவ ஆசங்கை யுளதாவதே கூடாதா மென் கின்றார்:—தெளியென.

தெளிபரம வணுவாஞ்சிற் சொரூபத் தொன்றுஞ்செகமெலா மொளியுரு வாய்ச் செறிந்திருக்கு, மொளிபெறவுள் ளேயுள்ளே யாதலான் முன்னுரை செய்த பூமியுஞ்சித் துள்ளே தோன்றும், வெளிபெறவீ தறியென்றே வாணி கூறவேதிய னெட்டாம் பகலில் வீந்தானென்று. யெளிதிலெமக் கநேகவருடங் கள் போன தென்னென வீலைக்கு மீண்டிறைவி சொல்வாள். (31)

(ப-ரை.) தெளிபரம அனுவாஞ் சிற்சொரூபத்து = அதிசூக்கும சொச்சபரம அணு வெனப்படும் அறிவுருவத்தின் கண்ணே, உள்ளே உள்ளே யொன்றுஞ் செகமெலாம் = அந்தர் அந்தர் இராநின்றதிருசிய வர்க்கங்க ளெல்லாம், ஒளியுருவாய்ச் செறிந்திருக்கும் = பிரதீதி மாத்திர வடிவமாகப் பொருந்தி யிருக்கும், ஆதலான் = ஆகையினுலே, முன் னுரைசெய்த பூமியும் = பூர்வம் புகன்ற பூமியாதியும், ஒளிபெற = தோற்றுமாத்திர மாய், சித்துள்ளே = அறிவினிடத்தே, தோன்றும் = பிரதீதியாம், வெளிபெற = சமு சயாகிதமாக, ஈதறியென்றே = இதனைத் தெரிந்துய்வாயாக என்று, வாணி கூற = ஸ்ரீ சரசுவதிதேவி திடமாகத் திருவருள்செய்ய, வேதியன் = அம்மறையவன், எட்டாம் பகலில் = எட்டாவது திவசத்தில். வீந்தான் என்றாய் = இறந்தான் என்றருளினையே, எமக்கு = எங்களுக்கு, அநேக வருடங்கள் எளிதில் போனதென் = வருடகணங்கள் சுலபமாக விரைவிற் சென்ற காரணமென்னே, என = என்று, வினவிய, லீலைக்கு =

தன் அன்புடைய அவளுக்கு, மீண்டு= மறித்தும், இறைவி = பரமேசுரி, சொல்வாள் = திருவாய் மலர்ந்தருளுவா ளாயினள். (31)

(ஸ்ரீ - வீர.) சிதாத்மாவாய்ப் பிரஹ்மமாய்ப் பரமசூக்கும அந்தக்கரண வுபகிதத்தன்மையானே பரமாணுத் தன்மை யுற்றதா யிலங்கும் ஜீவனிடத்தில் எல்லாந் தோற்றுமென்பதாம். “ மயிர் நுனி யொன்று நூறாவகுத்ததை நூறதாக்கினாயி னொருபாகங்கூட வொப்பிலா நுண்ணிதாகும்” என அதனது சூக்குமமிகுதிப்பாட்டை மறையு மறைகின்றது. உள்ளே உள்ளே பிரதிபாச மாத்திர காரணங்களாய்ச் செல்லுவன வாயிருக்கின்றன, இங்ஙனமான வுலகங்கள் இருக்கின்றன, சமுசாரமானது அநாதியாக இருத்தலின். திருஷ்டிக்கே சிருஷ்டித் தன்மை யுண்மையின் சொப்பன அவஸ்தையின் மாட்டு அதிசூக்கும நாடியின்கண் ணிருத்தலினானே அணுவெனப்படுஞ் சீவனிடத்தில் உள்ளுள்ளே ஜகத்துகள் காணப்பெறுகின்ற படியினாலும் கூடும். இதனானே ஜீவன்றோறும் உள்ளுள்ளே யுலகங்க ளிருங்கின்றன வெனக் கூறியது மிகப் பொருத்தமுடையதேயாம் பரமாணுவிற் பரமாணுவிற் சிதாத்மாவின் கண்ணே உள்ளுள்ளே உலகங்க ளிருக்கின்றன வாதலின் இதன் கண்ணென்ன சங்கிக்கக் கிடந்ததோ அறியேம். ஹே என்றாயே எட்டாந்தினத்தில் விப்பிரன் வீழந்தான் என்றாயே, எமக்கு அநேகவருடங்கள் சென்றுள்ளனவே இஃதெங்ஙனம் பொருந்தும் உரையாய் என லீலை பிரார்த்தித்தனள்.

(ச.) தெளிபரம அணுவாஞ் சிற்சொரூபத்து = உபாதியினாலே பரிச்சின்னரூப பரமாணுமாத்திர பரிணாமமான சிதாத்தமாவின்கண், உள்ளேயுள்ளே யொன்றுஞ் செகமெல்லாம் ஒளியுருவாய் = தோற்றரவுமாத்திர சொரூபமாய், செறிந்திருக்கும், ஆதலால் முன்னுரைசெய்த பூமியும் = பிரபஞ்சமும், சித்துள்ளே = ஆன்மாவின்கண், ஒளிபெற வெளிபெறத் தோன்றும் = மனோரூபமாக ஆவது; கிரீடைரூபமாக ஆவது பரிணமிக்கும், பரமேசுவரிநீ வேதியன்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தேயம்போலக் காலமும் அதிகமதல்ல வெனச் சமாதானித்தல்:—தேயமென.

தேயநீடியில் லாமைபோற் காலமுஞ் சிறிதுநீ ளியதல்ல
மாயபேதமிற் சிற்சுடர் தோன்றிடு மாத்திர மொழிந்தில்லை
மேயபொய் மரணத்தினா லொருகண மெய்ம்மறந் திடச்சீவன்
போயதன்னபா வனைமறந் திப்பவம் பொருந்து பாவனை யெய்தும். ()

(ப - ரை.) தேயநீடியது அல்லாமைபோல் = தேசதீர்க்கத் தன்மை யில்லாததேபோல, காலமுஞ் சிறிது நீளியதல்ல = காலதீர்க்கத் றகைமையுங் கிடையாதாம், மாயபேதமில் = மாயமாகிய வேற்றுமை சிறிதுபற்றாத, சிற்சுடர் தோன்றிடுமாத்திரம் ஒழிந்தில்லை = அறிவொளியின் விவர்த்த வடிவமேயாகி வெறுந்தோற்றா மாத்திரமே யல்லாமல் ஒரு சிறிதுங் கிடையவே கிடையாது, மேயபொய் மரணத்தினால் = பொருந்திய பொய்யான மரணமூர்ச்சையை யனுபவித்து, ஒருகணம் = ஒருகணப்போது, மெய்மறந்திட உண்மை விஸ்மிருதி யுண்டாகியவழி, சீவன் = உயிரானது, போயதன்ன பாவனை மறந்து = பழைய பாவனையை யடியோடு மறந்து, இப்பவம் பொருந்து பாவனை யெய்தும் = இச்சமுசாரத்திற் செறியாநின்ற அன்னிய பாவனையை யடையும்.

(ஸ்ரீ - வீர.) சித்விவர்த்தைக சொரூபமாதலின் சுக்தியவச்சின்னசைதன்ய விவர்த்த இரஜதமேபோல அத்தியந்தம் மித்தையா மென்க. ஆயினெங்ஙனம் தோற்றாமாத்திர மென்னப்பட்ட மயலின் முறையென அறைகின்றார் மேயபொய் யென்பதாதியாய்.

மரணத்துவார மூர்ச்சனையை கணநேர மனுபவித்தென்பதாம். தேயநீடிய தல்லாமை போற் காலமும் நீடியதாகாதாம் என்பதன் நியாயத்தை யாம்கூறக் கேட்பாயாக, ஜகத் சிருஷ்டியின் ரூேற்றரவானது எங்ஙனந்தோற்றரவு மாத்திரமாய் நிகழுமோ அங்ஙனமே, கணங்கற்ப முதலியவற்றின் ரூேற்றரவும் கேவலந் தோற்றரவு மாத்திரமேயாகும், தோற்றரவு மாத்திர மென்பது எங்ஙனங் கூடுமெனின்? கணங்கற்பாதி யெல்லாவுலகும் நீயாந்தகைமை எனதாந்தகைமை யத்தியாச அநீஞத்ம ஜன்மப் பிரமவான்களுக்கே தோற்றுநிற்கு மென்றறிதி; அத்தோற்றரவின் முறையைக் கூறக்கேட்பாயாக, ஜீவனுன வன் பொய்மரண மூர்ச்சையைக் கணகால மனுபவித்து முன்னிருந்த நிலைமையை மறந்து மற்றொன்றையே காண்பன்.

(ச.) தேய நீளியதில்லாமைபோல, சிற்சுடர்= சித்தின் விவர்த்த மாத்திரரூபமான திருசியம், தோன்றிமொத்திர மொழிந்தில்லை, பிரதிபாச மாத்திரமே யாதலின், பிரதி பாசமாத்திரம் பிரதிபாமாத்திரம் பிரதீதிமாத்திர மென்பதும் தோற்றரவுமாத்திரமென்ப தாம்; பிரதிபா மரத்திரத்தின் வேறாகத் தேயநீளியது = தேசத்தினது வித்தாரம், இலாமைபோல், காலமிகுதியுங் கற்பிதமேயன்றி வாஸ்தவமன் றென்பதாம். இதன் கருத்து: சிதாகாசத்திற் சர்வப்பிரபஞ்சமும் அடங்கி நிற்றலின் கிருகாங்கன மாத்திரத் தில் எப்படி மகாராஜ்ய விஸ்தாரப் பிரதீதியோ அப்படி எட்டாம் பகலினும் அநேகவரு டப் பிரதீதியாமென்பது. பாலசௌந்தரியே கேள் என்றுபிரதிபாசத்தின் கிரமமுழுது மிஃதெனல்: சீவன் மெய்மொய் மித்தியாமயமான மெய்மறந்திட மூர்ச்சையை யனுப வித்து, போயசன்ம பாவனை மறந்து, இப்பாவம் = இத்தேகாந்தரம் பொருந்துபாவனை யெய்தும். (32)

(ஸ்ரீ-வீர - அ-கை.) இப்பவத்துறு முறையைக் காட்டுதல்:—தாங்கென.

தாங்குகின்றதீங் கிதுவித ஞன்மிகத் தாங்கிடப் படுவோ நாம்
வீலங்குகின்றநம் மெய்யிது பிதாவிவன் வீந்ததித் தனையாண்டிங்
கோங்குகின்றநஞ் சுற்றமீ தின்பமா யுறைவிட மிதுவென்றே
தேங்குகின்ற பொய் மரணமூர்ச் சைத்திறந் தெளிந்த பின்சிந்திக்கும்.

(ப - ரை.) தாங்குகின்றது ஈங்கிது = இவ்விடத்திலிது ஆதாரமா யிருப்பதாம், இதனுன் மிகத்தாங்கிடப் படுமோம் நாம் = இவ்வாதாரத்திஞலே மிகமிகவும்யாம் ஆதேயமாக்கப் படுகின்றேம், வீங்குகின்ற நம்மெய்யிது = பருத்திருக்கின்ற சரீரமீது, பிதாவிவன் = இவன் எனது தந்தை, வீழ்ந்தது இத்தனை யாண்டு = சென்றன பிறந்த பின் னித்தனைவருடம், இங்கோங்குகின்ற = இவ்விடத்திற் பலகிளையிலும் பரவும், நஞ்சுற்றம் ஈது=நம்முறவினர் இவர், இன்பமா யுறைவிடமிது=இரம்மியமாய் வசிக்கும் கிருகமிது, என்றே — என்றிவ் வண்ணமாகத் தானே, தேங்குகின்ற பொய்மரண மூர்ச் சைத்திறம் = கரணங்க ளெல்லாம் உபரதி யடையாநின்ற மித்தையான மரணமோகமா னது, தெளிந்தபின் சிந்திக்கும் = தீர்ந்து தெளிவடைந்த பின்னர் பிராந்தியிஞலே சிந் தனை செய்யும். (33)

(ஸ்ரீ - வீர.) ஆதேயமாக்கப் படுகின்றேம் = ஆதாரமாகக் கொண்டிருக்கின்றேம், வீங்குகின்ற = ஹஸ்த பாதாதிமானகப் பருத்து வருகின்ற இவனுக்கும் இவளுக்கும் யாம் குழந்தையாகப் பிறந்து இத்தனை காலமாயிற் றென்று அக்கணத்திலேயே கனவிற் போலக் கருதுமென்பது கருத்தாம். ஒரிமைக்கொட்டு மாத்திரைக்குள்ளே வியோமத் தின் கண்ணே வியோமத்தைப் போல ஆதார தேகாதி சூனியமாயினும் இது ஆதேய

மென்றும் இவ்வாதாரத்தின் கண்ணே யானிருக்கின்றே னென்றும் சமஸ்காரம் உற்பன்னமாகின்றது. ஹஸ்த பாதாதியோடு கூடியிருக்குந் தேகமாகிய இது என்னுடையது எனப் பார்ப்பன்; எத்தேகத்தைச் சிந்தை செய்கின்றனனோ அத்தேகத்தையே காண்குவன்! இத்தந்தையின் மைந்தன்யான் எனக்கித்தனை வருடமாயிற்று, இவர்கள் எனது மனோரம்மியமான பந்துக்கள், இஃதெனது அழகிய வீடாகும் யான் பிறந்திருக்கின்றேன் யான்பாலன், யான் விருத்தி யடைந்துளேன், யான் இத்தகையன், இவர்கள் யாவரும் என்னுடைய பந்துக்க ளாவார்கள், இவர்களிவ்வாறு நடக்கின்றார்கள் எனக் காண்பன்.

(ச.) தாங்குகின்ற தீங்கிது =இவ்விடத்திற் பாலாதி ரூபமாக யானிருக்கும் ஆதாரமிது, படுக்கையாதி கருப்பாதி ரூபமாகத் தாங்கிடப்படுவோம் நாம் = ஆதேயன்யான், எனவே மூலத்தகம் சப்தமிரண்டுங் கோதாகாதாம் கருப்ப ஆதேயன் சிசு, யான், சய்யையாதேயன் பாலகன்யான், வீங்குகின்றநம் மெய்யிது=அத்த பாதாதியுடைய எனது தேகமிது, பிதாவிவன் = இப்பிதாவினது புத்திரன்யான், வீய்ந்ததித்தனை யாண்டு = எனக்கித்தனை வயதாயிற்று, ஓங்குகின்ற = இன்பமிகுந்த, நஞ்சுற்ற மீது = எனது பாந்தவர் இவர், தேங்குகின்ற இச்சகத்தில் சிந்திக்கும், உயிர் நொடியில் பொய்மயமாய மரணரூப மூர்ச்சையை யனுபவித்து பழைய பாவனையை மறந்து. தேகாந்தரத்தையும் அச்சம்பந்தமான பிதாவாதிகளையும் நான் எனதென்று அபிமானிக்கு மென்பது தாற்பரிய அர்த்தம். (33)

(ஸ்ரீ-வீர - அ-கை.) சிதாத்மாவிற்கு வேறாக இருக்கும் யாவுமே வெறும்பொய் என்னும் நல்லுணர்வு தன் பாலதாகப் புரிந்து லீலை கூறுகின்றாள்: மாயாசபள ஈசுரகாரியம் அந்தக்கரணமாம், இவ்விரு உபாதிகளையும் பேதமாய் நாடின் உபகிதங்களின் பாலும் பேதகற்பனையாம், ஆகவே காரியசத்தை காரணசத்தையின் அதீன சன்மத்தை யுடையது என மயலால் முன்காரணம் பின்காரியம் என்றறிதலாம், அது கூடாதாம், மற்றோ மாயையந்தக்கரணங்களை யுபேக்ஷித்து அவ்விரண்டினுந் தொடர்ந்திருக்கு மறிவைக் காண்க, பிரத்தியக் சாக்ஷியாகிய அதனைக்கண்ட வளவில் காரிய காரணப்பான்மையிராதாம், பிண்டவஸ்தையைக் குடத்தகைமையை யெண்ணில் காரண காரியமதியாம், மண்மாத்திரமா யெண்ணினோ அம்மதியிலையாம், இங்ஙனம் ஈசுரவுலக் கற்பினையேற் காரண காரியமதியாம், சன்மாத்திரம் ஒன்றேயென எண்ணின் அம்மதியிலையாம், ஆகையினாற் சம்பாவனை மாத்திரமே யிச்சமுசாரம் பிரத்தியக்கில், ஐயப்பாடேல் பிரத்தியக் சாக்ஷியா யிருந்தால் நீங்கும், எத்திருசியமும் ஒரு சிறிதும் உண்டாகவேயில்லை சிதாகாசத்தில் சிதாகாசம் கேவலம் தன்பாலே யிருக்கின்றது இதனைத் தன்மகிமையிலே தானிருந் துளதாமென மறையும் அறைகின்ற தென்றதைக் கேட்ட லீலை அவ்வாறுளதாய திருஷ்டியினானே தெளிவடைந்து கூறுகின்றாள்:—ஆதலான் என.

ஆதலான் முதற் பவமறைந் திருப்பவ மறியலா யினதென்னப்
போதமாம்விழி நீதர வகோவகோ புரணமாய்த் தெளிவுற்றேன்
காதறீர்வுற வனையவ ருறைவிடங் காட்டென விவளோத
வேதநாயகி யுரைசெய்வா ளதற்கிந்த வினையுடல் விலங்காகும். (34)

(ப-ரை.) ஆதலான் =ஆகையினால், முதற் பவமறைந்து, இப்பவமறியலாயினது= முந்திய சமுசாரமறைந்து இந்தச் சமுசாரம் அறியலாயது, என்ன = என்று ஸ்ரீதேவியருள் செய்தபோது, லீலை கூறுகின்றாள், போதமாம் விழி நீதர = ஞானநேத்திரத்

தைத் தாங்கள் அருள,அகோ அகோ = ஆச்சரியம் ! ஆச்சரியம் !! புரணமாய்த் தெளி வுற்றேன் = வெளிப்படையாக அறிந்து கொண்டேன், காதல் தீர்வுற = அமர்களைக் காணவேண்டும் என்னும் ஆசை தீரும்படியாக, அனையவருறைவிடம் = அம்மறைச் சிறுவர் இருக்குமிடத்தை, காட்டென இவளோத = காட்டவேண்டு மென்று லீலை பிரார்த்திப்ப, வேதநாயகி = மறைச்செல்வி, உரைசெய்வாள் = திருவருள் செய்கின் றுள், அதற்கிந்த = அங்ஙன் காண்குதற்கு, இந்த வினையுடல் விலங்காகும் = கருமசரீ ரம் பிரதிபந்தகமாகும். (34)

(ஸ்ரீ - வீர.) இங்ஙனம் ஆப்தர் கூற்றால் உலகப் பொய்ம்மையை யுணர்ந்து கூறிய பொருளைப் பிரத்தியக்ஷஞ் செய்தலாதியால் அதன்றுட்டியப் பொருட்டுமிகமுயலுவாளா யினுள் லீலையென்பார் காதல் தீர்வுற லாதியாய்த் தொடங்கினுர் அப்பியாச மில்லாமல் இத்திருஷ்டியில் இப்போது எதுவரைப் பக்குவப்பட்டுப் பிரவுடமாயாகேனே அதற் குள் இக்குதூகலத்தைச் சேதிக்குதி. நீ மகேசுரியா யிருக்கின்றமையால் மறையவ தம் பதிதம்பிரபஞ்சத்தைக் கொண்டுபோய்க் காட்டவல்லவளா யிருக்கின்றுய். ஹே ஜகன் மாதாவே ! அற்புதம் ! அற்புதம் !! உலகசம்பந்தமாய ரூபஜசுவர்யம் காலைப்பிரமையி னுலே வெட்டவெளியாகப் பார்வையாற் பிரகாசிக்கப் படுவதேபோல நின்னுல் எனக்கு அந்ததிருஷ்டியானது காட்டப்பட்டது. இப்போது யானிதன்கண் ணிருக்கின்றேன் திருக்கின்கண்ணே அப்யாசத்தா லல்லாமல் விற்பத்தி திடமுடைமை வாராமைக்குள் கூறப்படும் மனே எழுச்சியைத் தவிர்த்தருளல் வேண்டும்; அதாவது எவ்வீட்டில் அம் மறையவன் மறையவளோடும் இருந்தனனே அதனையான் காணவேண்டும் அச்சர்க்கத் தையும் அக்கிரிக் கிராமத்தையும் காண்பான் அவாவுளது ஆகலின் என்னை ஆங்கு கூட் டிக் கொண்டுபோய்க் காட்டியருளல் வேண்டும் என்றனள்.

(ச) அனையவர் = பிராஹ்மண் தம்பதிகள், இவ்வுன்னுற் காட்டப்பட்ட திருஷ்டி யின் கண் யான் அப்யாச அபாவத்தாற் பரிணதையாகாம லிருக்கும் போதே பிராஹ் மண தம்பதிகளின் சர்க்கத்திற்கு என்னைக் கூட்டிக்கொண்டு போய்க் காட்டவேண்டும் என்னும் இக்குதூகலத்தை நீக்கிய ருள்வாயாக. சர்க்கம் = ஈண்டுறைவிடம். (34)

(ஸ்ரீ - வீர - அ - கை.) லீலைக்குக் தூலசரீரத்தோடு சர்க்காந்தரத்துட் செலுத்துங் காரண கருமத்தைக் காணும் பகவதி, பிரஹ்மவித்தைத் தானத்தில் முதிர்ந்து நிற்கும் அவளது புண்ணியக் கூட்டத்தை யெண்ணி அதனை யனுசரித்துக் கொண்டே திருவாய் மலர்ந்தருளுவாள்: அச்சர்க்கத்தைக் காணம் பொருட்டு முன்போலச் சமாதியில் இத் தேகத்தை மறத்தல் அலசியமெனல்:—இந்தவென.

இந்த யாக்கையை மறந்துவே றறிவதற் றிலங்குசிற் சுடர் மெய்யா
மந்தநல்லறி வேவடி வாய்மல மறுத்தியே லதுகூடுந்
தந்தமக்கொரு வடிவிலா வுலகங்க டமனியம் பணியாகி
வந்தவாறென வுங்கண்மோ கத்தினுன் மதித்திடப்படுமன்றே. (35)

(ப - ரை.) இந்த யாக்கையை = இத்தேகத்தை, மறந்து = நினையாமல், வேறறி வதற்று = மற்றெரு திருசியத்தையும் நாடாது, இலங்கு = சுயம்பிரகாசமாக விளங் கும், சிற்சுடர் மெய்யாம் = அறிவுருவ மேனியான, அந்த நல்லறிவே = அகோசர பரம பவித்திரமான ஞானமே, வடிவமாய் = சொரூபமாயிருந்து மலமறுத்தியேல் = மலமற் றவளாதியேலாயின், அதுகூடும் = அச்சர்க்கத்தைக் காணலாம், தந்தமக்கொரு வடி விலா வுலகங்கள் = உண்மையாகக் காரணத்தை விடுத்துத் தமக்கென அமூர்த்தமாக

இருக்கும் இச்சகங்கள், உங்கள், மோகத்தினுல் = உமது அறிவின்மையினுலே, தமனீயம் = பொன், பணிபாகி = ஆபரணங்களாகி, வந்தவாறென = விவகரிக்க வந்தவகையேபோல, மதித்திடப்படும் = மூர்த்தமாக எண்ணப் படுகின்றன, அன்றே = அறிவைத்தவிர இவை அல்லவே யல்லவாம்,

(ஸ்ரீ - வீர.) திருசியங்களாகிய சப்தாதிகள் ஒன்றுமில்லாத அறிவுருவப் பிரதானமாய் அதனையே விடயீகரித்து நிற்குந் திருஷ்யைப்பற்றி மலமறுத்தியேல் என்பதாம் உடன் உண்டாகிக் கெடாத அதனைத் தடையொன்று மின்றிக் காணலாகிய அது கூடும் என்றறிக தூலதேகத்திற்கு வேறுசர்க்க தரிசன வாயில்வடிவச் செல்கைத் தடைத்தன்மை யாங்ஙன மாங்கொல் லெனவினு நிகழ்ந்தவழி கூறுகின்றார்: தந்தமக்கென. மூர்ச்சித அவயவங்கள் இல்லாதன அமூர்த்தங்கள் இச்சகங்கள், உம்போன்ற அஞ்ஞஜீவர்களால் வீணன அபிநிவேசத்தால் அவயவமூர்ச்சன முடையனவான மூர்த்தங்களாகப் பார்க்கப் படுகின்றனவாம். மூர்ச்சனம் = மூர்த்தி. தத்துவவிபரீதக் கவர்ச்சியில் திருஷ்டாந்தங் கூறுவார், தமனியமென்றார், பணி = மோதிர கங்கணுதி, பொன்னுலாய பூஷணத்தகைமை கூறிய புத்தியாலே விழாயினுலே நன்ருகப் பார்க்கப்படின் சேர்க்கைச் சிறப்பாய்ச் சேர்ந்த அவற்றினும் வேருகப் புலப்படுவதின்ரும். ஆகையினுலவை பூஷண புந்தியால் மூடர்களால் விபரீதமாகக் கவரப்பெறுகின்றன; அதுபோல நிராகாரங்க ளாயினும் உலகங்கள் ஆகார முடையனவாக மயலாற் கவரப்பெறுகின்றன. ஆகலின் மூர்த்தமாய சரீரம் வேறுமூர்த்தியால் தடைப்படுத்தப்படின் வேற்றுலகின் காட்சிவாயில் வடிவச் செல்கைத் தடைப்படும். திருசியமற்ற சித்துருவமயப் பரமபவித்திர திருஷ்டியான் காரணப் பிரஹ்மரூபத் தன்மையைப் பற்றிக்கொண்டு அமலையாகுதி இத்தேக ஆகாரத்தை விடுதி. அதன் பின்னர் பூமியின்கண் ணிருக்கும் நரசங்கற்பம் ககனத்துட் புரங் கதுவலே போலும் சிதாகாயத்தின்கண் ணிருக்குங் மாயாகாசவடிவ அச்சர்க்கத்தை ஐயமில்லாம லடையலாம். இவ்வண்ண மிருப்பையேல் அவ்வியாவற்றையும் என்னேடு கூடவந்து யாதொரு தடையுமில்லாமற் காணலாம்; அதைக்காணும் விடயத்தில் இத்தேகமானது பெருந்தடை யென்றுணர்தி, ஹே புவனேசுரி ! இத்தேகத்தோடும் வேற்றுலகை என் அடைய முடியாதென்பதை யருளவேண்டு மென அம்பிகை யருளுவதாவது: மாயாமாத்திரமாக இருப்பதனுனே உலக சம்பந்தமான இவைகள் அமூர்த்தங்களாக இருந்தபோதினும் பொய்யுணர் வினுனே மூர்த்தமூடையனவாக நீங்கள் பூஷண புத்தியினுனே பொன்களைப் போலும் இவைகளை யுணர்கின்றீர்கள் பூஷணரூபந்தரித்த பொன்னின் கண்ணேயும் பூஷணத் தன்மையாகிய பொன்னலாத் தன்மை இல்லாததே போலும், உலக உருவப் பிரஹ்மத்தின் கண்ணே யுலகமில்லவே யில்லையென்றுணர்தி.

(ச.) இந்த யாக்கையை = இந்தப் பௌதிகா காரத்தை, மறந்து வேறறிவகற்று = சடசம்பந்த ரகிதமாய், இலங்கு சிற்சுடர் மெய்யாம் = சித்துருபமயமான, அந்த நல்லறிவே = பரமபாவனமான போதமே, வடிவாய் மலமறுத்தியேல் = அமலையாயின் அது கூடும் = அச்சர்க்கத்தைப் பார்க்கலாம். தூலதேகம் சர்க்கராந்தர தரிசனப் பிரதிபந்தமாதலின் அதனை யவசியம் விடவேண்டு மென்பது கருத்து, ஆயின் நின்தேகம் எப்படிப் பிரதிபந்த மின்மையதெனச் சங்கித்து லீலைக்குந் தனக்கும் ஞான தாரதம்மியங் கூறல்: உலகங்கள் = இந்தச் செகங்கள், தம்தமக் கொருவடிவிலா = அமூர்த்த மென்னுஞ் சிதாகாச சொரூபமேயாம், உங்கள் மோகத்தினுல் = உங்களாற் பிராந்திஞானத்தினுல், தமனியம் பணியாகி வந்தவாறென மதித்திடப்படும் = மூர்த்தங்களை யுடையனபோ லகத்து அறியப்படும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) கேவலம் தேகம் வேறுசர்க்கத்துவார கமனப்பிரதிபந்தகம் என்பதுமாத்திர மன்றும், மற்றே, தத்துவஞானப் பிரதி பந்தகமுமாம் எனல்.—தத்தென.

தத்துவம் பயில்வாதனை யன்றியே சகங்கடன் மயமாகா
மெத்து செய்தொழில் விட்டிலை யாதலான் மேவுதற் கரிதுன்றற்
சுத்ததற்பத மெம்மனோர் நிற்பது தொடர்மன வடிவாக
வைத்தசூக்க மெய்தீர்க்கபா வனையினல் வளர்ந்துபே ருடலாகும் (36)

(ப-ரை.) தத்துவம் பயில்வாதனை யன்றியே = பிரஹ்ம தத்துவத்தைத் தியானஞ் செய்யும் சுத்தவாசனையா லல்லாமல் ஒருக்காலும், சகங்கள் தன்மயமாகா = உலகங்கள் தனது அறிவுருவ மாகமாட்டா, மெத்துசெய் தொழில் விட்டிலை = கர்த்தா போக்தா வென மிகவுஞ் செய்யாநின்ற வினையினை விட்டுத் தொலைத்தாயில்லை,ஆதலால்=ஆகையினல், மேவுதற் கரிதுன்னல் = சென்று காணுதற்கு உன்னல் முடியாது, சுத்ததற்பதம் = தூயபரமாத்ம பதமே, எம்மனோர் நிற்பது = எம்போலிய ஹரிபிரமாதியர் ஸ்தியாம், தொடர்மன வடிவாக = வாதனை தொடர்ந்த மனத்தின் ரூபமாக, வைத்தசூக்கமெய்=இருக்கும் ஆதிவாகிக சரீரமே, தீர்க்கபாவனையினல்=சிர அப்யாச எண்ணத்தால், வளர்ந்து பேருடலாகும் = விருத்தியாகி ஆதிபௌதிக தூலதேகமாகக் கவரப்பெறும். (36)

(ஸ்ரீ - வீர.) நினது ஆகிருதி இனிக்கூறப்படும் ஞானப் பயிற்சியின்றி அதிஷ்டான பூத பிரஹ்மத் தன்மையை யடையமாட்டாது, என்னை, அதிஷ்டானப் பிரஹ்ம வியதிரேகமாக அசத்தென்னும் நிச்சயமின் றுதலினென்க. கற்பனை வடிவத்தையே நினது வடிவமாய் நினைத்துக் கொண்டிருத்தலின் மேவுதற்கரிது = அந்தப் பிரஹ்மத்தை நீபார்த்தன் முடியாதாம். அப்பியாச யோகத்தானே நினதுபேதபுத்தியானது எதுவரை சாந்தமாக வில்லையோ அதுவரையும் அப்பிரஹ்மமான தேகாதியான்மபுத்தி யிருத்தலின் அவ்வடிவமா யிலகும் நீ பிரஹ்மத்தைக் காணல் முடியாததே யாகுமன்றே; எனப்பெரிய ஞானவாசிட்டத்து அவ்வாறே கூறப்பட்டுளது. ஆயின் தங்களைப் போன்றவர்கள் சரீராதி மயற்றடையுளதாக யாங்ஙனம் அந்தப் பிரஹ்மத்தை யநுபவிக்கின்றீர்கள் என ஆசங்கிப்ப உத்தரம் அருளுவார் சுத்ததற்பத மெம்மனோர் நிற்பது என்றார். எம்போலியர் பிரஹ்ம ஞானத்தின் பயிற்சியால் ஞானப்யாசத்தில் பிரசித்தியை யடைந்துள்ளேம் ஆகலின் அந்த ஞேயப்பிரஹ்மத்தை யனுபவித்துக் கொண்டிருக்கின்றேம். பிரமஹ்ம ஞான அப்யாச பரிபாகத்தால், தேகாதி யாத்மத்தன்மை மயற்காரணபூத வாசனை லயமாகவே, தடையொன்று மில்லாமையின் எம்மனோரால், பிரஹ்ம ஆத்மதத்வம். உள்ளங்கை நெல்லிக் கனிபோல அனுபவிக்கப் பெறுகின்றது; என்பது அபிம்பிராயமாம். தேகத்திற்குக் கற்பனை வடிவத்தன்மை யசித்தம் என ஆசங்கித்துக் கூறுகின்றார், மன வடிவாக என. அவ்வத்தே யங்களை யாதொரு தடையுமில்லாத கதியால் அடைவிக்கின்ற படியினுலே சூக்கும சித்ததேகம் ஆதிவாகிகம் எனப்படும். அச்சூக்கும தேகமே, நின் போன்ற அஞ்ஞர்களால், நின்போது—விபரீத பாவனை செய்யப் பெற்றவழி, ஆதிபௌதிகமிஃதென்னும் படியான ஆகார புத்தியாற் கவரப் பெறுகின்றது. ஆண்டுத்திட உபஸ்திதியை அடைந்திரா நின்ற இவ்வெம் போலியாதியரோ பயிற்சியின் மூதிற்சியாற் பிரஹ்மசம்பத்தியி லிருத்தலின் எப்போதுந் தற்பரவடிவமான அதனையே சொரூபமாகக் கண்டுகொண் டிருக்கின்றேம். மனோமாத்திரமாய் நகரங்களைக் காணும் எமக்குடலமோ சுத்த சிதாகாச மயமேயாகும் இத்தேகத்தோடும் தற்பதவடிவமான பிரஹ்மத்தையே

யுள்ளே பார்க்கின்றோம், எம்போலவே இப்பதுமஜாதியரு மிலங்குவர். "இதனதுபாத மிவ்விசுவ பூதங்களே, இதன் முப்பாத மின்னமுதந்திவி" என்னுமறையை யனுசரித்துலகத்தை ஏகதேசமாய்க் காண்பேம். நனக்குப் பயிற்சியில்லாமல் ஆகாரம் பிரஹ்மத் தன்மையை யடைந்திலது; அந்தக்கரணத்தி லிருக்குஞ் சிதாபாசரூப வடிவமாக நின்றனே; அதனால் அந்தப் பிரஹ்மத்தையும் முன்மொழிந்த கிரிக்கிராமத்தையும் நீ காண முடியாதவளா யிருக்கின்றாய்; இத்தேகத்தோடும் போய்க்காண முடியாமைக்குச் சங்கற்பத்தா லாகியிருப்பதே காரணமாகும், யாண்டு தன்னுடைய சங்கற்பபட்டணத்தைத் தன்றேகத்தாலேயே யடைய முடியாதோ ஆண்டு அன்னிய சங்கற்ப பட்டணத்தை யன்னிய தேகமடைய முடிவ தெங்ஙன்கூறுதி, ஆகலின் இத்தேகத்தை விட்டொழிந்து எச்சிதாகாச வடிவமாக இருந்தாற் பார்க்க முடியுமோ அதனையே அதிவிரைவி லடைய முயலுதி, இத்தேகத்திற்கும் மானசத் தன்மையே யுளதாகுக, உளதாயின் பார்த்திவத் தன்மை யெங்ஙன்கூடும்? ஆதிவாகிகமேயாகிய இச்சித்த தேகத்தை நம்போலியர் ஆதிபௌதிகத்தன்மைப் புத்தியினுல் நீண்ட பாவனையைக்கொண்டு கவர்ந்துள்ளீர், கனவிற் போலும், நீள்காலத் தியானத்திற் போலும் மயலிற்போலும், மனோராஜ்ஜியத்திற்போலும், கந்தர்வ பட்டனத்திற் போலும், என்றுணர்க.

(ச.) தத்துவம்பயில், வாதனையின்றியே = அப்பியாச மின்மையினுல், நினக்குச், சகங்கள் = சகத்தாகாரம்; தன்மயமாகா = பிரமரூபமாகாது, ஆயின் என்னெனில், மெத்துசெய் தொழில் விட்டிலே = கற்பித வியோமாதிரூப சுபாவமாகவே யிருக்கின்றது, ஆதலான் = அந்தவேதுவால், தத்துவம் = பிரஹ்மத்தை அறிந்து, மேவுதற்கரிதாகும்; சுத்ததற்பத மெம்மனோர் நிற்பது = பிரஹ்மமே யீதனைத்து மென்னும் ஞானப்பியாசத்தினுற் பிரமாப்பியாசத்தில் ரூடியடைந்த யாங்கள் சுத்ததற்பதத்தையே யறிந்து அடைந் திருக்சின்றனம்; தொடர்மன வடிவாக வைத்த சூக்கமெய்=லோகாந்தர கமன யோக்கியமான இந்தச் சித்ததேகமென்னும் ஆதிவாகிகமே உன்போல் பவர்களால். தீர்க்கபாவனையினுல் = சிரசித்த பாவனையினுல், வளர்ந்து பேருடலாகும் = ஆதிபௌதிக புத்தியினுல், கிரகிக்கப்பட்ட தென்பது பொருள்.

(ஶ்ரீ - வீர - அ - கை) ஆயின் ஆதிவாகிகத்தன்மை சகஜமாகச் சித்ததேகம், எப்போதடையும் என்றாசங்கிப்ப உத்தரமருளல். ஆயின் எப்போது இதனது பார்த்திவத்தன்மை நிவிர்த்தியாகு மெனின்! கூறியருளல்:—கட்டியென.

(ச-அ-கை.) ஆயின் ஆதிவாகிக சித்திக்குபாயம் யாதெனிற் கூறுகின்றார்:—கட்டியென.

**கட்டியாம்பனி வெம்மையாற் கரைந்துபோங் கணக்கென மெய்ஞ்ஞானஞ்**
**சுட்டிநோக்கலும் வாதனை விடுதலுந் தூலமா முடல்விட்டுத்**
**திட்டமாகிய சூக்கமெய் நிலைபெறுஞ் சீவன்முத் தியுமாகு**
**முட்டஞானமே நிறையுமுன் னிவ்வுட னிறுத்திமுற் பவங்காண்பாய். (37)**

(ப - ரை.) கட்டியாம் பனி = பனிக்கட்டியானது, வெம்மையால் = வெப்பம் படப்பட, கரைந்துபோம் கணக்கென = நெகிழ்ந்து நீராகு நேர்மையேபோல, மெய்ஞ்ஞானஞ் சுட்டிநோக்கலும் = சுத்தசத்திய ஞானநந்த வடிவத்தை யிடைவிடாது தியானஞ் செய்தலினுலும், வாதனை விடுதலும் = வாசனுக்ஷயஞ் செய்தலினுலும், தூலமாவ்விட்டு = தூலசரீரத்தை மறந்து, திட்டமாகிய சூக்கமெய் நிலைபெறும் = முன்னிமாகிய ஆதிவாகிக மென்னும் சூக்குமசரீரம் மீண்டு ஸ்திதிபெறும், சீவன்முத்தியு

மாகும் = அதிற்பிரவுடி யடையவே ஜீவன்முக்திப் பதத்தையு மடைந்து சுகிப்பாய், முட்டஞானமே, நிறையுமுன் = சீதளபோத மதியானது பூரிக்குமுற்போதே, இவ்வுடல் நிறுத்தி = இத்தேகத்தை ஸ்தாபிதஞ்செய்து, முற்பவங் காண்பாய் = சர்க்காந்தரத் தைக் காண்பாயாக.

(ஸ்ரீ - வீர.) ஞானாப்யாசத்தானே இருமை வாசனையின் அற்பத்தன்மை எப்போ துனக்கு நன்றாகத் திதிபெறுமோ அப்போது சித்ததேகத்தின் கண்ணே ஆதிவாகிக சூக்குமபாவம் அடையப் பெறுவாய்; முன்னுள்ளதையே மீண்டும் வரச்செய்து கொள் வாய் என்பதாம். கூறியதையே தெளிவிப்பார் சுட்டி நோக்கல் என்றார். இரஜதமம் என்பவற்றான் மறைபடாத சுத்த சத்துவமனத்தில் விகற்பமறத் தெளிதல். சொப்பன தசையிற்போலச் சாக்கிரத்தும் சரீராதிப் பிரபஞ்சரூபமாக நிகழுஞ்சித்தம் ஞானாப்யா சத்தால் வாதனை சுருங்கியவழி சரீராதி ரூபத்தன்மையை விடுத்து தோற்றமாத்திர வடி வத்தனது சூக்குமரூபத் தன்மையை யடையும். இதனானே ஜீவன்முக்தித் தசையின் கண்ணே பிராதிபாசிகம் ஜகத்துளதாமெனப் பெரியார் பேசினர். வாதனை சுருங்கிவந்த வழி சித்தத்திற்குப் பருமைகுறையும் ஆகலின் அது சித்திக்கும் பொருட்டு ஞானப் பயிற்சிவடிவ முயற்சி மிகுதியும் செய்யவேண்டும் என்பார் வாதனை விடுதலும் என்றார். வாதனையின் வறுமை வந்தபோது கேவலம் சித்தத்திற்கு மாத்திரம் பருமைகுறையும் என்பதாக இன்றாம். மற்றோ அனுபவபரியந்த ஞானமுதய மாதலின் பந்தமும் லீனப படும் என்பார் சீவன்முக்தி யென்றார். இங்ஙனம் ஞானப்பரிபூர்த்தி யுபாயம் புகன்று அதன் பரிபூர்த்தியின் முன் முற்சர்க்க தரிசனப் பொருட்டுச் செய்யவேண்டியதை நினைப்பூட்டுவார் நிறையுமுன் என்றார். போதமானது பூரணமாவதற்குள் தூலதேகத்தை யிங்கே நிலைநிறுத்தி வேறு சர்க்கத்தைக் காண்குதி யென்று கூறியருளுந் தேவியார் போதம் பூரணமாயின் தேகத்தை யிங்குநிறுவாமலே பிரபஞ்சாந்தர தரிசனம் செய்யலா மெனத் திருவருள் பாலித்தது போலன்றோ காணப் பெறுகின்றது; அஃதொவ்வாதாம், பூர்ணபோதத்தாற் ககனகமனுதி உதயமாகாமையின் அதேதேகத்தானே சர்க்காந்தர தரிசன அசம்பவத்தாற் பூரணஞானத்தை யடைந்த சூடாலைக்கும் ஆகாசகமனுதி சித்தி யின் பொருட்டு வேறுமுயற்சி யிருந்ததாகக் காணப் பெறுகின்றமையின் எனின்† இஃ தொரு தோடமாகாதாம், ஞானமார்க்கத்தில் லீலைக்கு ஆதர அதிசய முண்டாக்கற் பொருட்டு அங்ஙனம் அறைந்தமையின் என்றுணர்க. எப்போது சமாதியின் பயில்வி னாலே நினது வாசனையானது சுருங்கிச் சொரூபஸ்திதி யடையப் பெறுமோ அப்போது தான் மீண்டுந் தேகத்தில் ஆதிவாகிகத் தன்மையை யடையலாம். முன்மொழிந்த சுத்த சத்துவ முற்றுச் சமாதியின் சாமர்த்தியத்தால் நெடுங்காலம் நிலைபெற்றதும், நன்றாக வாசனை குறைந்ததும் ஆகியசித்தம், பனிக்கட்டியானது வெய்யிலினாலுருகி நீர்மையை யடைவதேபோல ஆதிவாகிகத் தன்மையையடையும்; ஆகையால் அநிந்திதமாகிய வாசனா க்ஷயத்தில் முயற்சிசெய்வாயாக, அது முதிர்ந்துவளர்ந்த அளவிற்சீவன்முத்தையாயிருந்து வாழ்வாய் இரிக்கிராமத்தைக் காணவேண்டு மென்னு மாசையிற்றடைபட்ட சித்தத்தின் கண்ணே உணர்வின் நிறைவேனும் வாசனையின் நீக்கப் பயிற்சியேனும் உண்டாகாதாம் என்னுந் திருக்கருத்தால் உரைத்தருளப் பெறுகின்றது ஞானமேநிறையு முன்னென. இவ்வதி சீதளமாய போதசந்திரன் பூரணமாவதற்கு முன்னரேதேகத்தை யிங்குவைத்து விட்டு லோகாந்தரஞ் சென்று காண்பாயாக.

(௪.) மெய்ஞ்ஞானத்தையும் வாசனாக்ஷயத்தையும் உடையமனம் ஆதிவாகிகத்தை யடையும். வெம்மையால் = ஆதவனால் ஜலமயமாய்க் கரைந்துபோம், ஆதலின் வாசனா

க்ஷயந்திடமுறிற் சீவன் முத்தியுமாகும், முட்டஞானமே நிறையுமுன் = பூரணபோத முதியாதமட்டும், இவ்வுடல் = இத்தூலதேகத்தை, நிறுத்திச் சர்க்காந்தரத்தைக் காண வேண்டு மென்பதாம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தத்துவம்பயில் வாதனையன்றியே சகங்கடன் மயமாகா, என்பதாதியானே கூறப்பட்ட போதபூரக ஞானப்யாசத்தின் சொரூபத்தையும் அதன் பிரகாரத்தையும் அதன் பரிபாக ஹேதுவையும் அதன்பரிபாக பலத்தையும் முறையாக வினவுகின்றனர் லீலை: இங்ஙனம் நிர்மலமாகிய ஞானமானது உன்னால் அடியாட்குபேதே சிக்கப்பட்டது, அவ்வுபதேசத்தைச் செவிகுளிரக் கேட்ட மாத்திரத்தானே திருசியவிடு சிகையானது பரமசாந்தியை யடைந்தது, அவ்வுணர்வுற வுபகாரம் உரைத்தருளல் வேண்டுமென வேண்டல் லீலை:—என்றவென.

என்றவாணியை யத்திற னியற்றுமா றென்னென விவள்கேட்கத்
துன்று சிந்தையும் வசனமு முசாவுமத் தொல் பொருட் பொருட்டாகி
நின்ற வின்பமு முதாரமும் விராகமு நிறைந்துநீள் சகமென்று
மொன்றுமில் லெனக் கலைவழி யூகமா யுணர்வர்சா தகராளேர். (38)

(ப - ரை.) என்றவாணியை = மேற்கூறிய பிரகாரம் அனுக்கிரகஞ் செய்தருளிய ஸ்ரீசரசுவதிதேவியை, அத்திறன் இயற்றுமாறு என்ன? = அந்தப் பேரறிவை யடைவதற்குச் சாதகமாக என்ன அப்யாசஞ் செய்யவேண்டும், என = என்பதாக, இவள் = லீலை, கேட்க = வினவ, துன்று சிந்தையும் = அதைப்பற்றிய சிந்தையும், வசனமும் = அதனையே பேசுதலும், உசாவும் = ஒருவர்க்கொருவர் தெளிவித்தலும், அத்தொல் பொருட் பொருட்டாகி = அப்பழம் பொருளின் சம்மந்தமேயாகி, நின்ற வின்பமும் = பொழிந்துகொண் டிருக்கும் ஆநந்தமும், உதாரமும்=பெருஞ் சௌந்தரியமும், விராகமும் = வைராக்கியமும், நிறைந்து = பூரித்த மதியோடு கூடி, நீள்சகம் = சர்வதிருசியங்களும், என்றும் = முக்காலத்திலும், ஒன்றும் = ஒரு சிறிதும், இல்லென = இல்லவே யில்லையென்று, கலைவழி = சாஸ்திரோக்த யுக்திப் பிரகாரம், யூகமாய் = அதி சூக்ஷும விருத்தியானே, சாதகராளேர் = பிரஹ்ம அப்யாசிக ளானவர்கள், உணர்வர் = உணர்வுறு முயற்சி செய்வார்.

(ஸ்ரீ - வீர.) ஈண்டுப்போதம் பூர்ணமாக எவ்வப்பியாசம் உபகாரஞ் செய்யுமோ அதுயாதாம்? ஆண்டு அப்பியாச சொரூபமறைவார் துன்று எனத்தொடங்கினர். அந்தப் பிரஹ்மத்தைக் குருமுகமாகக் கேட்டதன் சிந்தனம் = யூகத்தாற் பரியாலோசனமாம்; குணசம் பன்னனை சீடனுக்கு அதனையே கூறுதல் வசனமாம், தெளிதல் என்றமையானே நிதித்தியாசனமும் கொள்ளக் கிடந்ததாம், எத்தகை யப்பியாசமென வினவ விடையளிக்கக் கருதுவார் நின்ற வின்பமெனத் தொடங்கினர். உண்டாகிய ஔதார்ய மென்னும் மகத்துவத்தினுற் சௌந்தரிய முடையதும், வைராக்கிய சாரத்தை யுள்ளே வைத்திருப்பதும், ஆனந்த வர்ஷிணியா யிருப்பதும் ஆகிய மதியை யுடையவர்கள் பரமாத்மாவின் கண்ணே அப்யாச முடையவர்கள் ஆவார்கள் மந்த அதிகாரியின் ஞானப்யாசத்தைக் கூறுவார் ஒன்றுமில் லென்றார். அல்லது இயற்றுமாறென் என்னும் வினாவிற்கு, விடையாகக் கருதியேகூறுவார் ஒன்றுமில் லென்றார். திருசியவஸ்துக்கள் ஒன்றுமே யின்றென நினைக. அந்த ஞானத்தையடைய உபகாரமென்ன? என்னபயிற்சி வேண்டும்? எத்தகையது அது? அஃதெங்ஙனம் விருத்தியை யடையும், அது விருத்தியானல் அதனாலுண்டாவ தென்னே? உறைத்தருள வேண்டுமென வேண்ட ஸ்ரீ ஜகன்

மாதா கூறுகின்றதாவது: எக்கால் எக்கால் எதனால் எதனால் யாது யாது சிறிதுசெய்யப் படுமோ அவையெல்லாம் ஒரு காலத்திலும் பயிற்சியில்லாமல் ஈண்டு சித்தியுருவாம், ஆண்டு அப்யாசசொரூப மென்னெனின், ஐயமில்லாமல் தனது புத்தியில் ஏறுவதற்காக அதனது சிந்தனமும், அறிவார் அயலார் மதிச்சம்வாதப் பொருட்டு அதனது கூறுத லும், ஒன்றற்கொன்று அறியாத அங்கிசங்களைத் தெளிவித்தற் பொருட்டுப் பரஸ்பரம் அதனது அன்னியோன்னிய இனிது தெரிவிக்கையும் ஆகிய இவ்வுபாயங்களால் சமு சயங்களின் நிவிருத்தியானபின் விபரீத பாவனையின் நீக்கப்பொருட்டு அதனோடு ஒரு மையுற்றிருக்கும் தியானத்தைச் செய்து வருவதையும் அதனது அப்பியாசமென்று பெரியோர் சொல்லுவர் இனிதுண்டாய சர்வ பரிக்கிரகங்களின் நியாக இலக்கண சௌந்தரியத்தாலும் வைராக்கிய இரசத்தினாலும், இரஞ்சிதர்களாய் ஆனந்த அமுத ஊற்றெடுக்கும் மதியுடையவர்களாய் அதனானே மேன்மை தங்கியவர்களாகி யிருப்பார் கள் அப்பியாசிகள். சிரவணாதி பரத்வமா யிருத்தலும் அதனப்பியாச இலக்கணமாகும் என்றுணர்தி, ஞாதா ஞேயாதி திரிபுடிப் பொருள்களின் அத்தியந்த அபாவ சம்பத்தி யின் கண்ணே பிரமாணதத்துவ நிச்சய அநுகூல யூகத்தினாலும், வேதாந்த சாஸ்திரங் களாலும் யாவர்முயலு கின்றனரோ அவர் பிரஹ்மாப் பியாசிக ளென்றுணர்தி.

(ச.) என்ற வாணியை யத்திற மியற்றுமா றென்னென விவள் கேட்ப = பரிபூரண போதமடைவதில் உபகரிக்கும் அப்பியாசம்யாது ? அஃதெத் தன்மையது ? எப்படியது விருத்தியாம் ? அது விருத்தியாயிற் பலமியாது, என லீலைவினவ, ஸ்ரீ தேவிதுன்று— அத்தொல் பொருள் பொருட்டாக நின்ற = பிரமமே முக்கிய தாற்பரியமாக இராநின்ற அதைச் சிந்திப்பதும் உரைப்பதும் உசாவும் அன்னியோன்னியம் அதைப் போதிப்பதும் ஆகியது பிரமாப்பியாசத்தை அறிவர் அறிஞர். இன்பமும் உதாரமும் விராகமும் நிறை ந்து = எவர்க்கு ஆனந்தப் பெருக்கினையுடைய மகத்துவத்தையும் சந்தோடத்தையும் உபசாந்தியையும் நிறையக் கருப்பங்கொண்ட மதியுதிக்குமோ அவர் பிரமாப்பியாச முடையர் என்பதுபொருள். நீள்சகமென்று மொன்று மில்லெனக் கலைவழி யூகமாயுணர் வர் சாதகராஞேர் = ஞேயவஸ்து வென்னுந் திருசியப் பிரபஞ்சம் அத்தியந்தா பாவமா மென்று யுக்தியாலும் சாஸ்திரங்களாலும் அரிய எத்தனஞ் செய்பவர் பிரமாப்பியாசிக ளென ஸ்மரிக்கப் படுகின்றார்கள். உசாவு நிறைந்து யூகமாயுணர்வர் சாதகராஞேர் எனக் கூட்டுக.

ஸ்ரீ மத்யம அதிகாரியின் ஞானப்பியாசம் கூறல்: முக்காலத்திய திருசியபாத தரி சன ஆவிருத்தியும் அதன் பயிற்சியே யென்றுணர்தி யென்கின்றார்:—அகமென.

அகமிதங்களிச் சிருட்டியின் முன்வருமபாவமா தலினென்று
மிகவுமில்லெனத் தெளிதரு போதமும் வேறுகாண் பனவற்று
நிகழுஞானத்தாற் காமமே முதற்பகை நீங்கிட வந்தெய்துஞ்
சுகமுமென்றிவை சாதக மாகவே தொடர்வர் சாதகராஞேர் (29)

(ப - ரை.) அகம் இதங்கள்=யான் இச்சகத்திருசியங்கள், இச்சிருட்டியின் முன்= இச்சர்க்காதியிலேயே வருமபாவம் = உண்டாகவே யில்லை, ஆதலின் = ஆகையால், என்றுமிகவு மில்லெனத் தெளிதரு போதமும் = சந்ததம் அத்தியந்தம் இன்றேயாம் என்றாராய்ந்தறிதல் ஞானப்பியாச மெனவும், வேறு காண்பனவற்று = அன்னியமான திருசியங்கள் ஒன்றையுமே கருதாமல், நிகழுஞானத்தால் = தனித்து விளங்குந் திருக் கேதா னென்னும் உணர்ச்சியால், காமமே முதற்பகை நீங்கிட = இராகத்துவேடாதி

இலயமாகியவழி வந்தெய்துஞ் சுகமும் = தானேவந்து ததும்பும் பிரமானந்த மேலீட்டுப் பயிற்சியும், என்றிவை = என்னப்பட்ட இவைபோன்ற பயிற்சிகளை யெல்லாம், சாதகமாகவே = உபகாரமாகவே, தொடர்வர் சாதகரானோர் = அப்யாசிகள் அனுசரிப்பார்கள்.
(39)

(ஸ்ரீ - விர.) இவ்வுலகமும் யானென்னு மித்திருசியமும், உண்மையாக சர்க்காதியிலேயே உண்டாகவில்லை யாகலின் அத்திருசியம் எப்போதுமே கிடையாது என்று அப்யாசஞ்செய்தல் பரமாத்ம விஷயத்தில் போதாப்யாசமென்று புகல்வர். மகத்துவம் சௌமியம் உண்டாய மதியுடையராய் எனக்கூறியது. பிரபஞ்ச மித்தியாத்துவத்தை அதிதிடமாக அறிந்துறைகின்ற படியினாலே நிட்பிரபஞ்சப் பிரஹ்மாநந்தத்தில் மூழ்கிய சித்தமுடைய உத்தமர்களை வியந்ததா மென்றுணர்க திருசிய மித்தியாத்துவத்தை நன்கறிந்து அதுமிகத் திடமாதற் பொருட்டு முயல் கின்றவர்கள் மத்தியமர்கள் ஆவர்கள். உலகமித்தி யாத்துவத்தை இனிதறிகற் பொருட்டுச் சாஸ்திரயுக்திகளாற் பிரயத்தினஞ் செய்பவர்கள் அதமர்கள் என விவேகித்துணர்க. அஃதெங்ஙனம் புஷ்டியையடையும் என்பதற்கு விடைதருவார் வேறு காண்பனவற்று என்றார். திருசியம் திருஷ்டாவின் கண்ணே முக்காலத்திலும் சம்பவிக்கவே யில்லை யென்னும் போதத்தானே இராகத்துவேட லோபாதிகளின் இளைப்பெய்தியவழி அப்யாசவலுவால் வெளிப்பட்டதாய் பிரஹ்மானந்த லக்ஷணரதி யாதுளதோ, அந்தப் பிரஹ்மாப்பியாசம் பரிபக்குவ பிரஹ்மஞான அப்பியாசம் எனப் பகரப்பெறு மென்க. இஃதுலகம் இது நான் என்னும் இத்திருசியம் சிருஷ்டி யனுதியிலேயே யுண்டாகவில்லை யாதலின் எப்பொழுதுமே கிடையவே கிடையாதென்று பயில்வர் பிரஹ்மசாதகர்; திருசியம் அத்தியந்தம் இல்லையென்னும் போதத்தால் இராகத்துவேடாதிக ளெல்லாம் குறைந்து வரவே மனத்தாலுண்டாய வித்தை வாசனைத் திடத்தன்மையாலாகும் ஆன்மரதியாதோ அதனைப்பிரஹ்மாப்பியாச மென்பர்.

(ச.) அக மிதங்கள் = யான் இச்சகமென்னும் திருசியமானது, இச்சிருட்டியின் மூன் = சர்க்காதியில் வருமபாவம் = ஆத்ம வியதிரிக்தமானவஸ்துவின்மை யினுனும், ஆத்மா அவிக்கிரியன் ஆதலால் அகாரண னுதலினுனும் உண்டாகவேயில்லை, ஆதலின் என்று மிகவு மில்லெனத் தெளிதரு போதமும் = அநவரதம் அஃதின்றே யின்றெனும் அதிசயமே பிரமாப்பியாசமாம். வேறுகாண்பன அற்று நிகழு ஞானத்தால் = திருசிய அசம்பவ போதத்தால், காமமே முதற்பகை நீங்கிட = இராகத்துவேடாதி யடங்கிய போது, வந்தெய்துஞ் சுகமும் = புருடப் பிரயத்தினத்தா லுதித்த பேராநந்தமே பிரமாப்பியாசமாம்.
(39

(ஸ்ரீ - வீர - அ - கை.) திருசிய அசம்பவ போதத்தினது பரிபக்குவ ஹேதுவைத் துதித்துக்கொண்டு அது புஷ்டியாயின் என்னே யுண்டா மென்னும் வினாவிற்கு விடை பகருகின்றார்:—திருசிய மித்தியாத்வ தாட்டியத்தாலாய ரேகாதியின் அழிவின்கண்ணே முன்னர் ஞானோபயோகி யாதலின் அக்கால தனப்பியாச இலக்கணமாம் அயல்வகையாயாகாதாமென்கின்றார்.—ஞேயமென

ஞேயமின்றிய ஞானமே ஞானமு நினைத்து மேற் பெறும்பேறு
மாயவந்நிலைப் பரிசய முத்தியென் றதிற்பரி சயம்பண்ணற்
றாயதோற்றர வென்றந்த விரவிலே சொன்னவ ரிருவோருங்
காயவாதனை யறிவறச் சமாதியைக் கலந்தசை வறநின்றார். (40)

(ப - ரை.) ஞேயமின்றிய ஞானமே ஞானமும் = திருசிய அசம்பவ போதமே மெய்யுணர்வும், நினைத்து மேற்பெறும் பேறும் = தியானித்துப் பின்னர் அடையத் தக்க பிரயோஜனமும், ஆம், ஆய அந்நிலைப் பரிசயமுத்தி = இயம்பி யவண்ணமாகிய அந்தநிலையில் நின்று அப்யசித்தலேபரம் நிர்வாணத்தைப் பயக்கும், என்று = என்பதாக எண்ணி, அதிற் பரிசயம் பண்ணல் = அதன்கண்ணே பயிற்சிசெய்தல், தூய தோற்றரவு = மகோதயமாம், ஸ்ரீ வசிட்டர், என்று = என இவ்வண்ணம், அந்த இரவிலே = அவ்விரவின் கண்ணே, சொன்ன வரிருவோரும் = சம்பாஷித்துக் கொண்ட லீலையும் ஸ்ரீ தேவியும், காயவாதனை யறிவற = முற்சரீரவாசனை யுணர்வு அற, சமாதியைக் கலந்து = நிருவிகற்பசமாதியை யடைந்து, அசைவற நின்றார் = நிச்சல அங்கமுடைய வராயினர்.

(ஸ்ரீ - வீர) திருசிய அசம்பவ போதத்தின் பயிற்சியினாலே யுண்டாம் பிரஹ்மஞானாப்பியாச பரிபாகத்தானே அபரோக்ஷஞான முண்டாயவழி மோக்ஷமாம். மகோதயமாவது = எப்பயிற்சியானே பிரஹ்மானந்தப் பிராப்திவடிவ பேரைசுவரியமுண்டாமோ அதுவாம்: திருசிய அசம்பவபோத மில்லாமல் துவேஷாதியின் குறைவு தவமென்று கூறப்பெறும் ஆகலின் ஞானமாகாதாம், அத்தவமும் வீணாகத் துவேஷாதிகளைத் தகையும் துயரத்தை விரித்துக் கொண்டே யிருக்கும், அதன் கண்ணே காரணத்தையும் அவ்வப்பியாச பலத்தையும் காட்டி யுபசங்கரிப்பார் ஞேயமெனத் தொடங்கினார். எக்காரணத்தால் முடிபான சாக்ஷாத்கார வடிவ ஞானமும் அதன் ஞேயமாகிய பிரஹ்மமும் திருசியத்தின் அசம்பவம் எதனால் அல்லது எதன் கண்ணே அவ்விதமானதே போதமென்று சொல்லப்படும், அதன்பயில்வினாலே நிர்வாண பதவியானது கிடைக்கும் என அப்பயிற்சி பெரும்பயனை யுடையதாம். யோகத்தினாலே தூலயாக்கையை விடுத்துக் கிரிக்கிராமத்தைப் பார்க்கவேண்டுமென விச்சித்துச் சமாதிகூடுதலை ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்:- இங்ஙனம் அவ்விரவின் கண்ணே அந்தப் புரமண்டபத்தில் திடமாகச் சகலசாளரவாயின் முதலிய வற்றின் தாழ்கள்போட்டு மிகுந்த சாமர்த்தியத்தோடுங் கூடியமனச்சேடியர் தூங்கியபின்னர் அவ்விருவரும் இனிதுற மொழிந்து பின் சமாதிநிலையை யடைந்து இரத்தின தம்பத்தமைந் திருக்கு மிரத்தினப் பதுமைகள் போலவும் சித்திரபித்தியிலமைத்த சித்திரப் பாவைகள் போலவும் காயங்க ளசைவற்றுக் கலங்காதிலங்கினர்.

(ச.) ஞேயமின்றிய ஞானமே = திருசியத்தின் அசம்பவ போதமே ஞானமும்அதனேது வாதலின் என்க, மேற்பெறும்பேறும் = அறிதற்கு யோக்கியமான வஸ்துவும் அதுவேயாம். ஆயநன்னிலைப் பரிசய முத்தியென்றதிற் பரிசயம் பண்ணல் தூயதோற்றரவு = அதனப்பி யாசத்தினாலேயே மோக்ஷமென்னு மேதுவினாற் பிரமவிஷயாப்பியாசமே மகோதய மென்னும் மோக்ஷவேது வென்பது பொருள். ஸ்ரீ வசிட்டர், என்றந்த இரவிலே = என்றநுக்கிரகித் தன்றிரவில், சொன்னவர் இருவோரும் = வாக்கீசுரியும் லீலையும், சமாதியைக் கலந்து = நிருவிகற்ப சமாதியை யடைந்ததனால், காயவாதனை யறிவற = அந்தப் பூர்வவாசனை விட்டவர்களாய், அசைவறநின்றார் = நிர்ச்சலாங்கிகளா யிருந்தார்கள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) காற்றற்ற சரற்காலத்திற் பர்வதத்தின் கண் ணிறங்கிய மேகங்கள் எங்ஙனந் தூய்தாயும் மங்களமாயும், சாந்தமாயும், சீதளமாயும், அசைவற்றதாயும் இருக்குமோ அங்ஙனமிருந்த அவ்விருவரும் மற்றென் செய்தார்கள் எனவினவு விடைதருகின்றார்:—அங்குலமென.

அங்குலங்கள் பத்தளவென வறிவினு லாகிய வடிவுற்ற
மங்கைதன் னொடுமுன் னுளஞானத்தால் வயங்கிய கலைமாதுந்
துங்கவிண் ணிடை யெழுந்தன ரளவறு தூரநீங்கிட லேகிப்
பொங்கு மூழியி னெடுங்கட லனையவான் புகுந்திவையிவை கண்டார்.

(ப - ரை.) அங்குலங்கள் பத்தளவென = ஒரு ஒட்டையளவாக, அறிவினுலாகிய = ஞானத்தினுலாகிய, வடிவுற்ற மங்கை தன்னொடும் = தேகாந்தரத்தை யடைந்த லீலை யோடும், முன்னுள ஞானத்தால் = இயற்கையாகவே யிருக்கின்ற வுணர்வுவடிவினுல், வயங்கிய = விளங்கிய, கலைமாதும் = ஞானதேவியும், துங்கவிண்ணிடை யெழுந்தனர் = பரிசுத்தமான ஆகாயத்தின்கண் ணெழுந்தனர், அளவறுதூர நீங்கிட ஏகி = அளத்தி னுந் தூரமாகவுள்ள இடங்களை யெல்லாங் கடந்து சென்று, பொங்குமூழியின் நெடுங் கடல் அனையவான் = பொங்காநின்ற பிரளயகாலத்துப் பெருங்கடல்போல விளங்கும் ஆகாயத்தினுள்ளே, புகுந்திவை இவைகண்டார் = பிரவேசித்து இன்னின்னவற்றைப் பார்த்தார்கள்.

(41)

(ஸ்ரீ - வீர.) சமாதிக்கு முன்னர் யானென்னும் வகையாகார ஞானம் நிருவிகற்ப சமாதியினுலே நீங்கப்பெற்று அங்குலங்கள் பத்தளவாயாயினள் லீலை. ஞானமாதாவோ அதேஞானப் பிரதானத் திருமேனியோடு மிலங்கினள். சிற்பிரஹ்மாகாச ரூபத்தோடு கூடிய அவ்விருவரும் சங்கற்பத்தானே ககனத்திற்செல்லும் ஆகிருதி யுடையவராயினர். காணப்பட்டதன் இயற்கையானே சென்றனரே யன்றிச் சிற்காண்போன் இயற்கையாற் சென்றிலர்; அறிவாந் திருட்டாவிற்குச் சர்வ வியாபாரங்களையும் பொடித்தலாந் தன்மை யுண்மையின். பரிச்சின்ன பிராஹ்மண தத்தமண்டப ஆகாசத்திற் பெரிய பிரபஞ்சம் பிறங்குகின்ற படியால் அது பொய்யேயாம் என்னும் நிச்சயப் பொருட்டுக் காட்டுவார் மிகவருணிக்கத் தொடங்கிக் கூறுவார் பொங்குமூழியெனத் தொடங்கினுர். வசந்தாதியி லிருக்கும் மனோகர கற்பலதைகள் பழந்தளிர்வாட்டக் காண்டலின் பூர்வ இரசத்தை விடு கின்றனவென்ன நிர்விகற்ப சமாதியினுனே வெளியுணர்வுகள் யாவற்றையும்விட்டொழிந் திருந்தனர். அத்தியந்த திருசிய சாந்தியால் நிருவிகற்பசமாதி நிலைபெறுவதில் தத்துவ சாக்ஷாத் காரத்தால் மூலத்தோடும் முக்காலத்திய திருசியபாதமே நிலைபெற முற்றிய லின் அத்தியந்தங் கிடையவே கிடையாது என்றவர்கள் அறிந்ததும் இத்திருசியப்பேயா னது இருவரிடத்தும் இல்லாமலே போய்விட்டது. கூறப்படும் விண்செல்வதில் அவர் தம் தேகவேற்றுமை யெவ்வாறிருந்த தெனின்? ஸ்ரீ ஞானதேவியானவள் முன்னிருந்த ஞானதேகத்தோடு மூலவினள், லீலாதேவியோ அயலான தியானஞான அனுரூபமாய தேகத்தோடு மூலவினள் விரைவில் அத்தூரவிண் செல்லுங் கற்பனையும் தனதுகிருக மண்டப ஆகாசப் பிரதேச மாத்திரத்திலேயே நடந்ததல்லாமல் வெளியிலன்றும், வீட் டிற்குள்ளேயே பிராதேச மாத்திரமேறி (தேகாந்த பாடமேல் இருதயத்தினின்றுங் கண்டதேச பரியந்தமான பிரதேசமாத்திர நாடி மார்க்கத்தையுற்று எனப் பொருளு ரைத்துக் கொள்க) வெளிப்பட்ட பூர்வசங்கற்ப சமஸ்கார வுணர்வினுனே சிதாகாச ரூபமா யிராநின்ற அவ்விருவரும் வீண்செலு மாகிருதிக ளுடையராயினுர். கிருபாதிருஷ் டியையுடைய அம்மையாரும் விநோதப்பிரிய லீலாதேவியும் விஷயவுணர்வின் இயற்கை யாய விடயத்தை யனுசரித்த வியவகார கற்பனையின் வசத்தால் அங்கிருந்து விண்ணில் மிகுதூரஞ் சென்றனர், அவ்வீட்டி லிருந்து கொண்டே விண்ணில் அதிதூரம்

செல்வோம்யாம் என்னும் சிற்பிரதானமானச கற்பனு விருத்தியினுனே கோடி யோஜனை விஸ்தீர்ணம் தூரத்தினும் தூரத்தினும் அதிதூரஞ் சென்றனர். உண்மையாகச் சிதாகாச தேகமுடையவரா யிருந்தபோதினும் முன்சங்கற்பித்த திருசிய அனுசந்தானசகித சித்தவடிவத் தன்மையை யடைந்திருக்குந் தம்மியற்கையினுனே ஆகாசதேகத்தோடு கூடியவரா யிருந்தபோதினும் ஒருவருக்கொருவர் ஆகாரத்தைக் கண்டுகொண்டு அன்பின் மேலீட்டால் நேயமுற்ற இருவரும் சென்றனர். தூரத்தினும் அதிதூரங்கிளம்பி மெதுவாக மேலிடஞ் செல்பவரும், கரத்தோடுகரம் இனிதுபற்றிச் செல்பவரும் ஆகிய தேவிமாரிருவரும் அநந்தவிசுவ விசித்திர விலாசங்களோடு கூடியிருக்கும் ஆகாய நெறியிற் கண்ட அதிசயமாவன: அவ்வாகாயமானது ஒருபெருங் கடலே போலும் மிக விசாலமுற்றுக் கம்பீரமாயிருந்தது.

(ச.) அறிவினுல் = ஞானமகிமையால் சமாதிக் கிரகத்தகத்திற்றுனே மானுடதேகத்தைவிட்டு, அங்குலங்கள் பத்தளவெனவாகிய வடிவுற்ற = பிராதேச (ஒட்டை) மாத்திர பரிமாணமான ஆதிவாகிக தேகத்தைப் பொருந்திய, மங்கைதன்னேடு முன்னுள ஞானதேகத்தால் வயங்கிய கலைமாதும் = ஞப்திதேவதையும், துங்கவிண்ணிடையெழுந்தனர் = சிதாகாசசொரூபிகளாய், வியோமகமனுகிருதியர்களாய், நிருவிகற்ப சமாதியினின் றம்பரத்து, அளவறுதூரம் நீங்கிடவேகி = ஞப்திக்கு ஞானமய தேகமாதலின் அதனுலேயே சஞ்சாரம் பொருந்து மென்பது பொருள். பொங்குமூழிய னெடுங் கடலனைய வான்புகுந்து = ஏகார்ணவம் போன்றிராநின்ற அம்பரத்தையடைந்து இவை இவைகண்டார், என்பதாதியாய் விண்ணின் வர்ணனம். இவ்விடமெனத் தோன்றும் திருசியப் பிரபஞ்சத்தினின்றும் விண்ணில் வெகுதூரம் சென்றனர். மேலே வியாபித்திருக்கப்பட்ட ஏகார்ணவம். (41)

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலும் ஆகாச நெறியையே பல காட்சிகளுடன் வருணிக்கின்றுர்:—மட்டென.

மட்டிலாததாய்த் தெளிந்துகோ மளமதாய் மந்தமா ருதத்தின்ப
முட்டிலாததாம் விசும்பிடை மனத்தினு முடுகுசித் தர்கடுன்றி
யட்டமெங்கணு மரக்கரும் பிசாசரு மளவின்றி நாய்காக
மொட்டகங்கரம் போன்முக யோகினி யொழுங்கு விண் ணுழல்வுற்று. ()

கனிகொணு டகத்திடாகி னித்திரள்களுங் காற்றினுற் றிரிகின்ற
வெளிறு கங்கையுஞ் சுவரிலாம மனையிடை மேவிவீணை யின்பாட
றெளியுநாரதர் தும்புரு கானமுஞ் சித்திரத்தினிற் கோட்டுங்
துளிகொள் கற்பத்தின் முகில்களு மாதர்தந் தொகுதிமுளதாகி. (43)

எல்லையின்றிய யோசனை தூரங்களி யார்க்குமெய் தரிதாகிக்
கல்லையொத் தறவிறு குறத்திரண்ட நீள்காரிரு ளுடைத்தாகி
யொல்லையோடு தேரிரவியுங் கனலுமே யொப்பதா மொளியுண்டாய்ச்
சொல்லுமித் திரளியா வையும் பற்பலவிடங் தொடர்வுற்று. (44)

கொதுகுனீ டிரளத்தி யின்கா யிடைக்கு முறுவதென வெங்குஞ்
சதுமுகன்ற ருமுயிரெலா மணைவுறுந் தன்மைமூன் றுலகுண்டா
மதுலவானகங் கடந்தனர்மீட்டு மோரவனியின் வரவெண்ணிப்
பதுமவுண்டத்தை நீக்கிவே றண்டத்திற் பருப்பத நகர்புக்கார். (45)

(ப • ரை.) மட்டிலாததாய் = அளவற்றுக் கம்பீரமாய், தெளிந்து = மலமற்றதாய், கோமளமதாய் = அதி மிருதுவாய், மந்தமாருதத் தின்பம் முட்டிலாததாய் = கோமள சமீர சம்பந்தமான சுகபோகந் தருவதாகிய, விசும்பிடை = விண்ணின் கண்ணே, மனத் தினுமுடுகு சித்தர்கடுன்றி = மனவேகத்தினும் வேக மிகுந்த மகாசித்தரானே வெற்றி கொள்ளப்பட்ட வாதத்தின் கமனுகமனம் பொருந்தி, அட்டமெங்கணும் = மேலிடங்கள் எவ்விடத்திலும் பூதரும், அரக்கரும் = இராக்ஷசரும், பிசாசரும் = அலகைகளும், அளவின்றி = அளவில்லாமல் திரிந்தார்கள், நாய்காகம், ஒட்டகம் கரம்போல் = சுவானம் வாயசம் ஒட்டை கழுதை யிவற்றைப்போல், முகயோகினி யொழுங்கு = வதனங்கள் படைத்த யோகினிக் கூட்டங்கள், விண்ணுழல்வுற்று = ஆகாயத்தி லுழன்றுத் திரிந் தன வீண்பாடமேல் வாளாதிரிந்தன எனவாம். (42)

களிகொள் நாடகத் திடாகினித் திரள்களும் = மகிழ்ச்சியுடன் நிர்த்தனஞ் செய்து கொண்டு திரியும் டாகினிக் கூட்டங்களும், காற்றினால் திரிகின்ற வெளிறுகங்கையும் = காலினாலே விளையாடிக் கொண்டிருக்கும் மிகவும்வெளுமைவாய்ந்த திரிபதகைநீரும், சுவ ரிலா மனையிடைமேவி = பித்தியற்ற கிருகத்தின்கண் ணடைவுற்று வீணையின் பாடல் தெளியும் நாரதர் தும்புருகானமும் = யாழின் சுரங்கள் விளக்கமாக்கும் நாரதர் தும் புருக்களின் கானவிசேடமும், சித்திரத்தினிற் கோட்டும் = சித்திரத்திற் றீட்டியதற்குச் சமானகார, துளிகொள் கற்பத்தின் முகில்களும் = ஜலம் நிறைந்து மூகமாயிருக்கும் கற்பாந்த மேகங்களும், மாதர்தந் தொகுதியும் = நிரந்தர உன்மத்த மாதருமண்டலங் களும், உளதாகி = ஆங்காங்கு அந்நெறியிலிருந்து விளங்கிக் கொண்டிருந்தன. (43)

எல்லையின்றிய யோசனை தூரங்கள் = அளவற்ற யோசனை தூரங்கள், யார்க்கும் எய்தரிதாகி = எப்பிராணிகளுமே கிடைப்பது துர்லபமாய், கல்லையொத்து = பாஷாண கர்ப்ப உபமமாய் அறவிறு குறத்திரண்ட = அத்தியந்த மிறுகித்திரண்டழிவற்ற, நீள் = விசாலமான, காரிருள் = கறுப்பான அந்தகாரம், உடைத்தாகி = உடையதாய், ஒல்லை யோடுதேர் = வேகமாகச் செல்லும் இரதத்தையுடைய, இரவியும் = பாஸ்கரனும், கன லுமே = அக்கினியுமே, ஒப்பதாய் = சமானமாய், ஒளியுண்டாய் = பிரகாசமானது பிரகடமாய், சொல்லுமித்திரள் யாவையும் = மேற்கூறிவந்த யாவையும் கூட்டம் கூட்ட மாய், பற்பலவிடந்தோறும் = ஒவ்வொரு இடங்கள்தோறும், தொடர்வுற்று = தொடர்ந் திலங்கிக் கொண்டிருந்தன அவ்வாகாய மார்க்கத்தில்: (44)

கொதுகினீள்திரள் = மசகத்தின் வித்தாரக் கூட்டம், அத்தியின் காயிடை = உதும்பரவுதரத்தில், குமுறுவதென = சப்திப்பதேபோல, எங்கும் சதுமுகன்றரு = நான்முகனாற் சிருஷ்டிக்கப்பட்டு எல்லாவிடத்திலு முள்ள, உயிரெலாம் = பிராணிகள் யாவும், அணைவுறுந் தன்மை = வாழ்ந்து கொண்டிருக்குந் தன்மையவாக, மூன்றுல குண்டாம் = திரிவித வுலகமுளவாம், அதுலவானகங் கடந்தனர் = உவமையற்ற அவ் வாறுய வானகத்தை யிருவருங்கடந்து, மீட்டுமோ ரவனியில் வரவெண்ணி — மீண்டு மொருபூமியையடைய இச்சித்து, பதும அண்டத்தை நீக்கி வேறண்டத்தில் = பத்மாண் டத்தை விட்டு மறையவனிருந்த அண்டத்திலுள்ள, பருப்பத நகர்புக்கார் = அந்தக் கிரிக்கிராமத்தை யடைவுற்றனர். (45)

(ஸ்ரீ-வீர.) கோமளம் = கடினமின்மை, மந்தமாருதம் எவ்விடத்திலும் நிதழ்தலால் ஆனந்தானுபவத்தைத் தருவதாம். மனோவேகத்தினாலே மகாசித்தரானே வாயுவின் போக்குவரத்தும் வெற்றி கொள்ளப் பட்டதாம், வெற்றிகொள்வதில் மனோவேகத்

தன்மை யேதுவாம், ஆகாயத்தின் கண்ணே வாயுவோடுகூட வரப்போக இச்சித்து முயலுஞ் சித்தர் மனோவேகத் தன்மையானே பூர்வமே செல்லுகின்றனர் வருகின்றனர் என்பதாம். கூஷ்மாண்ட மண்டலங்கள் = பூதவிசேடங்கள், டாகினிகள் = கிரகவிசேடங்கள், இவைகள் அடுக்கடுக்காய் அலையலையாய்த் திரிந்தாடிக் கொண்டிருந்தன ஒரு பிரயோஜன மில்லாமலே நூறுயோஜனை சென்று மீண்டு கூடித்திரியும். மேகமார்க்க சௌரமார்க்கத்திடையே வாதமார்க்கம் செல்கின்றது, ஆண்டுள்ள காற்றுகளின் அங்கிசங்களின் மேற்பாகங்களில் உள்ளும் புறனும் வியாபித்துக் கங்கைசெல்லும்; அல்லது ஸ்கந்தமென்னும் மூலபதத்திற்குக் கற்பதரு வசனப்படி பிரபேதங்கள் எனவுங் கொள்ளலாம், அல்லது க்ஷீரசுவாமி கூறியபடி ஷை பதத்திற்குச் சமுதாயம் எனவுங்கொள்ளலாம், கொள்ளவே வாயுப்பிர பேதங்களில் வாதசமுதாயத்தில் உள்ளபள்ளங்களில் உள்ளும் வெளியும் பூரித்துக் கங்கை பிரவகிக்கும் என்னலாம் கீழ்முகமுற்றுப் பிரவகிக்கும் சுரநதி நீர்கள் என்பதாம், சித்திர அர்ப்பித துல்லிய ஆகிருதிகளை யுடையனவாய்க் கர்ஜியாதன வாய்ப் பிரளயமேகங்கள் ஒருபா லிருந்தென, மாதர் பிராஹ்மியாதியர். மிக நெருக்கமாக உன்மத்த மாதாக்களின் மண்டலம் மாலையின் ஆகாரமாக ஒருபாலிருந்தது சிலபால் இலக்ஷயோஜனை விஸ்தீர்ணம் ஒரு பிராணிகளும் காணப்படவேயில்லை. யார்க்குமென்பது யாருமெனவிருப்பின் பொருள்கோடல் எளிதாமென வுணர்க. யாரும் = எப்பிராணியும். அநேக லக்ஷயோஜனைகளில் எவ்விடத்திலுமே பிராணிரகிதமாகச் சிலபாலிருந்தது. காலநெறி முற்றினும் ஒற்றுமை யென்னுஞ் சூத்திரத்தானே மூலயோஜன லக்ஷணியிருமையாம். கல்லின் கருப்பம்நெடுக்குற்ற தொப்பக்கடிய இருளாம். கெடாத பெரிதினும் பெரிதாய பேரொளியாம், அதனானே அருக்க அனல் உவமையாம். அத்திக்கனிக்குள் ளிருக்கும் மசகமுறைப்படி மூவுலகத்துள்ளும் பிராணி சமுதாயங்கள் சப்தித்துச் சுழன்றுதிரியும். பிராஹ்மணாஸ்பதம் வர வர்ணினிகளாகிய உத்தமோத்தம தேவிமார்கள் புகுந்தார்கள். அவ்வாகாய நெறியானது கம்பீரமாய் அதி நிருமலமாய் அதிகோமள மனோகரமாய் மந்தமாருதக் கலப்பாற் சுகபோகந தருவதா யிருந்தது; ஆங்கு மனோவேகத்தோடுற்ற மகாசித்தரானே வாயுசஞ்சார வேகமானது வெற்றிகொள்ளப்பட்டதா யிருந்தது, விமானங்களிலும் வீட்டுகளிலும் உள்ள தேவஸ்திரீகளின் வாத்தியங்களின் கும்கும் என்னும் தொனி நிறைந்திருந்தது, அநேகம்பூத அரக்கர் கூட்டங்களும் பேய்க் கூட்டங்களும் நிறைந்திருந்தன; வாயுவின் போக்குவரவு வேகத்தாற் செல்லும் விமானக் கூட்டங்கள் கோடானுகோடி விளங்கின. காகங் கூகை முதலியவைகூடிப் பறந்த தோற்றமும் டாகினித் திரள்கள் கூட்டங் கூட்டமா யாடிக்கொண்டிருந்த தோற்றமும் கடலிலெழும் அலைபோலிருந்தது. நாய்காகம் ஒட்டை கழுதை முகங்களோடு கூடிய அலையும் யோகினி கணங்கட்கு அணிமாதி சித்திக ளிருப்பதால் தாங்களிருக்கு மிடத்திலேயே தங்களுக்கு வேண்டியவை கிடைத்தபோதினும் வீணாகவே நூறுயோசனைக் கணக்காக வெகுதூரஞ் சென்று மீண்டுகொண்டிருந்தன. எப்போதுஞ் சென்று கொண்டிருக்கும் நக்ஷத்திரங்கட்கு வாசஸ்தானமா யிராநின்ற சோதிச் சக்கிரத்தில் இரவியாதிகளின் கதியாற் குறிப்பிக்கப்பட்ட சுக்கில கிருஷ்ணபக்ஷாதி காலவிபாகம் நடந்து கொண்டிருந்தது; வாதஸ்கந்தபேதரூப அச்சக்கிரத்தின் கண்ணே கற்பிக்கப்பட்ட தாழ்ந்ததேயத்துள் கங்கையின் நீர்ப்பிரவாகம் விளையாடிக் கொண்டிருந்தது. ஆச்சரியங்காண்டலால் தெய்வக் குழந்தைகள் பயந்து சென்றுகொண் டிருந்தன. வஜ்ஜிராதி தரித்துத் தேவதைகள் உலாவியிருந்தனர், ஒருபாற் சுவரில்லா மாளிகையில் தும்புரு நாரதர் பாடிக்கொண் டிருந்தார்கள். மேகமார்க்கப் பிரதேசத்தில் மகாமேகங்களாகிய புஷ்கராவர்த்தகாதிகளின் பெரும்பிரளய விருஷ்டி யாரம்பத்தால் ஒருபால் ஆகுலமிகுத்

திருந்தது; மற்றொருபால், சித்திரத்தி லெழுதியதுபோல வியாபாரமற்றதாய்ச் சப்த மற்றதாய்க் கற்பாந்த மேகங்கள் கூடியிருந்தன. மேலும் பலபால் பலமேகங்களிருந்தன. சிலபால் நிரந்தரங் குதித்துக் கூத்தாடும் மாத்ருகணங்கள் சூழ்ந்திருந்தார்கள், நித்தியம் நவநவமான மதங்களால் மதப்பட்ட யோகீசுரீ கணங்கள் நிறைந்திருந்தார்கள். லோகாலோக பர்வதத்திற் கப்பால் இலக்ஷம் யோஜனைவரையும் அடையப்படா அசலமாயிருந்தது, சிலபாலோ கற்கர்ப்பம் நிகர்ப்ப அழிவிலாத் தமம் நிறைந்திருந்தது, சிலபாற் சூரிய அக்கினிகட் கொப்பாக அழிவிலாப் பேரொளியா யிருந்தது; சந்திராதி வீடுகளில் பனிக் கூட்டமே போலும் கடுமையான குளிராக இருந்தது. பூகோளத்தைச் சுற்றிலுஞ் சுற்றும் ஆதித்தியன் சுழலப் பூமியின் சாயையும் சுற்றிலும் சுழலும், பாதாளஞ் சென்ற சூரியன்மேலே கிளம்பும், அதுவே கறுப்பாக இருத்தலின் காகமாம், அதனது ஆக்ரமணத்தாற் சிற்சிலபான் மண்டலங்களிற் பீடிக்கப்பட்டது சந்திரமண்டலமாம், அவ்விது சந்திரக்கிராசத்தில் ஊகமாம் சூரியக் கிராசத்திலோ இல்லூகமாகாதாம், மற்றோசந்திரனது தடைப்பிற் பாகத்தில் அருக்கன் செல்லில் சந்திரமண்டலத்திற் சனித்த எப்பூமிச் சாயைப் பிரதிபிம்பமோ அதனால் கறுப்புக் கதுவலின் காகம் போன்றுற்ற சந்திரனது ஆக்கிரமணத்தாற் சிற்சிலபான் மண்டலங்களிற் பீடிக்கப்பட்டது அருக்கமண்டலமாம்; என்பது சோதிடப் பிரக்கிரியையாம். மேலேகூறிய பிரகாரம் ஆகாயத்தில் அநேகவிசித்திர வர்ணனையால் விண்ணோர்தம் வாழ்வில் ஆசை நண்ணலாகாது அதனைத் துச்சமாக எண்ண வேண்டும் என்பார் அத்திக்கனி திருஷ்டாந்தங் காட்டினார். அத்திப்பழத் தகட்டில் விளையாடும் கொதுகின் முறைபோலும் மூவுலகத்துட்பட் டுலவும் பிராணிக்கூட்டங்களென வுணர்க, இவ்வியாவற்றையும் அவ்விருதாய் மார்களும் தாண்டி ஆகாயமேற் சென்றபின் மீண்டும் மகிதலத்தை யடையும்பொருட்டு முயன்றார்கள். பின்னவ்விரண்டு சுந்தர மூர்த்திகளும் பத்மபூபாலப் பிரபஞ்ச ஆதார பிரஹ்மாண்ட மண்டலத்தினின்றும் அன்னிய பிரஹ்மாண்ட மண்டலத்தை மேற்கூறிய பிரகாரம் அடைந்து அம்மறையவனது இடம் நோக்கிச் சென்றனர்.

(ச.) அம்பரவர்ணனை: மட்டிலாததாய் = கெம்பீரமாய், தெளிந்து = நிருமலமாய், கோமளமதாய் = மிருதுவாய், மந்தமாருதத்தின்பம் முட்டிலாததாம் = கோமளவாயுவின் சம்பந்தமான சுகபோகத்தைத் தருவதாகிய, விசும்பிடை = வாயுசஞ்சார மின்றிய ஆகாயத்தின் மத்தியில் ஓரிடத்தில், மனத்தினும் முடுகுசித்தர்களின்றி = மனோவேகமுடைய மகாசித்தர்களாற செயிக்கப்பட்ட வாயுக்களின் போக்குவரத்து, நிறைந்து அரக்கரும்பிசாசரும் = குரூரதேவயோனிபேதங்கள், நாய் காகம் ஒட்டகம், கரம்போல் = முகயோகினி யொழுங்கு = ஆனனங்களை யுடைய நிர்த்தனஞ் செய்கின்ற யோகினி சங்கங்கள், விண்ணுழல் வுற்று வீணுழல்வுற்று = விண்ணில் வீணாகச் சுழலுதலையடைந்து. களிகொள் நாடகத் திடாகினித் திரள்களும், ஓரிடத்துத் தாங்கிதம்போல் நிர்த்தனஞ் செய்கின்ற டாகினித் திரள்களும், காற்றினாற் றிரிகின்ற வெளிறு கங்கையும் = வாயு மண்டலங்களா னிறையப்பட்ட உள்வெளியு முடையதும் அத்தன்மையான திரிபதகா சல இருப்பிடமும், சுவரிலாமனை யிடைமேவி வீணையின்பாடல் தெளியும் நாரத தும்புரு கானமும் = ஓரிடத்து நிர்ப்பித்தி சதனமு (வீடும்) நாரத தும்புரு கீர்த்தனமும். எல்லையின்றிய யோசனை தூரங்களியார்க்கு மெய்தரிதாகி = பிராணி சூனிய மென்பது பொருள், கல்லையொத் தறவிறுகுறத் திரண்ட = அவிநாசியான நீள்காரிருள் உடைத்தாகி ஓரிடத்துச் சூரியசஞ்சார மின்மையின், ஒப்பதா மொளியுண்டாய் நிரந்தரஞ்சொலிக்குந் தேசசை யுடைமையாற் சூரியாக்கினி சமானம். கொதுகு = மூன்றுலகுண்டாம், ஸ்ரீ

வசிட்டர்: அதுலவானகங் கடந்தனர் = இத்தன்மையான கணித்தற்கரிய வியோமத்தி னின்னும் ஏகினர்களாய், பதுமவண்டம் = பிரஹ்மாண்ட மண்டலம், பிராஹ்மணசிரய மான பருப்பதநகர் புக்கார். சித்திரத்திலமைத்த சமாகாரங்களாய்ச் சப்தமற்றனவாய்க் கற்பாந்த மேகங்கள் என்னும் புஷ்கலா வர்த்தாதிகள் ஒருபா லிருந்தனவாம். (45)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அவ்வந்தணன் மனைபுகுந்து ஆங்கு லீலை செய்ததைக் கூறு கின்றார்:—வினையென.

வினையர் சுற்றமுந் தனையருந் துக்கமாய் வெதும்பு
மனையவே தியன்மனை புகுந்தார் கண்ணி லணுகார்
ரினையபோ தின்மெய்ச் சங்கற்ப மெய்திய லீலை
மனையுளோ ரெமைக் காண்கெனச் சங்கற்பம் வகுத்தாள். (46)

(ப - ரை.) வினையர் சுற்றமும் தனையரும் = வேலைக்காரிகளும் உறவினரும் மைந் தரும், துக்கமாய் வெம்பும் = பெருந்துயரை யடைந்து தபிக்கும், அனையவேதியன் மனைபுகுந்தார் = அத்தகைய அந்தணனுடைய கிருகத்திற் புகுந்தனர், கண்ணில் அணு கார் = கண்ணுக்குத் தெரியாமல் நின்றனர், இனையபோதில் = இச்சமயத்தில், மெய்ச் சங்கற்ப மெய்தியலீலை = சத்திய சங்கற்பத்தை யடைந்த லீலாதேவியானவள், மனை யுளோ ரெமைகாண்க = இருக்கிருகத்தி லிருப்போர் எங்களிருவரையுந் தரிசிக்குக, எனச்சங்கற்பம் வகுத்தாள் = என்பதாகச் சிந்தித்தனள். (46)

(ஸ்ரீ - வீர.) வேலைக்காரிகள் சிந்தையால் இஷ்டார்த்த வர்ஜிதர்களாக இருந்தார் கள். கண்ணீரால் நனைக்கப்பட்ட முகங்களை யுடையவர்களாகப் பெண்மணிக ளிருந் தார்கள். இடியாற்றக்கமான தருவேபோலப் பூர்வவிந்யாசங்களை விட்டிருந்தனர். அந்த லீலையானவள் தெய்வம்போலச் சத்திய சங்கற்பமும், சத்தியகாமமும் அடைந்திருந்த னள். சித்தயோகினிகளாகிய அவர்கள் மற்றொருவருக்கும் தெரியாவண்ணம், நின்று அம்மறையவனது இடமாகிய மண்டபமாம் லீலையினது கிருகத்தைக் கண்டார்கள். அக்கால் அம்மண்டபமானது சிந்தாகுலத்தை யுடைய அடிமைகளாற் சூழப்பட்டும், கண் ணீர் ததும்பித் துயருற்றுவாடும் மங்கையர்தம் முகங்களை யுடைத்தாகியும், கண்ணீர் துளி முதலியவற்றானே மலினமுற்றும், பூஷணங்கள் திலகங்கள் இன்றியும் இருத்த லின் அருவுற்றது போன்ற ஜனங்களுடைய முகங்களை யுடைத்தாகியும், சீரணமான இலைத்தாமரை யொத்த வதனங்களை யுடைத்தாகியு மிருந்தது அழிந்த உற்சவ புரத்தை யொத்தும், ஸ்ரீ அகத்தியர் பானஞ்செய்த கடலையொத்தும், வெய்யிற் காலத்தால் வெதுப்பப்பட்ட உத்யானவனத்தை யொத்துப், இடியால் நகிக்கப்பட்ட விருக்ஷத்தை யொத்தும், பனியால் வெம்பிய பங்கயமொத்தும், தைலங்குறைந்த தசை விளக்கொத் தும், பார்வையதற்ற பகுதொ டொத்தும் இருந்தது: ஸ்ரீ வசிஷ்டபகவான் கூறல்: நீண்ட நிர்மலஞானப் பயிற்சியினனே சத்திய சங்கற்பத்தையும் சத்திய காமத்தையும் தேவி யைப்போ லடைவுற்றிருந்த அச்சுந்தரியாகிய லீலையானவள் இங்குள்ளவர்களாகிய பந் துக்கள் என்னையும் சாமானிய மங்கையுருவந் தரித்திருக்கும் ஸ்ரீ சரசுவதிதேவியையும் கண்ணுறுக வெனச் சிந்தை செய்தனள்,

(சு.) இனையபோதில், அந்த லீலை சிராப்பியாசத்தினால் தேவர்போல் நிர்மலஞான முடையளாதலின் சத்திய சங்கற்பமும் சத்தியகாமமும் பொருந்தினவளாய், என்னையும் தேவியையும் லலனை (ஸ்திரீ) மாத்திரரூபமாக. எனது பாந்தவர் (பந்துக்கள்] பார்க்கக் கடவராக எனச் சிந்தித்தாள் என்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) தேவிமார்களைக் கண்டு அங்குள்ளார் வணங்கலும் அவர் துயரந்தீர்த்தலும் கூறல்.—பூமகளென.

பூமகளும் மலைமகளும் போல்வாரை வனதெய்வம் போலு மென்றே
தாமவர்கண் டருச்சித்தார் தலைமகன்பார்த் தெமதன்னை தாதைமாய
யாமணுகுந் துயரொழிப்பீ ருயர்ந்தோரை யெதிர்ந்தோருக் கெய்தாதுண்டோ
மாமதியி னீரென்னத் தலைதடவித் துயரொழித்தாள் வயங்கு லீலை.

(ப - ரை.) பூமகளும் மலைமகளும் போல்வாரை = லக்ஷ்மியையும் கௌரியையும் போன்ற அத்தேவிமாரை, வனதெய்வம் போலுமென்றே = தாம் வனதேவதைகள் போன்மென்றே தாம் ஐயமிலாது, அவர் = அக்கிருகத்துற்றோர், கண்டு = தரிசித்து, அருச்சித்தார் = பூசனை செய்தார், தலைமகன் பார்த்து = ஜேஷ்டசருமன் நோக்கி. எமதென்னை தாதைமாய = எங்களுடைய அன்னையும் பிதாவும் பரமபதமடைய, யாமணுகுந்த துயரொழிப்பீர் = யாங்கள் அடைந்த துக்கத்தைக் கெடுப்பீர், உயர்ந்தோரை யெதிர்ந்தோருக்கு = மேன்மை மிக்கவரைத் தரிசித்தவர்க்கு, எய்தாது = கிடையாத பொருள், உண்டோ= எங்கேனும் உளதோ, மாமதியினீரென்ன = மிகுந்த மேதைவாய்ந்த பெரியோர்களே யென்றுகூற, தலைதடவி = சிரத்திற் கரம்வைத்து அன்பொடுந்தழுவி, துயரொழித்தாள் = துன்பத்தைத் துடைத்தாள், வயங்குலீலை = அம்பிகையின் பரிபூர்ண கிருபையை யடைந்து விளங்கும் லீலாதேவி, [47]

(ஸ்ரீ - வீர.) எங்கள் தாய்தந்தையர் எல்லா ஜனங்களையும் அதிதிகளாகப் பூசிப்பர்; குலத்தை வளர்ப்பவர், மறையவர் மரியாதையில் வாழ்பவர். மறையவர்க் கெல்லாவிதத்திலும் ஆதாரபூத மானவர். புணர்ந்தபாவ மெலாம் பரிபூரண முணர்ந்த ஞானி விழிபடவோடுமே யென்பது பிரசித்தமன்றோ சிரங்கரம் வைத்த அதனானே துக்கமேயாய துர்ப்பாக்கிய சம்பந்த சங்கடமியாவுமே கணத்திற் றொலைந்ததா மென்க. கிருகத்திலிருந்த அவர்கள் இருதேவிமார்களையும் கண்குளிரக் கண்டார்கள்; அவ்விருவரும் அலைமகளும் மலைமகளும் ஒருங்கு வந்ததுபோலும் அவ்வீடு முழுவதையும் ஒளிர்வித்துக் கொண்டிருந்தார்கள். இருவரையுந் தரிசித்து ஹே. வனதேவதைகளாகிய தாய்மார்களே ! உங்கட்கு நமஸ்காரம் நமஸ்காரம் என்று அங்கிருந்த ஜனங்களோடும் புஷ்பாஞ்சலியை மூத்தகுமாரன் செய்தனன்; இல்லத்தில் எழுந்தருளிய அவர்களது பாதபதுமங்களில் அந்தப் புஷ்பாஞ்சலியானது, ஹிமநீர்க்கணமழை பதுமவல்லியிற்போலத் தூவியது. மூத்தசருமர் முதலியோர் கூறுவதாவது: அடியேங்களுடைய துக்கங்கள், எல்லாம் நீங்கும் பொருட்டு எழுந்தருளிய வனதேவிமார்களே ! ஜயமுறுவீர்களாக. நல்லோர்களுடைய நடைகளெல்லாம் அயலார்துயரைக் களைவதேயன்றோ ! இங்ஙன் பூசித்தபின் நீங்கள் பெருந் துயரடைந்திருத்தற்கு யாது காரணம் ? எனவினவ மூத்தகுமாராதியர் மொழிவராயினர் : ஹே தாய்மார்களே ! சர்வ அதிதிகளையும் பூஜிப்பவர்களும் சந்ததியைச் செய்தவர்களும் மறையவர்தம் மரியாதையைக் காப்பாற்றத் தம்பம்போலும் ஆதார பூதமானவர்களும் மிகுந்த நேயமுற்றவர்களும் ஆகிய பிராஹ்மண தம்பதிகள் ஈண்டிருந்து கொண்டிருந்தார்கள், எந்தாய் தந்தையராகிய அவ்விருவரும் இன்று (நீள்கால மில்லையென்பதைக் குறிப்பிக்கும் பொருட்டு) புத்திர பசு பந்துக்களோடு கூடிய இவ்வில்லத்தை விட்டுச் சுவர்க்கத்தை யடைந்தார்கள். அதனான் மூவுலகமும் சூனியம்போல எங்கட் கிருக்கின்றது; "பூர்ணனுலகைப் பூர்ணமாய்க் காண்பன், காமுகனுலகைக் காமுகங் காண்பன், ஆர்த்தியுலகை யார்த்திமயமே,

லூதன் லுப்தமாய்த் தன்மனம்போன்றே" என்னும் நியாயத்தை யனுசரித்துக் கூறிய தாம். ஆகையினாலே நீங்கள் எங்களுடைய சோகங்களை யெல்லாம் நாசஞ் செய்வீர்க ளாக; பெரியோர்களுடைய தரிசனமானது ஒருகாலத்திலும் வீணாகமாட்டாதல்லவா எனக் கூறிய அந்த மூத்த மைந்தனை நோக்கி லீலாதேவியானவள் நீர் நீங்கும்போது தாமரைத் தடாகத்தில் இலையினால் மிக வணங்கிய தன்சந்தானமூலக் கிரந்தியைப்போல அழகிய கரத்தால் தலையைத் தடவித் துயரொழித்தாள். அந்த லீலாதேவி யவ்வாறு தடவியதால் அம் மைந்தனுடைய துக்க துர்ப்பாக்கிய சங்கடங்களெல்லாம் பெருமழை யின் சம்பந்தத்தால் வெய்யில் வெப்பம் பர்வதத்தைவிட்டு நீங்குவதுபோலும் நீங்கின; அத்திருவை யொத்த தேவிமார்களின் கிருபா திருஷ்டியினால் அவ்வீட்டிலிருந்த ஜனங் கள் யாவரும் அமிர்தபானஞ் செய்தவர்கள்போல எல்லாத் துயரங்களினின்றும் விடுபட் டனர்.

(ச.) அவரருச்சித்தார்=சேட்ட சர்மனோடு கிரகசனங்கள் வனதேவதாரூபமாகத் தரிசித்தவராதலின் வனதேவிகளுக்கு நமஸ்காரமென்று குசுமாஞ்சலி செய்தார், தலை மகன்=பின்புசேட்ட சருமன் என்னும் நாமம் பொருந்திய புத்திரன், உயர்ந்தோரை யெதிர்ந்தோருக் கெய்தாதுண்டோ=மகான்களின் தரிசனம் என்பது ஒருபோதும் நிஷ் பலமாகாதென்பதாம். மாமதியினீரென்ன=என்று சொன்ன அந்தப் புத்திரனது, தலை தடவி; லீலை கார்காலமேகம் உஷ்ணகாலதாபத்தைத் தவிர்ப்பதுபோல, துயரொழித் தாள் வயங்குலீலை, துயரொழிந்தது புத்திரன் மாத்திரமன்று, அவ்விடத்துள்ள அன்னிய சனமும் அவள் கிருபாதிருஷ்டி மகிமையால் துடைத்தற் கரிய துக்கத்தைத் துடைத் தார்கள் என்பது பொருள்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) அங்கிருந்து மறைந்த பின்னர் தேவியை ஐயம்நீக்கு மாறு பிரார்த்தித்தல் லீலை:—இரு என.

**இருவருமவ் வயின் மரைந்தா ருலகத்தின் சற்பாவ மிவ்வாறுருகுங்**
**கருதியது முடித்தனமேற் கருத்தென்கொ லென்றுகலைக் கன்னிகேட்ப**
**மருவுசமா தியிற்கண்ட மன்னவையோ ரெனைக்காணு வகையுமிந்தத்**
**திருமனையோர் கண்டமையு மென்கொலெனச் செப்பென்று டெய்வமன்னாள்.**

(ப - ரை.) இருவரும் = இரண்டு தேவிமார்களும், அவ்வயின், மறைந்தார் = அவ் விடத்திலேயே, உருக்கரந்தனர், உலகத்தின் சற்பாவம் இவ்வாறுருகும் = ஜகத்தின் பிர ஹ்மசத்தை வடிவமாயிருக்குந் தன்மை கூறியவண்ணமேயாகும், கருதியது முடித்தனம் =வாஞ்சித்ததைப் பூர்த்திசெய்தேம், மேற்கருத்தென் கொலென்று=இன்னும் வேறே தாவது கேட்கவேண்டியதாக எண்ணம் உண்டுகொலோ என்பதாக. கலைக்கன்னிகேட்ப ஸ்ரீ சரசுவதிதேவி வினவ, மருவுசமாதியில் = பொருந்தா நின்ற சமாதியின் கண் கண்ட = தரிசித்த, மன்னவையோர் = அரசனது சபையிலுள்ளவர், எனைக் காணு வகையும் = என்னைப் பாராத பிரகாரத்தையும், இந்தத் திருமனையோர் = இத்தவமறை யந்தணன்றன் அழகுபொருந்திய இல்லத்திலுள்ளவர், கண்டமையும் = கண்டதன்மை யையும், என்கொல் என = என்னகாரண மென்று, செப்பென்றாள் தெய்வமன்னாள் = ஸ்ரீதேவியின் கருணையினால் தெய்வத்தன்மையை யடைந்துள்ள லீலாதேவியானவள் சொல்ல வேண்டுமென்று பிரார்த்தித்துக் கொண்டாள்.

(ஸ்ரீ - வீர.) பிரபஞ்ச மித்தியாத் தன்மையின்கண் திருஷ்டாந்தமிருதிகள் கிடைத் திருத்தலின் உலகம் பிரமசத்தே, பிரஹ்மரூப பூதசத்தை இத்தகைய சத்திய சகத்துரு

வம் அல்லது நிட்பிரபஞ்சம், அந்தக் கிரித்தடக்கிராமத்தில் அம்மறையவனது கிருகத்தின் மண்டப ஆகாசத்தில் அவணின்று கொண்டிருந்த ஜேஷ்டசருமாதி களின்முன்பே அவ் விருதேவிமாரும் மறைந்து விட்டனர், மறைந்தபின்னர் ஸ்ரீ சரசுவதிதேவி லீலையை நோக்கி ஹே குமரீ! நீ தாய், கண்டபொருள்களின் காணுப்பொருள்களின் உணர்வுகளாகிய அறியத்தக்கவை யாவுமேயறியலாயது, இத்தகையது இந்தப் பிரஹ்மசத்தை யென்று தெரிந்து கொண்டனை யினியுனக்கு வேறுயாது வினவவேண்டுமோ அதனைக் கூறுதி யென்ன அதற்குலீலை கூறுவதாவது ஹே இராஜராஜேசுரி! இறந்து எனது நாயகஜீவன் யாண்டு அரசுபுரிகின்றதோ ஆண்டுயான் அவர்களாற் காணப்படாத காரணமென்னே? ஈண்டுமைந்தனாற் காணப்பட்ட காரணமென்னே? அருளல் வேண்டுமென்று வேண்டிக் கொண்டாள். இச்சம்பாஷனை தேகத்தோடா வெனின்? இல்லையாம், சங்கற்ப சரீரத்த ஆகாயவடிவினளை நோக்கி ஞானவிண் வடிவத்தேவி கூறியதாம் என்க; எனினும் அன்னியோன்னிய சங்கற்பத்தாற் றேன்றியவர்கட்குச் சம்வாதங்கூடல் யாங்ஙனமெனின்? உவைத அதிருந்தர்கட்கே போலும் திருவருளால் சமானமாகவே பரஸ்பரம் பயன்பற்றிய சங்கற்பமாதல் கனவாதல் உண்டாயின் பரஸ்பரம் சம்பாஷணம் பயனுறுதலே போலும் சம்வாதமா மென்றுணர்க.

(ச.) இருவரும் = சித்தகன்னிகள் இருவரும், அவ்வயின் மறைந்தார் = அக்கிரிக் கிராம மண்டபமத்தியிற்றுனே அந்தர்த்தான மாயினுர்கள், தேவிலீலையை நோக்கி மற்றைய மோகநிவிர்த்தி நிமித்தம் மீட்டுங்கூறல்: பிரமத்தின் சற்பாவம் இவ்வாறுரும் = பிரஹ்மசத்தியித் தன்மையதாம், கருதியது முடித்தனம் = அறியவேண்டிய வனைத்தும் அறியப்பட்டது (அறிந்தாய்) பார்க்கவேண்டிய வனைத்தும் திருஷ்டாந்தமாகப் பார்க்கப்பட்டது (பார்த்தாய்); மேற்கருத்தென்கொல் சொல்லென்று கலைக்கன்னி கேட்ப, லீலை பிரசினஞ் செய்தல்: மருவுசமாதியிற் கண்ட = பதும நாமத்துடனின்று மிருதமான பர்த்தாவின் சீவன் இராச்சிய பரிபாலனஞ் செய்யும் அவ்விடத்துள்ள அவர்களால் நான் பார்க்கப்படாத தென்ன இவ்விடத்திற் சுதனாற் பார்க்கப்பட்ட தென்ன வென்பது பிரசினார்த்தமாம். பிரஹ்ம சக்திபாடபேதம் பிரஹ்ம சத்தை.

(ஸ்ரீ - வீர - அ - கை) காணுவகைக்கும் கண்டமைக்கும் காரணம் அகங்கார ஆக்கமும் அகங்கார நீக்கமுமே யாமெனச் சமாதித்தல்:—சாதகமென.

சாதகத்தா லன்றியிரண் டொன்றுகா தகம்பாவந் தனைநீங் காமற்
போதமடைந் தனையதனுற் சத்தியமாஞ் சங்கற்பம் பொருந்திற்றில்லை
யாதலினு லவர்காணு ரகம்பாவ மற்றவறி வறித லாலே
பேதமற நீவிதிக்க விவர்கண்டா ரெனவாணி பேசலோடும். (49)

(ப - ரை.) சாதகத்தாலன்றி = அப்பியாச மில்லாமல், இரண்டொன்றுகாது = நினதுதுவைத நிச்சயம் நிர்ச்சேடமாய்ச் யஸ்தமாகவில்லை, அகம்பாவந்தனை நீங்காமல் = போதமடைந்தனை யதனுல் = லீலையா னென்பது பயிற்சி யின்மையினுனே நினக்கஸ்தமாகவில்லை யாதலின், சத்தியமாம் சங்கற்பம் பொருந்திற்று இல்லை = சத்தியசங்கற்பமானது உண்டாக வில்லை; ஆதலினுல் = ஆகையினுலே, அவர்காணுர் = அவ்வரசசபையினர் நின்னைக் கண்டிலர், அகம்பாவமற்ற அறிவறிதலாலே = பயிற்சியின் முதிர்ச்சியானே அகங்காரமற்ற அறிவையறிந்து கொண்டமையானே, பேதமற = துவைதமறவே, சத்திய சங்கற்ப சம்பன்னையாய், நீ விதிக்க விவர்கண்டார் = நீ சுதன் எமைக் காண்கவெனச் சங்கற்பிக்கச் சுதன் முதலிய யாவரும் கண்டனர், என்வாணி பேசலோ

டும் = இப்போது நீயங்கே செல்லினும் விவகரிக்கலா-மென்று ஸ்ரீ சரசுவதிதேவிகூறிய போது லீலை கூறுகின்றாள்.

(ஸ்ரீ - வீர.) ஞானப்யாச மில்லாமல் நினது லீலையா யிருக்கின்றேன் என்னும் பாவனை யஸ்தமாகாதபோது நினக்குச் சத்திய சங்கற்பம் பொருந்திற்றில்லை. அத்வை தப் பிரஹ்மத்தின் கண்ணே சித்த விருத்தி நிரோதவடிவ யோகப் பிரதிபந்தபூத துவை தத்தின் மிருலயத்தால் இப்போது சத்திய சங்கற்ப முடையவளாயினை. அப்யாசமில்லா மல் நினது துவைத எண்ணமாகிய வுலகவுண்மை நிச்சயம் நன்றாக முழுதும் நாசமாக வில்லை, அத்வைதத்தைப் பேதப்படுத்தும் அவித்தையை யழிக்கும் வாயிலாக அடையா தவர் சத்திய சங்கற்பம் முதலிய பயனுறுங் கிரியைகளோடு பொருந்த லெங்ஙனங்கூடும்? வெய்யிலில் உழல்பவனுக்கு நிழலின் குணமாகிய தண்மையின் அனுபவமும், நிழலின் கண்ணே யிருக்கும் புருடனுடைய மகிழ்ச்சியனுபவமும் எங்ஙன்றெரியும், நான் லீலையா யிருக்கின்றேன் என்பது பயிற்சி யின்மையினுனே யுனக்குக் கெடாமலிருந்தது; லீலா தேகத்தில் மாத்திரம் யானிருக்கின்றேன் என்னும் திடசமஸ்காரம் இருந்தபோ துனக் குச் சத்திய சங்கற்பம் உண்டாகவில்லை. இன்று சத்திய சங்கற்பத்தை யடைந்திருக் கின்றா யாதலின் மைந்தன் என்னைக்காண்குக என்னும் நினது விருப்பம் சப்லமாய் முடி ந்தது, இப்போது நீ அந்நாயகனது சமீபத்தை யடைவையேயானால் கூறியகாரணங் கொண்டு முன்போன்றே விவகாரத்தை முற்று மாறுசெய்து கொள்ளலாம்.

(ச.) தேவிகூறல்: சாதகத்தாலன்றி = அப்யாசத்தாலல்லது, இரண்டு = துவைத நிச்சயம், ஒன்றாகா = சேடமற ஒழியாது இது நிச்சயம், அகம்பாவந்தனை நீங்காமல் = பூர்வநினைக்கப்யாச திடமின்மையினுல் லீலை நான் என்னும் அகம்பாவத்தினது நீக்க மின்றி, போதமடைந்தனை = தொய்த நிச்சய நீங்கவில்லை, அதனுற் சத்தியமாஞ் சங்கற் பம் பொருந்திற்றில்லை, ஆதலினுல் அவர்காணுர்; நீ விதிக்க, இப்போதுநீ சத்திய சங்கற் பத்தால் புத்திராதியர் என்னைப் பார்க்கக்கடவர் என்று சங்கற்பிக்க, இப்போது சத்திய சங்கற்பத்தால் நினக்கபிமதம் பலித்த தென்பதாம், இப்போது நீ அந்தப் பர்த்தாவின் சமீபஞ்செல்லின் நினக்கதனுல் அவ்வியவகாரம் முன்போற் பிரவிர்த்திக்கும், என வாணி பேசலோடும்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஸ்ரீ சரசுவதிதேவியின் பிரசாதத்தினுலே சாதிக்கப்பெற்ற அஸ்பரிச யோக (நிருவிகற்ப)த்தினுலே உண்டாகிய லௌகிகப் பிரபாவமுடைய லீலை பூர்வஜன்ம பரம்பரைகளை நினைந்து உண்டாகிய பரமவைராக்கியத்தை யடைந்து இச் சமுசாரமானது தன்னுற் சடிதியில் நீக்குறுவதாக அறிவிக்கும் பொருட்டுப் பூர்வஜனமங் களை வருணிக்கின்றாள்.

பெருவெளியா யுன்னருளான் முழுதுணர்ந்தேன் முக்குணத்தின் பிறப்பு
மற்றேன், னிருவடிவாய்ப் பிரமத்தி லகன்றெண்ணூற் றுடல்பலவா யெடுத்தேன்
முன்ன, மொருதனிமா யாவிகற்பத் தோருலகாந் தாமரைமே லுறைவண்டாக,
மருவிய விஞ்சையர் மகளாய் வாதனைதீ தான்மனித வடிவமானேன்.　(50)

(ப - ரை.) பெருவெளியாய் = பேராகாச வடிவமான ஜகன்மாதாவே! உன்னரு ளால் = தேவரீரது திருவருளால், மிகவுணர்ந்தேன் = மிகவும் ஸ்மரித்தேன், முக்கு ணத்தின் பிறப்புமற்றேன் = எனது இச்சன்மம் இராஜசமாம் தமமுமல்ல சாத்விகமு மல்ல, இருவடிவாய்ப் பிரமத்திலகன்று = பிரஹ்மாவி னின்றும் பிரிந்து வேற்று வடிவ

மாய், எண்ணுற்றுடல் = அஷ்டசதசரீரம், பலவா யெடுத்தேன் = அநேக யோநிகளிற் சம்பந்தித்துக் கொண்டேன், முன்னம் = பூர்வம், ஒரு தனிமாயா விகற்பத்து = ஒப்பற்ற மகாமாயா விச்சமுசார மண்டலத்தில், ஒருலகாந் தாமரைமேல் = லோகாந்தரத் தாமரையில், உறைவண்டாக = உலவும் பிரமரியாக, மருவிய விஞ்சையர் மகளாய் = பொருந்திய வித்தியாதர வர அங்கனையாய், வாதனை தீதான் = துர்வாசனையினாலே கலக்கத்தை யடைந்தபடியால், மனிதவடிவு மானேன் = மானுடியாக அவதரித்தேன்.

(ஸ்ரீ - வீர.) அந்தோ ! அந்தோ !! இந்நிகழ் காலப்பிறப்பு ரஜோகுணத்தா லாக்கப் பெற்றதாம் = தன் ஜன்மபரம்பரையை நினைந்து பரிதபித்ததாம், பிரஹ்மாவினின்றும் = கமலாசனனி னின்றும் இக்கற்பாதியி விறங்கியது முதல். மநுடலோகா பேக்ஷையாய் லோகாந்தரம் = வேறுலகம், வித்யாதரஸ் தானம் அதுவே கமலம் அதன்கட் பிரமரி, வித்யாதர லோகத்தில் வசிப்பவளாய் என்பது திரண்டபொருள் இச்சகத் விஷயமெல்லாம் இப்போது யானுணர்ந்தேன், இவ்வெனது ஜன்மம் இராஜசமாம், தாமசமல்ல சாத்விகமும் அல்லவாம், இந்தஜன்மம் இரஜஸின் காரியமாம், துக்கசந்தாப மிகுதியினால், " இடையே யிருப்ப ரிராஜசத்தாரே " என்றும் மனுடஜன்மங்கட்கு ராஜசத்தை புணர்த்தும் ஸ்மிருதியு முளது, ஹிரணிய கருப்பரது ஆதியாய அக்கற்பத்தினது முதலில் அந்தக்கரண உபாதி யுற்பத்தியாகிப் பிரதிபிம்ப முளதாய் வந்த எனக்கு எண்ணூறு ஜன்மங்கள் நானுவித யோனிகளில் ஒழிந்தன, இப்போது அவற்றைக் காண்பது போன்றே வெளியாக ஸ்பரிக்கின்றேன். முன்னொருபோது ஒரு சமுசாரமண்டலத்தில் வித்யாதர லோகமாகிய தாமரையின் கண்ணே வித்யாதர வராங்கனையாகிய வண்டாக இருந்தேன், துர்வாசனையினாலே கெடுக்கப்பட்டுப் பின்னர் யான் மநுடதேக முற்று இருந்தேன்.

(ச.) லீலைவாக்கியத்தில் லீலை கூறல்: பெருவெளியாய் = ஒப்திமயமான தேவியே! உணர்ந்தே = இவ்விடத்திப்போது ஸ்மரித்தேன், முக்குணத்தின் பிறப்பு மற்றேன் = எனக்கிந்த ஜன்மம் இராஜதமன்று தமமும் சாத்வீகமுமன்று, பிரமத்திலகன் றிருவடிவாய் எண்ணூறு உடல் = ஜன்மம், பலவாய் = நானுயோனிகளில் எடுத்தேன் இப்போது மீட்டு நினைந்தேன், முன்னமோரு தனிமாயா விகற்பத் தொருலகாந் தாமரைமேலுறைவண்டாகி மருவிய விஞ்சையர் மகளாய் = பூர்வஞ் சம்சார மண்டலத்தில் லோகாந்தரங்கள் என்னுங் கமலங்களிற் பிரமரம்போன் மநோரத யோக்கியமான வித்தியாதர வராங்கனையா யிருந்தேன், வாதனைதீதான் மனிதவடிவ மானேன் = துர்வாசனைகளங்கத்தால் அதன்பின் ஞன்மாநுடியா யிருந்தேன். மநோரத யோக்கியம் = இஷ்டப்படி சஞ்சரிக்கத் தக்கனம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மேலுமநேக சன்ம பரம்பரையைப் பகர்ந்தபின் னிருவருஞ் செல்லல்:—வேறெனை.

**வேறொருமாயா விகற்பத்தர மகளாய்த் தழையுடுக்கும் வேடப்பெண்ணாய்ச், சூறைவலைப் புள்ளரசாய்க் கொதுகு முதற்பல பிறப்பிற் சுழன்று சோர்ந்து, சீறுகடற் றிரையிலசை திரணம்போன் மாயையிலே தியங்கினேனை, யேறுவித்தாய் கரையென்ன விவள்சொன்னா ளிருவரும் விண்ணெழுந்து போனார்.** (51)

(ப - ரை.) வேறொரு மாயாவிகற்பத்து = வேறுசமுசார மண்டலத்தில், அரமகளாய் = பன்னகேசுர காமினியாய், தழையுடுக்கும் வேடப் பெண்ணாய் = பத்திராம்பர

வதியாகிய வேடர்குலமாதாய், சூறைவலைப் புள்ளரசாய் = வைரியினலே வீசப்பெற்ற வலைப்பட்டட்ட பறவையரசாய், கொதுகுல முதல் = மசகாதி, பலபிறப்பில் = அநந்த ஜன்மங்களில், சுழன்று சோர்ந்து = சுற்றிச் சுற்றிச் சோகமுற்று, சீறுகடற்றிரையி லசை திரணம்போல = சப்தியாநின்ற சமுத்திரத்தன் தரங்கங்களி லகப்பட்ட துரும்புக் கொப்பாக, மாயையிலே = சமுசாரத்தின் கண்ணே, தியங்கினேனை = மயங்கிக் கலங்கிக்கொண் டிருந்தவென்னை, கரையேறு வித்தாய் = முத்தியங்கரையிற் படர்வித்தாய், என்ன = என் றிவ்வண்ணம், இவள்சொன்னள் = லீலைசொன்னள், இருவரும் விண்ணெழுந்து போனர் = ஆகாயத்தி லெழுந்திரண்டு தேவிமாரும் ஏகினர்.

(ஸ்ரீ - வீர.) புங்கவிருக்ஷம் முதலிய ஜன்மங்களையும் அடைந்தேன். பறவையாக இருந்த என்னல் வைரியாகிய வேடனல் வீசப்பட்ட ஜாலமானது வாசனக்ஷயமே போலக் கிலேசத்தானே கெடுக்கப்பட்டது. வாகுராவென்பது மிருகபந்தினியெனவாயினும் ஈண்டுப் பொருந்தாமையின் கொள்ளவில்லை. அரண்ய பூமியின்கண் ணிவ்வாறு துயருற்றே னென்பதாம் கமலத்திடை நிகழும். பீஜகோசங்களின் மத்திய இடங்களையே சய்யையாகக் கொண்டு வண்டோடு மிளைப்பாறி யிருந்தேன், அப்பதுமமுகுல கேசரங்களை பயின்று துயின்றேன். பின்னுண்மைப் பயன்றரும் வினைவாயிலாய் அரசனுயினேன், ஸ்ரீமானுய்ச் சுராஷ்டிரத்தை நூறுவடரும் ஆண்டேன். பசும்புற்றரையிலும் புற்றளத்திலும் ஆவெதின் சலனத்தாற் றரித்திரத் தன்மையை யவலம்பித்துக் கொதுகாய்க் கொதுகுட னிருந்தேன். சமுசார கடற்றிரை விடய ஆசையாம். நீக்கமுடியாத காற்றுடனுற்ற ஓடத்தின் கமனமோயாத் துயருறுதலே போலும், அதாவது விஸ்தாரமான கடலிலுள்ள சஞ்சல அலைகட் குட்பட்டு அதிவிடமமாய் மோகப்பட்டு அலைந்து பிரசண்ட வாயுவினலே சுற்றப்பட்ட ஓடஞ்செல்லுந் துயர்முறை போலும், சமுசார விசால சமுத்திரத்திலுள்ள விடயதிருஷ்ணை லக்ஷணலகரியினலே சுழலுகட்குச் சமானமான யோனிகளில் அலைந்து திரிந்தேன். பெருநீரிற்பட்ட ஒடம் துரும்பொத்ததின் தரணியைத் திரணமென்ருர். யோகத்தினு லேற்பட்ட அதிசயப் பிரமணக் கிரமங்களினலே பிராஹ்மண மண்டபத்தி னின்றும் மேலே சென்றனர். மற்றொரு சமுசாரமண்டலத்தில் பன்னகேசுர காமினியாக விருந்தேன், கடம்பு குருக்கத்தி எனுமிச்சை மாதுளை புங்கவனங்களிற் சுற்றிக்கொண்டு தளையாடையைக் கட்டிக்கொண்டு கறுத்தவளாகிய வேடச்சியா யிருந்தே னியான், வனத்தில் வசிக்கும் வாசனை மிகுத்து அதனலே மூடையாய்த் தருமமரியாதைகளை யறியாதவளாகி யிருந்தமையானே கெட்ட காரியங்களை நிறையச்செய்து பூங்கொத்துகளாகிய கண்களையும் இலைகளாகிய கரங்களையும் உடைத்தாகி வனத்தில் விலாசஞ்செய்யும் கொடியாகி யமர்ந்தேன்; முனிவரது சங்கத்தால் பவித்திரத்தை யடைந்துவாழும் புண்யாசிரம லதையா யிருந்தேன், வனக்கினியால் அக்கொடி தகிக்கப்பட்டு மகாமுனிவருக்குப் பெண்ணைப் பிறந்தேன், புண்ணியத்தா லாண்மகவாய் இராஜ்ஜியாதி போகபயன்களைத்தரும் முன்சஞ்சிதகருமங்களினது பரிணமத்தால் நூறுவருடம் சுராஷ்டிர தேயத்தில் சகல ஐசுவரிய சம்பன்ன அரசனுகயானிருந்தேன். பனைகளுந் தாழைகளும் நிறைந்து ஜலம்நிறைந்த பிரதேசங்களில் அரசனுகவிருந்து பரதனங்களை யபகரித்த தோஷ விசேஷங்களால் குஷ்டத்தால் நஷ்ட அவயவங்களை யுடைய கீரிப்பிள்ளையாக ஒன்பதுவருட மிருந்தேன், சுராஷ்டிரத்தில் எட்டுவருடம் பசுமாடாகி மிகு துன்பமடைந்தேன், பெருங்காட்டிற் பக்ஷியாகிக் காரணமின்றிய வைரத்தினுனே வேடர்களாற் போடப்பட்ட வலையிலகப்பட்டு, அதமமாகிய துவைதவாதனையை யறுக்க யானிப்போது பட்ட கட்டம்போலக் கட்டப்பட்டு அவ்வ

லைக்கட்டை யறுத்தேன். கர்ணிகையின் புஷ்பரேணுக்க ளிடையே அவற்றையே சை யையாகக் கொண்டு ஆண்வண்டோடு இளைப்பாறி யிருந்தேன், விழித்துப் பதுமமொட்டு களி லிருக்கும் மகரந்தத் தேன் முதலியவற்றை மாந்திக்கொண்டு துயருற்றேன், மானு கித் திரிந்தேன், மச்சமாய்ப் பட்டதுயர் மாகோடிகோடியாம், பறைக்குட்டியாக இருந்து சுரதலீலைகட் கீடுபட்டுக் கட்குடித்துப் பாடிபாடித் திரிந்தேன் பின்னு மனந்த முறை பிறந்துழன்ற பின்னர், அன்னமானேன் ஒரு இலந்தையிலை நிறைந்த தேயத்தில் ஆடிக் கொண்டிருந்த வெகுகொதுகுகளின் மத்தியில் அதனினின்றும்நழுவிய ஒருகொதுகிற்கு அவண் புகுதும் ஆற்றலின்மையின் விளையாடுந் தரித்திரத் தன்மையைக்கண்டு அச்சம ஸ்காரத்தானே மரணத்தை யடைந்த ஹம்சத்தால் கொதுகுஜன்மம் எடுக்கப்பட்டு அதி தீனத்தோடு மிருந்தேன் எத்தன்மை எத்தன்மையை நினைத்துக் கொண்டு தேகத்தை விடுவாரோ என மிருதியுமுளதாம். சுருக்கிக்கூறு மிடத்து நூற்றுக்கணக்காக அநேக வகைத் துக்கங்களோடு கூடிக்கூடி அநேகம் யோநிகளில் சமுசாரமாகிய நீண்டநதியின் சஞ்சலமான லகரிகளானே தடுக்க முடியாததான வாதப்பிரமியின் வேகமான ஓட்டத் திற் கொப்பாக ஓடியோடித் தராசின் தட்டுகள்போல மேற்கதிகீழ்க்கதிகளை யடை வுற்று அதனானே ஆகுலமிருந்தமன அங்கத்தை யுடையவளாகி மயங்கிச் சுழன்று திரிந் தேன். வாதப்பிரமியானது இயற்கையாகவே வாயுப்பிரவாக அனுசாரிணியா யிருப்பது மேற்கீழ்தேசங்களில் ஆயாசமில்லாமலே ஓடுவதென்பது வெளி, இவ்வண்ணம் லலித ஆகிருதிகளோடு கூடியதேவிமா ரிருவரும் சம்பாஷித்துக் கொண்டே யோக சாமர்த்தி யத்தினாலே அந்தணர் வீட்டினின்றும் மேலே கிளம்பி விண்ணின் கண் வெகுதூரஞ் சென்றனர்.

(ச.) மாயா விகற்பத்து வேறொரு வரமகளாய் = இந்தச் சமுசார மண்டலத்தில் அதன்பின் அமரேசுர காமினியாய் (பன்னகேசுர காமினி யிடபேதம்) இங்ஙனமீண்டு லீலைக்குச் சன்மாந்தர பரம்பரை முன்வித்யாதரி பின்மனுஷி பின்னிந்திராணி; தழை யுடுக்கும் வேடப்பெண்ணாய் = அதன்பின் யான் சண்பகாதி பத்திராம் பரத்தைத் தரிக் குஞ் சியாமளரூப சபரியென்னும் வேடப்பெண்ணாய், சூறைவலைப்புள் = அதன்பின் பக்ஷிப்பேடு, வனத்தில் வைரியான கிராதனால் வீசப்பட்ட வலையானது இப்போது எனது வாசனைபோல் என்னால் மகத்தான கிலேசத்தாற் சேதிக்கப்பட்டது. மரைமே லுறை வண்டாகி கமலங்களின் மகரந்தம் (கேசரம்) புசித்து என்னால் அளியோடு கூடக் கர்ணிகா கர்ப்பசய்யைகளிற் றளர்ச்சியாறப் பட்டது, அரசாய் = அதன்பின் பெண்டன் மையை நிவிர்த்திக்கும் கர்மபரி பாகத்தினாற் சௌராட்டிர தேசங்களில் நூறுவருட மிராஜாவா யிருந்தேன், கொசுகு முதல் = பின்மசகாதி வாசனையால் மசகமுதலிய பல பிறப்பில் = அநேக வித்துக்கமயமான யோனிகளில், திரணம்போல் ஊர்த்துவ அதோ கதியை மாறிமாறி யடைந்தேன், உயர்வு தாழ்வானயோனி யையடைந்து தியங்கி னேனே, ஸ்ரீ வசிட்டர் இருவருமவ்விடத்தி னின்றும் விண் எழுந்துபோனார். மசகவா சனை = பசும்புன் மிருந்த பூமித்தள அதிசய ஆலிங்கனத்தில் மசகத்தின் பேராசைச் சஞ்சலமே தாரித்திரியமாம், அதை அன்னமா யிருந்த யான்கண்டு அவ்வாசனையினாலே மசகஜன்மத்தை யடைந்தேன் என்பதாம். பாடபேதம் = ஓடுங்கால் ஊர்த்த அதோ கதியை மீண்டு மீண்டும் வாயுவைப்போலும் வேகவியற்கை வாய்ந்த பெண்மான் அடை வதேபோலும் மேற்கீழ் பிறப்புகளை யானடைந்தே னென்பதாம்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) மீண்டும் அந்தப்புரம்போய் மீண்டு வேறு பிரமாண்டத்திற் கேகிச் சூராதி சந்நத்த சேனையைக் காணல்:—யோகமென.

யோகநெறியால் விண்போய்ப் பதுமனிடஞ் சேர்ந்து சவவுடல் கண்டப்பா
லேகியிவன் மறுபிறப்பாம் வேந்தனை யெய்தலு மவன்மே லெதிர்ந்துவந்து
வேகவினையாகி யொருவேல் வேந்தனமர் துடங்கி மிகவுமோத
மாகமயி லனையார் கணோக்கினு ரிருபடையு மலைந்தவன்றே.

(ப - ரை.) யோக நெறியால் = யோகப்பயிற்சியால் வாய்ந்த விசித்திர கதிவிந்யாசத்தால், விண்போய் = பிரஹ்மாண்ட கர்ப்பரஞ் சென்று, பதுமனிடஞ் சேர்ந்து = கிலேசமில்லாமலே கடந்து சர்க்காந்தரம்போய்ப் பதும மண்டபமாகிய அந்தப்புரத்திலிருந்த, சவவுடல் கண்டு= இராஜதேகத்தைப் பார்த்துவிட்டு, அப்பாலேகி = விதூரத அண்டத்திற்குச் சென்று, இவன் மறுபிறப்பாம் = இம்மன்னவனது புநர்ஜன்மமாகிய, வேந்தனை யெய்தலும் = விதூரத வேந்தனை யடைதலும், அவன்மேல் = அவ்வரசன் மேல், எதிர்ந்துவந்து = எதிர்த்துவந்து, வேகவினையாகி = அதிபல சத்துருவாகி, ஒருவேல் வேந்தன் = ஒப்பற்ற வெற்றி வேலாயுதந்தரித்த இராஜன் ஒருவன், அமர்துடங்கி = போரையாரம்பித்து, மிகவும்மோத = அதிகமாக நெருங்கியடிப்ப, மாகமயிலனையார்கள் = விண்ணிலிருந்த மயிலியல் தேவிமார்கள் இருவர்களும், நோக்கினர் = கண்டார்கள், இருபடையும் மலைந்தவன்றே = இரண்டு சேனைகளும் தொந்தயுத்தஞ் செய்யத் தொடங்கியது; அன்று ஏ அசை நிலைகள். (52)

(ஸ்ரீ - வீர.) சர்க்காந்தரம் = இரண்டாவது பதுமராஜ சம்பந்தியாய சருக்கம். மீண்டும் லீலை சரசுவதிதேவி மார்களின் பிரபஞ்சப் பொய்மை நிச்சயதிடத் தன்மையைச் சம்பாதிக்கும் பிரவிருத்தி பிராப்தி பிரதிபாதனாதிகள் ஆக்கியான சமாப்தி வரையுமாம். அநேக விசித்திர அற்புதப் பேருற்சாகப் பெருமையதாயினுஞ் சமுசாரம் பொய்யெனக் காண்பிக்கும் பொருட்டுப் பதுமநிருபதி மண்டபாகாசத்தி லுள்ளடங்கிய சமுசாராந்தரத்தில் இருக்கும் ஆடம்பரத்தோடு கூடிய போரின் வருணனை யாமெனவுணர்க. எதிர்த்து வந்து =வரும்போதே இராஜ்ஜியத்தைக் கெடுத்துக்கொண்டுவந்து. சாமந்தர்களுக்குள் உயர்ந்த சாமந்தனும் பூமிபனும் ஆவன் அவ்வேல் வேந்தன். கடல்போலும் சுந்தரமாய்ப் பெரும்போரைத் தொடங்கு மேதுவினாலே மிகநெருங்கிக் கனமாய்க்குமுறிக்கொண்டிருந்த அச்சேனை யுத்தசந்நத்தமாயிற்று. என்பார் துடங்கியென்றார் அக்கினிபோலுந் தீப்தமடைந்தது. வேகமாக ஆயுதங்கள் வீசத்தொடங்கவே ஒன்றோடொன்றுறைந்து அழல்கிளம்பி மின்னலாகாரமாகச் சொலித்தனவாம். மதத்தோடு கூடிய மாதங்கங்கள் வீழ்ந்தபோது பூமியசைந்து நடுங்கிய ஜலங்களும் கல்லோலப்பட்டாடினவாம். யந்திரங்களி னின்றும் விடுபட்ட கற்களும் சக்கிராயுதக்கூட்டங்களும் ஆகாயத்தில் தேவாதிகளைத் தூரத்தி லோடும்படிசெய்தனவாம். கட்ககண்டங்கள் சிதறி மேலே வெகுதூரத்திற் கிளம்பி மிகவொளிர்ந்து ஆகாயத்தில் வியாபித்த தோற்றம் அநேக நக்ஷத்திரங்களால் அலங்கரிக்கப் பெற்றதே போலும் அம்பரம் இருந்தது. வஜ்ஜிரசமமான முஷ்டிகளானே மிகவு மடிபட்டு நொறுங்கித் தூள்தூளாகிப் பெரும்வீரர் தங்கவசங்களும் போயினவாம். சர்வலோக மயபாணங்களின் மழைபெய்தலைச்செய்யும் வீரக்கூட்டங்களே அப்போர்ச் சம்பிரமத்தில் மதோன்மத்த மேகங்களாகச் சஞ்சரித்தார்கள்; அம்மேகங்களின் சஞ்சாரத்தால் கபந்த மயூரங்கள் ஆங்காங் காடிக்கொண்டு திரிந்தனவாம். மதோன்மத்த மேகங்களின் நிமித்தத்தினானே சம்பிரமத்துடன் கபந்த மயில்கள் ஆடிக்கொண் டிருந்தன வெனினும் ஆம். கபந்தமென்பது தலையில்லாமல் ஆடித்திரியுந் தேகமாம். கற்பாந்த காலம்போல வேகமாக இங்குமங்கு மோடிச்சுழலும்

கஜபர்வதங்களானே வியாபிக்கப் பெற்றது அப்போரின் சம்பிரமம், என்பதாதிகள் மலைந்த வென்பதாற் கொள்ளக் கிடந்தனவாம். முற்பவித்த ஜகத்தைத்தாண்டிக் கூறிய வண்ணம் அநந்தகோடி பிரஹ்மாண்ட விசித்திரங்களைக் கண்டு கொண்டேயேகி அவற்றுள் ஒரு பிரஹ்மாண்டத்தின் கண்ணே யவ்விருவரும் விரைவிற் புகுந்து அந்தப் புரத்தைக் கண்டார்கள், ஆண்டு நெடுநேர மிராமல் உடனே கிளம்பிப் போயினர். அவ்வந்தப்புரமானது, புஷ்பபாரத்தினாலே நிறைந்த மகாராஜ மகாசவத்தோடு கூடியிருந்தது சவத்தின் சமீபத்தில் வீற்றிருக்கும் உட்சமாதியி லாரூடமா யிருக்கும் சித்தத்தோடுற்ற லீலையின் சரீரத்தோடு கூடியிருந்தது அதனைப் பார்த்தபின் அத்திவ்ய யோகினிகள் மீண்டும் யோககதிகொண்டு சென்று சிறிது விரிந்திருக்குஞ் சமுசார ஆவரணத்தைப் பிளந்து பிரஹ்மாண்ட கபாலத்தையும்பிளந்து லீலையினது பர்த்தாவினுடைய சங்கற்ப சமுசாரத்திற் புகுந்தார்கள்; அச்சமயத்தில் அந்த மண்டலத்தில் அநேக நகரங்கள் நெருங்கியிருக்கு மிடத்தில், தனக்குச் சகாயமாய் வந்திருக்கும் மண்டலேசுரர்கள் பெருகப் பெருகியிருக்கும் சிந்துராஜனென்பவன் சேனையினால் ஆக்கிரமணஞ் செய்திருந்தனன். சங்கற்பத்தாலாய விமானத்திருக்கும் இரண்டு தேவிமாரும் போர்முகமாகி நின்ற பூபதிகளின் இருசேனையும் மலைந்ததைக் கண்ணுற்று 'ரென்பார் நோக்கினரென்றார். லீலா நாயகராற் பரிபாலிக்கப்பெற்ற சுவராஷ்டிர மண்டலத்தில், சதுரங்க சைநியத்தோடுகூடியதும், சிங்கந்தேள் அரக்கபிசாசாதி கட்காதாரமாதலின் துவிதீய ஆகாச பீஷணமுற்றதும் ஆகிய ஒருவிஸ்தார ஆரணியத்தில் அவ்விருசேனைகளும் நிறைந்திருந்தன அவ்விரண்டும் கலக்க மற்றனவாயும் அழகிய இருகடற் கொப்பிடத்தக்கனவாயும், மகத்தாய காரியங்களில் முயன்றுகொண் டிருப்பனவாயும், மதம் பிடித்தனவாயும் இரண்டு மன்னவர்களால் அலங்கரிக்கப் பெற்றனவாயும் இருந்தன. போரின்பொருட்டு வரிந்து கட்டுவனவும், பெருங் கர்ச்சனையுடன் யுத்தசந்நாகஞ் செய்வனவும் அக்கினியைப்போலத் தீப்தமுற்றனவும், அற்புதமுற்றனவும் முன்னர் பாணப்பிரயோகஞ் செய்வதை யெதிர்பார்த்துக்கொண்டு இருப்பதானே மூடாத செங்கட் கலக்கமுற்றிருப்பனவும் ஆகியிருந்தன. அத்தேவிமா ரிருவரும் சத்திய சங்கற்பத்தினாற் கற்பிக்கப்பட்டதும் மிக அழகியதும் விமல விண்ணின்கண் ணிச்சலமாய் நிலைத்து நிற்பதும் ஆகியவிமானத்தில் இருந்து விநோதமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தனர். பகைப்பட னொருவன் பயமற்றவனாய்த் தன்படைனத்தாக்க விதூரதன் அப்படையை முசலத்தாற் றாக்கிப்பொடித்தனன், அரசனிவ்வாறு செய்தபின் பிரளயக்கடல் பொங்கியதுபோலப் பாணப்பிரயோகங்கள், அக்கினிக்கும் மின்னலுக்கும் சமானமாய்ச் சொலித்து மின்னும் கொடூர அஸ்திரசஸ்திர வர்க்கங்களால் நாற்பக்கங்களிலும் இருசேனைகளிலும் மிகமிகவும் உண்டாயின. மதம்பிடித்த யானைகளும் அவற்றால் வீழ்த்தப்பட்டவர்களும் துடித்துக்கொண்டு ஓடமுடியாமல் பூமியிற் புரண்டு நிகழ்ந்தவேகம் மிகுத்திருந்தது· கவண்களினின்றும் விடுபட்ட கற்களாலும் சக்கிரக்கூட்டங்களாலும் பறவைகளெல்லாம் மூலைக்கு மூலை மிகுதூரமோடின. கட்ககண்டங்கள் வெகுதூரத்தி லுயரக்கிளம்பி மின்னி யாகாயத்தில் நக்ஷத்திர அழகைச்செய்து கொண்டிருந்தன, மிகுந்த வலுவுடன் பிரயோகிக்கப்பட்ட வேற்கூட்டங்களானே பிளக்கப்பட்ட யானைக்கூட்டங்கள் பூமியை மறைத்துக் கொண்டிருந்தன. வஜ்ஜிரமுஷ்டி மல்லர்கள் கசக்குங் கசக்கினாலே கசங்கிய அநேகம் வீரர்கள் துன்புற்றுக் கொண்டிருந்தனர். நாராசங்களாகிய மழைகளை அளவின்றிப் பெய்யும் நிறைந்த வீரசூரவடிவ மதத்த மேகங்களின் சம்பிரமங்களைக் கண்டு கவந்தவடிவ மயில்கள் எழுந்தெழுந்து, கூத்தாடிக் கொண்டிருந்தன. இந்தப்பிரகார மிருந்த

அந்தரணசம்பிரமமானது வேகத்தோடு சுற்றிக்கொண்டு திரியும் மதம்பிடித்த யானைகளாகிய பர்வதங்களா லலங்கரிக்கப்பட்ட கல்பாந்த காலத்தைப்போலு மிருந்தது. இங்ஙன் மலைந்த,

(ச.) லீலைஞப்தியோடு, யோக—பதுமனிடம்=அந்தப் புரம் புட்பமண்டபச் சவவுடல் எய்தலும், கண்டமாத்திரத்தில், அவன்மே லெதிரிவந்து வேகவினையாகி, யொரு வெவ்வனத்தில், அம்மண்டபத்தில் ஓரலங்கிருத பூமியில் அமர்தொடங்கி மிகவு மோதமாக மயிலனையார்கள் = ஆகாயத்தினின்று லீலையும் ஞப்திதேவியும், இருபடையும், யுத்தத்தாற் சலியாததும், அதனாலே நித்தரங்க சமுத்திரத்திற் கொப்பானதும், யுத்தயத்தின மிகுந்ததும் நிரந்தர விசாரமுடைய அரசர் இருவரொடு கூடினதும், யுத்தத்துக்கு மிகு வர்மமுடையதும், (வர்மம் = கவசம்) அக்கனியைப்போ லற்புதமும் ஆகிய இத்தன்மையான இரண்டுசேனையும் மலைந்தது நோக்கினர். யோகநெறி = யோகசித்தகதி விசேஷம். ஆயுதம் வீசல் = மின்னலையும் வன்னிச்சுவாலையு மொத்திருந்தது. மதயானைகள் வீழப்பூமி நடுங்கச் சனம் நடுங்கியது. யந்திரத்தினின்றும் விடுபட்ட பாஷாணங்களாலும் கூட்டமான அயோமயநேமிகளாலும் கேசரங்கள் தூரவிலகின. விளங்காநின்ற கட்க கண்டங்களால் உண்டாய வுடைவையுடையதாய தம்பரம், முஷ்டிப்போரால் வீரர்வர்மங்கள் பொடிந்தன சரவிசேஷங்களின் வர்ஷமே நரமேகமுக்த வாரிபூரமாம் அதனானே மத்தங்களாய் ஆகாயத்திற் சம்பிரமத்தோடும் சிரரகித காயங்களேயாய மயில்கள்விசேட நடனஞ்செய்தன வென்பதாம். வேகவிவகார மாதங்க சைலங்களாலே வியாபிக்கப்பட்டிருந்தது அப்போர். (52)

(ஸ்ரீ - வீர - அ - கை.) இருபடையும் வெம்போர் புரிந்தபின் சூரிய அஸ்தமனமாதலும் இருபடையும் இளைப்பாறுதலும்:—மட்டெனெ.

மட்டிலா விருபடையு மறலிநடுக் குறவெம்போர் மலைக்குங் காலை
யெட்டிலோர் கூறுக வெதிர்ந்தவனு லிவன்சேனை யிறத்தலோடும்
பட்டுளோர் பிணக்குன்றுன் மறைந்தனனே சமர்கண்டு பயப்பட்டானே
தட்டிலா வெய்யவன்போ யிருணிறைந்த திருபடையுந் தணந்துபோன.

(ப - ரை)) மட்டிலா விருபடையும் = அளவில்லாத இரண்டு சேனைகளும், மறலி நடுக்குற = யமனும் அஞ்சமாறு, வெம்போர் = கொடியயுத்தம், மலைக்குங்காலை = கொரோமாகச் செய்யும்போது, எட்டிலோர் கூறுக=அஷ்டபாகத்தில் ஒரு அங்கிசமாக, எதிர்ந்தவனால் = பகைவனால், இவன்சேனை = இம்மன்னவன் சேனை, இறத்தலோடும் = இறந்து சென்றபின், பட்டுளோர் பிணக்குன்றால் = இறந்து போனவர் தம் பிரேத பர்வதத்தால், மறைந்தனனே = ஆச்சாதிக் கப்பட்டனனே, சமர்கண்டு பயப்பட்டானே = போரைக்கண்டு தான் பயந்து நடுங்கினனே, தட்டிலா வெய்யவன் போய் = பூரணப் பிரகாசத்தோடு கூடியிருந்த சூரியன் அஸ்தமாகி, இருணிறைந்தது= அந்தகாரம் வியாபித்தது, இருபடையுந் தணந்துபோன= இரண்டு சேனைகளும் தம்மிடஞ்சேர்ந்தன.

(ஸ்ரீ - வீர.) மூலமனுசரித்து:—அஷ்டபாக தசாசேஷ பிரதாப மதுராகிருதி முப்பதுபாகமாந் தினத்தின் அஷ்டபாக தசையைச் சேடமாகவுடைய சிறந்த தாபத்தால் மதுரா கிருதியையுடைய இரவி, அஷ்டபாகங் கழிந்த அவஸ்தையைச் சேடமாகவுடையதும் பிரதாப முடையதும் ஆகிய அதனால் தரிசிக்க யோக்கிய ஆகிருதியுடையதாம் வீர

பக்ஷத்திலோ தூரத்திலேயே பகைவர்க்குப் பயமுண்டாக்குகின்ற பாவமே பிரதாபமாம் அஷ்டபாகத்தை யுடையதும் மரணதசையைச் சேடமாக வுடையதும் ஆகிய பிரதாப மதுராகிருதி, அஷ்டபாகம் எத்தசையின் கண்ணே அதுசேடம் எவ்வீரனுக்கோ என விக்கிரகமாம். அஷ்டபாக விசரணவஸ்தை, சேடமெப் பிரதாபத்திற்கோ; அதனால் தரிசனீய ஆகிருதியை யுடையது (விசரணம் = அழிவு.) சூரியாஸ்தமனத்தில் துந்துபிகள் சாந்தமாயின அத்தமிக்கு மிரவி வீரனைப்போலாயது செக்கர் வானிரவி யென்பதாம், வீரனும் உதிரந்தோய்ந்த மேனியனுதலி னென்க. இருளின் சமுதாயமே பெருஞ்சேனையின்முகமாகு மிரவிறைவன் வியாபித்தனன் என்பார் இருணிறைந்த தென்றார். இவ்வண்ணம் மிகவும் ஆகுலம் நிறைந்த போரானது நிகழ்ந்தபோது, வெற்றியுடன் விளங்கும் வீரர்கள் தோள் தட்டுவதைக் கேட்ட தோல்வி யடைந்தவர்கள் மிகவும் பயத்தை யடைந்தார்கள், உதிரப் பெருக்கைத் தடுக்கும்படியான கடினகவசங்களில் அவ்வுதிர நீரானது பொங்கிவழிந்து கொண்டிருந்தது, இருளானது மிகுதியாக ஆதித்தியனும் மறைய ஆரம்பித்தனன், அஷ்டபாகத்தைச் சேஷபிரதாபமாதுரிய ஆகிருதியானது சஸ்திர அடியினுன் மொத்துண்ட இரக்தகாந்தியினாலே சூரனைப்போல மெலிவை யடைந்தது. பின்னர்ச் சேனையின் அதிபதிகள் மந்திரிமார்களோடு விசாரஞ்செய்து போரை நிறுத்தவேண்டு மென்று தூதர்களைப் பரஸ்பரம் அனுப்பினார்கள். பின்னிரு சேனைகளிலும் துருவனைப்போலும் ஒவ்வொரு போர்வீரன் பெருந்தேரின்மேலே கொடிக் கட்டுமிடத்தில் ஆதாரமாகச்செய்திருக்கும் நீண்ட மூங்கிற்றம்பமிரண்டிலேறிப் பூரணசந்திரப் பிரகாசம் போன்ற வெள்ளைக் கொடியைப் போரை நிறுத்துங் குறியாக எத்திசைகளினும் வீசினார்கள்; பின்னர் மகாப்பிரளயத்தில் இடிக்கும் பெருமேகங்களேபோல் எல்லாத்திசைகளிலும் பிரதித்தொனி கேட்கும்படியாகத் தொனித்த துந்துபிக ளெல்லாம் ஓய்ந்தன. இருசேனைகளும் பிரளயாந்தத்தில் நாற்றிசைகளிலும் உள்ள நாற்கடலும் ஒரு பெருங்கட லாவதேபோல நாற்றிசைகளிலும் பிரிந்து சென்றன. அக்கால் அஸ்தமித்த ஆதித்யன் வீரரைப்போலும் இரக்தமயமாக இருந்தனர், நிர்மலமான ஆகாயத்தில் மந்த இரஸ்மி யுடையவராயினர் மேற்குக்கடலில் ஸ்நானஞ் செய்யப் புகுந்தனர் வீரர்தம் ஆயுத வர்க்கங்கள் பிரபையாவு மிழந்து சமுத்திரஞ் சென்று வீழ்ந்தன வீரருமாங்கே. கையிற் பிடிக்க முடிவதேபோலும் நெருங்கியிருக்கும் இருட்பிண்டத்தால் பிரகட பூதங்களாய குட்டியங்கள் அங்கிலங்கின.

(௪.) இருபடையுந் தளர்ந்து போனபின் சேனாதிநாதர்கள் மந்திரிகளோடு ஆலோசித்துத் தூதரை அன்னியோன்னியம் அனுப்பி யுத்தத்தைப் பிரிந்தா ரென்பதாம். மூலம், அஷ்டங்களின் பாகம் அதனாற்றசையே சேடம் எதன்பால், அப்பிரதாபத்தால் மதுராகிருதி யெதற்கோ அஃதங்கனமாம். இருட் கூட்டத்தை சேனையின் புரோபாக மாகவுடைய அத்தன்மைய தாயது இரவு என்பதாம்.

(ஸ்ரீ - வீர - அ-கை.) இரணங்கண ஸ்திதியைக்கூறி நகரஸ்திதியை நவில்கின்றார்:— பகையென.

பகைவேந்தன் படைவாங்கப் படாதசிறு படையோடும் பரிந்துமீண்டு
தகைவேந்த னரமியத்திற் றுயிலுதலு மிவர்களுமத் தலத்திலெய்த
நகையார்ந்த நிலவனைய விவரொளியா லிளைப்பாறி நயனக்கஞ்ச
முகைதோன்ற விழித்தெழுந்து புகழ்ந்திறைஞ்சி யருச்சித்தா முன்னின்றோரை.

(ப - ரை.) பகை வேந்தன் = சத்துரு மன்னவன், படைவாங்க, சேனையைக் கரந்து கொள்ள, படாத சிறுபடையோடும் = போரின்மாயாது சேடித்த சிறியசேனை

யோடும், பரிந்து = சிறிது கவலையுற்றவன் போன்ற மனத்தோடும், மீண்டு = நகர்நோக்கிச் சென்று, தகைவேந்தன் = தக்கதரும மன்னவன், அரமியத்தில் = அரண்மனையில், துயிலுதலும் = நித்திரை செய்தலும் முகூர்த்தநேரம், இவர்களும் அத்தலத்திலெய்த = இவ்விரு தேவிமார்களும் அவ்விடத்திற் போய்ச்சேர, நகையார்ந்த நிலவனைய விவரொளியா விளைப்பாறி = புன்னகையோடு கூடிய சந்திரிகைபோன்ற இவர்களுடை பிரகாசக் குளிர்ச்சியால் தளர்ச்சிமாறி, நயனக்கஞ்ச முகைதோன்ற = விழித்தாமரை யரும்பு அரும்பியதென்ன, விழித்தெழுந்து = நனவையடைந்து விஸ்மித மனத்தனாய், புகழ்ந்து = ஸ்தோத்தரித்து, இறைஞ்சி = நமஸ்கரித்து, முன்னின்றோரை = தரிசிக்குமாறு இரண்டாசனங்களி லமர்ந்திருக்கு மத்தேவிமாரை. அருச்சித்தான் = புஷ்பங்களாற் பாதங்களிற் புஷ்பாஞ்சலி செய்தனன். (54)

(ஸ்ரீ - விர.) உதாராத்மாவா யுத்தம சித்தனாய லீலாபதி மறுதின மாகவேண்டியதை மந்திரிமாரொடு மாய்ந்து பின்றுயின்றனன் என்பதாம். அவ்விடத்தில் அதிகோமளமாயும் மந்தமந்தமாயும் நிருமலமான மணத்தோடு கூடியும் மந்தார புஷ்புங்களின் மாருதம் வீசிக்கொண் டிருந்தது. நிலவின் கிரணங்கள் போன்று சீதளமான அவர்களது தேகப் பிரபையினாற் பூரிக்கப்பெற்றுத் தளர்ச்சிமாறினன் சுசியாயினன் என்பதாம். புஷ்பங்களின் ஹாரத்தை யுடையவன் போலவும், மாலாகாரன் (மாலைகட்டுபவன்) போலவும், விகாசித புஷ்பாஞ்சலியைக் கவர்ந்து, வஸ்திரம் விரியாத்தூய தேயத்தில், பத்தபதுமாதனனாய், ஜனுதி தோஷ துஷ்டசித்தத் தன்மையானே அக்கினியினாற் றகிப்பதே போன்ற எத்தோடமுளதோ அதைக் கெடுப்பதில் சசிப்பிரபைபோன்ற தேவிமார்களே வெல்வீர்களாக, பாகிய அந்தர பதார்த்த விடயாஞ்ஞன அந்தகாரத்தை யழிப்பதில் ஆதித்தியப் பிரபைபோன்ற தேவிமார்களே வெல்வீர்களாக, எனக்கூறி அவர்களுடைய பாதபதுமங்களிற் குசுமாஞ்சலியைச் செய்தனன், உதாரவடிவமான லீலாபதி வீதூரதன் சிறிது துயரடைந்த மனத்தினன் போலும் எல்லா இரகசியங்களையும் உணரும் படியான ஆற்றலோடு கூடிய மந்திரிமார்களுடனே காலையில் நடக்கவேண்டுங் காரியங்களையாலோசித்து விரைவில் சந்திரோதயத்திற்குச் சமானமாகிய அழகிய வீட்டில் குளிர்ந்த ஒடுக்கத்தில் நீண்டசந்திர சமாகாரமான ஹிமசீதள சயனத்தில் ஒருமுகூர்த்த நேரம் கட்டாமரையை மூடி நித்திரைசெய்தனன் அக்கால் அம்பிகையும் லீலாதேவியும் தமது ஆகாய இருப்பைவிட்டுத் தாமரையின் மொக்கில் காற்று ரேகைகள் புகுந்தனபோல அவ்வரசனிருப்பைச் சாளரவாயிலாக அடைந்தனர். அவ்விரு தேவிமாரும் இருசந்திரர்போலிருந்ததால் மிகவும் ஒளிராநின்ற அதி வெண்மையான உதரத்தோடும் அது மிகவும் அழகாக பதுமன் அரண்மனை போலும் இருந்தது; இன்பப் பரிசமுடையதாய் நிருமல நறுமண முடையதாய் மிகமிருதுவதாய் சங்கற்பத்தா லுண்டாய மந்தாரபுஷ்ப மாருதம் வீசிக்கொண் டிருந்தது அவர் மகிமையினால் மன்னராதியாவரும் நித்திரையின் மூழ்கினர் சசிகிரணங்களைப்போலும் அதிசீதளமாய அத்தேவிமாரது திருமேனிகளின் பிரபைப் பிரவாகத்தால் மிக மகிழ்வடைந்த அவ்வரசன் அமிருதத்தால் தெளிக்கப் பெற்றவனைப் போல விழித்தனன் இரண்டு மேருவின் சிகரத்தில் இரண்டு சந்திரபிம்பங்க ளிலங்குவ போ லிலங்கும் திவ்வியமான தேவிமாரிருவரும் சங்கற்பத்தாற் கற்பிக்கப்பட்ட இரண்டு பொன்னாசனங்களில் வீற்றிருப்ப அம்மன்னவன் கண்டனன்; நீளகினையின் பூசைமுதலியவற்றின் றடையால் அபராதம் நேருமென நிமிடகாலம் உண்ணினைந்து அம்மன்னவன் விஸ்மயத்தை யடைந்து, சக்ரகதாதரன் சேஷசயனத்தினின்று மெழுந்ததேபோலச் சயனத்தினின்று மெழுந்தனன். நித்திரைப்போது வேறுபிரித்திரிந்த மாலையாரம்

அம்பர முதலியவற்றைக் கண்டாதியதத் தம துசித ஸ்தானத்திலணிந்து இருகரங்களி லும் மலர்ந்த புஷ்பங்களைக் கொணர்ந்து அன்புடன் புஷ்பாஞ்சலி செய்வான் தன்னு டைய புஷ்பசயனத்தி னின்றுங் கிளம்பிப் பூமியின்கண்ணே பத்தபதும ஆசனத்தி லிருந்து கொண்டு இதனைக் கூறத் தொடக்கினன்; ஜன்மம் துக்கஜீவனம் மூவிததாப முதலிய தோடங்களைக் கெடுக்கும்: சந்திரப் பிரபைகளே வெல்வீர்களாக, வெளியுள் தமங்களை விலக்கும் ஆற்றலோடு கூடிய சூரியப் பிரபைகளே தேவிமார்களே வாழ்வீர்க ளாக, என இயம்பித்தானே குடலையில் மலரைக் கவர்ந்து அவர்களுடைய பாதங்களில் புஷ்பாஞ்சலியைச் சமர்ப்பித்தான்; அதுதீர விருக்ஷம் தன் புஷ்பங்களைப் பதுமினி களின் பதுமங்களி லுதிர்த்தனபோ லிலங்கியது.

(ச.) துயிலுதலும் = புத்திமான்களான மந்திரிகளோடு பகற்காலத்திற் செய்யத் தக்கது விசாரித்துக் கொண்டு ஒரு முகூர்த்தம் நித்திரைசெய்தான் அதன்பின் இவர்க ளும் = அந்தத்திவ்ய யோகினிகளான இவரிருவரும், நிலவனைய நகையார்ந்த = சந்திர கிரணம்போல் நின்மலமான மந்தார குசுமவாசனை நிறைந்த மந்தமாருத சம்பந்தமாகிய அத்தலத்தில் = அக்கிரகத்தில், எய்த, இவரொளியால் = இவர்களது பிரபாவத்தால், நிலவனைய நகையார்ந்த மந்தாரகுசும வாசனை நிறைந்த மந்தமாருத சம்பந்தமானது இவர் பிரபாவத்தா லென்றுணர்க. (பிரபாவத்தாலேயே) நிருபதிக்கந்நியரான நரருமங் கையருங் காட நித்திரைசெய்ய இந்தராஜன் இளைப்பாறி நயனக் கஞ்சமுகை தோன்ற விழித்தெழுந்து, முன்னின்றோரை = ஆசனத் துவயத்தில் விசிராந்தியாய் இருந்த கன் னிகையிருவரையும் தரிசித்த கணத்து அப்பூபாலன் சந்தோஷ சித்தனாகித் தியானஞ் செய்து, புகழ்ந்திறைஞ்சி யருச்சித்தான் விழித்தெழுந்து = சேஷசயனத்தி னின்று மெழுந்த சக்கிர கதாதரனைப்போல உணர்ந்தெழுந்து, சுத்தபூமியில் வஸ்திராசன மின் றிப்பத்த பத்மாசன யுக்தனாயிருந்து தியானஞ்செய்து ஜபிப்பவரின் தாபத்திரய தாக தோஷத்தையும் தாரித்திரிய தாகதோஷத்தையும் சாந்திசெய்யும் சசிப்பிரபைகளே வாகியாந்தர தமத்தை யரிக்கு மிரவிப்பிரபைகளே, என்று இறைஞ்சிப் புகழ்ந்து அருச் சித்தான் = அத்தேவிகளுடைய பாதங்களில் புஷ்பாகாரம்போல் விஜயீபவ எனக்கு சுமாஞ்சலி செய்தான். பிராதக்காலம். பாடபேதம் = ஜபதாம், பாடபேதம்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மந்திரி யெழுதலும் தொழுதலும்:—இவனென.

இவனது நற்குலப் பழமை லீலைக்கு விளம்புவிப்ப வெண்ணிவாணி
யவனருகிற் றுயிலமைச்சன் விழிக்கவென வெண்ணுதலு மவனப்போதே
கவர்துயில் விட்டெழுந் திறைஞ்சக்கண்ட கலைமகள வனைக்கருணை கூர்ந்து
புவனபதி குலத்தொன்மை புகலென்று ளமைச்சனிவை புகலலுற்றான். ()

(ப - ரை.) இவனது = இம்மன்னவனது, நற்குலப்பழமை = புகழ்வாய்ந்த புரா தன குலபரம்பரையை, லீலைக்கு விளம்புவிப்ப வெண்ணி = லீலை கேட்குமாறு செய் விப்பான் கருதி, வாணி = ஸ்ரீ சரசுவதிதேவி, அவனருகிற் றுயிலமைச்சன் = அம்மன் னவன் சமீபத்தில் நித்திரைசெய்து கொண்டிருந்த மந்திரி, விழிக்கவென = எம்மை யுணர்கவென்று, எண்ணுதலும் = சிந்தித்தலும், அவனப்போதே = அம்மந்திரி அக் காலே, கவர்துயில் விட்டெழுந்து = மறைத்திருந்த நித்திரையினின்றும் ஜாக்கிரத்தை யடைந்து எழுந்து, இறைஞ்ச = தோத்தரித்துப் பாதங்களிற் குசுமாஞ்சலி செய்ததை, கலைமகள் = நோக்கிய வாக்குத்தேவி, அவனைக்கருணை கூர்ந்து = அவன்பேரிற் கடாக்ஷம் வைத்து, புவனபதி = மகாராஜாவே, நின் குலத்தொன்மை புகலென்

ருள் = குலபரம்பரையைக் கூறுவாயாக வென்றனள், அமைச்சன் = மந்திரியதனைக் கேட்டு, இவைபுகல லுற்ருன் = வருமாறு கூறத்தொடங்கினன். (55)

(ஸ்ரீ - வீர.) ஸ்ரீ சரசுவதி தேவியானவள் மந்திரியைக் கொண்டு லீலாதேவிக்கு அரசனது பிறப்பின் பரம்பரையைத் தெரிவிக்கக் கருதிப்பக்கத்தில் நித்திரை செய்த மந்திரியைச் சங்கற்ப மாத்திரையானே எழும்புமாறு செய்தனள், எழும்பியதும் அத் திவ்யமான தேவிமார்களைத் தரிசித்துத் திருவடியின் கண்ணே நமஸ்கரித்துப் புஷ்பாஞ்சலியைச் சமர்ப்பித்துச் சந்நதியில் மிகவும் வணக்கத்துடன் உட்கார்ந்தனன். ஹே அரசனே ! நீயார் யாருடைய குமரன். எப்போதிங்கு பிறந்தனை யெனத்தேவிவினவியதைக் கேட்டமந்திரி இவ்வாறு மொழியலுற்ருன்:

(ச.) வாணி = பின்பு வாக்கீசுவரி, இவனது = இப்பூபனது, நற்குலப்பழமை = சென்மத்தை, எண்ணுதலும் = சங்கற்பித்த மாத்திரத்தில், கவர்துயில் விட்டெழுந்தவனப்போதேகண்ட= தரிசித்த தேவிகளை, இறைஞ்ச = குசுமாஞ்சலி செய்து வணங்கி முன்பிருக்க, கலைமகளவனைக் கருணை கூர்ந்திப் புவனபதி குலத்தொன்மை (குலத் தோரை) புகல் கென்ருள் அமைச்ச னிவைபுகலலுற்ருன். நினதுராஜன் எவனுடைய சுதன் எப்போது எப்படி யிவ்விடத்துப் பிறந்தான் சொல்லென்று கலைமகள் ஆசீர்வதித்தாளென்பது வடமொழிப் பொருள் = ஹே அரசனே யென்பதும் நினது மன்னவன் என்பதும் மூலபாட பேதமாதலின் "ஹேராஜன் ! தெராஜா," அனுசரித்து ஸ்ரீ வீரசேகரமும் சமுசார தாரணியுஞ் சென்றதெனவுணர்க.

(ஸ்ரீ - வீர - அ - கை.) குலபரம்பரையை மந்திரிகூறுதல்:—மன்னவரென.

மன்னவ ரெண்மனு குலத்தின் மன்னவனுங் கும்பரதன் மன்னர்மன்ன
னன்னவன் பத்திராதனை யளித்தான் மற்றவனகி லரதனைத்தந்தா
னின்னிவன் பேரிரதனைத் தானீன்ருனிங் கிவன்சிந்துர தனைப்பெற்ருன்
சொன்னவன் சேய்சைலரத னவனுக்குக் காமரதன் ருேன்றலானுன்.

இனையவன்சேய் மகாரதன் மற்றிவன் சிறுவன் விண்டிரதனிவன் குமாரன்
விநயமிகு மனோரதனிங் கிவனளித்த விடூரதனிவ் வேந்தர் வேந்த
னனையிவற்குச் சுமித்திரையா மையிரண்டு வயதிலிவற் கரசுநல்கி
நினைவொடுங்கும் பிதாவனமே நீங்கினனிவன் செங்கோ னெறிபினின்ருன்.

(ப - ரை.) மன்னவரெண் = மன்னவர் யாவரும் வணங்கும், மனுகுலத்தின்= இக்குவாகுவம்சத்தின், மன்னவனும் = அரசனுகி வந்த, கும்பரதன் மன்னர் மன்னன் = இராஜாதிராஜனுகிய ஸ்ரீமான் கும்பரதன், அன்னவன் = அக்கும்பரதன், பத்திராதனை யளித்தான் = பத்ரரதனை யீன்றனன், மற்றவன் = அவ்விந்து பிம்பன், அகிலரதனைத் தந்தான்= விசுவரதனைப் பெற்றெடுத்தான், இன்னவன் பேரிரதனைத்தான் ஈன்ருன்= இவ்வரசன் பிருகத்ரதனைப் பெற்றனன், இங்கிவன் சிந்துரதனைப் பெற்ருன் = இவ்வையன் சிந்துரதனைச் செனிப் பித்தனன், சொன்னவன் சேய்சைலரதன் = கூறிய விறைவன் குமாரன் சைலரதனுவன், அவனுக்குக் காமரதன் ருேன்றலானுன் = அவ்வரசனுக்குக் காமரதன் உற்பவித்தனன். (56)

இனையவன்சேய் = இம்மன்னவன் குமாரன், மகாரதன் = மகாரதனுவன், மற்றிவன் சிறுவன் = இவ்விறைவனது சுதன், விண்டிரதன் = விஷ்ணுரதனுவன், இவன் குமாரன் விநயமிகு மனோரதன் = இந்தராஜாவினது மைந்தன் அடக்கம் வணக்கம்முத

லிய குணங்கணிறைந்த மனோரதனனவன், இங்கிவன் அளித்த விரேதன் இவ்வேந்தர் வேந்தன் = முன்னிலையில் வீற்றிருக்கும் இம்மன்னவர் மன்னனாகிய விதூரதன் மனோரதன் பெற்றெடுத்த மாண்புடையவனவன், இவற்கு அனை சுமித்திரையாம் = இவ்வெம் மேந்தலின்றாய் சுமித்திரையாவள், ஐயிரண்டு வயதில் இவற்கு அரசுநல்கி, பத்துவயதில் இவ்விறைவனுக்கு ராஜ்யாதி பத்தியத்தைக் கொடுத்துவிட்டு. நினைவொடுங்கும் பிதா = மனத்தைத் தம் வயப்படுத்திய இவரது தந்தையானவர், வனமே நீங்கினன் = வனத்தை நோக்கித் தவத்தைக் குறித்துச் சென்றனர், இவன் செங்கோனெறியில் நின்றான் = இம் மன்னவன் அதுமுதலாகத் தருமத்தோடும் பூபீடத்தைத் தாங்கிவருகின்றான். வங்கிச பரம்பரையிற் பாடபேதமுளது. ஹே தேவிமார்களே! தங்களுடைய பிரசாதமே யிது வாம், தங்களுடைய சந்நிதியிலும் அடியேன் பேசும்படியான பாக்கியத்தை யடைந்தே னல்லவா, அடியேனுடைய பிரபுவின் ஜன்மபரம்பரையைச் சொல்லக் கேட்பீர்களாக, இக்குவாகு வம்சத்திற் பிறந்தவனாய்த் தாமரை யிதழ்போன்ற நேத்திர முடையவனாய்த் தன் புயநிழலினாலே மறைத்ததேபோலச் சத்துரு தாரித்திரமுதலிய சந்தாபங்களை நீக் கிப் பூமண்டலத்தைப் புரப்பவனாய் ஸ்ரீமான் குந்தரதன் என்னும் பேரிறைவன் முன்னி ருந்தனன், அவனுக்குச் சந்திரவதன முற்ற பத்திரரதன் என்னும் நாமம் வாய்ந்த மைந் தன் உண்டானான், அவனுக்கு விசுவரதன் என்னும் மைந்தனும், அவனுக்குப் பிருகத்ர தன் என்னும் மைந்தனும், அவனுக்குச் சிந்துரதன் என்னும் மைந்தனும், அவனுக்குச் சைலரதன் என்னும் மைந்தனும், அவனுக்குக் காமரதன் என்னும் மைந்தனும், அவ னுக்கு மகாரதன் என்னும் மைந்தனும், அவனுக்கு விஷ்ணுரதன் என்னும் மைந்தனும், அவனுக்கு நபோரதன் என்னும் மைந்தனும், அவனது மகத்தாகிய புண்ணிய புஞ்ச பரி பாகத்தால் இவ்விதூரதன் என்னும் எங்களது பிரபுவானவர் உண்டானார், இவர் பூரண அமல ஆகிருதியுடையவர், அமிருத திருஷ்டியினாலும் சிநேகமாதுரிய ஔதாரியாதி குணங்களினாலே யாவரையும் மகிழ்விப்பவர், பாற்கடற்குப் பூரணசந்திரனைப்போன்றும் யாவரையும் பூரிக்கச் செய்பவர், சுமித்திரை யென்னும் தாய்க்கு ஸ்ரீ பார்வதிதேவியா ருக்குக்குகன் உண்டானதேபோல அபரகுக னெனும்படி யுதித்தனர், இவரது பிதாபத் தாவது வயதில் இவ்விராஜ்ஜிய பாரத்தை யிவர்பாற் கொடுத்து வைராக்கியத்துடன் வனஞ்சேன்றனர், அதுமுதலாகத் தருமத்துடன் இப்பூபீடத்தைக் காப்பாற்றி வருகின் றார், எங்களுடைய அறத்திருமம் பலந்தர வருங்காலம் போலும் நீங்கள் எழுந்தருளி னீர்கள்.

(ச.) மன்னவரெண் மனுகுலத்தில் = இக்ஷுவாகு வம்சத்தில், அகிலரதன் = விசு வரதன், பேரிரதன் = பிருகத்திரதன், சிந்துரதன் = சிங்காரதன், 56 - இளையவன் சேய், விண்டுரதன் = விஷ்ணுரதன், அரசுநல்கி = இராச்சியத்தைக் கொடுத்து, அது முதல் இவன் செங்கோல் நெறியில் நின்றான், பூபீடத்தைத் தர்மமாகப் பாலனஞ் செய்தான்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) மந்திரி யுபசங்கரித்த பின்னர் அரசனைத் தன் முற்பலங் காணுமாறு ஸ்ரீ சரசுவதிதேவி யனுக்கிரகஞ் செய்தல்:—என்பளவென.

என்பளவில் வேந்தனைநின் முதற்பிறவி ஞானத்தா லெளிது காண்கென்
றன்பினொடு கையினலவன் முடியை நாமகடொட் டருளலோடுந்
தன்பகையா மனவிருள்போய் லீலையுடன் வாழ்பதுமன் றனைக்கண்டா
னின்பமுற வியப்புற்றான் மாமாயை யிருந்தபடி யென்னே யென்றான். (58)

(ப - ரை.) என்பளவில் = என்று மந்திரிகூறி மௌனத்தை யடைந்தபோது,
வேந்தனே = மன்னவனே, நின்முதற்பிறவி=உனது பூர்வஜன்மத்தை, ஞானத்தால்=
விவேகத்தால், எளிது காண்க = சுலபமாய்க் காண்பாயாக. என்று அன்பினொடு =
என்று புகன்று பிரீதியொடு, கையினால் = திருக்கரத்தால், அவன் முடியை = அவ்விதா
ரதனது சிரத்தை, நாமகள் = ஸ்ரீ வாக்தேவி, தொட்டருளலோடும் = பரிசித்தருளிய
வுடனே, தன்பகையா மனவிருள்போய் = தனது விவேகத்தடையாகிய இருதய அந்த
காரமாயை நீங்கி, லீலையுடன் வாழ் பதுமன்தானாய் = லீலா நாயகியோடு கூடிவாழும்
பதுமராஜா தானாகவே, கண்டான் = பார்த்தான், இன்பமுற வியப்புற்றான் = ஆநந்த
முண்டாகும் வண்ணம் ஆச்சரியத்தை யடைந்தனன், மாமாயை இருந்தபடி யென்னே
யென்றான் = மாண் புடைத்தானமாயை இச்சமுசாரத்தைத் தோற்றிவைக்கும் விதம்
எவ்வளவு விசித்திரமாகத்தா னிருக்கின்றது என்றனன்.

(ஸ்ரீ-வீர.) அந்தகாரத்திற்கு வெகுதூர்க்கடகாரித் தன்மைத் தரிசனப்பொருட்டு
விசேடணம் மாயை யென்றதாம். லீலையாகிய பாரியோடு விலாசமா யிருப்பதாகக்கண்டு
இம்மாயை அதிவிலாசமாக வியாபித் துளதென வுரைத்தான். என்பளவில் = தங்களு
டைய தரிசனம் துர்லபமல்லவா ! இத்தகைய தரிசனத்தையன்றோ இப்பாக்கியவான்
அடைந்து பரமபவித்திரத்தை யடைந்தனர் எனக்கூறி மந்திரியானவன் மௌனமாக
விருந்தனன், அவ்வாறே மன்னவனும் நமஸ்கரித்து வணங்கிய முகத்தோடும் பூமியின்
கண்ணே பத்தபதும ஆசனத்திருந்தனன், அவனைநோக்கி ஹே அரச ! முன்ஜன்ம வர
லாறெல்லாம் நினைதிநீ விவேகத்தால் எனச் சுயமாகவே சரசுவதி தேவியானவள் தமது
திருக்கரத்தால் அரசனது சிரத்தைத் தடவிக்கூறினள், கூறவே ஹிருதய ஆகாசத்தி
லிருந்த ஜீவனை மறைக்கும் இருண்முதலியவை நஷ்டமாயின. ஞானதேவியார் பரிசித்த
மாத்திரத்தில் அவன் மனமானது சாந்தப் பிரகாசத்தோடு கூடியதாயிற்று, இருதயத்
தின் கண்ணே விளங்கித் தோற்றுகின்ற பூர்வ விருத்தாந்தம் யாவற்றையும் நினைந்து
கண்டனன், விடுத்ததேகத்தையும் சக்கரவர்த்தியாக இருந்து ஆண்டமையையும், லீலா
தேவியோடு விலாசித்துக் கொண்டிருந்த தன்மையையும், ஞானதேவியாரது திருவருளி
னது வலுவினாலே அனுபவிக்காத வாயினும் அறிந்தனன், மகாதேவியாரது விருத்தாந்
தத்தையும் லீலாதேவியினுடைய விசேட விருத்தாந்தத்தையும், தன்னுடைய முற்சரித்
திரத்தையும், கண்டு ஆனந்த சமுத்திரத்தின் கண்ணே மூழ்கியவன்போல ஆயினன்,
ஆ ! ஆ ஆ !! சமுசாரமயமாய் நமது மனதில் இம்மாயை இவ்வண்ணமன்றோ விரிந்து
கிடக்கின்றது என்ன அற்புதம் அற்புதம் என்றனன்.

(ச.) என்பளவில் = என்று சொல்லி மந்திரி சும்மாவிருந்தபோது, வேந்தனை =
அஞ்சலித்த கையினனாய் வணங்கிப் பத்மாசனத்திற் சும்மாவிருந்த நிருபனை, நாமகள்=
ஸ்ரீசரசுவதி, நோக்கி ராஜனே நீ, நின் முதற்பிறவி — அருளலோடும், தன்பகையாமன
விருள்போய் = இருதயத்தி லிருக்குந் தமமென்னும் பதுமனது விரோதரூபமாயை நீங்கி,
விரோதரூபமான மாயை பதுமனது இருதயத்திருக்குந் தமமாதலின் தன்பகையான விரு
ளென்பது பொருள். (சீவசேதன மறைத்துத் தமமயலாகிய வுலகத்திறத்திற்கெல்லாம்
மேவு காரணமாகி மாயை என்னும் பிரமாணத்தை யிவ்விடத்து ஊகித்துணர்க) லீலை
யுடன் வாழ்பதுமன்றானாய்க் கண்டான் = மற்றோருலகராஜனாய் அந்தப்புரத்தில் லீலை
யோடு இரமித்திருந்த பூர்வ விருத்தாந்தத்தை நினைத்தான், மாமாயை யிருந்தபடி யென்
னேயென்றான் = ஆன்மாவில் விஸ்தீரணமான சம்சாரத்தி லிருந்த மாயையிருந்தபடி

யென்னே யென்றான், இன்பமுற வியப்புற்றான் = தேவிகளே உங்களுடைய பிரசாதத்தினால் இப்போது இவ்விடத்தென்னால் அறியப்பட்டதென் றதிசயித்தான், ஆன்மாவில் = தன்னிடத்தில் விகாசமான சம்சாரத்தில், இந்த மாயைதேவிகளுடைய அனுக்கிரகத்தினால் என்னால் அறியப்பட்ட தென்று சொன்னானென்பது சம்பந்தம். (58)

(ஸ்ரீ - வீர - அ - கை.) முற்பிறப்பும் மாயாமகிமையுங் கண்டு ஐயங்கொண்டு விதூரதன் வினாதல்:—தாயரென.

தாயரிவராற் றெளிந்தே னெனநாடி யவர்சரணந் தலைமேற்சூடிப்
போயபவத் துடனீங்கி நாளொன்று மிவ்வுடலிற் புக்கபின்னைச்
சேயவெழுபது வருடஞ் சென்றதாற் செய்தவெலாந் தெளியாநின்றேன்
மாயமிது வென்கொலென மன்னவன் கேட்டலுங் கருணைவாணி சொல்வாள்.

(ப - ரை.) தாயரிவராற் றெளிந்தேன் = தாய்மார்களாகிய இவர்களது திவ்யகிருபையால் தெளிவை யடைந்தேன், எனநாடி = என்றெண்ணி, அவர் சரணந்தலைமேற்சூடி = அவர்தந் திருவடிகளைச் சிரமேலணிந்து, போயபவத்துடனீங்கி = சென்ற சென்மத்துத் தேகம்போய், நாள் ஒன்றும் = தினமேகமாம், இவ்வுடலிற் புக்கபின்னை = இத்தேகத்திற் புகுந்தபின்னர், சேய எழுபதுவருடம் சென்றது = நீட்சியான எழுபது வருடங்கள் சென்று விட்டன, ஆல் அசை, செய்தவெலாம் தெளியாநின்றேன் = செய்த அநேககருமங்களை எண்ணாநின்றேன், மாயமிது என்கொல் என = மன்னவன் கேட்டலும் = இது என்னமாயமோ திருவருள் செய்யவேண்டுமென்று அரசன் வினவுதலும், கருணைவாணி = தயைவடிவமான சரசுவதிதேவி, சொல்வாள் = அனுக்கிரகஞ் செய்வாளாயினள். (59)

(ஸ்ரீ - வீர.) தேவிமார்களது திருவருளாலன்றோ இப்போது யாவற்றையும் கண்டனன். ஹே தேவிமார்களே ! முன்னிறந்த எனக்கு ஒரு நாள்தானே ஆகியிருக்கின்றது இப்போதெனக்கு எழுபதுவருடம் கழிந்துளதே இஃதென்னே ! அநேக காரியங்களை ஸ்மரிக்கின்றேனே, மூப்பாட்டனையும் நினைகின்றேனே பாலியத்தையும் தாருண்யத்தையும் மித்திரர்களையும், நெருங்கிய பந்துக்களையும் நினைக்கின்றேனே இஃதென்னே என்று மன்னவன் விண்ணப்பிக்க, அதற்கு ஞானதேவியார் கூறுவாராயினர்.

(ச.) தாயரிவரால் தெளிந்தேன் எனநாடி அவர் சரணம் தலைமேற்சூடி, போயபவத்துடனீங்கி நாளொன்றால் = தேவிகளே பதுமரூபத்தான் மிருதமான எனக்கு ஒருதினம் சென்றது, இவ்வுடலில் புக்கபின்னை = இவ்விடத்திப்போது இவ்விரோத ஜன்மத்தில், சேயவீரெட்டாண்டு சென்றதால் = பதினாறு வயதாயிற்று, சேயவெழுபது வருடஞ் சென்றதால் என்றும் பாடமுளது. செய்ததெல்லாந் தெரியாநின்றேன் = அநேக கருமங்களையும், மித்திரபந்து பரிஜனங்களையும் ஸ்மரிக்கின்றேன், மாயமிது வென்கொலென = தேவிகளே யிதுவென்ன மாயமென்று மன்னவன் கேட்டலும், கருணைவாணி சொல்வாள் = ஞப்திமய ஸ்ரீதேவி வசனிப்பாள் என்றவாறு. தமிழ்மொழிபெயர்ப்பானது மும்மடித் தேவர்பாடத்தையே யனுசரித்த தாதலின் ஈண்டப்பாடமும் இருவகையாகியது போலும், ஆயினும் லீலைமுன்வந்து கண்டது ஈரெட்டாண் டாதலினானும் பின் வசிட்டப் பிராஹ்மணாதி கிருகாதி யாத்திரை முதலியன நடந்திருத்தலினானும் பெரிய வாசிட்டத்தில் பால்யத்தை ஸ்மரிக்கின்றேன் தாருண்யத்தை ஸ்மரிக்கின்றேன் என்றிருத்தலினானும் சேயவெழுபது வருடம் என்றபாடமே தகுமென்றுணர்க.

(ஸ்ரீ - வீர - அ - கை.) ஞானதேவியார் சர்வப்பிரபஞ்சமும் சொரூபத்தானே அதி
ஷ்டான சின்மாத்திர சொரூபமாகவே யிருக்கின்றது தோற்றமாகிய மற்றையதோமாயா
மாத்திரமேயாம் என்னும் உண்மையை யுபதேசிக்கும் பொருட்டு முதலில் தூரதேசகா
லத்திலிருக்கும் லோகாந்தர கமனமயக்கமகற்றி யுபதேசிக்கின்றூர்.—இறப்பென.

இறப்பென்னு மாமூர்ச்சை யெய்தியபின் னப்பொழு தவ்விடத்திற்றூனே
பிறப்பென்னு மாமோகம் பெரிதுண்டாம் விண்போலப் பிறங்கித்தூய்தாஞ்
சிறப்புள்ள வுன்மனதிற் செய்தொழிலா மயக்கமே தெரியாநின்ற
துறத்துன்னு மெழுபதாண் டுனக்ககன்ற தென்பதனை யுணர்ந்துநோக்காய்.

(ப - ரை.) இறப்பென்னும் மாமூர்ச்சை எய்தியபின் = மரணமகா மோகமூர்ச்சை
யின் பிராப்தியின் பின்னர், அப்பொழுது அவ்விடத்தில் தானே = அம்முகூர்த்தத்தி
லேயே அவ்வுலகத்திலேயே, அவ்வீட்டிலேயே, பிறப்பென்னும் மாமோகம் = ஜன்ம
மென்னும் மகாமயக்கம், பெரிதுண்டாம் = மிகமிகவு முண்டாகும், விண்போலப் பிறங்
கித்தூய்தாம் சிறப்புள்ள வுன்மனதில் = நிருமல ஆகாசம்போல நிருமலமாக விளங்கும்
உன்னுடைய சித்தத்தில், செய்தொழிலாம் மயக்கமே தெரியாநின்றது = செய்யாநின்ற
விவகாரவித்தாரப்பிரமமே தோற்றூநின்றது, உறத்துன்னும் எழுபதாண்டகன்றது
உனக்கு = அநேகவிததிட விவகாரத்துடன் மிருதிகளுடன் எழுபது வருடம்கழிந்த
தன்றூ வுனக்கு, என்பதனை யுணர்ந்து நோக்காய் = என்னும் இதனை நீயே உய்த்து
நோக்குவாயாக.

(ஸ்ரீ -வீர.) பார்க்கப் படுவதனூனே லோகம் என்னும் விற்பத்திகொண்டு உலகம்
தேகமாம். பிறப்புமுதலன அதிவிஸ்தாரமாக வுற்பன்னமாம். அதேவீட்டில் அதேமன
தில் அக்காலத்திலேயே தோற்று மென்ப ாம். விவகாரமயக்கங்களினூலே வியாபிக்கப்
பட்டுளதாம். தோற்றுவதையே லேசமாகக் காண்பிப்பார் எழுபதாண்டென்றூர். மநு
டர்க்குவருடம் நூறல்லதில்லையெனக் கூறப்பட்ட ஆயுளைச் சம்பந்தித்த எழுபது வரு
டங்கள் சென்றுவிட்டன வென்னுந் தோற்றம் உண்டாகி யிருப்பதை யாராய்வாய்.
மரணமகா மூர்ச்சையின் பின்னரே அதேகாலத்தில் இந்நினது வீட்டிலேயே இதன
திஷ்டான சிதாகாசத்திலேயே இருப்பதும் மாயாவரணத்தான் மறைபட்டதாய கிரிக்
கிராமத்த அந்தணன் வீட்டினுள்ளே யிருப்பதும் அப்பதுமாண்டத்தி லிருப்பதும், அவ்
வரண்மனையிலேயே யிருப்பதும், அதனினும் பிரதான கிரகத்தினுள்ளே யுள்ளககனத்
தேயிருப்பதும் ஆம் இப்பிரமாண்ட மண்டபம், இந்தப்பிரமாண்ட மண்டபத்தினுடைய
உள்ளே இப்போது காணப்படும் நினது ஜன்மாதிபுதிதாகவே தோற்றும்; ஆனூலவ்வந்த
ணன் ஜகத்தே இங்ஙன்றூேற்றுகின்றதோ வெனின், இன்றும், மற்றூேவேறுவேறுகவே
இவ்வுலகவீடானது தோற்றுகின்றது; மறையவனில்லத்தே எமது பக்தனூகிய ஜீவனு
ளன், ஆண்டேயவனது பூபீடம் அம்மண்டபத்தேயுளது, அவ்வில்லத்தே இப்பதுமசமு
சாரமண்டலமுளது, அப்பதுமக்கிரகமண்டபத்தையேயடையவே யாரம்பிக்கப்பட்டதா
யிந்த நினது வீடிருக்கின்றது, மூவுலகமுமே மனூேவிகாரமாத்திரமா யிருக்கின்றதாத
லின் நினது நிருமல ஆகாசமயமாய நிருமலமனத்தின் கண்ணே இவ்விஸ்தார விவகார
மயக்கத்தினுடைய பிரதிபிம்பமான துண்டாகி யிருக்கின்றது (நிருமலக்கூற்றுப் பிரதி
பிம்பப் பொருட்டாம்) விவகாரமயக்க விஸ்தாரம் கண்கண்டதைக் கொண்டே கருதலா
மன்றூே ! என்ஜன்மம் வெளியாயிருப்பதே போலயான் இக்குவாகுகுலத்தன் என்பதும்
வெளியேயாம், என்பெயரின்னது, எனக்குமுன்னே பாட்டன்மாரிருந்தார். யான்பிறந்து

பாலகன், எனக்குப்பத்து வருடத்தில் பிதாராஜ்யமீந்து பரிவிராட்டாய்த் தவப்பொருட்டுச்சென்றனர், யான் அரசனுய்த் திக்குவிஜயஞ்செய்து சக்கிரவர்த்தியாகி இம்மந்திரிமாரோடும் நீதியாய்ப் பிரஜாபரிபாலனஞ் செய்கின்றேன் யாகாதிகளும் தருமாதிகளும் முறைபிறழாது செய்கின்றேன், இப்போதெனக்கு எழுபது வருடமாயிற்று, பகைவராற் பெரும்பாயுளது, போர்புரிந்தலுத்துச் சயனித்தேன், தேவிமாரைப் பூசித்தேன், ஒரு தேவி பூர்வஜன்ம மறியுமாறு உணர்வளித்தாள். என்னிதயம் உணரவேண்டியதை யுணர்ந்து கிருதகிருத்தியத் தகைமையை யடைந்துவிட்டது, ஐயங்களும் சர்வதுக்கங்களும் நீங்கிவிட்டமையின் மகாசாந்தனுயினேன், நிரதிசய சுகமுற்றுப் பொங்கித்ததும்பிப்பூரித்தேன், கேவலம் ஏகரச சுகரூபமாகவே துலங்குகின்றேன் என்பதாக இங்ஙன் பெருமயக்கம் மிகநிறைந்துண்டாகி யிருக்கின்றது இதனை யுய்த்துணருதி.

(ச.) ஞப்தி இராஜனே, இறப்பென்னும் மாமூர்ச்சையெய்திய பின் = மகாமோக மூர்ச்சையின்பின், அப்பொழு தவ்விடத்திற்றனே, பிறப்பென்னு மாமோகம்பெரிதுண்டாம், அக்காலத்து அக்கிரகத்திற்றனே இந்தச் சனனசர்க்க மென்னும் அபாரப்பிரமையாம், அதுவே விண்போலப் பிறங்கித் தூய்தாம் சிறப்புள்ள வுன்மனத்தில் = நிர்மலாகாசம்போல் நிர்மலமான வுனது சித்தத்தில், செய்தொழிலா மயக்கமே தெரியா நின்றது = இந்தப் பிரதிபாச மாத்திரமான விவகாரமென்னும் பிரமையை அறிகின்றது, உறத்துன்னும் ஈரெட்டாண்டு உனக்ககன்றது என்பதனை யுணர்ந்து நோக்காய்.

(ஸ்ரீ:- வீர - அ - கை.) மருட்சியானே காலதீர்க்கந் தோற்றலைக் கூறி ஞானோபதேசஞ் செய்தல்:—கடிகையென.

கடிகையிரண் டினினெடிய காலமுறுங் கனவொக்குங் கழிந்தவாணுட்
படியுறுமாயா விகற்பநனவிலே வெகுவிதமாய்ப் பரந்து தோன்றும்
நெடியபிறப் பிறப்பென்று நினக்கில்லை மெய்ஞ்ஞான நினக்குருப
முடிவில்பதத் திருக்கின்றாய் சகமெல்லாங் கண்டிருந்து முழுதுங்காணுய்.

(ப - ரை.) கடிகை யிரண்டினில்=முகூர்த்த மாத்திரத்தில், நெடியகாலம் உறும்= சம்வற்சர சதப்பிரமம் உண்டாம் படியான, கனவொக்கும் கழிந்தவாணுள் = சொப்பனத்திற்குச் சமானமாம், சென்ற நினது வாழ்நாள், படியுறுமாயா விகற்பம் = எல்லாத் தோற்றங்கட்கும் காரணமாய மாயாவிலாசம், நனவிலே = ஜாக்கிரத்தின் கண்ணே, வெகுவிதமாய் = அநேகவகையாக, பரந்து தோன்றும் = விஸ்தரித்து விளங்கும், நெடிய பிறப்பிறப் பென்று நினக்கில்லை = உண்மையாகவோ ஜனனமும் மரணமும் ஒருபோது முனக்குக் கிடையவே கிடையாது, மெய்ஞ்ஞானம் நினக்குருபம் = சுத்த விஞ்ஞானரூபமே உண்மையா யுனது வடிவமாம், முடிவில் பதத்திருக்கின்றாய் = பரமசாந்தமான ஆன்மாவின் கண்ணே நீ நிலைபெற் றிருக்கின்றாய், சகமெல்லாங் கண்டிருந்தும் முழுதும் காணுய்= இவ்வியாவற்றையும் நீ யெப்போதும் பார்த்துக் கொண்டிருந்த போதினும் ஒன்றையுமே காணும லிருக்கின்றாய்.

(ஸ்ரீ - வீர.) ஆயின் என்னே உண்மையா யிருத்தல் எனக்கடாவ விடையளிப்பார், நெடிய பிறப்பென்றார். தத்துவ திருஷ்டியைப் பற்றிப்பகருவார் காணுயென்றார். ஒவ்வொருகால் சிருஷ்டி லக்ஷ்மியானது சேர்ந்தும் சேராமலும்வளரும், நனவின்கண்ணே வேறுஜீவர்களுடைய சர்க்கத்தோடு சேரும் கனவின் கண்ணே சேராதாம், அம்மரணமுற்ற முகூர்த்தத்தில் ஞானபானுவாய நினக்கு இத்தோற்றமெல்லா முண்டாம், இவ்வசத்துருபக் கூட்டமெல்லாம் உண்டாம், கனவினிற் கடிகையொன்றிற் கண்டாமன்றே

நூறுவருடமயல், சங்கற்ப நிர்மாணங்களில் ஜீவனம் மீண்டும் மரணங்கண்டாம், கந்தர்வ நகரத்திற் குட்டியங்களையும் அதன் கண்ணுற்ற சித்திரங்களையும் கண்டாம், ஓடமோட அதனுள் ளிருப்பவனுக்குப் பக்கத்திருக்கும் விருக்ஷமும் பர்வதமும் ஓடுவதன் காண்கை யுங் கண்டாம், தன்னுடைய தாதுக்களாகிய வாத பித்த சிலேஷ்மங்கள் கலக்கமுறவே சந்நிபாதமுண்டாக அபூர்வமாகப் பர்வதநர்த்தன முண்டாதலுங் கண்டாம், கனவின் கண்ணே விவகாரத்திற்குப் பொருத்தமறப் பொய்யான தன்றலைவெட்டித் தன் கரங் கொண்டேகலும் கண்டாம், இவ்வண்ணம் மித்தையாகவே மிகப்பெருமையதும், அகற் றலாகாததும், ஆகிய பெரும்பிராந்தி யிதுவாம், ஆயின் பரமார்த்த சத்தியமாயிருப்பது யாதெனின், உண்மையாக நீயொருகாலத்திலும் உண்டாகவு மில்லை மரிக்கவுமில்லைதூய நல்லறிவு மயமாயிருக்கின்ற நீ சாந்தனாய் நின்வடிவின் கண்ணே நிலைபெற்றுளாய், திரு சியமியாவும் பொய்யாகுங்கால், அதனோடுகூடிச் சிதாபாச வடிவமாகக் காண்குதலும் பொய்யேயாகலின் நிர்விஷய சின்மாத்திரமே சேடித்து நிற்கும், எவ்விவ்வியாவற்றையும் காண்கின்றனையோ இவையாவற்றையுமே காண்கின்றிலாய்

(௪.) கடிகை யிரண்டினி னெடியகாலமுறுங் கனவொக்கும் = ஒரு முகூர்த்தத்திற் சதவருஷம் இராச்சிய சுகத்தை யனுபவித்தே னென்பது முதலிய பிராந்தி மாயாவிலா சத்தால் எழுஞ் சொப்பனத்துக் கொப்பாம். கழிந்தவாணுட் படியுறு மாயாவிகற்ப நன விலே வெகுவிதமாய்ப் பரந்து தோன்றும், படியுறும் = பூமியிற் சரிக்கும், நனவிலே வெகுகாலப் பிரமையினால் பரந்துதோன்றும், சர்வசம்சாரமும் மாயிகமாதலி னென்பது பொருள். நெடியபிறப் பிறப்பென்றும் நினக்கில்லை = நீயொருபோதும் பிறந்தவனு மன்று இறந்தவனுமன்று, மெய்ஞ்ஞான நின்சொரூபம் = நீ சுத்தவிஞ்ஞானரூபன், முடி வில் பதத்திருக்கின்றாய் = ஆன்மாவிற் சாந்தனாயிருக்கின்றாய், ஆன்மா நிர்விகாரத்தால் எப்போதும் சொரூபமாகவே யிருக்கின்றா ரென்பது கருத்து. எப்படி யான்மாவிற்குச் சநநமரணாதி மித்தையோ அப்படிச் சகசிருட்டியும் மித்தையெனல்: சகமெலாங் கண் டிருந்தும் முழுதுங்காணாய், முழுதும் = எவ்வளவும், பிராந்தியால் அனைத்தும் பார்க்கி றாய் உண்மையாக அணுவும் பார்த்திலை, யென்பது பொருள்.

(ஸ்ரீ-வீர - அ-கை.) வஸ்துவின் றிதியானது அங்ஙன மிருந்தபோதினும் மூகரறிவ தில்லை யென்கின்றார்:—எல்லாமென.

(ச-அ-கை.) ஆயின் தோற்றுவ தென்னெனில் உத்தரம்:—எல்லாமென.

எல்லாமா மியல்பினாலுன்னா லுன்னிடத்தி லிருந்திலங்கா நின்றாய், சொல் லாமைந் தரைப்பிடித்த தொட்டிலிற் பேய்சுடலையிற் போந்தொன்மை போ லப், பொல்லாத மூகர்க்குப் புவியுறுதியாய்த் தொன்றும் பொன்காணாதோ, ரல்லாது பணியென்பர் தற்பரத்தைக் காணாதோ ரகிலமென்பர்.

(ப - ரை.) எல்லாமாம் இயல்பினால் = சர்வான்மகத் தன்மையினாலே, உன்னால்= ஆன்மாவினால், உன்னிடத்தில் = ஆன்மாவினிடத்தில், இருந்திலங்கா நின்றாய் = நித் தியம் விளங்குகின்றாய், சொல்லாமைந்தரைப் பிடித்தபேய் = மூகபாலகரைப் பீடித்த வேதாளம், தொட்டிலிற் சுடலையிற் போந்தொன்மை போல = தொட்டிற் காலமேமுத லாக மயானம் போம்வரை தொடர்ந்து துயர்தருவதே போல, பொல்லாத மூகர்க்கு = அசுத்தமதிவாய்ந்து மூடராகிப் பரம்பொருளை நாடாதவர்க்கு, புவி உறுதியாய்த் தோன் றும் = அசத்தாகிய பூலகம் சத்தாய் வஜ்ரசாரம் போற்றிடதரமாய்த் தோற்றுநிற்கும், பொன்காணாதோர் = கனகத்தைக் காரணமா யறியாதவர், அல்லாது = பொற்றிருட்

டியைவிட்டு, பணியென்பர் = அணியென அறைவர், அதுபோலத் தற்பரத்தைக்காணு தோர் அகிலமென்பர் = அதிஷ்டான பரமாத்மாவாகிய தம்மையுள்ளபடி கண்டறியாத வர் திருசியநாமரூப முளதெனக் கண்டுதிகைப்பர்.

(ஸ்ரீ - வீர.) விளங்குகின்றாய் = விஸ்புரண மாகின்றாய், இப்போது உபந்யசித்த அறிஞனது திருட்டியைப் புகழுதற் பொருட்டும், அதன்மாறாய திருஷ்டியை விடுதற் பொருட்டும் வித்வத் திருஷ்டியைப் புகழுவார் பொல்லாத வென்றார். எங்குநிறைந்த பதத்தின் கண்ணே அழுத்தமற்றவர் உண்மையாக வுலகம் இன்மையதாகவே யிருந்த போதினும் அம்மகா மூடனுடைய திருஷ்டிக்கு பரமார்த்த சத்தாகவும் வஜ்ஜிரசாரமா கவு மிருக்கும், வஜ்ஜிரத்தின் சாரம்போல் அதிதிடதரமாக விருக்கும். பாலவேதாள மென்பது பாலன்தன் சாயையில் ஆரோபித்ததாம், மரணபரியந்தம் துக்கத்தைக் கொடுத்துக் கொண்டே யிருக்கும் அது சத்தியமாகத் தோற்றுவதேபோல மூடமதிக்கும் உலகம் சத்தியமாகவே தோற்றிக்கொண் டிருக்கும், மருப்பூமியிற் றோற்றும் தாபநீரை யேமயலான் மான் நன்னீரென மயங்கும். கடககற்பனைக் கதிஷ்டான பூதமாய கனக விடயத்தில் அவிவேக முடையவனுக்குக் கனகவிகிருதமான கடகத்தில் கடகமிஃதா மென்னும் மாறுபட்ட வுணர்வேயுளதாம், ஒரு சிறிதும் ஹேமமதியே யின்றாம், இது கடகமன்றாம், மற்றேபொன்னே யாமென்னும் மதியுளதாவதே கிடையாது. இத்திருஷ்டாந்தம் போன்றே அஞ்ஞனுக்கும் அதிஷ்டானப் பிரஹ்மஞான மில்லாமையின் திருசியப் பிராந்தியே யுளதாம் அயலாகப் பரமார்த்த திருஷ்டியே கிடையாதாம், இது திருசியம் இல்லை, மற்றே பிரஹ்மமேயாம் என்னும் பிரமிதியுண்டாவதே கிடையாது. காடாகவும் மலையாகவும், கயமாகவும் பாம்பாகவும், மாடாகவும் மரமாகவுமே காண்பன் என்பதாம். நின்னாலேயே நின்னிடத்தில் நித்தியம் எல்லா வடிவமாகியே யிலங்குகின்றாய்' விகாரம் வாக்கினால் விரிந்திடும் பெயரே, உகாமண்டானே யுண்மையதாகும், எனயாவும் வாசிகமேயாம். வித்வான்களது திருஷ்டியினானே உலகின்பொய்ம்மையை விஸ்தாரமாக வருணித்து அதனைத் திடப்படுத்தும் பொருட்டு அஞ்ஞ திருஷ்டியினானே அதற் கத்தியந்த திடசத்தியத் தன்மை கூறுவார் பொல்லாத வென்றார். அறியாமதியனாய் மூடனாய் விஸ்தாரபதத்தில் திடமான விற்பத்தியில்லானா யிருக்கும் அவனுக்கு, இவ்வுலகமானது அசத்தாக இருந்தபோதினும், திடமான வஜ்ரசாரத்திற் கொப்பாக அதிதிடமான சத்தாகவே யிருக்கும்; இவ்வுலகத்தின் கண்ணே அர்த்தக்கிரியா காரித்தன்மையானே சத்தியத்தன்மை பிரசித்தமாமென்க. அசத்தாயினும் அஞ்ஞனுக்கு அர்த்தக்கிரியா காரித் தன்மையானே சத்வமாதல் கண்டதுண்டோ வெனின்? உண்டாம், பாலகனுக்குத் தோற்றிய வேதாளமானது மரணபரியந்தம் துக்கத்தைக் கொடுப்பதே யாமன்றோ, அதுபோல அசத்தேயாய ஜகத்தானது மூடபுந்தியனுக்குச் சத்துவடிவமாகத் தோற்றுகின்றது; மருப்பூமியாதபன்றானே அஞ்ஞமிருக திருஷ்டியால் உண்மை நீராய் மிருகங்கட்கு மயக்ககாரண மாவதேபோல அசத்தியமேயாய இவ்வுலகமானது மூடமதியனுக்குச் சத்தியமாகத் தோற்றும். ஜந்துக்கட்குக் கனாமரணமானது அசத்தியமாகியும் சத்தியமாகத் தோற்றுவதேபோல மூடமதியினர்க் குலகமானது சோக ரோதனாதியர்த்தக்கிரியா காரியாகத் தோற்றும்; தொடர்ந்து தோற்றும் கனக சொரூபத்தை யறியாதவனுக்குக் கனகத்தாலாய கடகத்தே, கடகவுணர்வே யிருக்கின்றதன்றித் தங்கமதி சிறிதுங் கிடையவே கிடையாதாம்; அஃதொப்ப அறியானுக்கு வீடுகளும் மலைகளும் விருக்ஷங்களும் கஜங்களும் நாகங்களும் புரங்களும் ஆகிய இவற்றின் அதிஷ்டானமா யிலங்கும் சர்வ அனுகத ஏகசற்பிரஹ்ம திருஷ்டி கிடையவே கிடையாது இவற்றின்கண் மாறாயதிருசிய மென்னும் திருஷ்டியே யுளதாம்.

(ச.) எல்லாமாமியல் பினுலுன்னு லுன்னிடத்தி லிருந்திலங்கா நின்ருய் = தற் சொரூபமே சர்வான்மகமாதலின் அப்படி யப்படிப் பிரகாசிக்கின்ற தென்பது பொருள். உன்னுலுன்னிடத்தில் = ஆன்மாவால் ஆன்மாவில்; பாமரன் பிரபஞ்சத்தையே பரமார்த் தம்போல் நினைக்கின்றனனுலோ வெனின் ? சொல்லாமைந்தரைப் பிடித்த தொட்டிலிற் பேய் அசத்தேயான வேதாளஞ் சத்தாகாரமாய்ச் சுடலையிற் போங் தொன்மைபோல் = மரணபரியந்தந் துக்கங் கொடுப்பதுபோல, பொல்லாத மூகர்க்குப் புவியுறுதியாய்த் தோன்றும் = பிரஹ்மத்தி லிரமியாத அசுத்தமதியுடைய மூடர்க்கு அசத்தான சகமே சத்தாகாரமாகப் பிராமாணிகமாகத் தோன்றித் துக்கங்கொடுக்கும், மருமரீசிகாரூபமான ஆதபமே மிருகங்களுக்குப் பிரமையாற் சலமாவதுபோல மூடமதியுடையோர்க்கு அசத் தியமான சகத்தே சத்தியம்போலா மென்றுணர்க. பொன்காணுதோ ரல்லாதார் பணி யென்பர் தற்பரத்தைக் காணுதோ ரகிலமென்பர் = அல்லாதார் = விற்பன்னமற்றவர், பொன்காணுதோர் = கனகசம்பந்தமான கடகத்திற் கனகத்தைக் காணுதவராய், பணி யென்பர் = ஆபரணமென் றெண்ணுபவராவர். கடக ஞப்தியினரேயன்றி எவ்வளவும் ஏமபுத்தியினர் அல்லர்; அதுபோல, தற்பரத்தைக் காணுதோர் = இந்தத்திருசியந் திருக் கேயாம் அன்னியம் அன்றென்னும் பரமார்த்த திருட்டியின்றிய அஞ்ஞர் அகிலமென் பர் = புராகார நரநாகேந்திரராக விலங்காநின்ற அபரமார்த்த திருஷ்டியை யுடையவ ராவர், காரணசொரூப மறியாத காரியபுத்தியே யுடையார்க் கக்காரியமே பரமார்த்த மாகத் தோன்று மென்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இங்ஙனந் தள்ளத்தக்கதாகிய அஞ்ஞதிருஷ்டியைக் காண் பித்துக் கொள்ளத் தக்கதாகிய தஞ்ஞதிருஷ்டியை **விஸ்தரிக்கின்ருர்:—தஞ்ஞன்** = அதையறிந்தவன்—**தனையென.**

**தனைமுதலாய்க் காண்கின்ற சகமெல்லா நீள்கனவாஞ் சகத்திற்ருேன்று**
**மினையபொருள் களுங்கனவிற் காண்கின்ற பொருள்களா மென்றுதேர்வா**
**யினையபொருள் களுங்காணு வறிவுமாத்திரம் வடிவாய வனைத்துமேவி**
**வினையில்செறி வாய்க்கனமாய்ச் சுத்தமாகிப் பிரமவிண்ணே யுண்டாம்.**

(ப - ரை). தனைமுதலாய்க் காண்கின்ற சகமெல்லாம் = சித்த அகந்தை முதலிய வற்றுடன் கூடியிலகும் இவ்வுலகம் யாவும், நீள்கனவு ஆம் = தீர்க்கசொப்பனமாம், சகத்தில் தோன்றும் இனையபொருள்களும் = சாக்கிரத்தின்கண் ணீண்டு புலப்படும் பதார்த்தங்களும்/ கனவிற் காண்கின்ற பொருள்களாம் என்று தேர்வாய் = கனவிற் ருேற்றும் பொருள்கள்போலவே யாமென்ன வெண்ணுதி, அனையபொருள்களும் காணு = அத்தகைய பதார்த்தங்களும் புலப்படா, அறிவுமாத்திரம் வடிவாய் = சின்மாத்திர வடிவாய், அனைத்துமேவி = சர்வகதமாய், வினையில் = சாந்தமாய், செறிவாய் = பர மார்த்தமாய், கனமாய் = ஏகரசமாய், சுத்தமாகி = சுசியாய், இலங்கும், பிரமவிண்ணே யுண்டாம் = வியாபக பரம ஆகாசமே யுளதாம். (63)

(ஸ்ரீ - வீர.) ஈண்டுலகில் கனுகாண்பவற் கயலாகச் சொப்பன திருட்டாப் புருடர் எங்ஙனம் மித்தையோ அங்ஙனமே, நனுப்புருடனுக் கயலாய இப்புருடர் மித்தையே யாவர். கனம் = நிரந்தரமெனவுமாம், அவிடய சின்மாத்திர சொரூபமாய்ப் பரம ஆகாச மாயிருக்கும் பரம்பிரமம் சர்வகதமாகி நிரங்குசமா யுளதென வுணர்க. அகந்தாதிகளு டன்கூடி யிராநின்ற தீர்க்கசொப்பனமாம் இவ்வுலகம், தன்னினும் அயலாயிருக்கும் சத் தியஜனங்கள் கனவிற்கண்ட வேறுபுருடர்களே, ஆயின் அவர்கள் எங்ஙனம் சாஸ்திரங்

களிற் கூறிய வேட்டல் வாங்கல். கூறன் முதலிய அர்த்தக்கிரியா சமர்த்தர்களாய்ச் சத்தியர்களெனச் சாஸ்திரங்களி லங்கீகரிக்கப் பட்டுளார்கள் ? சத்தியர்கள் ஆகுமாறுகூறக் கேட்குதி ! சர்வாதிஷ்டானமாயும் சாந்தமாயும் " பிராணன்களே சத்தியம் அவற்றினுமிது சத்தியம் " என்னும் மறைமொழியின்படி நிரதிசய சத்தியமாயும் சுசியாயும்திருசியமற்ற சின்மாத்திர வபுவாயும் விஸ்தாரமாய பரமாகாசமாயும் அப்பொருளிருக்கும்.

(ச.) தனைமுதலாய்க் காண்கின்ற சகமெல்லாம் நீள்கனவாம் = அகங்காராதியாய்த் தோற்றும் இந்த விசுவத்தைத் தீர்க்க சொப்பனமா மென்றறி, கனவிற் காண்கின்ற பொருள்கள் சகத்திற்றோன்று மினைய பொருள்களுமா மென்று தேர்வாய் = சொப்பனத்திற் சொப்பன புருடாதிகள் நினக்கன்னியமாகத் தோற்றுவனபோல் இச்சாக்கிர சம்பந்தமான புருடாதி வஸ்துக்களும் பின்னமாகத் தோற்றுகின்றன வென்றுணர்தி; சேதநா சேதந விடய மனைத்துமான பேதாபாசம் மித்தையேயாமென்பது பொருள். சாக்கிரத்திலென்பது சகத்தில் என்று மயங்கிநின்றது. அனைய பொருள்களுங் காணுவறிவு மாத்திரவடிவா மனைத்துமேவி வினையில் செறிவாய்க் ககனமாய்ச் சுத்தமாகிப் பிரமவிண்ணே யுண்டாம் = திருசிய சம்பந்தமற்ற திருக்குமாத்திர ரூபமான சிதாகாசான்மகமே சர்வகதமாய்ச் சாந்தமாய் வியாபகமாய் பரமார்த்த கனமாய்ச் சுசியாயிருக்கின்றதாம்.

(ஸ்ரீ-வீர-அ-கை.) அதனது மாயாசபல ரூபத்தைக் கூறுகின்றார்:—முழுதுமென.

முழுதுமாய் முழுதுடைத்தாய்ச் சத்திமுழு துமுள்ள மூர்த்திதானே
பழுதிலாதெவ் விடத்தெப் படிதோன்று மவ்விடத் தப்படியேதோன்றும்
வழுவிலா மெய்ஞ்ஞானநிலை லீலைபொருட் டாநும் வழங்கப்பெற்றாய்
நழுவிலா வுண்மையொடுந் தெளிந்தனையாம் போதுமென நவிலலோடும்.

(ப - ரை.) முழுதுமாய் = யாவுமாய், முழுதுடைத்தாய் = சர்வகமாய், சக்திமுழுதுமுள்ள = சர்வசக்தியு முடைய, மூர்த்திதானே = பரமேசுரர்தானே, பழுதிலாது = குற்றமிலாது, எவ்விடத்து = எங்கு எங்கு, எப்படி = எவ்வாறு, தோன்றும் = புலப்படும், அவ்விடத்து = அங்கு அங்கு, அப்படியே = அவ்வாறே, தோன்றும் = புலப்படும், வழுவிலா = கெடாததான, மெய்ஞ்ஞானநிலை = உண்மை யுணர்வின் றிதியை, லீலைபொருட்டால் = நினது நாயகியினது நிமித்தமாக, நாம் வழங்கப்பெற்றாய் = யாமனுக்கிரகிக்க நீ பெற்றுக்கொண்டாய், நழுவிலா உண்மையொடுந் தெளிந்தனை = மாறாத திருஷ்டாந்த திருஷ்டிகளையும் அடைந்தனை சொரூபமறிந்தனை, உனக்குச் சுவஸ்தியுளவாகுக, யாம்போதுமென நவிலலோடும் = யாம்செல்வேமாகவெனக் கூறியபோது.

(ஸ்ரீ - வீர.) யாவற்றையு முணர்தலிற் சர்வகமாம், அதுயாவுமாம் என்பது வாதையில் ஒரு நிலைக்களம் மருவுதலாம், அதுவே சர்வங்களிலும் ஆத்மசொரூபமாய் உட்கோர்த்திருத்தலின் சர்வான்மகமுமாம். லீலைபொருட்டு = லீலைக்குப் பிரபஞ்ச மித்தியாத்தன்மையில் திருஷ்டாந்த சித்தியின் பொருட்டு அல்லது லீலையானது பிரீதியின் பொருட்டு இங்ஙனுபதேசிக்கப் பெற்றாய், திருஷ்டாந்த திருஷ்டிகள் = பிரபஞ்ச மித்தியாத்தன்மையில் திருஷ்டாந்த நிச்சயங்கள் அடையப் பெற்றாய். எங்குமிருப்பதும் எல்லா ஆற்றலுடையதும் எல்லாமாவதும் எல்லாவடிவ மாவதும் சுயமும் மாயையினாலே எங்கெங்கு எத்தகைய எத்தகைய எத்தகைய அர்த்தக்கிரியா யோக்கியமாக ஆவிர்ப்பவிக்கின்றதோ அங்கங்கு அவ்வத்தகைய தாகவேயாம், ஹேமன்னர் மன்ன ! இவ்விஷயம் தத்துவமானது லீலையின் பொருட்டாக இனிதருளினோம், நினக்கு வாஞ்சித சித்தி

யானதுண்டாகுக, உரைத்தவுலகம் பொய்யென்பதனது திருஷ்டாந்த திருஷ்டிகள்
மண்டபத்தடங்கிய னினது பிரஹமாண்ட கற்பனை யிலக்கணங்கள் லீலையாற் காணப்
பெற்றன, யாம்செல்கின்றோம் என்பதாம்.

(ச.) முழுதுமாய் முழுதுடைத்தாய்ச் சத்திமுழுதுடைய மூர்த்திதானே = சர்வகத
மாய் அதிற்றோற்றுவதான வாகிய வஸ்துரூபமுடைய சர்வான்மகமாய் சர்வசக்திமானு
கிய அந்தரியாமிரூபமான வத்துசககாரி நிரபேக்ஷயாகவே, பழுதிலா தெவ்விடத்தெப்
படிதோன்றும் அவ்விடத் தப்படியே தோன்றும் = எவ்விடத்து எவ்விடத்து எந்தப்
பிரகாரமாக வுதிக்கின்றதோ அவ்விடத்தவ்விடத்து அந்தப்பிரகாரமாக விருக்கும்; சத்
தியசங்கற்பத்தினு லென்பது கருத்து. வழுவிலா மெய்ஞ்ஞானநிலை லீலைபொருட்டா
னும் வழங்கப்பெற்றாய் = இராஜனே இத்தன்மையான அவ்வஸ்துவையே உன்லீலார்த்
தம் யான் உபதேசிக்க நீபெற்றாய், நழுவிலா வுண்மையினைத் தெளிந்தனை = சித்தாந்த
திருஷ்டிகளை யறிந்தனை, நீசுகமாயிருவென் றாசீர்வதித்து, இயாம்போதுமென நவில
லோடும் = யாங்கள் போவோமென்று சொல்லவும்;

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வண்ணம் ஸ்ரீ சரசுவதி தேவியினால் மதுரவர்ணங்க
ணிறைந்த வாணியானது நிகழ்ந்தபோது மகாமதிமானும் பூமிபாலனுயு மிலங்கும் விதூ
ரதன் இயம்பத் தொடங்கல்:—இது என.

இதுபுகலக் கேட்டரச னெனையடைந் தோர்களும் வேண்டிற் றெய்தா
நிற்பர், புதுமணி நேருமைப்பணிந்து புகழ்ந்தேன் வேண்டிய தெய்தல் புது
மைத்தாமோ, பதுமவுட னுடைவ தென்றென்ன விப்போரிற் படுவை
பட்டா, லதுபுகுவை யெனக்கலைமா தளித்தலுமேற் றலத்தொருவ னறைவ
தானுன்.

(ப - ரை) இதுபுகலக்கேட்டு அரசன் = மேன்மிழற்றிய வண்ணங் கேட்டுக்
கொண்டிருந்த இராஜன் எனை அடைந்தோர்களும் = அடியேனிடத்திற் சரணுகதி
யுற்றவர்களும், வேண்டிற் றெய்தாநிற்பர் = வேண்டிய வேண்டியதைத் தடையின்றிப்
பெறுவர் என்றால், புதுமணிநேர் உமைப்பணிந்து புகழ்ந்தேன் = நவசிந்தாமணியொத்த
உம்மை நமஸ்கரித்துப் பூசித்துத் தோத்தரித்த அடியேன், வேண்டியது எய்தல் புது
மைத்தாமோ = விரும்பிய தடைதல் அற்புதமென் றறையலாகுமோ, பதுமவுடல் நான்
அடைவது என்று என்ன = பகர்ந்தருளி பதுமராஜ சரீரத்தை யடியேன் கிட்டுவது
எப்போது என்று கேட்ப, ஸ்ரீதேவி கூறல்: இப்போரில் = இந்தயுத்தத்தில், படுவை
பட்டால் = இறப்பாய் இறந்தவுடனே, அதுபுகுவை = அதனையடைவாய், எனக்கலை
மாது அளித்தலும் = என்று ஸ்ரீவாக்குத்தேவி யருள்செய்து முடியவும், மேற்றலத்தொ
ருவன் அறைவதானுன் = மேற்றலத்திருந்த ஒரு நரன் விண்ணப்பிப்பதானுன். (65)

(ஸ்ரீ - வீர.) ஹே பரமேச்சுரியே! அற்பமான சாமர்த்திய முடைய எம்போலிய
மனுடமாத்திர ரிடத்தும் வேண்டினோர் பயனற்றவராக ஆகார் என்றால் மகா பலன்களை
யருள் செய்யும் தங்களுடைய தரிசனம் எவ்வாறாமென என்சொல்வது? யான் இதன்
பின்னர் இவ்வுலகத்தை விடுத்தும் தேகத்தை யொழித்துப் புராதனமானதைக் கனவி
னின்றும் வேறுகனவை யடைவதேபோலத் தடையில்லாமல் என்று அடைவேன்?
அடையும்போது இம்மனைவி மந்திரியாதியரும் கூடவே வருதல்வேண்டும். என்ன,
அவன் விரும்பியவரும் பொருள்களையும் வெளிப்படையாகக் கூறிச் சேஷவரங்களையும்
ஸ்ரீதேவி கொடுக்கத் தொடங்கிக் கூறுவதாவது: ஹே ராஜாவே இந்தப் போர்க்களத்

தில் இப்போது உயிர்விடுவாய் விட்டபின் பழைய இராஜ்யத்தை யடைவாய் நினக்கு யாவும் பிரத்தியக்ஷ மாகவேயாம் மனைவி மந்திரி யாதியரோடும் பழையபுரத்தையே யடைவாய், ஆதிவாசிகங்கொண் டதிவேகமாகச் சென்று அத்தேகத்தையே யடைவாய் என்று இவ்வண்ணம் மாதுர்ய வாக்கை யுடையவர்கள் பரஸ்பரம் பேசிக்கொண்டிருந்த போது வீட்டின் மேன்மாடி முதலிய உன்னதப் பிரதேசங்களிலேறி யிரவின் கண்ணே வெளிப்புர விருத்தாந்தங் காணும் சேவகர் இராஜசந்நிதியை யடைந்து திக்குமுக்காடி நின்று கூறுகின்றான்.

(ச.) இது—புதுமைத்தாமோ, உமை = மகாபலப் பிரதையான தேவியேயும்மை, பதுமவுடனுனடைவ தென்றென்ன = நான் இந்தத் தேகத்தைவிட்டுப் பதுமநாம முடைய அத்தேகத்தை எப்போதுறுவேன் அதையெனக்கு உண்மையாக அநுக்கிர கிக்க வேண்டுமென்று வினவ; ஸ்ரீ தேவி: இப்போரிற் படுவைபட்டால், அது புகுவை= பூருவாராச்சிய சம்பந்த சென்மத்தைப் பிரத்தியக்ஷமாகவே பொருந்துவாய், ஸ்ரீவசிட்டர் எனக்—அறைவதானு = ஊர்த்துவத் திருக்கும் ஒருநரன் சொல்கின்றான்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பகைவர் செய்யும் பரிதாபத்தை அவன் பரபரப்புடன் பகர்தல்:—அப்பு என.

அப்புமழை சொரிந்து வருமடர் சேனைநீக்கடலெங்கு மடர்ந்துநிற்க
வெப்புடைய கனற்கொழுந் தாலிந்நகரஞ் சாம்பராய் வேகாநின்ற
திப்புதுமை கண்டிலைகொ லிகல்வேந்தே யென்பளவி லிறைஞ்சார்சேனை
முப்புவனங்களு நடுங்கமோ கரிக்குமோசை செவிமுடுகக் கேட்டான்:

(ப - ரை.) அப்புமழை சொரிந்துவரும் = சக்ர அசியாதியாயுத விருஷ்டியைப் பொழிந்து வராநின்ற, அடர்சேனைக் கடல் = நெருங்கிய படைக்கடல், எங்கும்=எவ் விடத்திலும், அடர்ந்து நிற்க =ஆர்ப்பரித்துச் சூழ்ந்துநிற்ப, வெப்புடைய கனற்கொழுந் தால் = வெப்பம் மிகுதியும் வீசும் அக்கினியின் சுவாலையால், இந்நகரம் = இப்பட்ட ணம் சாம்பராய் = பஸ்மயமாய், வேகாநின்றது = தகிக்கப்படுகின்றது, இப்புதுமை கண்டிலைகொல் இகல்வேந்தே = பகைவரை வெல்வதில் வலிமைவாய்ந்த ஹேராஜ ராஜாவே ! இந்த அற்புதத்தைப் பார்த்திலீரோ, என்பளவில் = என்று கூறியபோது, இறைஞ்சார் சேனை = பகைவரதுபடை, முப்புவனங்களும் நடுங்க = திரிபுவனத்து றுபவரும் கம்பிதமுற, மோகரிக்கும் ஓசை = மகாகோலா கலஞ்செய்யும்சப்தம், செவி முடுகக் கேட்டான் = செவி செவிடுபடக் கேட்டனன்.

(ஸ்ரீ - வீர.) இருபாலுங் கூர்மைவாய்ந்த பட்டிசம் இரும்புப் பூண் கட்டிய தண்ட முசலாதி யாவற்றையும் ஆயுத சப்தத்தாற் கொள்க. பர்வதசம்பந்தியாய அப்பட்டணம் தீப்பற்றிப் பிரளயமேக சமூக துல்லியமாகப் புகையத் தொடங்கியது மேலேவானமெங் கும் வியாபித்தது; அவ்வகையே அதிகடின சப்தங்களும் எங்கும் வியாபித்தன. ஹே மகாப்பிரபுவே ! அம்புநேமி யரியவாள் கதையுலக்கை முதலியவற்றின் மழைகளோடு கூடிமகத்தாகிய சேனையானது மிகவுங் கோலாகலத்துட னெழுந்து பெருங்கடல் போ லும் வந்தடைந்துளது; கதைவேல் அக்கினியந்திர முதலியவற்றின் மழைகளைக் கற்ப கால அநிலங்களால் எடுத்தெறியப்பட்ட குலாசல சிலைக்கொப்பாக மகாஉற்சாகத்து டன் மாற்றார்சேனை கொட்டுகின்றது; உன்னதமானமேன்மாடி சிகரங்களாலும், திருண காஷ்டாதியை சுவரியங்களாலும் பர்வத சமானமான நகரத்தில் அக்கினிவைக்கப்பட்டு எட்டுத் திக்குகளிலும் தீவியாபித்துவிட்டது: ஆகாயத்தின் கண்ணே கற்பமேகங்களா

கிய சம்வர்த்த மேகங்களின் கூட்டங்கட்குச் சமானமாய புகைமகா மலைகள் கருடனைப் போல வலுவிற் கிளம்பத் தொடங்கிவிட்டன மிகுந்தபயத்தோடு மிங்ஙனியம்பியபோது ஜனங்களின் நிஷ்டுர பாஷணவடிவ சப்தங்களின் கோலாகலங்கள் மிகமிக வெளியில் எத்திசைகளிலும் எழுந்து நிறைந்து நின்றன. (66)

(ஸ்ரீ - வீர - அ - கை.) அக்கோலாகலமே சம்பந்திகளின் பேதத்தால், நானுவித மான சிறப்புற் றிருந்ததெனல்:—ஒட்டென.

ஒட்டலர் சேனையின் முழக்குமுலைந் தலறுநகரொலியு முருமேறென்ன
மூட்டியெழ வடவனல்போன் முழங்கனலின் புகையெங்கு மூடிகொள்ளக்
கெட்டன கண்களுஞ் செவியுங்கிளர் நகரமழிந்தது விக்கேடியாவுந்
திட்டமுற லீலையும் வாணியும் வேந்துமந்திரியுந் தெரியக்கண்டார்.

(ப - ரை.) ஒட்டலர் சேனையின் முழக்கும் = பகைவரது படைகளின் கர்ச்சனை யும், உலைந்தலறும் நகரொலியும் = அதனுனே பயந்து துயருற்றுக் கதறும்படியான நகரஜனங்களின் அழுகையும், உருமேறென்ன மூட்டியெழ = சப்தியாநின்ற இடியைப் போல முதிர்ந்து கிளம்ப, வடவனல்போல் = வடவாநலம்போல, முழங்கனலின் = எரியாநின்ற எரியின், புகையெங்கு மூடிக்கொள்ள = தூமமெவ்விடத்திலும் மறைத் துக்கொள்ள, கெட்டன கண்களுஞ் செவியும் = நேத்திரங்கள் குருடுபட்டன செவிகள் செவிடுபட்டன, கிளர் நகரமழிந்தது = வளப்பமிகுந்த பட்டணம் பாழ்பட்டது, இக் கேடியாவும் = இவ்வளவு அலங்கோலங்களையும், திட்டமுற = மிகவும் நன்ருக, லீலை யும் வாணியும் வேந்தும் மந்திரியும் தெரியக்கண்டார் = லீலாதேவியும் சரசுவதிதேவி யும் மகாராஜாவும் மதிமந்திரியும் கண்கூடாகக் கண்டனர்.

(ஸ்ரீ - வீர.) பலத்தோடும் வேகத்தோடுங் கூடிய மத்தகஜங்களின் கர்ஜனைகள் மிகுத்திருந்தன. சடசடாஸ் போடங்களினுலும் ஹலஹலாரவங்களினுலும் தனுஷுக் களின் குஞ்சரங்களின் கோலாஹலம் மிகமிகவுங் கிளம்பியது. வாதாயன (சாளர) வழி யாகப் பார்த்தனர். பிரளய பிரசண்ட மாருதத்தாற் கலக்கமுற்று ஒருங்குற்ற எழுகடல் வேகம்போன்ற வேகத்தை அப்பகைப் படையுடைத்தா யிருந்தது, உக்கிரங்களாகிய பிரளய மேகங்கள் என்னத் தரங்கங்களை யுடைத்தா யிருந்தது, கற்பாந்த வன்னியி னுலே தக்தமாதலின் விப்பிரமத்தை யடைந்தமேரு மந்தராதியர் வதங்களைப்போல விளங்கிக்கொண் டிருந்தது தகிக்கப்பட்ட அந்நகரமென்க. முஷ்டிகிராகியங்க ளாகிய மகாமேகங்களின் கர்ஜனைகளைப்போ லுண்டாய பயங்கரமான சப்தங்களும் உபத்திர வங்களும் மிகப்பெருகி யவற்ருன் மிகக்கோரமாக இருந்தது அத்தோற்றம். கோலாக லங்கள் மிகுந்தும் பகைகள் வீரமொழிகளாற் சற்பிதஞ்செய்தன் மிகுந்தும் கோரமிகுத் திருந்தது. பகைகளின் ஜல்பித ஹேதுக்களினுனே மிகவும் அதிகரித்த கலகலாரவங் களினுனே கோரமிகுத்திருந்த தெனினும் அமையும் அப்புரத்தில் தாண்டா நின்ற உன் முக (கொள்ளி) கண்டங்களேயாய உக்கிரக்ஷத்திரங்களால் அலங்கரிக்கப்பட் டிருந் தது அவ்வாகாயம். க்ஷீரசுவாமிகள் பிரமாணம் உடைப்பற்றுடைய தென்பதற்காம் மூலம் அங்காராராசிகள் வீழ்ந்தளவில் நரநாரிகளது உக்கிரமாய ரோதனம் மிகுந்திருந்தது. வலுவாகக் காதளவு இழுத்து வளைக்கப்பட்டுச் சரமழைகளைப் பெய்யும் தனுஷுக்களின் மகாஹலஹலா அரவங்களும், மலைபோலப் பருத்துமகாமதம் நிறைந்த மாதங்கங்களின் அதிவீர கர்ஜனைகளின் கோலாகலங்களும், புரத்தின்கண்ணே கடகடவெனச்சப்தித்து

வெடித்தெரியும் பெருந்தீயின் பெருமோசைகளும் வீடும் மனைவிமக்களும் எரியக்கத ரும் புரத்திலுள்ளோர் கூக்குரலும், இங்குமங்குங் கிளம்பும் அக்கினிக் கண்டங்களின் டாங்கார ஓசைகளும் நாற்புறங்களிலும் சுழன்று அக்கினிச் சுவாலைகளின் தகத்தகக் கென்றெரியும் பேரோசைகளும், ஜனங்கள் பரிதாபப்பட்டுப் பேசிக்கொள்ளும் ஓசை களும், ஒருங்குகூடி யெழுந்து கொண்டிருந்தன; சாளரங்களின் வழியாகத் தேவிமார்க ளும் மந்திரியும் விதூரத மன்னவனும் பேரிருளையும் பேரோசைகளையும் பெரும்பட்ட ணத்திக்குமுக்கையும் கண்டார்கள். பிரளய அநலத்தாற் சுவறுகின்ற பூர்ண ஏகார்ணவ வேகத்தோடும். பரசைனியத்தால் உக்கிரமாக விடப்பட்ட உக்கிர அம்பின் மேகதாரங் கங்களோடும் கூடி நிறைந்திருந்தது மேருமுதலிய பர்வதங்களையு முறுக்கும் கற்பாந்த அக்கினியைப் போலும் அக்கினி வீசிக்கொண்டி ருந்தது; ஆகாயம் அளாவிய அந்தமகா சுவாலைகளின் சிகைகளால் யாவும் வெந்துகொண்டிருந்தன, பிறர்பொருளைக் கொள்ளை யிடும்பொருட்டு மற்றவரைப் பயமுறுத்துவான் மகாமேக கர்ஜனையைப் பார்க்கினும் அதிககர்ஜனை யுடையவராய், மிகுந்த கோபத்தோடும் உபத்திரவஞ் செய்பவராய் பிரா பல்ய முவடையவராய், அதிபுஷ்டராய்த் திரியும் சோரர்களின் கோரமான சோரத்தாலும் அதட்டுகளாலும் கலகலவெனப் பயங்கரசப்தம் நிறைந்திருந்தன. ஆகாயத்தின்கண்ணே கொள்ளிக் கட்டைகளின் துண்டங்களே உக்கிரமாய அசுபங்காட்டுங் குறியாகச் செவ் வுடுக் கூட்டமாகச் சென்று நிறைந்தன, சுவாலைகள் நாற்புறமும் சூழ்தலானே வீட்டுக் கூட்டங்கள் பரஸ்பரம் பற்றிச் சுவாலைமலை யுயர்ந்திருந்தது. அக்கினிக்குவியல் வீழ்த லானே நரநாரியர் பெரிய கூக்குரலுடன் அழுதுகொண் டிருந்தனர்.

(௪.) வீரர்களின் குஞ்சரங்களின் வெம்பரிகளின் விமரிசை விரிந்த கோலாகலங்க ளும், பௌராணர்களின் மகாகலகலா அரவங்களும் ஒருங்கு சேர்ந்து புரத்தின் வெளியி லும் புரத்திலும் கிளம்பின. பிரளய அநிலங்களால் கலக்கமுற்ற கடலேழின் சமுதாய ரூப ஏகார்ணவசமான வேகத்தோடும், காலமேகதுல்லிய ஹஸ்தீய சுவாதி தரங்கத் தோடும் கூடியிருந்தது; அத்தியந்தம் நிபிடமாயிருத்தலினானே முஷ்டிகளாற் கவர முடியும்போலு மிருந்த பெருமேகங்களின் கர்ஜனையானது பயாதிகளைத் தருவதே போலப் பலபலவா யதிகரித்துப் பேசாநின்ற பகைவர் பாஷணங்களால் நிறைக்கப்பெற் றிருந்தது. அங்காரகலைகளேயாய உக்கிர தாரைகளால் அம்பரம் வியாபிக்கப் பெற்றி ருந்தது. அரசர் முதலியோர் காணும்போது என்க.

(ஸ்ரீ - வீர - அ - கை.) பயந்த பட்டத்து ராணியைக்கண்டும் அந்தப்புரத்தில் நடக் கும் அலங்கோலங்களைக் கேட்டும் அரசன் போர்க்குச் செல்லுதல்:—செருவென.

செருவிறல் வேந்தன் றேவிதெரு மந்துநடுங்கி வந்தாள்
வருமிவள்பாங்கி மன்னுமாளிகை மகளிர் யாரும்
பெருகிய நிதியுங் கொண்டார் பேணலா ரென்னக் கேட்டா
னருகுறு தேவியுங் களடைக்கல மென்னப் போனான்.

(ப - ரை.) செருவிறல் வேந்தன்றேவி = போரில் வெற்றிவீரனாகிய பூபதியின் மனைவி, தெருமந்து நடுங்கி = சுழன்று பயந்து நடுநடுங்கி, வந்தாள் = சரணாகதியானாள், வரும் இவள்பாங்கி = இங்ஙனுற்ற இத்தேவியினது சேடி, மன்னு = ஹேதேவ! மாளி கைமகளிர் யாரும் = அந்தப்புர ஸ்திரீகள் யாவரையும், பெருகியநிதியும் = அளவிறந்த தனங்களையும், பேணலார் கொண்டார் = பகைவர் கைப்பற்றினர், என்ன = என்று விண்ணப்பிக்க, கேட்டான் = கேட்ட ஜயசீலன், அருகுறு தேவி = உங்கள் யாதாம்

பீஜ அறுகாற் போன்றதேவி, உங்கள் அடைக்கலம்=தங்கள் காப்பில்வாழ்க, என்று=
எனக்கூறிப் பிரார்த்தித்து, போனான் = போர்க்குச் சென்றனன். (68)

(ஸ்ரீ - விர.) சேடி = தோழி, விண்ணப்பித்தல் = அறிவித்தல். அந்தப்புரத்தி
லிருந்த காவலாளர் பொடியாக்கப் பட்டனர் ஆதலின் யாவற்றையும் பகைவர் கைப்பற்
றினர். யாதொரு தடையுமில்லாமல் அபகரித்துக் கொண்டனர் என்பதாம். ஹே தேவி
மார்களே தங்கள் பாததாமரைவண்டாய ராணியை ரக்ஷிப்பீர்களாக. போனான்=மாவன
மழிக்கும் மதயானையின்மேல் குகை நின்றுபாயுங் குரூரகேசரிபோல் பகைமேற் பாய்ந்
தான். மேற்கூறிய வண்ணம் நடந்துகொண் டிருக்கும் வேளையின் மதோன்மத்த யவ்
வனம் வாய்ந்த பட்டத்து ராணியானவள் தாமரைத்தவிசை மகாலக்குமி யடைந்ததை
நிகர்ப்பத் தன் னரண்மனையை யடைந்தனள் (அந்த லீலையின் பிரஞ்ஞையா லதிஷ்டித
மாயதாம் அவ்வரசனரண்மனை) பின்னமுற்ற ஹாரலதை யாதிகளாலாகுல முற்றவளா
இச் சகிமார்களோடும் தாசிமார்களோடும் பயமிகவுற்றவளாகித் தளர்ந்து சென்றனள்:
அம்மன்னவனை நோக்கி, அத்தேவியின் சகிகளிலொருத்தி விண்ணப்பிக்கத் தொடங்கி
யதாவது:—ஹே தேவ ! அபிஷேகஞ் செய்யப்பெற்ற முக்கிய மகிஷியாகிய தேவியான
வள் எங்களோடுகூட அந்தப் புரத்துள்ளிருந்து ஓடிவந்து காற்றினு லடிபட்ட கொடியா
னது தருவைச் சரணடைவது போலத் தேவரீரைச் சரணடைய நிற்கின்றனள். பெருங்
கடலின் பேரலைகளால் தீரத்தருக் கொடிகள் போலப் பலமுடைய ஆயுதந்தரித்த பகை
வர்களானே மனைவிகளாகிய மற்றைய போகமாதர் அபகரிக்கப் பட்டனர். அந்தப்புரத்
திற்கு அதிபர்களாக இருந்தயாவரும் மதோன் மத்தர்களாகிய சத்துருக்களானே பொ
டிப் பொடியாக ஆய்விட்டார்கள். பயமற்று வந்தசத்துருக்கட்கு அளவுகிடையாது அவர்
களானே காற்றால் உயர்ந்ததருக்கள் அழிவதொப்ப நம்மவர் அழிந் தொழிந்தனர்.
தூரத்தி லிருந்து பயமில்லாமல் வந்த சத்துருக்களானே நமது புரம் நிறைந்துள்ளது,
விதூரதமன்னன் இவ்வாறு கூறச்கேட்டுத் தேவிமார்களைப் பார்த்து வேண்டுவதாவது
ஹே தேவிமார்களே ! யான் போரின் பொருட்டுச் செல்கின்றேன் தேவிமார்களுடைய
உத்தரவில்லாமலே இடையிற் போர்க்குச் செல்லும் அபராதத்தைப் பொறுத்துக்கொள்
ளுங்கள். இவ்வெனது மனைவி தங்கள் பாததாமரையின் வண்டாக இருந்து தங்களாற்
காப்பாற்றப் பெறுக: இவ்வண்ணம் பிரார்த்தித்துக் கொண்டு சினத்தாற் சிவந்த விழி
களையுடையவனாகி மதம்பிடித்த யானைகள் அதஞ்செய்யும் வனக்குகையி னின்றும்
சினந்த சிங்கம் கிளம்பியதுபோலப் போர்க்குக் கிளம்பினன்.

(ச.) யுத்தத்திற் கேகுகின்றனனாதலின் பொறுக்கவேண்டு மென்று, பின்பு, போ
னான்; மகான்களின் றெரிசனகாலத்திற் பிரயாண முசிதமன்றாதலின் பொறுக்கவேண்டு
மென்று பிரார்த்தனை. மகான்களின் சேவாவசரத்தில் மற்றொன்று கூடாதன்றோ !
இப்பட்டமகிஷி தங்களது பாததாமரை வண்டாக விருத்தலின் இவள் ஆண்டேயடைக்
கலமாகுக, தங்களது துணையடிகள் பற்றியே வாழ்கவென அருப்பித்தனன்; போர்க்குப்
போயின் என்னுமோ ?

(ஸ்ரீ - வீர - அ - கை.) புராதனலீலை புதியலீலையை நோக்கி யற்புதமுற்று ஐயம்
வினுதல்:—எதிரெனா:

எதிர்நிழல் போலவந்த லீலையையிந்த லீலை
யதிசயமெய்தி நோக்கியருங் கலைமாதை நோக்கி
புதிதுநானிங்கு வந்தபொரு ளென்கொ லென்றலோடு
மதிநிறவாணி யந்தமயக் கந்தீர்த் துரைப்ப தானாள்.

(ப - ரை.) எதிர் நிழல்போல வந்த லீலையை = எதிரேதோற்றும் பிரதிபிம்பம் போலத் தனதாகார சமான ஆகிருதியுடன் வந்த புதியலீலையை, இந்தலீலை = இப்புரா தனலீலை, அதிசயமெய்தி நோக்கி = அற்புதத்துடன் பார்த்து, அருங்கலைமாதை நோக்கி = அரிய ஸ்ரீவாக்குத் தேவியை நோக்கி, புதிது நானிங்குவந்த பொருளென் கொல் என்றலோடும் = புதிதாகயா னிவ்விடத்தில் வந்தவகை யாதுகொலோ வென, வேண்டிக் கேட்டலும், மதிநிறவாணி = பூர்ண நிலாவர்ண ஸ்ரீ சரசுவதிதேவி, அந்த மயக்கந்தீர்த்து — அம்மயலை யகற்றி, உரைப்பதானாள் = அனுக்கிரகஞ் செய்யத் தொடங்கினாள். (69)

(ஸ்ரீ - வீர.) இவள் எனக்கொப்பாக எப்படி யிருந்தனள்? இவள் யோகமகிமையா லுண்டானவள் மானுட சரீரத்தோடு கூடிய உனக்கொப்பாக ஆகாள் என ஆசங்கிப்பக் கூறுகின்றாள், நானிங்கு என. கண்ணாடியினின்றும் கண்குளிரக் காணப்பெற்ற பிரதி பிம்பம் போன்றவளும், தனது ஆகிருதிக்குச் சமானமான ஆகிருதியை யுடையவளும் ஆகிவந்த லீலையை யுணர்ந்த லீலைகண்டு கூறுவதாவது. ஹே பரமேசுரி! இஃதென்ன அற்புதம் இவளாக யானிருந்த தெவ்வாறோ! முன்யான் எவளாக இருந்தேனோ அவளா கிய இவளாக யானிருந்தவா றென்னேயோ! வயதும் ஒன்றாகவே காணப்படுகின்ற தீதென்னேயோ! (தனக் கன்னியத்தன்மை கூடாமையானும் சென்ற அவஸ்தைக்கும் ஸ்திதி கூடாமையானும் என்பது கருத்தாம்;)

(ச.) எதிர் நிழல்போல வந்தலீலையை = தர்ப்பணத்திற் பிரதிபிம்பம் போலத்தன் னொடு சமானாகிருதியாய் எதிரேகாணும்படிவந்த விடூரத பாரிரூபமான லீலையை, இந்த லீலை = பதுமபாரியான லீலை, நோக்கி அதிசயமென்ன = பார்த்து இஃதென்னென்று இவள் எந்த ஹேதுவினால் எனது உருவா யிருக்கின்றாள், நான் இப்போது ஆதிவாகிய தேகத்தோடுங் கூடியிருத்தலின் அவட்கு அவ்வுருவம் எப்படிக்கூடும் எனச் சங்கித்து விஸ்தரித்தல்; புதிது நானிங்கு வந்த பொருளென்கொள் — நான் முன் எத்தன்மை யான தூலதேகத்தோடு கூடியிருந்தேனோ அத்தன்மையான எனது தூலதேகத்தோடு கூடினவளான இவளானது எங்ஙனமென்பது பொருள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) சிற்சக்தியினாற்றங்கள் தருக்கிக்க முடியாதனவாக விருத்த வின் சமானகரும்த்தாற் கிளப்பப் பட்டவர் கட்குச் சமானமாகவே தோற்ற முண்டாம் சிற்சிலபா லிதனைக் கண்டாமென ஸ்ரீதேவியார் திருஷ்டி சிருஷ்டிவாதத்தை யவலம்பித் துச் சமாதானிக்கின்றார்:—நின்னையென.

(ஸ்ரீ - வீர-அ - கை.) ஆத்மாந்தரத்தில் நினதுபாவனை பாவித்த நினது நாயகனால் நினக்கொப்பாகக் கற்பித்தலின் நிற்கொப்பான லீலை நின்றனள் என விடை விளம்பக் கருதிக் கூறல்:—நின்னை யென.

நின்னை நீங்காது வாழநினைத் தனன்மரண காலத்
தன்னதவ் விடத்தே பெற்றா னன்பினா லுனதுகாந்த
னின்னல் கூர்மரணந் தன்னிலெண்ணிய தெய்து மியார்க்குந்
தன்னெதிருற்ற தன்றித் தோன்றுமோ தருப்பணத்தில்.

(ப - ரை)) நின்னை நீங்காதுவாழ நினைத்தனன் = உன்னை ஒழியாதுவாழ வுன்னி னான், மரணகாலத்து = மரணகாலத்தில், அன்னது அவ்விடத்தே பெற்றான் = எண் ணிய வதனையே அத்தலத்திலேயே யடைந்வதனன், அன்பினாலுனது காந்தன் = வாஞ் சையினால் நினது மணாளன், இன்னல்கூர் மரணந்தன்னில் = பெருந்துயர் வாய்ந்த

மரணுவஸ்தையில் எண்ணியது = சிந்தித்தது, எய்துமியார்க்கும் = எவர்க்கும் அடை
யப்படும், தன் னெதிருற்றதன்றி = தன்னெதிரே அடையப்பட்ட தல்லாமல் அயலொ
ன்று தோன்றுமோ தருப்பணத்தில் = கண்ணுடியின் கண்ணே பிரதீதியாமோ ஆகா
தாம் அதுவே தோற்றுமதுபோல் என்பதாம்,

(ஸ்ரீ-வீர.) எத்தகையதாக இக்களேபரம் விடும்போது எண்ணுகின்றனனே அத்த
கையதாக யடைவன். இந்தலீலை கற்பிதை யாவளேல் இப்பிவெள்ளி யாதியிற்போல்
இவண்மாட்டு விசம்வாதம் எங்ஙன முண்டாகாமற் போம் எனக்கடாவ விடைதருவார்.
தன்னெதிரென்ருர். விவகார தசையின்கண் பாதமெனப் பெயரியவிசம் வாதரகித சர்வ
பதார்த்த சொரூபம் அவனதுமனத்தின் கண்ணே பிம்பிதமாம், அதாவது நினது நாயக
னது சித்தத்தின் மாட்டுத் தோற்றியதாம்; அதுவே அத்தகைய அவிசம்வாதியாக
இருந்து சித்தமாகிய தருப்பணத்திற் காலாந்தரத்தில் பிரதிபிம்பித்தது; அவிசம்வாதிய
தாக யாதுமுன் னனுபவிக்கப் பெற்றதோ அது சமஸ்கார வடிவமாக நிகழ்வதாய்க்
காலாந்தரத்தில் மனக்கண்ணுடியில் அவ்வாறே தோற்று மெனபதாம் எவ்வாறெண்
ணம் உள்ளே யுண்டாகின்றதோ அவ்வாறே கணகாலத்தி லனுபவமாம், மனமானது
கனு முதலியவற்றே சித்தத்தா லனுபவிக்கப்பட்ட நனுப்பொரு ளாகாரத் தன்மையை
யடைவதேபோலச் சித்தானது அத்தியாசத்தானே திருசிய ஆகாரத் தன்மையை யடை
யும். எவ்வாகாரப் பொருள் தன்கண்ணே அவ்வகையாய சமஸ்காரவடிவ ஜகத்துருவம்
ஆண்டுச் சித்தத்தின் கண்ணும் சித்தின் கண்ணும் உளதாம், அவ்வகையாகவே கணத்தி
லுண்டாம்; போக்தாவின் அதிருஷ்டத்தால் கிளப்பப்பட்ட மாயையோடு கூடிய சிற்
சக்தியானது செய்யாததையும் செய்விக்கும், தேசகால தீர்க்காதியும் மயலேயாம். மனப்
புரத்தோற்றம் வெளியிலுள்ள தென்பதும் உண்மை யென்பதும் நீண்ட பழக்கத்தானே
யாமென்க. எத்தகைய பாவனையுடன் அக்காலத்தில் அவ்விடத்தில் நினது நாயகனிருந்
தானே அத்தகைய பாவனையுடன் இறந்தான் ஆகையினல் பாவித்தபடியான அப்பொ
ருள்களையே அங்கேயே அடைந்தவனுனன். சொப்பன சங்கற்ப சைனியம் போலும்
இவர் யாவரும் சிற்சத்தியானே சத்ரூபமே; இவ்வளவே கனுப்பொருள்களிலும் நனுப்
பொருள்களின் விலக்ஷணத் தகைமை, யாது அவிசம்வாதி சர்வபுருஷ சாதாரணுர்த்தத்
தன்மையோ, இத்துணை மாத்திரையானே சத்தியத் தன்மைச் சித்தியாகாதாம், சந்தி
ரன் ஒட்டையளவு தோற்றுதல் இந்திரஜால முதலியவை கூட அவிசம்வாதியாய் யாவ
குங் கண்கூடாக அனுபவிக்கக் கண்டாம், பாதிதமாதல் இருபாலு மொப்பேயாம்.

(ச.) ஞப்தியோதல்: நின்னை + உனது காந்தன் = நினது பர்த்தா லீலையின் பர்த்தா
நானெனப் பாவித்தவனுகி இறந்தானுதலிற் சன்மாந்தரத்திலும் அப்பாரியையே அடைந்
தானென்பது பொருள். இன்னல் கூர் + தருப்பணத்தில்; எண்ணியது = நிர்ச்சந்தேக
சர்வார்த்தரூபமான சிந்தை யென்னும் பாவனுரூபமான ஞானம், அதுவேயெய்தும் =
அத்தன்மையான வஸ்துரூபமாகச் சித்தத்தில் ஸ்புரிக்கும், பிரதிபிம்பிக்கும் என்பது
பொருள் தர்ப்பணத்தில் என்பது அதன் திருஷ்டாந்தமாம், யார்க்குமென்றது நிர்ச்சங்
கையை யுணர்த்துகின்றது. (70)

(ஸ்ரீ - வீர - அ - கை,) அற்றேல் விவகாரதசையில் விசம்வாத மில்லாதவழி கற்
பிதத்தன்மையே அசித்தமாம் என ஆசாங்கித்து வியபிசாரித் தன்மையானே திருசிய
மாத்திரத்திற்கு மித்தியாத் தன்மையைச் சாதிக்கின்ருர். பரஸ்பரகால அசத்வமும் சிறப்
பற்றதேயாகு மென்கின்ருர்:—நாசமென.

(ச.] ஆயினிது பிரார்ந்தி தானுவெனச் சங்கித்துச் சத்தியமெண (பிராந்தியே யெனச்) சாற்றல்:—நாசமென.

நாசமுற்பத்தி மூர்ச்சை நனுக்கனுச் சுழுத்தி யெல்லா
மேசுறவொன் றினுள்ளொன் றில்லையாலி லதுண்டென்ன
மாசுறு மயக்கமட்டே மட்டறவள ராநின்ற
தாசறுமனு பவங்களிரு வகைய வற்றைக் கேட்பாய்.

(ப - ரை.) நாசம் உற்பத்தி மூர்ச்சை நனு கனு சுழுத்தி, எல்லாம் = மிருதி ஜன்மம் மூர்ச்சை ஜாக்கிரம் சொப்பனம் துயில் முதலியயாவும், ஏசுற = குற்றமுற, ஒன்றினுள் ஒன்றில்லை = நனுமுதலிய வற்றுள் கனுமுதலியவை யிலவாம், ஆல், அசை இலது உண்டு என்ன = இல்லையெனவும் உண்டெனவும், மாசுறு மயக்கமட்டே = குற்றமுற்ற பிராந்தி மாத்திரமேயாம், மட்டற வளராநின்றது = மயலே அளவின்றி விருத்தியாகின்றது, ஆசறும் அனுபவங்கள் = குற்றமற்ற அனுபூதிகள், இருவகை அவற்றைக் கேட்பாய் = இரண்டு விதமாம் அவ்விரண்டையும் கூறக்கேட்பாயாக.

(ஸ்ரீ - வீர.) கனவின் கண்ணே நனவானது அசத்திய ரூபமேயாம், நனவின் கண்ணே கனவானது அசத்திய ரூபமேயாம், பாதத்தைப்போல நாசத்தின் கண்ணும் பரஸ்பர கால அசத்துவம் சமமேயாம்; ஜன்மத்தின் கண்ணே மரணம் அசத்து வடிவமாம், மரணத்தின் கண்ணே ஜன்மமும் அசத்து மயமேயாகும், நாசத்தில் அவயவங்கள் நாசமுடையன வாதலின் திரவியமானது நசிக்குக, பாதத்திலோ அனுபூதி பலத்தினுலே நசிக்குக; இங்ஙனம் நிமித்தமேத மிருப்பினும் அழிவதிற் சிறப்பொன்றையுங்காணேமே; முன்னர் சத்தியத்தன்மை சாற்றப்பெற்றது ஈண்டோ அசத்தியத் தன்மையென அநிர்வசநீயத் தன்மையாம் இரண்டும் சமமேயாம், இவ்வண்ணமாக இதுசத்துமல்ல அசத்துமல்ல, மயன் மாத்திரமாகவே மலர்கின்றது; மலர்ந்துறவே சிருஷ்டிகாலத்திலும் பிரளய காலத்திலும சிறப்பின்றிய சத்துரூபப் பிரஹ்மம் சித்தமேயாம். உபோற்வித சம்பந்தமாகவுரைத்து விவகரித்த வினுவின் விடையை யளிக்கின்றூர், அனுபவங்கள் என.

(ச.) நாச + இல்லையால் = ஒன்றினுள் ஒன்றில்லையால் = சொப்பனஞ் சாக்கிரத்தில் அசத்துரூபம், சாக்கிரமும் மிருதியில் = மரணத்திற் பொய்யுருவம், மிருதிஜன்மத்தில் அசத்துரூபம், ஜன்மமும் மிருதியில் அசன்மயம், இலது உண்டென்ன மாசு = இவ்விதஞ்சத்து அசத்தென்று சொல்லக்கூடாத களங்கம் பொருந்திய இவை, உறு மயக்கமட்டே மட்டறவளரா நின்றது, இது வுண்டென்ன மிகவும் பிராந்திமாத்திரத்தில் விசிரிம்பித்ததாம்; இவ்விதம் சத்தும் அசத்தும் அன்றிய இஃதுண்டெனல் பிராந்தி மாத்திரமாக விசிரிம்பித்ததாம் சொப்பனுதிகள் மேன்மேன் உத்தரோத்தர அவஸ்தையில் இன்மையினுற் பிராந்தி மாத்திரமேயாயிது பரிசேடிக்கு மென்பதுபொருள். காசுறு மனுபவங்க ளிருவகை கழறக்கேட்பாய் = அனுபவங்சள் என்பது அனுபூதிகள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) உலகமயல்களின் விசித்திரத் தகைமையைக் காட்டும் வாயிலாய் அபிநவலீலையின் ஒப்பான மயற்கவர்ச்சியையும் முன் மொழிந்ததையும் தெளிவிக்கின்றூர்,—முன்னென.

முன்னனு பவத்துக்கேற்ற முறைமையாய்ச் சிலவை தோன்றும்
பின்னுறு புதுமைத்தாகிப் பேதமாய்ச் சிலவை தோன்றும்
நின்னுட னின்னுசார நின்குல நின்னெழுக்க
மென்னவே றன்றிநின்று ளெதிர்நிழல் போலலீலை,

(ப - ரை.) முன் அனுபவத்துக் கேற்ற முறைமையில் = பூர்வ அனுபூதியை யனுசரித்து அவ்வகையாகவே, சிலவைதோன்றும்=சிற்சில பொலியும், பின்னுறு புதுமைத்தாகிப் பேதமாய்ச் சிலவை தோன்றும் = அபூர்வ அனுபூதியை யனுசரித்து அற்புதமாகச் சமமாகவோ அசமமாகவோ, சிலசில பொலியும், நின் உடல் நின் ஆசாரம் நின் குலம்நின் ஒழுக்கம் = உனதுவபு உனது சமாசாரம் உனதுகுலம் உனதுசீலம், என்ன வேறன்றி லீலை எதிர்நிழல்போல நின்றாள் = என்பதாகத்தானே அபேதமாய் லீலையானவள் பிரதிபிம்பம்போல நிலைபெற்றாள். (72)

(ஸ்ரீ - வீர.) சில அனுபூதிகள் மயல்களாய்ப் பூர்வ அனுபூதியி னின்றுண்டாம் சமஸ்காரவாயிலாக உண்டாம்; சிற்சில அபூர்வ அனுபவங்களாம், பூர்வ அனுபவங்களைக் காரணமாகக் கொண்டு உண்டாகாதனவே அபூர்வ அனுபவங்கள் எனப்படும்; சில ஒப்பனவாயாம் நினது சமானசீலமாய் நினது சமானகுலமாய் நினது சமானசரீரமாய் உண்டாயிருப்பதே போலும் பிரதிபிம்பமாக வுண்டாகி நினது பர்த்தாவின் கற்பனையாக இந்தலீலை தோற்றுகின்றாள். முன்னனுபூதியோடு ஒப்பாகவோ ஒப்பில்லாமலோ சிற்சில அபூர்வ அனுபவமாகவோ விரைவில் அனுபவிக்கின்றார்க ளென்றுணர்தி, சிலபால், ஒரொருகால் சர்வ அவ்வாசனை யுண்டாங்கால், பேதத்தைப் பிரித்துப் பாராமையின் அவைகளேயெனத் தோற்றும், சிலபாலோ பாதிவாசனை யுளதாயின் பாதிசமமாகவே தோற்றும், ஜீவாகாசத்தின் கண்ணே அனுபூதிகள் அசத்தியங்க ளாயினும் சத்தியங்கள்போலத் தோற்று கின்றனவாம். ஆகவே நினது சீலத்தளாய் நினது ஒழுக்கத்தளாய் நினது குலத்தளாய் நினதுதேகமயத்தளாய் இவள்வரற்குரித்தேயாவள். மொழிந்த முறையிற் பிரதிபிம்பஜன்னியம் பிரதிபையாக இந்த லீலை யிலங்குகின்றனள்; எங்கு நிறைந்திருக்கும் அறிவாங் கண்ணாடியில் பிரதிபை பிரதிபிம்பிக் கின்றபடியால் யாண்டும் இதுவே முறையெனக் காணலாம்.

(ச.) முன் + தோன்றும் = இவ்வநுபூதிகள் சில பூருவானுபூதியினின்று சமன்களாகவே யுதிததனவாம், பின் + தோன்றும்=இந்தச் சர்வாவஸ்தைகளினும் மட்டறவளராநின்ற அனுபூதிகள் சில பூர்வானு பூதியினின்றும் தோன்றுவனவாம்; சில அபூர்வானுபவங்கள், பூர்வ அனுபவ சமஸ்காரத்தை யபேக்ஷியாமலே யுதித்தன வென்னும் அசமன்களாம். சமன்களென்பன பூர்வானுபவ காரணத்தை யுடையனவாம் அதாவது அவற்றை யனுசரித்து வருகின்றனவாம், அசமன்களென்பன சுதந்தரங்களாம் என்றும் இருவிதமென்பது பொருள்· நிறுத்த முறையை யனுசரித்தல்; நின் + லீலை = ஒழுக்கம் = யோக்கிய சீலத்துவம், முற்கூறிய பிரகாரத்தால் உனது பாவனையால் எப்போதும் உன் போன்ற நடையுடையவளா யிருக்கிற, உன்னையே காரணமாக வுடைய, சர்வப்பிரகாரத்தாலும் சமானமான இந்தலீலை யுனது பர்த்தாவினுடைய பிரதிபையில் பிரதிவிம்பமாய் விளங்குகின்றாள் என்பது பொருள். (பிரதிபை=புத்தி).

(ஸ்ரீ-வீர-அ-கை.) தோற்றத்தின் முடியும் விதூரதன் பதுமனுமெனக் கேட்டநவினலீலை பிரார்த்தனையும்:—புரவலனென.

புரவலனினை வானுன்னைப் போலிவ டோன்றி நின்றாள்
விரவுமிப் போரிற்பட்டு விடூரதன் பதும னென்னும்
நரபதியாகு மென்ற நாமகள் வசனங் கேட்டுப்
பரவின புதியலீலை பணிந்திது பகர்வதானாள்.

(ப - ரை) புரவலன் நினைவா லுன்னைப்போ லிவள்தோன்றி நின்றாள் = மன்னவனது திடசங்கற்பத்தினாலே நின்னைப் போலவே இந்தலீலை புலப்பட்டு நிற்கின்றாள், விரவுமிப்போரில் = கைகலந்து நடக்கும் இந்த யுத்தத்தில், விரோதன்பட்டு = விதூரத மன்னவன் இறந்து, பதுமனென்னும் = பதுமராஜா வென்று பிரசித்த பூர்வ, நரபதி= நரேந்திரன், ஆகும் = ஆவன், என்ற நாமகள் வசனங்கேட்டு = என்று திருவாய்மலர்ந்தருளிய ஸ்ரீ சரசுவதிதேவியின் திருவாக்கைச் சிரவணித்து; பரவின புதியலீலை= முன் பூசித்துநின்ற புதியலீலை, பணிந்திது பகர்வதானாள் = நமஸ்கரித்து வருமாறு பிரார்த்தித்துக் கொண்டனள்.

(ஸ்ரீ - வீர.) விதூரதபுரத்தி லிருந்த புதியலீலை புஷ்பாஞ்சலி செய்து வேண்டுவாளாயினள். ஸ்ரீ சரசுவதிதேவி விதூரதனாகிய நினது இந்நாயகன் போர்க்களத்தில் இத்தேகத்தை விட்டு அந்த அந்தப்புரத்தையே யடைந்து பதுமபூபால வடிவினனா யிருப்பன் என்று கூறியதைக் கேட்ட இரண்டாவது லீலையானவள் எதிரில் நின்று இருகரங் கூப்பி யிருந்த பக்தி வணக்கத்தோடும் அநேக நமஸ்கார பூர்வகம் இவ்வசனங்களைக் கூறத் தொடங்கினள்.

(ச.) புரவலன் + ஆகும், விரோதன் விரவுமிப் போரிற்பட்டு = அங்கனையே! நினது பர்த்தாவான இவ்விரோதராஜன் தேகத்தைவிட்டு அவ்வந்தப்புரத்தையே யடைந்து பதுமனென்னும் நரபதியாகும் அத்தன்மையான பதுமரூபனானவன். ஸ்ரீ வசிட்டர், என்றே நாமகள் வசனங்கேட்டு, நாமகளது அருகில் அப்புர ஆசிரய விரோதபாரியான லீலையானவள் தேவியால் அத்தன்மையான வசனங்களைச் சிரவணஞ்செய்து, பரவினள் புதியலீலை பணிந்திது பகர்வதானாள் = பின் விகிதாஞ்சலியாய் வணங்கி யிருந்து இவ்வசனத்தைச் சொல்லுகின்றாள். விகிதம் = செய்யப்பட்டது.

(ஸ்ரீ-வீர-அ-கை.) அபிநவலீலை வரந்தர வேண்டலும் ஸ்ரீதேவி வேண்டியவாறருள் புரிதலும்:—பண்டு என.

பண்டுநான் பூசைசெய்த பாமகள் போலு நீயே
விண்டவரா லென்காந்தன் வீடினா லுறைவ தெங்கே
கண்டுநா னங்கே யிந்தக் காயத்தோ டெய்திவாழத்
தண்டலில் வரநல் கென்னத் தந்தன மென்றலோடும்.

(ப - ரை.) பண்டு நான்பூசை செய்த = ஹேஞானரூப பகவதியே! பூர்வம்யான் பூசித்த, பாமகள்போலும் நீயே = ஸ்ரீ சரசுவதிதேவி தேவரீரேபோலும், விண்டவரால் என் காந்தன் = பகைவர்களால் எனது நாயகன், வீடினாலுறைவ தெங்கே = சரீரத்தியாகஞ் செய்தால் எவ்விடத்திற் சென்றிருப்பதாமோ, கண்டு நானங்கே = யான் அவ்விடத்தைத் தெரிந்து, இந்தக் காயத்தோ டெய்தி வாழ = இத்தேகத்துடனே அடைந்து வாழும்படியாக, தண்டலில் வரநல்கென்ன = யாதொரு தடையுமில்லாமல் வரந்தந்தருள வேண்டு மென்றிரப்ப, தந்தனமென்றலோடும் = தந்தருளினோ மவ்வாறே யென்று ஸ்ரீதேவி புகன்றருளினாள்.

(ஸ்ரீ - வீர.) ஹேதேவி இக்கிருபணி யிடத்திற் காருண்யம் வைத்து வரந்தரல் வேண்டும்; முற்றினும் லோபப் பொருட்டு வெகு அவமானம் சகித்தல் கிருபணமாம் ஹே ஞானசொரூபமாகிய பகவதித்தாயே! இத்தகைய தேவியை யான் நித்தியம் அருச்சித்துக்கொண்டிருந்தேன், அத்தேவி யிரவிற் கனவில் இனியதரிசனத்தைக் கொடுத்துக்கொண் டிருந்தனள், அத்தேவி எத்தகையினளா யிருந்தனளோ அத்தகையினளா

கவே நீ யிருக்கிறாய் ஆகலின் ஹே அம்பிகையே! அழகிய திருமுகத்தாய்! கிருபணர் கள்மேல் வைக்குங் காருண்யத்தால் வரந்தரல் வேண்டும். நீதான் அந்தத்தேவி யென்ப தில் ஐயமேயில்லை, இந்தப் பிரகாரம் அவள் வேண்டிக் கொண்ட அளவில் ஸ்ரீ ஞான தேவியானவள் அவள் அன்பினால் சிந்தித்ததையும் பூசித்ததையும் கருதி அந்த லீலையை நோக்கி மிகமகிழ்வுடன், அனன்னியமாகிய பாவனையினாலே யிடைவிடாமல் சாங்காறும் நோன்புற்றுள நின்மேல் பரமதிருப்தியை யடைந்தேன், ஆகலின் ஹேகுழந்தாய்! உனக்கு வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள் ளென்றருள, போர்க்களத்திற்றேகத்தை விட்டு எனது பதியானவர் எங்கே போயிருப்பாரோ அங்கு இத்தேகத்துடனே இவ்வங் கனையா யிருக்குமாறு திருவருள் செய்யவேண்டுமென்று அத்தேயத்து லீலை வேண்டிக் கொள்ள, அதற்கு ஸ்ரீ ஞானதேவி, அவ்வாறேயாகுக, நீயாதொரு தடையும் படாமல் மிகச்சிறந்த பக்தியோடும் சகலசாமக் கிரியோடும் மிகநன்றாக நெடுநாள் பூஜித்து வந் தாய் என அருள்செய்தாள்.

(௪.) பண்டு + நீயே ஞப்திதேவி நீ யென்றால் முன்பர்ச்சிக்கப்பட்டாய் அந்தநீயே பகவதி யம்பிகையாய் விளங்குகின்றாய், ஆதலின், விண்டவரால் + எங்கே = இரணத் திற் சத்துருக்களாற் றேகத்தை விட்டு எனதுபதி எவ்விடத்திருப்பன், கண்டு + நல் கென்ன = வரானனையே? நீ கிருபண காருண்யத்தினால் (தீனனிடத்திற் கிருபையி னால்) இவ்வரந்தரல் வேண்டுமென்ன, எனதபிமதக் கொடையால் என்னை இரக்ஷிக்க வேண்டு மென்பது பொருள். தந்தன மென்றலோடும் என்று தேவி யனுக்கிரகித்தாள் அப்போது.

(ஸ்ரீ - வீர - அ - கை.) புதியலீலையானவள் கிடைத்தவரத்தின் சிறப்பால் மகிழ்வு டன் முகமிகமலர்ந் திருப்பதைக்கண்ட புராதனலீலை தூலதேகத்துடன் இவளுக்கு நாயகலோகப் பிராப்தியும் தனக்குத் தூலதேகம் விட்டுப் பிராப்தியும் உண்டாவதன் சிறப்பென்னே யென்னும் சந்தேகத்துடனுற்ற மனத்தினளாய் ஸ்ரீதேவியை நோக்கி வினவுகின்றாள்:—புகன்றவென.

புகன்ற நாமகளை நோக்கிப் புராதன லீலைசொல்வா
ணிகழ்ந்த வென்னுட லோடன்றி நின்றவேற் றுடலைமேவி
யுகந்தலோ காந்தரத்து முயர்கிரி நகரினூடு
மகன்றவா றென்கொ லென்ன வாரணத்தன்னை சொல்வாள்.

(ப-ரை.) புகன்ற நாமகளை நோக்கி = உரைத்த வண்ணம் வரந்தந்த ஸ்ரீசரசுவதி தேவியைப் பார்த்து, புராதனலீலை சொல்வாள் = பழையலீலை பகர்வதாவது, நிகழ்ந்த வென்னுடலோடன்றி = அப்போதிருந்த எனது தூலசரீரத்தோ டல்லாமல், நின்றவேற் றுடலை மேவி = யோகத்தாற் கிடைத்த அங்குலங்கள் பத்தளவாந் தேகத்தையடைந்து, உகந்த லோகாந்தரத்தும் = மகிழ்வுடன் பிரஜைகள்வாழும் வேற்றுலகத்தும், உயர்கிரி நகரினூடும் = வளப்பமுற்ற மேம்பட்ட கிரிக்கிராமத்தின் கண்ணும், அகன்றவாறென் கொல் என்ன = சென்று சேர்ந்தவிதம் என்னேயென்று விண்ணப்பிக்க, ஆரணத் தன்னை சொல்வாள் = வேதப் பிரதிபாத்திய சின்மாதா அருளுகின்றாள்.

(ஸ்ரீ-வீர.) சத்தியகாமமும் சத்திய சங்கற்பமும் உரை ஹே தேவியே! பிரஹ்மரூப மாகிய தேவரீர் நினைத்தபடி முடிவது திண்ணமாக இருப்ப, அதேதேகத்தோடும் யான் அவ்வேறுலகத்தி லிருக்கும் கிரிக்கிராமத்தையேன் அடையவில்லை இவள்மாத்திர மிப் போது தேகத்தோடும் அடையும் வகையாதோ கூறுதியென்று பிரார்த்தித்தனள்.

(ச.) புகன்ற + என்ன = பூர்வசரீரத்திலேயே யான் செல்லாதது என்னிமித்தம் ஈசுவரி யென்றாள், புராதனலீலே = பதுமபாரி, உகந்த லோகாந்தரத்தும் = இவ்வு லோகாந்தரத்தும், கிரிநகரினூடும் = கிராமத்தும், என்சொல் = என்னிமித்தம்? ஆர ணத்தன்னை சொல்வாள்.

(ஸ்ரீ-வீர-அ-கை.) உயிர்கள் தங்கள் தங்கள் முயல்வினாலேயே வேண்டியவற்றை எமதருளால் அடைவர் எமக்கதன்கண் யாதொரு கர்த்தவ்யமு மில்லை யெனல், எமக்கு யாதொரு இச்சையும் சுயமாகக் கிடையாது பூர்ணகாமத் தன்மை யிருத்தலின், பிராணிகளின் கருமானுசாரமாகவே யுதிக்கும் அவ்விச்சை அதனது விவத்தையானே விவத்தியாம் என்னுங் கருத்தால் ஞானதேவி சமாதானிக்கின்றாள்:-ஒருவருக்குமென.

ஒருவருக்கு நாமொன்று நல்கல முணர்வின் வண்ணமே யுயிர்களெய் துமாற்
கருதிமுந்திநீ கதிவிரும்பினுய் காதலித்தசிற் கண்ண ளித்தனம்
பெருகுகாதலா லிந்தவண்ண மிப்பேதை வேண்டவிப் பேறுநல்கின
மிருதயத்திலே நினைந்த தெய்திடு மெமதுபார்வையா லியார்க்கு மென்றனள்.

(ப-ரை.) ஒருவருக்கும் = எவர்தமக்கும், நாம் = யாம், ஒன்றும் நல்கலம் = யாதொன்றையு மிஷ்டப்படி கொடுப்பதில்லை, உணர்வின் வண்ணமே யுயிர்கள் எய்து மால் = பிராணிகளின் சங்கற்பமே விரைவில் தானே சர்வத்தையுஞ் சம்பாதித்துக் கொடுக்கும், முந்தி = முன்னர், கருதி = என்னை நன்காராதித்து நீ கதிவிரும்பினுய் = நீ முக்தையாக வேண்டுமென்று எண்ணினுய், காதலித்த சிற்கண் ணளித்தனம் = விரும் பிய மோக்ஷத்திற்குச் சாதகமான போததிருஷ்டியைத் தந்தேம், பெருகு காதலால் = பேராசையால், இந்த வண்ணம் = நீ செவியுற்ற வகையாக, இப்பேதை வேண்ட = இம்மடந்தை இச்சிப்ப, இப்பேறு நல்கினம் = இந்தப்பயனைத் தந்தேம், யார்க்கும் = எத்தகையர்கட்கும், இருதயத்திலே நினைந்தது = மனத்தின்கண் ணத்தியந்தம் எண்ணி யது, எமது பார்வையால் எய்திடும் என்றனன் = நமதுகிருபா திருஷ்டியானே அடை யப்பெறலாம் என் றனுக்கிரகித்தனள். (76)

(ஸ்ரீ-வீர.] யாவருக்கும் ஒரு சிறிதும் யான் கொடுப்பதே கிடையாது, ஜீவர்கள் தாங்களே தங்களிச்சைப்படி யாவற்றையும் விரைவிற் சம்பாதித்துக் கொள்ளுகிறார்கள். ஞானதேவியாகிய யான் பிராணிகள் வாஞ்சித்தவருஞ் சுபத்தை வரதான வாயிலாகப் பிரகாசிப்பிப்பேன் அறிவுமாத்திர அதிதேவதையா யிருப்பன், காம கரும வாசனை யோடுகூடிய மாயாசகித சிற்சத்தியனு சாரமாகவே பயன்றருவேம்; நின்பாலுதயமாய ஜீவசக்தி எம்மை யினிதாராதித் துறைந்து யான் முத்தையாவேன் என்னும் வருங்கரும அதன்பல சூக்கும அவஸ்தையைக் கருப்பத்துற்ற காமத்தால் வரைந்துகொண்ட அறி வுருவமாகும், இத்தகைய நீள்பாவனையால் அத்தகையவீடக்காலடையும்; அவ்வவ்வகை யானே நீ யெம்மாலுணர்த்தப் பட்டாய், அந்த யூகத்தினாலே உணர்வினாலே யொதுக் கப்பட்ட அஞ்ஞான ஆவரணங்களால்நிருமலவடிவ அவஸ்திதிவடிவ அமலத்தகைமையை நீயடைந்தனை, யான்முக்தையாவேன் என்பதான பாவனையானே நீள்போது கூடினவ ளானபோது முற்போதித்த யூகத்தானே தெளிவிக்கப்பட்டாய், அவ்வெண்ணிய பொரு ளையே சிற்சக்தியினானே யடைந்தனை.

(ச.) தேவிசொல்கின்றாள், ஒரு+மால் = வரவர்ணினியே! நான் யார்க்கும் அணு வுஞ் செய்யாதவள் பிராணிகள் தஞ்சங்கற்பத்தின் படியே எளிதிற் சகலத்தையுஞ் சம்

பாதிக்கின்றன, கருதி + தனம் = முன்பு என்னை நன்ருய் ஆராதித்த நினக்கு இத்தன்மையான முக்தி வேண்டுமென்று சங்கற்ப முதித்தது ஆதலால், நீ முற்கூறிய போதப் பிரகாரங்களாற் போதிக்கப் பெற்ருய், பெருகு + நல்கினம் = இவளால் யாசிக்கப் பட்ட நான் இவ்வர்த்தத்தையே கொடுத்தவளானேன், இப்பேறு = இவ்வர்த்தத்தையே, இத்தேகத்தினுலேயே பர்த்தாவின் சமீபஞ் செல்லவேண்டு மென்னு மிப்பேற்றையே, இருதய + என்றனள் = நாரது சங்கற்பம் எமது பிரபாவத்தினு லித்தன்மை பலிக்கு மென்று ஸ்ரீதேவி சொன்னுள். நல்கிலேம், நல்கினேம், நினைவது, என்பன பாடபேத பதங்கள்.

(ஸ்ரீ - வீர - அ - கை.) இவ்வண்ணம் அவர்கள் அவ்வீட்டிற் பேசிக்கொண் டிருந்த போது அவ்வீட்டினின்றும், மிகச் சினமுடையவனுகி வெளிப்போந்த விதூரதன் யாது செய்தான் என்று ஸ்ரீ இராகவர் கேட்ப ஸ்ரீ வசிஷ்டபகவான் விடையருளுகின்ருர்:— திறலென.

திறல்விடூரதன் சினமிகுத்தனன் றேரிலேறினன் சேனையோடுபோய்
மறலியூர் புகும்வழி நெருக்கமாய் மருவலாரெலா மடியமோதினு
னிறலுறுங் கொலென் றெண்ணி யன்பருலீலை வாணிதாளேத்தி யன்னையே
விறன்மிகுந்து நின்கருணை மேவியும் வினையின் மாளுமோ வேந்தனென்னவே.

(ப - ரை.) திறல் விடூரதன் = ஆற்றலோடு கூடிய விதூரத மகாராஜா, சினமிகுத்தனன் = கோபம் அதிகரித்தனன், தேரில் ஏறினன் = உத்தமமாகிய ரதாரோகணஞ் செய்தான், சேனையோடுபோய் = சைனியங்களோடுஞ் சென்று, மறலியூர் புகும்வழி நெருக்கமாய் = யமபுரம் செல்லும் மார்க்கம் இடைஞ்சலாய், மருவலாரெலாம் மடிய மோதினுன் = பகைவர் யாவரும் இறப்பப் பெரும்போர் விளைத்தனன், இறலுறுங்கொலென்றெண்ணி = இறந்துவிடுமோ என்று நினைந்து, அன்பு அரு = வாஞ்சைமாருத, லீலை வாணிதாளேத்தி = லீலாதேவிகள் ஸ்ரீசரசுவதிதேவியின் திருவடித்தாமரையைத் தோத்தரித்து, அன்னையே = ஹேமாதாவே, விறன் மிகுந்தும் = சுயம் ஆற்றன் மிகப் படைத்தும், நின்கருணை மேவியும் = தேவரீரது தயவைப் பெற்றும், வேந்தன் = எங்கள் பர்த்தா, வினையின் மாளுமோ என்ன = வினைவயமாகவே யிறந்து விடுமோ என்று வணக்கமாய் வினவினுர்கள்.

(ஸ்ரீ - வீர.) கிரிசிருங்கம்போலு மிருக்கு மாகாரத்தோ டொப்பான ஆகாரமுடையது அத்தேர் கூடகாரமயகிருகம் போன்ற ஆகாரமுடையது அத்தேரெனினும் தகும். இடியிடித்துக் கொண்டு கிளம்பும் அநேகமேகங்களின் பெருஞ்சப்தம் போலுஞ் சப்தம் மிகமிகவுங் கிளம்பியது அக்கால்; துந்துபித் தொனியானது பர்வதபக்கப் பாறைப் பித்திகளிற் பிரதித்தொனி தொனித்து அதிபயங்கரமாக விருந்தது. சஸ்திரங்கள் ஒன்ருே டொன்று மோதி டங்காரஞ்செய்து கொண்டிருந்தன. வலுவில்|வலிந்த மடந்தையுடைந்தழும் ரோதனமிகுத்தது. நிபிடமான அவயவ பாஷாணங்களால் பூரிக்கப் பெற்றது அசேஷ பிரஹ்மாண்ட பொந்திற்றெனி; அதிமகத்தான தொனியினுனே எல்லாப் பக்கங்களிலும் நிறைக்கப்பெற்ற பிரஹ்மாண்டப் பொந்தானது சிலாகனத்தாற் பூரிக்கப் பெற்றதேபோல இருந்தது. மிகுந்தகோர பயங்கரமானது பத்துத்திசையிலும் பூரித்திருந்தது. இருளானது மிகமிகவும் அதிகரித்திருந்தது. உன்முகங்களொப்ப சஸ்திரசங்கட்ட அக்கினிகள் சொலித்துக் கொண்டிருந்தன. சரகோரக் கூட்டங்களை வருஷிக்கும வீரமேகங்கள் கர்ஜனைகள் செய்துதிரிந்தன. வீரர்மேலும் குரூரமானலோக

கருப்பநாள்-பிறந்தநாளுக்கு ஒன்பதாநாள்.
கருப்பநீர்-கருப்பஞ்சாறு, பதநீர், பனை முதலியவற்றினீர்.
கருப்பபாதகம்-செம்முருங்கை.
கருப்பபாதனம்-கருப்பம்விழுதல்.
கருப்பப்பரிசம்-கருப்பந்தரித்தல்.
கருப்பப்பை-கருப்பகோளகை.
கருப்பமழிதல்-கருக்கரைதல்.
கருப்பம்-அரண்மனை, உபகிடத மூப்பத்திரண்டிலொன்று, உள், சினை.
கருப்பம்பாகு-சருக்கரை.
கருப்பரம்-அத்தி, இருப்புப்பாண்டம், தலையோடு.
கருப்பவதி-கருப்பந்தரித்தவள்.
கருப்பவாதை-கருப்பவேதனை.
கருப்பவாயு-ஓர்வாயு, பிரசூதவாயு.
கருப்பவேதை-கருப்பவேதனை.
கருப்பற்று-கருப்பந்தரிப்பு.
கருப்பாகாரம்-கெற்பக்கிரகம்.
கருப்பாசயப்பை-கருப்பப்பை.
கருப்பாசயம்-கருவிருக்குமிடம்.
கருப்பாதானம்-ஓர்சடங்கு.
கருப்பிடித்தல்-யோசனை மட்டுக்கட்டுதல்.
கருப்பிணி-கருப்பஸ்த்ரீ.
கருப்பிணியவேட்சணம்-பிரசூதிவைத்தியம்.
கருப்பு-அரிது, குறுவிலை.
கருப்புக்கட்டி-கற்கண்டு, பனங்கட்டி, வெல்லக்கட்டி.
கருப்புப்பு-கிருஷ்ணலவணம்.
கருப்புரம்-ஓர்நெல், நீர், பாவம்,பொன்.
கருப்புவில்-மதன்வில்.
கருப்புவில்லி-காமன்.
கருப்பூரசலாசத்து-ஓர்மருந்து.
† கருப்பூரசுந்தரன்-மதுரையிலமர்ந்தசிவன்.
கருப்பூரதீபம்-கருப்பூரவிளக்கு.
கருப்பூரத்தயிலம்-ஓர்மருந்து.
கருப்பூரத்துளசி-ஓர் துளசி.
கருப்பூரநீர்-ஓர் மருந்து.
கருப்பூரப்புல்-ஓர்வாசனைப்புல்.
கருப்பூரமரம்-ஓர்மரம்.
கருப்பூரம் - சூடன், பஞ்சவாசத் தொன்று, பொன், பொன்னரிதாரம்.
கருப்பூரவல்லி, கருப்பூரவள்ளி } ஓர்செடி.
கருப்பூரவில்வம்-ஓர்வில்வம்.
கருப்பூரவெற்றிலை-ஓர்வெற்றிலை.
கருப்பூர்-ஓரூர்.
கருப்பூர்வழக்கு-அழிவழக்கு.
கருப்பெட்டி-கருப்பை.
கருப்பை - † உட்கொண்டது, கருப்பாசயப்பை, கரும்பனங்காய்ப்பனை, காரெலி.
கருப்பொருள் - அவ்வந் நிலத்திலுற்பத்திப்பொருள்; அஃது-உணா-ஊர்-குடி-தலைவர்-தெய்வம்-தொழில்-நீர் - பண்-பறை-புள் - மரம்-மலர்-யாழ்-விலங்கு என்பன.
கருமகரன்-நமன், வேலைக்காரன்.
கருமகர்த்தா-கருமஞ்செய்பவன், காரியகர்த்தர்.
கருமகள்-காக்கை.
கருமகாண்டம் - கன்மநிவிர்த்தி முதலியவற்றைச் சொல்லும் நூல்.
கருமகாண்டிகர்-மூவகைப் பக்குவரி லொருவர்.
கருமகாரன்-கம்மாளன், வேலையாள்.
கருமகீலகன்-வண்ணான்.
கருமக்கத்தா - கிரியைநடத்துவோன், செய்வோன்.
கருமக்கழிபலம் - பாவத்தைக்கழிக்கும் புண்ணியம்.
கருமக்காரகம்-வினையைப் பொருளிற் புலப்படுத்து முருபுடைப்பெயர்.
கருமக்கியானம்-கருமஅறிவு.
கருமங்கட்டுப்படல்-பாவஞ் செய்தல், வினை தீராது நிற்றல்.
கருமசண்டாளன்-துரோகி.
கருமசம்-அரசமரம், கலியுகம், களங்கம், சத்து, தீவினை.
கருமசாங்கரியம்-ஐக்கம்.
கருமசுத்தி-கிரியையிற் குற்றத்தீர்ப்பு, பாவப்பிராயச்சித்தம்.
கருமஞ்சரி-நாயுருவி.
கருமணி-கண்மணி, நீலமணி.
கருமத்தலைவர்-வருங்காரியஞ்சொல்வோர்.
கருமத்தலைவன்-அரசர்க்குத் துணைவன், கருமாதிகாரி.
கருமத்துரோகம்-வினைப்பவம்.
கருமநிட்டன்-பிராமணன்.
கருமநிவிர்த்தி-பாவத்தீர்ப்பு.
கருமபந்தம்-செய்வினைத்தொடர்.
கருமபந்தனம்-பழவினைத்தொடர்பு.
கருமபாகை-வேதநூற்பொருளிலொன்று.
கருமபாவம்-கிரியாபாவம்.

கருமபூமி - இருவினை யியற்றற்குரியவுலகம், சுடுகாடு.
கருமபூமிக்குரிமை-உழவு, சிற்பம், தொழில், வரைவு, வாணிபம், வித்தை என ஆறு விதம்.
கருமப்பழி-துரோகம்.
கருமப்பிறப்பு-பாவச்சென்மம்.
கருமமுடித்தல்-செய்தொழில் முடித்தல், நிய மநிட்டை முடித்தல்.
கருமமூலம்-தருப்பை.
கருமம் - இயற்கைச்சொல், உட்டணம், கடமை, காரியம், கிரியை, செயப்படு பொருள், செய்கை, முன்வினை, வெப்பம், வேனிற்காலம்.
கருமயிர்-காடி.
கருமயுகம்- கலியுகம்.
கருமர்-கருமார்.
கருமலை-இரும்புச்சுரங்கமலை.
கருமவிபாகம்-ஊழ்வினைப்பயன்.
கருமவியாதி-மருந்தினுலாருத நோய்.
கருமவிருத்தி-சுத்தநடக்கை.
கருமவுவமம்-செயலுவமம்.
கருமவேதனை-மிக்கவருத்தம்.
கருமா-பன்றி, யானை.
கருமாதி-அந்தியேட்டிமுதலிய சடங்கு.
கருமாதிகாரம்-கருமங்கள் செய்து முடிக்குமதிகாரம், கிரியைக்கதிகாரம்.
கருமாதிகாரன்-அரசர்க்குத் துணைவரி லொருவன், காரியத்தலைவன், நிமித்தகாரன்.
கருமாதிக்காரர்-கருமத்தி லாதிக்கம் பெற்றோர், காரியத்தலைவர்.
கருமாதிசெய்தல்-ஈமக்கடன் முதலிய செய்தல்.
கருமாத்துமா-கன்மஞ்செய்தவன்.
கருமாநுட்டானம்-நியமநிட்டை.
கருமாந்தம்-கருமாந்தரம், கார்காலம்.
கருமாந்தரம்-கருமாதி, பாவம்.
கருமாந்தியம்-அந்தியேட்டி.
கருமாந்திரம்-கருமாதி, பாவம்.
கருமாயம்-அதிகவிலை, அருமையானது.
கருமாரன்-கொல்லன்.
கருமாரி-ஓர்மரம், பிரசூதவேதனை.
கருமார்-கொல்லர்.
கருமானம்-கரியவானம், கருவித்தை.
கருமானுபவம்-செய்வினைப்போகம்.
கருமான்-கலைமான், கொல்லன், பன்றி.

கருமி-தீவினையுடையோன், நித்திய கருமம் வழுவாது செய்வோன், பாவி, பூசைசெய்பவன்.
கருமிசம்-வினை.
கருமுகில்-நீருண்டமேகம், வைப்புப்பாஷாணமுப்பத்திரண்டினுென்று.
கருமுகில்வண்ணம்-தீமுறுகற்பாஷாணம்.
கருமுகிற்சிலை-காந்தக்கல்.
கருமுகிற்பாஷாணம்-கார்முகிற்பாஷாணம்.
கருமுகை-இருவாட்சி, சிறுசெண்பகம்.
கருமுடித்தல் -அட்டகருமக்கருவுண்டாக்கல், வேதைக்கருமுடித்தல்.
கருமுதல்-ஓர்மீன்.
கருமுரடன்-கீழ்ப்படியாதவன்.
கருமுரல்-ஓர்மீன்.
கருமேகம்-காளமேகம்.
கருமேந்திரியம்-கன்மேந்திரியம்.
கருமை-கறுப்பு, நஞ்சு, பெருமை, வலி, வெள்ளாடு.
† கரும்படுசொன்னுயகி-திருப்புறம்பயத்திற் கோயில் கொண்டிருக்குந் தேவி.
கரும்பனசை-கருவழலைப்பாம்பு.
கரும்பனூர்-ஓரூர்.
† கரும்பனூர்கிழான் - ஓர் வேளாளப் பிரபு; இவன் வேங்கடநாட்டில் விளங்கிய கரும்பனூரன் மகனும் புறத்திணை நன்னுகராற் பாடப்பட்டவனு மாவன்.
கரும்பனையன்-ஓர்பாம்பு.
† கரும்பன்-ஓர் ஈகையாளன்; இவன் தன் தோட்டத்தி லிருந்த கரும்பை யெல்லாமொருவர் நாணுது வந்து தின்னுகவென்று யாவரையு மழைத்தபோது சிலர் மறுக்க அவர்க்குக் கூலி கொடுத்தழைத் தருத்தின தொண்டை நாட்டு வேளாளன். கரும்பு தின்னக் கைக்கூலி யென்ற பழமொழி யிவனுல் வந்தது.
கரும்பாம்பு-இராகு, கருவழலை.
கரும்பாலை-ஓர்மரம், கரும்பாட்டுஞ் செக்கு.
கரும்பித்தம்-ஓர்நோய், ஓர்பித்தம்.
கரும்பிள்ளை-காக்கை.
கரும்பிறை-கருஞ்சுக்கான்.
கரும்பு-கன்னல், புநர்பூசம்.
கரும்புக்கட்டி-கருப்பங்கட்டி.
கரும்புசம்-வண்டு. *



கரும்புமுத்து-கரும்பிற்பிறந்த மஞ்சணிற முத்து.

கரும்புலி-ஓர்புலி.
கரும்புல்-பனைமரம்.
கரும்புவில்லி-மன்மதன்.
கரும்புளித்தல் - கெட்டுப்போதல், செம்பிற் களிம்பூறுதல்.
கரும்புள்-கரிக்குருவி-காகம், பெண்வண்டு, வண்டு.
கரும்புள்ளிக்கல்-கானகக்கல்.
கரும்புள்ளிதீட்டல்-ஓர்கோலந் தீட்டல்.
கரும்புறம்-பனை.
கரும்புறவு } ஓர்புறவு.
கரும்புறா }
கரும்பூ-நீலோற்பலம்.
கரும்பூமத்தை-கரியவூமத்தை.
கரும்பேன்-புடைவையிற் பற்றுங்கரும்புள்ளி.
கரும்பொன்-இரும்பு.
கருவகம்-கருத்தரிக்குந்தானம்.
கருவங்கம்-காரீயம்.
கருவடம்-தலைமையானவூர், மலையுமாறுஞ் சூழ்ந்தவூர்.
கருவண்டு-கறுத்தவண்டு.
கருவண்ணம்-கறுப்புநிறம்.
கருவதை-சிசுவதை.
கருவம்-அகங்காரம், ஒரெண், சினை.
கருவரி-இருள், கருவிழியின்ரேகை.
† கருவரை-வலிய மலை.
கருவல்-கருப்பானது.
கருவழலை-ஓர்பாம்பு.
† கருவழலைச்சர்ப்பவிஷம்-ஓர்வகை விஷம்; அது சரீரத்திற் காங்கையோடு அதிக வியர்வையும், உள்ளங்கால் உள்ளங்கைகளிற் சிவப்பும், கோழையால் மார்பிலடைப்பும் பிறக்கும்படி செய்வது. அதனு லனந்தம் வேதனை யுண்டாகும்.
கருவழித்தல்-சிசுவதை.
கருவளைச்சுக்கான்-கருஞ்சுக்கான் கல்.
கருவறிதல்-கருத்தறிதல்.
கருவறுத்தல்-நாளுக்குநாட்கவர்தல்.
கருவா-இலவங்கமரம்.
கருவாடு-காய்ந்தமீன்.
கருவாட்டுவாலி - எருத்துவாலன்குருவி, வலியான்.
கருவாப்பட்டை-இலவங்கப்பட்டை.
கருவாமுப்பு-ஒருப்பு.
கருவாலி-ஓர் மரம், ஓர்குருவி.
கருவாழை-ஓர்வாழை.
கருவாளி-கருத்துடையோன்.
கருவானம்-கருமானம்.
கருவி-ஆயுதப்பொது, உபகாரணம், கவசம், காரணம், குதிரைக் கல்லணை, கூட்டம், தொடர்பு, நட்பு, மெய் வாய்முதலியகருவி, மேகம், யாழ், வாச்சியம், வீணை.
கருவிகரணம்-பொறியும் அந்தக்கரணமும்.
கருவிகழலுதல்-பெலன்கெடல்.
கருவிகாண்டம்-வாசிக்கப்பழகும் புத்தகம்.
கருவிக்காரகம்-கருவிப்பொருளைக் காட்டு முருபுடைப்பெயர்.
கருவிக்குயிலுவர் - தோற்கருவி வாசிப்போர்.
கருவிநூல்-கருவிகாண்டம்.
கருவிப்புட்டில்-படையுறை.
கருவிப்பை-ஆயுதவுறை.
† கருவிமாக்கள்-யாழ்ப்பாணர்.
கருவியாகு பெயர் - கருவியாகுகிய பெயர் (உ-ம்) நாழி.
கருவிரலூகம்-கரியவிரலையுடைய குரங்குபோலிருந்து சேர்ந்தாரைக் கடிக்கும் யந்திரம்.
கருவிலி-ஓர்பாம்பு.
கருவிழி-கண்மணி.
கருவிளங்கனி-மூன்று நிரையசையாய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.
கருவிளங்காய்-நிரைநிரை நேராய்வருஞ்சீர்க்கு வாய்பாடு.
கருவிளநறுநிழல்-நாலு நிரையசையாய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.
கருவிளநறும்பூ - நிரை நிரை நிரை நேராய் வருஞ்சீர்க்கு வாய்பாடு.
கருவிளந்தண்ணிழல் - நிரைநிரை நேர் நிரையாய்வருஞ்சீர்க்கு வாய்பாடு.
கருவிளந்தண்பூ-நிரை நிரை நேராய்வருஞ்சீர்க்கு வாய்பாடு.
கருவிளம்-இரண்டு நிரையசையாய் வருஞ்சீர்க்கு வாய்பாடு, ஓர்மரம், காக்கணஞ் செடி.
கருவிளா-ஓர்மரம்.
கருவிளை-காக்கணஞ்செடி.
கருவுயிர்த்தல்-ஈனல்.
கருவுளமைப்பு-சென்மத்தினியமம்.
கருவூமத்தை-ஓர்ஊமத்தை.
கருவூர்-கோயம்புத்தூர் சில்லாவில் ஓரூர், † வஞ்சி; இந்நகர் சேரருக்குரிய இராஜதானி, சேரரை வென்று சோழருமிங்கரசியற்றினர்.
கருவூலம்-பொக்கசம்.

கருவெடுத்தல்-உடம்பெடுத்தல்.
கருவேப்பிலை-கருவேம்பினிலை.
கருவேம்பு-ஓர்மரம்.
கருவேல்-ஓர்மரம்.
கருவை-ஓரூர், வரகுவைக்கோல்.
கருவெளவால்-ஓர்மீன்.
கருளை-கரளை.
கருள்-இருள், கறுப்பு, நல்லாடை.
கருனீகசன்னி-ஓர்சன்னி.
கருனை-பொரிக்கறி.
† கரூசன்-வைவசுவத மனுவினுடைய புத்திரரு ளொருவன், இக்ஷுவாகுதம்பி, காரூசர் இவன் வமிசத்தவர். இவன் தேசம் கரூசம்.
கரேகரம் - குத்துச்சண்டை, முழங்கைமடிப்பு.
† கரேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
கரேடம்-நகம்.
கரேனு-பெண்யானை, யானை.
கரை-அருகு, எல்லை, கரையென்னேவல், கானல், முடிவு, வார்த்தை.
கரைகடத்தல்-எல்லைக்குமேற்படல்.
கரைகண்டவன்-மிகத்தேர்ந்தவன்.
கரைகலம்-ஆபரணச்செப்பு.
கரைகன்று-அழிகன்று.
கரைகாணல்-எல்லைகாணுதல்.
கரைகாணப்பேரொளி-கடவுள்.
கரைக்கல்லோலம்-கடற்பாசி.
கரைக்காற்று-கடலோரத்தி லடிக்குங்காற்று.
கரைசிலை-இந்துப்பு.
கரைச்சல்-உருக்கம்.
கரைஞ்சான்-அகில்.
கரைதல்-அழுதல், அழைத்தல், அறப்பழக்குதல், ஆரவாரம், இரங்கல், இளைத்தல், உருவழிதல், ஒலித்தல், சொல்லுதல், பதனழிதல், பேரொலி, வருந்துதல்.
கரைதுறை-துறைமுகம், முடிவு.
கரைத்தல்-உருக்குதல், எழுத்திலா வோசை, கரைக்குதல், சொல்லா வெழுமொலி.
கரைபிடித்தல்-கரையடைதல்.
கரைபுரட்டுதல் } கரைமூடிப்பாய்தல்.
கரைபுரளுதல் }
கரைப்படுதல்-கரையேறுதல்.
கரைப்படுத்தல்-கரைக்குக்கிட்டவைத்தல்.
கரைப்பாதை-கரையோரமானவழி.

கரைப்போக்கு - இழிவானது, கரையோரம், கரைவழி, போலிமணி.
கரைப்போர்-கரையிலிருந்து பண்ணுஞ் சண்டை.
கரையடுத்தது-கரையைக்கிட்டினது.
கரையல்-கரைந்தது, கரைந்துபோவது, கணிதல்.
கரையார்-ஓர்சாதி, வலைஞர்.
கரையேறல்-கரையையடைதல், நற்கதியடைதல், வருத்தத்தினின்று நீங்கல், வாழ் வடைதல்.
† கரையேறவிட்டநல்லூர் - ஓர் சிவத்தலம்; இது திருப்பாதிரிப் புலியூருக்குச் சமீபத்திலே கெடிலநதி தீரத்திலுள்ளது. கெடிலம் பெருகி மாணிக்கவாசகரை வழிதடுக்கச் சிவன் சித்தராய் வந்து அவர்க்கு வழிவிடுத்ததலமு மிதுவாகும்.
கரையோட்டு-கரைபிடித்தோடல்.
கரைவலை-கரைக்குக் கொண்டுவரும் வலை.
கரைவலைக்காரர்-கரையாரிலோர்பகுதி.
கரைவழி-கரைப்பாதை.
கரைவாடை-வடமேல்காற்று.
கரைவீதம்-கரைக்கேற்றபங்கு.
கரைவு-கரைதல்.
கரோடகம்-துணிப்பெட்டி.
கரோடம்-தலையோடு.
கரோடி-தலையோட்டுப்பொருத்து, முடிமாலை.
கரோடிகை-கழுதைக்குட்டிமாலை, முடிமாலை.
கரோருகம்-நகம்.
† கரோரேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.
† கர்கடேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.
கர்க்கடகசிரிங்கி-கடுக்காய்ப்பூ.
கர்க்கடகம்-ஓரிராசி, நண்டு.
† கர்க்கடேசர் - திருந்து தேவன் குடியிற் கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
† கர்க்கன்-யாதவர்கள் புரோகிதன்; வசுதேவன் இவனை நந்தன் மனைக்கனுப்பிப் பலராம கிருஷ்ணர்களுக்கு நாமகரணாதி சமஸ்காரஞ் செய்வித்தான், ஹூதமன்னியன் என்னும் புமன்னியன் புத்திரன், சினி தந்தை.
கர்ஜூரோகம்-சீரணூறல், சொறிசிரங்கு, நமட்டுச்சிரங்கு, தினவு.
கர்ச்சிதம்-இடிமுழக்கம், யானைப்பிளிறொலி.
கர்ச்சித்தல்-முழங்கல்.

கர்ச்சூரம்-கழற்கொடி, பேரீந்து.

† கர்ணகண்டு-ஓர்வகைநோய்; அது காதுக் குள் அதிக கபத்தினால் நமைச்சலை யுண் டாக்குவது.

† கர்ணகிருமி-ஓர்வகை நோய்; அது காதுக ளில் திரிதோஷச் செய்கையாற் பிறப்பது. அதனாற் கிருமிகள் சனித்து அவ்விடத்திற் சீழ்,இரத்தம், மாமிச மிவைகளைப் புசித்துக் கொண்டு அதிக ஆரவையும் மிக்க நோவையு முண்டாக்குவது.

† கர்ணகூசிகை-ஓர்வகை நோய்; அது காது க்குள் வாயு தங்கும் காலத்திற் பிறப்பது. அதனால் செவியினதுட் கருவியாகிய குறு ம்பி முடங்கிக்கொண்டு மிக்க வுபத்திரவ முண்டாம்.

† கர்ணசோபை-ஓர்வகை நோய்; அது காது ளதிகவீக்கத்தைமாத்திர முண்டாக்குவது.

† கர்ணதந்திரிகை-ஓர்வகை நோய்; அது கா துக்குட் பிசினைப்போல் நெகிழ்ச்சியாகவு மிழுத்தா லறாமல் தந்தியைப்போல் நீளுவ தாகவு மிருக்கின்ற சீழை யுண்டாக்குவது.

† கர்ணநாதம்-ஓர்வகை நோய்; அது காது களி லோசையைத் தெரிவிக்கின்ற நரம்பு களில் வாயு சேருங்காலத்திற் பிறப்பது. அதனாற் காரணமில்லாமலே காதுக்குள் நானாவிதச் சத்தங்க ளுண்டாகும்.

† கர்ணபரிபோடகம்-ஓர்வகை நோய்; அது வாயுவினாற் காதுக்கு ளற்பவீக்கத்தையு டைய கொப்பளங்களைப் பிறப்பிப்பது. அது அதிக நாள் அப்படியே யிருக்கும். அப்பால் விருத்தி யடைய ஆரம்பித்தாற் சீக்கிரத்தில் விருத்தி யடையும். அதனால் அம்மார்க்கத்தில் மிகு சிவப்பும் நோவு மு ண்டாகும்.

† கர்ணபாலசோஷம்-ஓர்வகை நோய்; அது காதுக்குள் ளிருக்கும் நரம்புகளில் வாயுவு தங்கிச் சஞ்சரிக்கும்போது பிறப்பது. அத னால் நெற்றி யுலர்ந்து மிகவுஞ் சுட்கத்தை யடையும்.

† கர்ணபிதாரிகை - ஓர்வகை நோய்; அது திரிதோஷத்தினாற் காதுக்குள் சிறிய நில ப்பூசுணிக் கிழங்கைப்போல் மாமிசத்தை யுண்டாக்குவது. அதனால் அவ்விடத்தில் திமிர், வீக்கம், கடுகுத் தயிலம்போற் சல வொழுக்கு, குத்து, குறும்பி மடங்குகை யாகிய குணங்க ளுண்டாகும்.

† கர்ணபிப்பலி-ஓர்வகை நோய்; அது மாமி சத்தைப்பற்றிப் பிறப்பது. அப்போது கா துக்குள் கெட்ட மாமிசமானது திரளையாக ஒன்றாயேனும் பலவாயேனு முண்டாய்க் கொண்டே யிருப்பது.

† கர்ணபூதி-ஓர்வகை நோய்; அது பித்தத்தி னாற் கபங்கெடுதியை யடையுங்காலத்திற் பிறப்பது. அதனாற் காதுக்குள் ளிருக்குங் குறும்பியின் சருமத்தில் நோவு,ஒருவேளை யின்மை, மிகுந்த துர்க்கந்தம், வியர்வை போல் ஓயாது சலம் வடிதலாகிய இக்கு ணங்க ளுண்டாகும்.

கர்ணம்-கணக்கன்.

† கர்ணவிகியம்-ஓர்வகை நோய்; அது சிலே ட்டுமத்துடன் கூடியஇரத்தத்தினாற் காது க்குள் கிருமிகள் பிறப்பது. அக்கிருமிகள் சிறுசிறு கொப்பளங்களை யுண்டாக்கும். அதனால் காதுகளில் மிகுதினவு, வியர் வை, வேதனை, அம்மார்க்கத்தி லெங்கேரா மூ மொரு கருவியைக்கொண்டு குடைதற் கே நினைப்பென்னு மிக்குணங்க ளுண்டா கும்.

† கர்ணவித்திரதி - ஓர்வகைக் காதுநோய்; அது காதுக்கு ளுண்டாகின்ற நமைச்சலா ற் சில கருவியைக்கொண்டு குடைவதனாற் புண்ணாகுங் காலத்திற் பிறப்பது. அதனா ல் வித்திரதிக் கட்டிக் குள்ள குணங்க ளனைத்து முண்டாகும்.

கர்ணன்-கன்னன். ✻



கர்ணு-ஓர்வாச்சியம்.

† கர்ணாரசோற்புதம்-ஓர்வகைக் காதுநோய்; அது காதுகளின் மூலத்தில் மூலரோக உபத்திரவத்தைப்போ லுபத்திரவத்தையுந் துர்க்கந்தத்தையுஞ் செவிட்டையு முண் டாக்குவது.

† கர்ணாற்புதம்-ஓர்வகைக் காதுநோய்; அது காதுகளிற் கருணாரசோற்புதரோக குணங் களுடன் செவிப்பிரதேச மெல்லாம் ஏக வீக்கத்தை யுண்டாக்குவது.

† கர்ணிகேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெ ட்டனு ளொன்று.

கர்ணிகை-தாமரைக்கொட்டை.

† கர்ணோற்பாதம்-ஓர்வகை நோய்; அது இர த்தபித்த ரோகத்தினாலும், மிகவுங் கனத் த காதுகளினாலுங் காதுகளில் வேர்க்குரு போற் சிறிய கொப்பளத்தை யுண்டாக்கு

வது. அது பழுத்து உடையில் வீக்கமும் பெரிய பெரிய கொப்பளங்க ளெழும்புத லும், வியர்வையும், இரத்தமும், சூடும் பிற ப்பதோடு அதிக நோவு மெரிச்சலு முண் டாகும்.

† கர்ணோன்மந்தம் - ஓர்வகைக் காதுநோய்; அது வாதசிலேட்டுமங்களினாற் பிறப்பது. அதனாற் செவிமார்க்கத்தில் நிலைபெற்ற வீக்கம், நோவின்மை, அதிக நமைச்சல், சீக்கிரத்தில் வசப்படாமை யென்னு மிக் குணங்க ளுண்டாகும்.

† கர்த்தகேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத் தெ ட்டனு ளொன்று.

கர்த்தத்துவம்-அதிகாரம், இறைமை, தன் மை, சகலத்தையும் நடத்துகிற தத்துவம்.

கர்த்தநம்-வயிற்றிரைச்சல்.

கர்த்தபம்-கழுதை.

† கர்த்தபி-ஓர்வகை நோய்; அது சரீரத்தில் மண்டலாகாரமாய் வெண்காக்கட்டான்கா யினது உருவத்தோடு சிவந்த கொப்பளங் களை விஸ்தாரமா யுண்டாக்குவது.

† கர்த்தமப்பிரஜாபதி-பிரமசாயையி லுற்பத் தியானவன்; இவன் பாரிதேவஹூதி, புத் திரன் கபிலன்.

கர்த்தமம்-மாமிசம்.

† கர்த்தமேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெ ட்டனு ளொன்று.

† கர்த்தவர்த்தமம் - ஓர்வகை நோய்; அது இமைச்சந்துகளி லுண்டாகுங் கட்டிக ளு டையும்போது பிறப்பது. அதனு லவ்விட ஞ் சேற்றைப் பூசினதுபோ லிருக்கும்.

கர்த்தவியம்-செய்யத்தக்கது.

கர்த்தன் - எழுவாய், கடவுள், செய்வோன், தலைவன்.

† கர்த்திருகாரகம்-எழுவாய்.

† கர்த்திரேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத்தெ ட்டனு ளொன்று.

கர்ப்பகோளகை-கருப்பாசயம்.

கர்ப்பக்கல்-ஓர் மருந்துக்கல்.

கர்ப்பக்கிரகம்-மூலஸ்தானம்.

கர்ப்பக்குழி-கருப்பை.

கர்ப்பஸிராவம்-கர்ப்பங்கரைந்துபோகுதல்.

கர்ப்பசூலை-இரத்தசூலை.

கர்ப்பபாதம்-அகாலபிரசவம்.

கர்ப்பபிரம்ஸம்-கருப்பை அடியிறங்கிப் போ குதல்.

கர்ப்பப்பரிசம்-கருஉற்பத்தி.

கர்ப்பப்பை-கருப்பாசயப்பை.

கர்ப்பம்-உள், கருக்கொள்கை, கருப்பாசயம், சினை.

கர்ப்பவதி-கர்ப்பஸ்த்ரீ.

கர்ப்பவிச்சியுதி-கருவழிவு.

கர்ப்பவோட்டம் - கருக்கொள்ளுமேகவோட் டம்; இது மார்கழிமாதத்தில் சூரியன் த னுசில் பிரவேசித்த பதின்மூன்றே முக் கால் நாளுக்குமேல் பன்னிரண்டு நாள் ஓடுவது.

கர்ப்பாசயம்-கர்ப்பப்பை.

கர்ப்பாதானம்-ஓர்சடங்கு.

கர்ப்புணி-கர்ப்பவதி.

கர்ப்புரை-சாம்பிராணி.

கர்ப்பூரசிலாசத்து-ஓர் மருந்து.

கர்ப்பூரத்துளசி-ஓர் துளசி.

கர்ப்பூரப்புல்-ஓர்வாசனைப்புல்.

கர்ப்பூரம்-கருப்பூரம்.

கர்ப்பூரவல்லி
கர்ப்பூரவள்ளி } ஓர்வாசனைச்செடி.

கர்ப்பூரவில்வம்-ஓர்வில்வம்.

கர்ப்பூரவெற்றிலை-வாசனைவெற்றிலை.

† கர்ப்பேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத் தெட் டனு ளொன்று.

கர்மபலம்-வினைப்பயன்.

† கர்மம்-அகங்கார மமகாரங்கள் காரணமா கச்செய்யப்படுஞ் செயல்கள்; அவை ஆகா மியம், பிராரத்தம், சஞ்சிதம் என மூன்று வகைப்படும். இக்கர்மமே சுகதுக்கங்களு க்கும் அவைகளை யனுபவித்தற் கருவியா கிய பிறவிகளுக்குங் காரணமாம். கர்மம் நசித்தவிடத்துப் பிறவியும் நசித்து முத்தி கை கூடும்.

† கர்மியன்-காந்தாரி புத்திரன்.

கர்வடம்-நானூறுகிராமத்திற்குத் தலைக்கிரா மம், மலையும்யாறுஞ் சூழ்ந்தவூர்.

கர்வம்-இலட்சங்கோடி, குபேரனுடைய நிதி யிலொன்று, செருக்கு.

கர்வாலியுமரம்-ஓர்மரம்.

கர்விதன்-செருக்குள்ளவன்.

† கர்வேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட் டனு ளொன்று.

† கர்னகுஷ்டம் - ஓர்வகைக் குஷ்டநோய்; அது சருமத்திற் பச்சை வன்னத்துடன் பொடிபொடியாக வெடித்தல், திரிதோ

ஷாதிக்கம், தேகம் பாரித்துத் திமிருடன் காக்கட்டான் பூநிறமாகத் தோற்றுதல், தடிப்பு, வீக்கம், சிலேட்மொதிக்கமாகிய இக்குணங்களை யுண்டாக்குவது.

† கர்ணசூலைவாதம் - ஓர்வகை நோய்; அது அதிக சீதள தடாகத்தில் மூழ்கி மயிரை யுலர்த்தாமல் முடிந்துகொள்ளல், குளிர் காற்றி லடிபடல், உடனே சிலேட்டும வஸ்துக்களைப் புசித்தலாகிய இவைகளினுற் பிறந்து காதுகளிற்சேர்ந்துகொள்ளுவது. அப்போது செவிகளின் மூலத்திற்குத்தோடு நோவு, சிரசு பிடரி நெற்றி நெறி கண் புருவம் நாசி தந்தங்களின்வேர் தாடை கண்டமாகிய இவ்விடங்களில் வாளா லறுப்பதுபோ லிருத்தல், தேககனதி, குடைச்சலென்னு மிக்குணங்களுண்டாகும்.

கர்னம்-கன்னம்.

† கர்னிகசன்னிபாதசுரம் - ஓர்வகைச் சுரநோய்; அது காதின் மூலத்தில் வீக்கத்துடன் சத்தங்கேளாமை, வாய்திறக்கக்கூடாமற் கண்டத்தை யிறுக்கிப் பிடித்தல் போலிருத்தல், உடம்பெரிச்சலுடன் நடுக்கல், சிறுவேதனை,வயிறுகொதித்தல், பிதற்றல், மார்பிடித்தல், இரைதல், இருமலென்னு மிக்குணங்களை யுண்டாக்குவது.

† கலககண்டகி-கால கௌசிகன் பாரி.

கலகக்குருவி-ஓர்பட்சி.

† கலகங்காத்தவரதேசுரர் - திருமாகறலிற் கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.

† கலகஞ்சம்-ஓர்வகையன்னம்.

கலகண்டம்-அன்னம், குயில், புறு.

கலகப்பிரியன்-சண்டைக்காரன்.

கலகம்-ஓர்பட்சி, குழப்பம், சண்டை, பேரொலி, போர்.

கலகலத்தல் - அறக்காய்தல், ஒலிக்குறிப்பு, மிகப்பேசுதல்.

கலகலம்-இரைச்சல், பறவைக்குரல்.

கலகலெனல்-ஈரடுக்கொலிக்குறிப்பு.

கலகவாயன்-சண்டைக்காரன், வாயாலார்ப்பவன்.

கலகவாய்க்குருவி-ஓர்குருவி.

கலக்கடி-கலக்கம்.

கலக்கம்-அச்சம், ஆரவாரம், குழப்பம், சஞ்சலம், துன்பம், தெளிவின்மை.

கலக்கல்-கலங்கச்செய்தல், குழப்பல், கூட்டல், சேருதல், புணரல்.

கலக்கு-கலக்கென்னேவல், கலங்கப்பண்ணுதல்.

கலக்குதல்-அஞ்சுவித்தல், கலங்கச்செய்தல், குழப்புதல், திகைக்கச்செய்தல்.

கலங்கடித்தல்-திகைக்கடித்தல்.

கலங்கரைவிளக்கம்-கப்பலையழைக்கும் தீராவென்னும் விளக்கு.

கலங்கல் - அஞ்சல், அழுதல், கலங்குதல், சோற்றுநீர், துன்பமுறல், நீர்பாயுமதகு.

கலங்கனீர்-கலங்கற்றண்ணீர்.

கலங்காவரிச்சு-குடிலின் கால்வரிச்சு.

கலங்குதல்-துயரப்படுதல், தெளிவின்றுதல்.

கலங்கொம்பு-கலைமான்கொம்பு.

† கலசபவன் - அகஸ்தியன், வசிட்டன், துரோணன்.

கலசப்பானை-சிறுபானை.



கலசமுனி-அகத்தியன்.

கலசம்-குடம், பால்முட்டி.

கலசர்-இடையர். ❋

† கலசி } பெருமல்லிகை.
† கலசீ }

† கலசேசுவரம்-சிவத்தலங்க ளாயிரத் தெட்டனு ளொன்று.

கலசோததி-பாற்கடல்.

கலசோற்பவன்-கும்பமுனி.

கலடு-கன்னிலம்.

கலணை-குதிரைக்கல்லணை.

கலதம்-சொட்டைத்தலை.

கலதி-மூதேவி.

† கலதிரோகம்-ஓர்வகைநோய்.

கலதை-கலக்கம், மூதேவி.

கலத்தல்-எழுத்திலாவோசை, கலக்கச்செய்தல், புணர்ச்சி.

கலந்தருநர்-குசவர், பணித்தட்டார்.

கலந்தவர் } அன்பர், உறவினர், சேர்ந்தார்.
கலந்தார் }

கலந்தை-பெருமை.

கலபம்-கலாபம், மயிற்றோகை.

† கலபிங்கம்-ஊர்க்குருவி.

கலப்பற்று-மரக்கலத்தி னீக்கலடைப்பது.

கலப்பித்தல்-கலக்கச்செய்தல்.

கலப்பு-உறவாகுகை, கலத்தல், கலவை, சங்கரம், புணர்ச்சி.

† கலப்பூ-பணிகாரம்.

கலப்பை-உபகரணம், உழுபடை, லப்பைகயுறுப்பு.

கலப்பைக்கிழங்கு-கார்த்திகைக் கிழங்கு, வேந்தோன்றிக் கிழங்கு.
கலப்பைக்கொழு-கலப்பைப்படை.
கலப்பைச்சக்கிரம் - ஏர்ப்பொருத்தம் பார்க்குஞ் சக்கிரம்.
கலப்பைப்படை-ஓராயுதம்.
கலமர்-பாணர்.
கலம்-ஆபரணம், ஆயுதப்பொது, இரேவதி, உண்கலம், ஓரளவு, மட்கலம், மரக்கலம், யாழ்.
கலம்பகமாலை-பன்மணிமாலை.
கலம்பகம்-ஓர் பிரபந்தம்; அஃது ஒரு போகு வெண்பாக் கலித்துறை முதல் கவியுறுப்பாகக் கூறிப் புயவகுப்பு மதங்கம் அம்மானை காலம் சம்பிரதம் கார் தவம் குறம் மறம் பாண் களி சித்து இரங்கல் கைக்கிளை தூது வண்டு தழை ஊசல் என்னு மிப்பதினெட்டுறுப்புகளு மியைய மடக்கு மருட்பா ஆசிரியப்பா கலிப்பா வஞ்சிப்பா ஆசிரியவிருத்தம் கலிவிருத்தம் கலித்தாழிசை வஞ்சிவிருத்தம் வஞ்சித்துறை வெண்டுறை யென்னு மிவற்றால் இடையே வெண்பாவுங் கலித்துறையும் விரவிவர அந்தாதித் தொடையான் முற்றுறக்கூறுவது; கலப்பு, சண்டை, நறுஞ்சாந்து.
கலம்பகன்-செவிட்டுமன்.
கலம்பம்-தாலம்பபாஷாணம்.
கலம்பி-கொடிவசலை.
கலயம்-கலசம்.
கலரவம்-புறா.
கலர்-கீழ்மக்கள். [டம்.
† கலலம்-சுக்கிலசுரோணிதஞ் சேர்ந்த பிண்
கலவசம்-காக்கை.
கலவடை-உரலணை, திரிமணை, புரியணை.
கலவம்-மயிற்றோகை.
கலவரம்-கலக்கம்.
கலவரித்தல்-கலங்குதல்.
கலவர்-படைவீரர், மரக்கலமோட்டிகள்.
கலவல்-எழுத்திலாவோசை, கலத்தல்.
கலவன்-கலந்தது.
கலவாங்கட்டி-உடைந்தவோடு.
கலவாசு-ஓர்வகைவெடி.
கலவாய்-ஓர்மீன், ஓர்வெடி.
கலவி-புணர்ச்சி.
கலவியிற்களித்தல் - அகப்பொருட்டுறையின்று.

கலவுதல்-கலத்தல்.
கலவை-கலப்பு, சங்கிரணம், சுண்ணச்சாந்து, சேறு, பரிமளச்சேறு.
கலவைச்சேறு-சாந்து, பரிமளச்சேறு.
கலவோடு-மண்பாண்டச்சல்லி.
கலனம்-பெரும்பாடு.
கலனை-அலாயுதம், கலப்பை, கலப்பையுறுப்பு.
கலன்-ஆபரணம், ஓமவுபகரணம், பன்னிரண்டு மரக்கால்கொண்ட அளவு, பாத்திரம், மரக்கலம், யாழ், வழக்கு.
கலன்கழிமடந்தை-கைம்பெண்.
கலாகூலம்-விஷம்.
கலாங்கம், கலாங்கன் } துத்தபாஷாணம்.
கலாசி, கலாசிகை } முன்கை.
கலாசு-மரக்கலம்.
கலாசுகாரர்-மரக்கலமோட்டுவோர்.
† கலாதத்துவம் - வித்தியா தத்துவத்திற்கு மேலுள்ள தத்துவம்; இது செம்பிற் களிம்புபோல ஆன்மாவை மறைத்து நிற்கும் மலவிருளைச் சிறிது விலக்கி அவ்வான்மாவினது சுவரூபத்தை ஒருவாறு புலப்படுத்துவது. எனவே இது ஆன்மாவினது பிரகாசமாம்.
கலாதன்-தட்டான்.
கலாதி-கலகம், சண்டை.
கலாநிதி-சந்திரன்.
கலாபதி-சந்திரன்.
கலாபம்-அம்புக்கூடு, அரைப்பட்டிகை, கலம்பகம், கலாபனை, சந்திரன், சரமணிக்கோவை, பதினாறு கோவையுள்ளமணி, பீலிக்குடை, மயிலிறகு, மயிற்றோகை.
கலாபனை-கலாபம்.
கலாபி-ஆண்மயில், மயிலிறகு.
கலாபித்தல்-கலகம்பண்ணுதல்.
கலாபிகி-இராத்திரி.
கலாபினை-கலம்பகம்.
கலாபூரணன்-சந்திரன்.
கலாப்பித்தல்-கலத்தல்.
கலாமயம்-பாவித்தல்.
கலாமிருது-கம்மாளன், சந்திரன்.
கலாம்-ஊடல், கொடுமை, கோபம், பகை.
கலாம்பூரம்-ஓர்மருந்து.
† கலாயம்-ஓர்வகைத்தானியம்.

கலாலாபம்-வண்டு.
கலாவதி-சந்திரன்.
கலாவல்லபன்-கலையறிவில் மேம்பட்டவன்.
கலாவிகம்-கோழி.
கலானம்-களக்கூட்டம்.
கலி-அம்பு, ஒலி, ஓர்பா, கடல், கடையுகம், † கலியுகத்துக்கு அதிதேவதை, கலியென்னேவல், கேடு, † சங்ககாலத்து வழங்கியவோர் தொகைநூல், சனி, சிறுமை, போர், யுத்தம், வஞ்சகம், வலி, வறுமை.
கலிகம்-கற்பரிபாஷாணம், வன்னி.
† கலிகாரகம்-மயிலச்செடி.
கலிகாரகன்-நாரதமுனி.
கலிகாலம்-கலியுகம், கொடுமையானகாலம்.
கலிகை-உசிலமரம், இளம்பூவரும்பு, சீக்கராந்தூள், நாகமல்லி.
கலிக்கம்-கண்மருந்து.
† கலிக்கம்பநாயனர் - ஓர் சிவபத்தர்; இவர் கடந்தை நகரத்தில் வைசியர் குலத்தில் விளங்கினவர்.
† கலிங்கதேசம் - ஓர் தேயம்; இது ஒட்டிர தேசத்திற்குத் தெற்கும் கருநாடகத்துக்கு வடக்கு முள்ளது.
கலிங்கத்துப்பரணி-சோழன்மேல்பாடின ஓர் நூல்.
கலிங்கம்-ஆற்றுத்தும்மட்டிக்காய், ஊர்க்குருவி, கண்மருந்து, குதிரை, சீலை, தேயமைம்பத்தாறி னென்று; இது கடகமுதற் கொண்டு சென்னைவரைக்கும் எட்டினது, பதினெண்பாடையிலொன்று, மிளகு, வாணம்பாடி, வெட்பாலை.
கலிங்கல்-எரிநிறை நீர் போம்வழி, மதகு.
† கலிங்கன் - பலி மூன்றும் புத்திரன்; இவனுற் கலிங்கதேசம் விளங்கியது.
கலிங்கு-கலிங்கல்.
கலிசம்-வன்னிமரம்.
கலிச்சி-இரட்டைப்பிள்ளையிற்பெண்.
கலிச்சும்மை-மிக்க ஆரவாரம்.
கலிஞ்சகம்-மீன்.
கலிஞ்சநம்-அம்பட்டளூர்.
கலிதம்-சங்கலிதம், பாய்கை, பெரும்பாடு, பொருத்தம்.
கலிதி-திப்பிலி.
கலித்தல்-ஆரவாரம், எழுச்சி, ஒலித்தல், கக்குதல், தழைத்தல், பொசிகுதல், பொலிவு, வெடித்தல்.
கலித்தளை-செய்யுட்டளையினென்று; அஃது வெண்பாவுரிச்சீர்கள் தம்முளொன்ருது வரப்பெறுவது.
கலித்தாழிசை-ஓர்கவி; அஃது இரண்டு முதலிய பலவடிகளா னீற்றடிமிக்கு ஏனையடி தம்முளொத்துநிற்பத் தனித்தேனும் ஒருபொருண்மேன் மூன்றடுக்கியேனும் வருவது.
கலித்துருமம்-தான்றிமரம்.
கலித்துறை-ஓர்கவி; அஃது நெடிலடி நான்கு கொண்டு முடிவது.
கலித்தொகை-ஓர்பிரபந்தம்.
கலிநடம்-விநோதக்கூத்து ஆறினுளொன்று.
கலிந்தசை-யமுனைநதி.
கலிந்தம்-ஓர்மரம், ஓர்மலை.
கலிந்தன்-சூரியன்.
கலிபணம்-ஒருபணம்.
கலிபலி, கலிபிலி } ஆரவாரம், கலிப்பிலி.
கலிப்பா-ஐந்துபாவினென்று; அஃது வெண்சீர்மிகப்பெற்றுமாச்சீரும் விளங்கனிச் சீரும் பெருது பிறசீர்களுஞ் சிறுபான்மை கலந்து கலித்தளையும் இயற்றளையுந்தழுவி தரவு தாழிசை அராகம் அம்போதரங்கம் தனிச்சொல் சுரிதகம் என்னும் ஆறுறுப்பினுள் ஏற்பனகொண்டு நாற் சீரடியான் முடிவது.
கலிப்பிலி-எதிரிடை, கலாதி.
கலிப்பு-உயரம், எழுச்சி, ஒலி, கக்குதல், தரா, மிகுதி, வெடிப்பு.
கலிப்புமலை-அந்தகன்பீடம், தராவென்னும் உலோகமலை.
கலிமா-முகம்மதுமதத்தாருடைய விண்ணப்பம்.
† கலிமாரகம்-மயிலச்செடி.
கலிமாராகம்-கிலுகிலுப்பை.
கலிமாலகம்-அகில்.
கலிமோகநம்-ஓர்வகை அத்திமரம்.
கலிபத்தம்-கலியுகத்திற்சென்றவருடம்.
† கலியநாயனர் - ஓர் சிவபத்தர்; இவர் திருவொற்றியூரிற் செக்கார் குலத்தி லவதரித்துச் சிவாலயத்திற்குத் திருவிளக் கிடுதலையே பெருஞ் சிவபுண்ணியமாகக் கொண்டு தம்மிடத்துள்ள செல்வ மெல்லாவற்றையும் அதன் பொருட்டுச் செலவிட்டு வறுமை யடைந்து தமது மனைவியை விற்கப்

புகுந்தும் வாங்குவாரின்மையால் தமதாட்டியை யரிந்துகொள்ளத் துணிந்தபோது சிவன் வெளிப்பட்டு அருள் புரியப் பெற்றவர்.

கலியர் - சிவனடியார்களுளொருவர், படைவீரர், மிடியர்.

கலியன்-இரட்டைப்பிள்ளையிலாண், கடையுகத்தலைவன், சனி.

கலியாணக்கால் - வாசலுக்கடுக்க நிறுத்துங்கப்பு.

கலியாணக்கிரதம்-ஓரவிழ்தம்.

கலியாணக்கோலம்-மணக்கோலம்.

† கலியாணசுந்தரன் - மதுரையி லமர்ந்த சிவன்.

கலியாணப்பூ-இருப்பைப்பூ.

கலியாணப்பூசினி-சாம்பல்நிறப்பூசினி.

கலியாணப்பொருத்தம் - மணவாளனுக்கும் மணவாளிக்கும் பார்க்கும் பொருத்தம்.

கலியாணமண்டபம்-மணமண்டபம்.

கலியாணமுடித்தல்-விவாகம்பண்ணல்.

கலியாணம் - கொண்டாட்டம், சந்தோஷம், சுபம், பொன், விவாகம்.

கலியாணி-உமை, ஓரிராகம்.

கலியாத்தம் } கலிவருஷம்.
கலியாப்தம்

கலியுகம்-கடையுகம்; இது நாலுலக்ஷத்து முப்பத்தீராயிரம் வருஷங்கொண்டது.

கலிலம்-ஸ்த்ரீ புருஷர்களுடைய சோணித சுக்கிலங்கள் திரண்டபிண்டரூபம்.

கலிவிராயன் } ஓர்நெல்.
கலிவிராய்

கலிவிருத்தம்-ஓர்கவி; அஃது அளவடிநான்கினைக்கொண்டது.

கலிவெண்பா-ஓர்கவி; அஃது வெண்டளை தழுவி யீற்றடி முச்சீரான் முடிவது.

கலினம்-கடிவாளம்.

கலினி-இடாகினி, கைமை, கைம்பெண், திப்பிலி.

கலினை-கைமை, கொள்ளு, மிளகு.

கலின்-கலினெனல், ஈரடிக் கொலிக்குறிப்பு.

கலீயம்-கடிவாளம்.

கலீரிடுதல் } ஒலிக்குறிப்பு.
கலீரெனல்

கலுகுலுத்தல் - பலசிற்றொலியி னுண்டான தொனி.

கலுகுலுப்பு-ஒலிக்குறிப்பு.

கலுக்குப்பிலுக்கு - அணிகளானெழுமொலி, ஆடம்பரம்.

கலுங்கு-கலிங்கு.

கலுடம் } கலங்கனீர், பாவம்.
கலுஷம்

கலுமொலுத்தல் } ஒலிக்குறிப்பு.
கலுமொலெனல்

கலுவடம்-பூவரும்பு.

கலுவம்-கல்வம்.

கலுழக்கல்-கருடக்கல்.

கலுழம்-கலங்கனீர்.

கலுழன்-கருடன்.

கலுழி-கலங்கனீர், முல்லைநிலக்கான் யாறு.

கலுழிதம்-கலங்கியிருத்தல்.

கலுழ்தல்-அழுதல், கலங்கல், சிந்தல்.

† கலேசுவரம் - சிவத்தலங்க ளாயிரத்தெட்டனு ளொன்று.

கலை - அரைப்பட்டிகை, ஆண்மான், ஆண்முசு, எட்டுவிநாடி அல்லது முப்பதுகாட்டைகொண்ட ஓர்காலநுட்பம், ஓர்பாகையி லறுபதிலொன்று, கலையென்னேவல், கல்வி, காஞ்சிமரம், † குதிரைக்கலணை, சந்திரன் பங்கு, சவ்வு, சீலை, சுவாசத்தின்பகுதி, சுறுமீன், நூல், பிரகாசம், பேயாட்டம், மகரமீன், மகரராசி, மரக்கொம்பு, மேகலை, வண்ணங்களிஞேரடி, வயிரம், வித்தியாதத்துவமேழினொன்று, விலங்கேற்றின் பொது, சரீரம்.

கலைகுறைத்தல்-சத்துக்குறைதல்.

கலைக்கியானம்-கலையறிவு, கல்விநூல்.

கலைக்கொம்பு-கலங்கொம்பு.

கலைக்கோட்டுமாமுனி-ஓரிருடி.

கலைஞர்-புலவர்.

கலைஞானம்-கலைக்கியானம்.

கலைதல்-குலைதல்.

கலைத்தல்-ஓட்டுதல், நீக்கல், பிரித்தல், குலைத்தல்.

கலைநாதன்-அருகன்.

கலைநாயகன்-புத்தன்.

கலைப்பு-கலைத்தல்.



கலைமகள் } சரச்சுவதி. *
கலைமடந்தை

கலைமலைவு-கல்விமயக்கம்.

கலைமான்-ஆண்மான், சரச்சுவதி.

கலையம்-கலயம்.

கலையானத்தி-துர்க்கை.

கலையினன்-சந்திரன்.
கலையுணர்த்துவோன் } குமரன்.
கலையுணர்புலவன் }
கலையூர்தி-சரச்சுவதி, துர்க்கை.
கலையேறுதல்-அதிகப்படுதல், உருவேறுதல்.
கலையேற்றுதல்-உருவேற்றுதல்.
கலையோதல்-நூலோதல்.
கலைவல்லோர்-அறிஞர், புலவர்.
கலைவாணி-சரச்சுவதி.
கலைவு-குலைவு, குழப்பம், பிரிவு.
கல் - இரத்தினம், ஒலிக்குறிப்பு, கல்லு, கல்லென்னேவல், காவிக்கல், சிலைமலை, விடந்தீர்க்குமணி.
கல்நாதம்-அன்னபேதி.
கல்நார்-ஓர்மருந்து.
கல்நெஞ்சு-வன்னெஞ்சு.
கல்பனை-கற்பனை.
கல்மஷம்-கன்மடம், குற்றம்.
கல்மடி-காய்மடி.
கல்மதம்-கன்மதம்.
† கல்மாஷம்-நாநாவன்னம்.
† கல்மாஷ்பாதன்-கன்மாடபாதன்.
கல்முதிரை-ஓர்மரம்.
கல்முரசு-கப்பிட்டிமரம்.
கல்மொந்தன்-ஓர்வாழை.
† கல்யாணஜகந்நாதன்-நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய திருப்புல்லாணியிற் கோயில் கொண்ட விட்டுணு.
† கல்யாணசுந்தரர் - திருவேள்விக் குடியிற் கோயில் கொண்டிருக்குஞ் சுவாமி.
† கல்யாணதீர்த்தம்-நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய வுறையூரிலுள்ள வோர் புண்ணிய தீர்த்தம்.
† கல்யாணநாச்சியார் - துவாரகையிற் கோயில் கொண்ட விலக்குமி.
† கல்யாணநாராயணன்-துவாரகையிற் கோயில் கொண்ட விட்டுணு.
† கல்யாணவிமாநம்-நூற்றெட்டுத் திருப்பதிகளு ளொன்றாகிய திருவிடை வெந்தையிலுள்ள விமாநம்.
கல்லகம்-கடினசித்தம், கல்வீடு.
கல்லகாரம்-செங்குவளை, நீர்க்குளிரி.
கல்லக்காரம்-ஓர்வித பனங்கட்டி, பனங்கற்கண்டு.
கல்லடிமூலம்-ஓர்பாஷாணம்.
கல்லடைசல்-ஓர்நோய், கல்லுறுத்துதல்.
கல்லடைப்பு-நீரடைக்குமோர்நோய்.
கல்லணை-குதிரைமேற்றவிசு.
கல்லத்தி-ஓரத்தி.
கல்லத்துவம்-செவிட்டுத்தனம்.
கல்லம்-செவிடு, மஞ்சள், விந்தமலை.
கல்லரவிந்தம்-கற்றாமரை.
கல்லல்-அரிக்கல், கலாதி, தோண்டல், பேசலாவெழுமொலி.
கல்லழிஞ்சில்-ஓர்மரம்.
கல்லளை-மலைமுழைஞ்சு.
கல்லறுத்தல்-கல்லரிதல்.
கல்லறை-கல்வீடு, குகை, பிரேதக்குழி.
கல்லாங்காசு-கலவோடு.
கல்லாசாரி-கற்சிற்பன்.
கல்லாடம்-ஓர்நூல்.
கல்லாடர் } கல்லாட நூல்செய்த புலவர்.
† கல்லாடனார் }
கல்லாதவன்-படிக்காதவன்.
கல்லாந்தலை-ஓர்மீன்.
† கல்லாமறவர் - இயற்கையான மறத்தினையுடையார்.
கல்லாரம்-செங்குவளை, நீர்க்குளிரி.
கல்லார்-கீழ்மக்கள், மூடர்.
கல்லாலம்-இத்திமரம்.
கல்லால் - கயிலாய மலையினிற்கும் கல்லுவமான ஆல்.
கல்லான்-பாறை.
கல்வி-ஆமை, ஊர்க்குருவி.
கல்விச்சி } ஓர்மரம்.
கல்வித்தி }
கல்வியம்-கட்டை, கள், கால், சாராயம்.
கல்வியன்-தக்கன்.
கல்வியாணகோத்திரை-கங்கை.
† கல்வியை-கடிகவாளம், துஷ்டர் கூட்டம்.
† கல்விவாதம்-ஓர்வகைவாதநோய்; அது கிருத்திரசி வாதத்தினாலாவது விஸ்வபித்த வாதத்தினாலாவது சகிக்கக்கூடாத வுபத்திரவத்தை யுண்டாக்குவது.
கல்லிழைத்தல்-இரத்தினம் பதித்தல்.
கல்லின்காரம்-கல்நார்.
கல்லீயம்-நீலாஞ்சனம், வன்மையான ஈயம்.
கல்லீரல்-ஓரீரல்.
கல்லு-கல், மலை.
கல்லுகம்-பெருவாகை.
கல்லுக்கலைக்காத்தான்-பொன்னாங் காணி.
கல்லுக்குத்தல்-காரியத்தைத் தடைசெய்யல்.

